# கோவி. மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள்

அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு. ஞானாம்பிகை**

பதிவு எண். : 1655

நெறியாளர்

**முனைவர் ச. முருகேசன்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

**(தேசியத்தர மதிப்பீட்டுக் குழுவின் மறு மதிப்பீட்டில் “ஏ” தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 630 003.**


**ஜுன் - 2013**

**முனைவர் ச. முருகேசன்,** எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி – 630 003.

---

நாள் :

# நெறியாளர் சான்றிதழ்

**“கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள்”** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, அழகப்பா பல்கலைக்கழகப் பிஎச்.டி., பட்டத்திற்காக என் மேற்பார்வையில் திருமதி. **மு.ஞானாம்பிகை** என்பார் மேற்கொண்ட பகுதிநேர ஆய்வில் உருவாக்கப் பெற்றதாகும். இவ்வாய்வுரை அல்லது இதன் பகுதிகள் இதற்கு முன்பு வேறு எந்தப் பட்டத்திற்கோ அல்லது ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்பதற்கும், இஃது ஆய்வாளர் தம் சொந்த முயற்சியினால் உருவாக்கப் பெற்றது என்பதற்கும் சான்றிதழ் வழங்குகிறேன்.

காரைக்குடி

**(ச.முருகேசன்)**
நெறியாளர்

**மு.ஞானாம்பிகை,** எம்.ஏ.,பி.எட்., எம்.ஃபில்.,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
காரைக்குடி – 630 003.

நாள் :

# ஆய்வாளர் உறுதிமொழி

**“கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள்”** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, நான் மேற்கொண்ட பகுதிநேர ஆராய்ச்சியின் பயனாக உருவாகியது. இவ்வாய்வுரை இதற்கு முன்பு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டம், சான்றிதழ், பல்கலைக்கழக உறுப்பினர் தகுதி போன்றவற்றிற்கு அளிக்கப்பெறவில்லை என்றும், இது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பெற்றது என்றும் உறுதி கூறுகிறேன்.

காரைக்குடி

**(மு.ஞானாம்பிகை)**
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

முனைவர் ச. முருகேசன்,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி – 630 003.

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு நன்றி தெரிவிப்பது எனது முதற்கடமையாகும்.

இவ்வாய்வினை மேற்பார்வை செய்து ஆய்வுத் தொடர்பான கருத்துக்களை வழங்கி, நன்னெறிப்படுத்தி, உரிய காலத்தில் ஆய்வினைச் சமர்ப்பிக்க உதவிய நெறியாளர் முனைவர் **ச.முருகேசன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுப்பணிக்கு உறுதுணையாக என்னை ஊக்கப்படுத்திவரும் என் கணவர் திரு. **க.கோபாலன்** அவர்களுக்கும், எனது **இருமகள்கள், இரு மருமகன்கள், பேரக்குழந்தைகள்** நால்வருக்கும் என் இதயபூர்வமான நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

படைப்பாசிரியர் சாம்ராட் திரு. **கோவி. மணிசேகரன்** அவர்கள் தொலைபேசியின் மூலம் அளித்த பேட்டிக்கும் அவருடைய அறிவுரைகளுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக்காலத்தில் பல்வேறு நூல்களை கொடுத்துதவிய புதுக்கோட்டை முதன்மை நூலகத்தாருக்கும், பூவரசக்குடி கிளை நூலகர் சகோதரி **ரெபேகா** அவர்களுக்கும், சென்னை தாம்பரம் இணை நூலகத்தாருக்கும், ஆய்வுக்குப் பல தகவல்களை சேகரித்துக் கொடுத்த பெங்களூர் தொல்பொருள்துறை மேலாளர் அவர்களுக்கும், காஞ்சிபுரம் தொல்பொருள் துறையைச் சார்ந்தவர்களுக்கும் எனது அன்பு கலந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து கொடுத்த புதுக்கோட்டை **ஜாய்ராம் கம்ப்யூட்டர்** நிறுவனத்தார்க்கும் நன்றியை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**நன்றியுடன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.ப. | – | ஆறாம் பதிப்பு |
| ஆ.மூ.ஆ. | – | ஆங்கில மூல ஆசிரியர் |
| இ.த.பா. | – | இணைத்தலைமைப் பாத்திரம் |
| இ.பா. | – | இரண்டாம் பதிப்பு |
| எ.ப. | – | எட்டாம் பதிப்பு |
| எ.த.பா. | – | எதிர்த் தலைமைப்பாத்திரம் |
| ஐ.ப. | – | ஐந்தாம் பதிப்பு |
| குறள். | – | திருக்குறள் |
| த.ஆ. | – | தமிழ் ஆசிரியர் |
| த.பா. | – | தலைமைப் பாத்திரம் |
| த.வ.வெ. | – | தமிழ் வளர்ச்சி வெளியீடு |
| து.பா. | – | துணைப்பாத்திரம் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நா.ப. | – | நான்காம் பதிப்பு |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பதி. | – | பதிப்பு |
| பதி.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| புறம். | – | புறநானூறு |
| பெ.ம.சு.பா. | – | பெயர் மட்டும் சுட்டப்பட்ட பாத்திரம் |

| | | |
|---|---|---|
| பொருள் | - | பொருளதிகாரம் |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| மூ.ப. | - | மூன்றாம் பதிப்பு |
| மேலது., | - | மேலே குறிப்பிட்ட |
| மொ.பெ.ஆ. | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| P. | - | Page |
| PP. | _ | Pages |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

## ஆய்வுத் தலைப்பு

இலக்கியக்கலை பற்றிய சிந்தனையும் போக்கும் காலத்திற்கேற்றவாறும், சமுதாய, அரசியல், பொருளாதாரச் சூழலுக்கேற்றவாறும் வேறுபட்டு அமைகின்றன. இவ்வாறு அமையும் இலக்கியத்திறனாய்வு இன்று வேகமாக வளர்ந்து வரும் ஒரு துறையாகும். பல்வேறு வகைகளாகப் பல்கிப் பெருகியுள்ள புதின இலக்கியம் இன்று பெரும்பான்மையாக ஆய்வு செய்யப்பெறும் ஒரு துறையாக நிலைபெற்றுள்ளது. கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களை மையமிட்டு கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள் என்னும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு முன்னோடிகள்

ஆய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ள கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களை மட்டும் மையமிட்டு இதுவரை முழுமையாக ஆய்வு மேற்கொள்ளப்படவில்லை. இருப்பினும் கோவி.மணிசேகரனின் ஏதேனும் ஒரு புதினத்தை மட்டும் மையமிட்டும், ஒட்டுமொத்தப் புதினங்களை மையமிட்டும் பல ஆய்வுகள் நிகழ்த்தப்பெற்றுள்ளன. ‘கோவி.மணிசேகரனின் சேரன் குலக்கொடி – ஓர் ஆய்வு’ என்னும் தலைப்பில் ப.எழிலழகன் ஆய்வு செய்துள்ளார். செகதாம்பாள் ‘கோவி.மணிசேகரனின் யாகசாலையில் ஒரு பார்வை’ என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வுகள் சென்னை பல்கலைக்கழகத்தில் அளிக்கப்பட்டுள்ளன. ‘கோவி.மணிசேகரனின் குற்றாலக்குறிஞ்சி – ஒரு திறனாய்வு’ என்னும் தலைப்பில் வி.ஜீவாவும் ஆய்வு நிகழ்த்தியுள்ளார். இவ்வாய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தில் அளிக்கப்பட்டுள்ளது. இவ்வாய்வுகள் அனைத்தும் எம்.ஃபில் பட்டப்பேற்றிற்காக நிகழ்த்தப் பெற்றவையாகும். கோவி.மணிசேகரனின் சாகித்ய அகாதெமி விருதுபெற்ற புதினமான குற்றாலக் குறிஞ்சியை மையமிட்டு ‘சாகித்ய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப்பார்வை’ என்னும் தலைப்பில் ச.முருகேசன் ஆய்வு

செய்துள்ளார். இரா.மல்லிகா, 'கோவி.மணிசேகரன் நாவல்கள் ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்தியுள்ளார். இவ்வாய்வுகள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் அளிக்கப்பெற்றுள்ளன. இவை பி.எச்.டி., பட்டப் பேற்றிற்காக நிகழ்த்தப்பட்ட ஆய்வுகளாகும். ஒப்பாய்வு நிலையில், மேரி லூர்து ராணி, 'கோவி.மணிசேகரன், நா.பார்த்தசாரதி படைப்புகள் ஓர் ஒப்பாய்வு' என்னும் தலைப்பில் எம்ஃபில் பட்டப் பேற்றிற்காக ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் அளிக்கப்பட்டுள்ளது. அந்த வகையில் கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களை முழுமையாக மையமிட்டு 'கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள்' என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்டுள்ள இவ்வாய்வே முதன்மையானதாகும்.

**ஆய்வு நோக்கம்**

கோவி. மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் உள்ள வரலாற்றுச் செய்திகளை வெளிக் கொணர்வது இவ்வாய்வின் நோக்கமாகும். மேலும் கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் கலை நுணுக்கத்திறன்கள், பாத்திரப்படைப்பு முதலியவை எவ்வாறெல்லாம் அமைந்துள்ளன என அறியவேண்டும் என்பதற்காகவும் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

**ஆய்வு மூலங்கள்**

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

கோவி. மணிசேகரன் படைத்துள்ள ராஜகர்ஜனை, பொன்வேய்ந்த பெருமாள், வேங்கைவனம், சாம்ராட் அசோகன், பூங்குழலி, கங்கை நாச்சியார், கொல்லிப்பாவை, சேரசூரியன், செம்பியன் செல்வி, சேரன் குலக்கொடி, ரூப்மதி, கானல்கானம், காஞ்சிக்கதிரவன், குற்றாலக்குறிஞ்சி ஆகியவை முதன்மைச் சான்றாதாரங்களாக (Primary Sources) அமைகின்றன.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

வரலாற்று நூல்கள், கல்வெட்டு மற்றும் செப்பேடு குறித்த நூல்கள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், ஆய்வுத் தொடர்பான ஆங்கில நூல்கள், பேட்டி முதலியவை இவ்வாய்விற்குரிய துணைமைச் சான்றாதாரங்கள் ஆகின்றன.

**ஆய்வு எல்லை**

கோவி.மணிசேகரன் படைத்துள்ள பதினான்கு வரலாற்றுப் புதினங்களை மையமிட்டே இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் வரலாற்றியல் அணுகுமுறை (Historical approach) பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical approach) விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism) ஆகிய அணுகுமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

புதினங்களில் இடம்பெறும் வரலாற்றுச் செய்திகளை வரலாற்று நோக்கில் அணுகுவதில் வரலாற்று இயல் அணுகுமுறையும் (Historical approach) புதினங்களில் அமையும் தொடக்கம், முடிவு, நோக்குநிலை, வருணனை, உவமை, நடை, கடிதம், முன்னோக்கு உத்தி, நினைவுக்காட்சி, இலக்கியம், இசை, ஓவியம் முதலான கலை நுணுக்கத் திறன்களைப் பகுத்தாய்வதில் பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical approach) பாத்திரப்படைப்பு மற்றும் பின்புலன்களை விளக்கிச் செல்வதில் விளக்கமுறைத்திறனாய்வும் (Descritpive Criticism) என ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பெற்றுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

கோவி. மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்கள் என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பெறும் இவ்வாய்வு ஆய்வு முன்னுரை, ஆய்வு நிறைவுரை நீங்கலாக

ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

இயல் – 1. படைப்பாசிரியரும் படைப்புகளும்

இயல் – 2. கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் காணப்பெறும் கலைநுணுக்கத்திறன்கள்

இயல் – 3. கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் பாத்திரப் படைப்பு

இயல் – 4. கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் வெளிப்படும் வரலாற்றுச் செய்திகள்

இயல் – 5. கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் அமையும் பின்புலன்கள்

என்பனவாகும்.

'படைப்பாசிரியரும் படைப்புகளும்' என்னும் முதல் இயல் படைப்பாசிரியரின் பிறப்பு, கல்வி, பணி, இல்லறம், படைப்புகள், விருதுகள், ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்களின் கதைச் சுருக்கம் ஆகியவற்றைக் குறிப்பிட்டுச் செல்கிறது.

'கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் காணப்பெறும் கலைநுணுக்கத்திறன்கள்' என்னும் இரண்டாமியலில் தொடக்கம், முடிவு, நோக்குநிலை, வருணனை, உவமை விளக்கம், உவமை வகைகள், நடை, கடிதம், இசை, இலக்கியம், ஓவியம் முதலான கலை நுணுக்கத்திறன்கள் குறித்து விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

'கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் பாத்திரப் படைப்பு' என்ற மூன்றாம் இயல் பாத்திரம் விளக்கம், பாத்திர வகைகள், பாத்திர அறிமுகம், பாத்திர எண்ணிக்கை, தலைமைப் பாத்திரங்கள், இணைத்தலைமைப்பாத்திரங்கள், எதிர்த் தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

‘கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் வெளிப்படும் வரலாற்றுச் செய்திகள்’ என்னும் நான்காம் இயலில் ஹைதர் அலி, திப்பு சுல்தான் ஆகியோரின் கர்நாடகப் போர்கள், சடையவர்மன் சுந்தரபாண்டியன் தில்லைக்குப் பொன் வேய்ந்தது, சோழர்களை அடக்கியது, திருமலை நாயக்கர் சேதுபதிகளிடையே நடந்த போர் பற்றிய செய்திகள், நந்திவர்மன் நிகழ்த்திய போர்கள், சேரன் செங்குட்டுவன் கடம்பரை அழித்தது, அவன் நடத்திய போர்கள், நெடுஞ்சேரலாதனின் போர்கள், சோழர்காலத்திய கலிங்கப் போர், அசோகன் காலத்திய கலிங்கப்போர், சரபோஜி காலத்து அரசியல் முதலான வரலாற்றுச் செய்திகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

‘கோவி.மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் அமையும் பின்புலன்கள்’ என்ற ஐந்தாம் இயல் பின்புலம் விளக்கம், பின்புலத்தின் வகைகள், வரலாற்றுப் புதினத்தில் அமையும் இடம், வரலாறு, காலம் என அமையும் காட்சிப் பின்புலன்கள், சமூகம், அரசியல், சமயம் என அமையும் சமூகப்பின்புலன்கள் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

அந்தந்த இயல்களில் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அவற்றின் இறுதியில் தொகுப்புரையாக வழங்கப் பெற்றுள்ளன. ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு அவையெல்லாம் தொகுக்கப்பட்டு நிறைவுரையாக இறுதியில் வழங்கப் பெற்றுள்ளது.

ஆய்வாளர் படைப்பாசிரியரிடம் கண்ட நேர்காணல் பின்னிணைப்பு ஒன்றாகவும், வரலாற்றுப் புதினங்களில் பாத்திர எண்ணிக்கை பின்னிணைப்பு இரண்டாகவும், இசை பற்றிய கருத்துடைய இராக விளக்கங்கள் பின்னிணைப்பு மூன்றாகவும், வரலாற்றுச் செய்திகள் தொடர்புடைய புகைப்படங்கள் கல்வெட்டுச் செய்திகள், பல்லவர்கால வம்சாவளி பற்றியவை பின்னிணைப்பு நான்காகவும், இவ்வாய்வியல் பயன்படுத்தப் பெற்ற நூல் பற்றிய விளக்கங்கள் பின்னிணைப்பு ஐந்தாகவும் தரப்பெற்றுள்ளன.

## இயல் - 1

# படைப்பாசிரியரும் படைப்புகளும்

### முன்னுரை

படைப்பாசிரியர் கோவி.மணிசேகரனின் படைப்புகள் பல. அவற்றில் வரலாற்றுப் புதினங்களும், சமூகப் புதினங்களும், சிறுகதைகளும், நாடகங்களும் அடங்கும். இவரது படைப்புகள் பலவாயினும் வரலாற்றுப் புதினங்களை அதிகம் படைத்துள்ளார். வரலாற்றுப் பிழையே செய்யாத புதின ஆசிரியர் எனப் பல அறிஞர்களால் பாராட்டப்பட்டவர். வரலாற்றுப் புதினங்களில் பல சோதனைகளைச் செய்து காட்டியவர். நல்ல பண்பாளர், தன்னம்பிக்கை, தவறு கண்டவிடத்து சாடும் தன்மையாளர்; கல்கியின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்தவர். அவரைப்பற்றிய வரலாறும் படைப்புகளும் இவ்வியலில் அறிமுக நிலையில் குறிப்பிடப்பெறுகிறது.

### பிறப்பும் கல்வியும்

வட ஆற்காடு மாவட்டம், வேலூரைச் சேர்ந்த கோவிந்தராசன் பட்டம்மாள் தம்பதியருக்கு மகனாக 02.05.1927-ம் ஆண்டு கோவி மணிசேகரன் பிறந்தார். அவரது குடும்பம் ஏழ்மையானது. தந்தை கொத்தனார் வேலை பார்த்து வந்தார். படைப்பாசிரியர் மணிசேகரன் சிந்தாதிரிப் பேட்டையில் உள்ள நகராட்சிப்பள்ளியில் நான்காம் வகுப்பு வரை படித்தார். இவரது தமக்கை கன்னியம்மாள் இவரது ஞானத்தைக்கண்டு புதுவைக்கு அழைத்துச் சென்றார். அங்கே அவர் தமிழ் படித்தார். இளமையில் அவருக்கு பாரதி, பாரதிதாசன் ஆகியோரது தொடர்பு கிடைத்தது. தமிழில் பெருவிருப்பம் கொண்டதோடு மட்டுமல்லாமல் இசையிலும் அதிக நாட்டம் கொண்டவராக விளங்கினார்.

இவர் 1947-ம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான்காண்டுகள் இசையில் பட்டப்படிப்பு படித்துத் தங்கப்பதக்கம் பெற்றார். தமிழில் ஆர்வம் கொண்ட இவர் மகாவித்வான் வெள்ளைவாரணர், அ.சிதம்பரநாதன் போன்ற தமிழறிஞர்களிடம்

முறைப்படி தமிழ் பயின்றார்.

1954-ம் ஆண்டு கலைமன்றம் வார இதழின் துணை ஆசிரியராகப் பணியாற்றினார். கலை அரங்கம் மாத இதழின் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

**இலக்கியப்பணி**

தமிழ் நிலம் என்ற மாத இதழில் 1945-இல் இவரது முதல் கவிதை இடம் பெற்றது. பல பத்திரிக்கைகளுக்குக் கவிதை எழுதியுள்ளார். எங்கள் நாடு என்ற நாளிதழ் மலரில் புரட்சிப்புலவர் அம்பிகாபதி என்ற தொடர் நாடகம் 1947-ம் ஆண்டு வெளியானது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட சிறுகதைகளும், நூற்றி ஐம்பதுக்கும் மேற்பட்ட புதினங்களும், நாடகங்களும் எழுதியுள்ளார்.

இவரது படைப்புகளில் தென்னங்கீற்று, யாகசாலை, மனோரஞ்சிதம், ஒரு தீபம் ஐந்து திரிகள் போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவரது படைப்புகளில் வரலாற்றுப் புதினங்களே மிக அதிகம்.

நாட்டியம், ஓவியம், திரைக்கதை வசனம், இயக்கம் போன்ற அனைத்துத் துறைகளிலும் சிறப்பான இடத்தைப் பெற்றவர். இவரது தென்றல் காற்று புதினத்தை திரை ஓவியமாக இவரே எழுதி இயக்கினார். இந்தப்படம் ரசிகர் சங்க விருது பெற்றது.

1954-ம் ஆண்டு நல்லகாலம் என்ற படத்திற்கு வசனம் எழுதினார். பூலோகரம்பை படத்திற்குப் பாடல்களும் எழுதியுள்ளார். இயக்குனர் திலகம் கே.பாலச்சந்தரிடம் உதவி இயக்குனராகப் பணியாற்றியுள்ளார். நான்கு தமிழ்த் திரைப்படங்களும், ஒரு கன்னடப்படமும் இயக்கியுள்ளார். இவரின் சின்னத்திரைக் காவியம் திரிசூலி புகழ்பெற்றது. தற்போது நான்கடவுள் என்ற புத்தகத்தை எழுதி வெளியிட்டுள்ளார்.

**குடும்பம்**

இவர் 1955-ம் ஆண்டு சுப.சரஸ்வதி அம்மையாரை இல்லறத்துணைவியாகத்

திருமணம் செய்து கொண்டார். இவருக்கு ஐந்து மகன்களும் மூன்று மகள்களும், பதினாறு பேரக்குழந்தைகளும் உள்ளனர்.

**கோவி.மணிசேகரன் பெற்ற விருதுகள்**

1. சாகித்ய அகாதமி விருது
2. திரு.வி.க. விருது
3. மாமன்னன் ராசராசன் விருது
4. தமிழ் வளர்ச்சித்துறை விருது
5. கலைஞர் விருது
6. எம்.ஜி.ஆர்.விருது
7. ராஜாசர் அண்ணாமலையார் விருது
8. மன்னார்குடி செங்கமலத்தாயார் விருது
9. புத்தகக் கண்காட்சி விருது
10. லில்லி தேவசிகாமணி விருது
11. வி.ஜி.பி. விருது
12. அன்னை ராஜலெட்சுமி விருது
13. புதுவை வ.உ.சி. விருது
14. காஞ்சி காமகோடி பீடம் விருது
15. ஞானஒளி விருது
16. முகம் விருது
17. குழந்தை எழுத்தாளர் சங்க விருது
18. இலக்கிய சாம்ராட் விருது
19. ஞான சூரியன் விருது
20. சாகித்திய சக்கரவர்த்தி விருது
21. இலக்கிய ராட்சசன் விருது
22. இலக்கிய ராசராசன் விருது

23. இலக்கிய மேதை விருது
24. தமிழ் இலக்கிய மாமணி விருது
25. கவிராச சிங்கம் விருது
26. புதினப் பேரரசு விருது
27. புதினச் செம்மல் விருது
28. முத்தமிழ் வித்தகர் விருது
29. எழுத்துலக வேங்கை விருது
30. நாவல் மாமணி விருது
31. மதுரத்தமிழ்மாமணி விருது
32. உரைநடைக் கம்பன் விருது
33. உரைநடைச் சேக்கிழார் விருது
34. உரைநடை இளங்கோ விருது
35. உரைநடைக் காளிதாசன் விருது
36. எழுத்தரசு விருது

இவை தவிர வேலூர் தமிழிசைச் சங்கம் 'இசைச்செல்வம்' என்ற பட்டயம் அளித்துள்ளது. அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 'சங்கீத பூஷணம்' என்ற விருது அளித்துள்ளது. அமெரிக்கப் பல்கலைக்கழகம் 'டாக்டர் பட்டம்' வழங்கியுள்ளது. 1971-ம் ஆண்டு கல்கி இதழ் நடத்திய சிறுகதைப் போட்டியில் நப்பசலையின் காதலுக்கு முதல்பரிசு, 1972-ம் ஆண்டு தினமணிக்கதிர் நடத்திய வரலாற்றுப் புதினப் போட்டியில் முதல்பரிசு முதலான பரிசுகளையும் பெற்றுள்ளார்.

**ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களின் கதைச்சுருக்கம்**

**பொன்வேய்ந்த பெருமாள்**

கெடில நதிக்கரையிலே ஓய்வு எடுத்துக்கொண்டிருந்த விஜயகண்ட கோபாலனும் அவனது நண்பர்களும் சோழநாட்டின் எதிர்காலத்தைப்பற்றியும் அன்றைய சூழ்நிலையில் பாண்டியன் கீழ் சோழநாடு அடிமைப்பட்டுக் கிடப்பதையும் நினைத்து

வருந்தினர். சோழநாட்டை முன்பிருந்த நிலைக்குக் கொண்டு வருவேன் என நெல்லூர் அரசன் விஜயகண்ட கோபாலன் பேசுவதாகக் கதை தொடங்குகிறது.

தெலுங்கு சோடவம்சமானது காலம் காலமாக சோழநாட்டுக்கு உறுதுணையாய் நிற்பது சோழநாடு மூன்றாம் ராஜேந்திரன் காலத்தில் தன் வளம், பழம் பெருமை அனைத்தையும் இழந்து முடிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. அந்நிலையில் தெலுங்கு சோடமன்னன் கோபாலன் சோழனுக்கு உறுதுணையாக இருப்பது கதையின் போக்கில் தெரிகிறது.

கங்கை கொண்ட சோழபுரத்தில் மன்னர் மூன்றாம் ராஜேந்திரனைச் சந்தித்து, தான் வந்த செய்தியை, தன்னுடைய கருத்தை சேதுராயர், காடவராயர் முன்னிலையில் கூறவிருப்பமில்லாது தனித்துக் கூறுகிறான். தானே மாறுவேடத்தில் மதுரை நோக்கி ஒற்றறியச் செல்வதாகக் கூறி, தன் நண்பர்களுடன் செல்கிறான். நண்பர்களை நகரை நோக்கி அனுப்பிவிட்டு, தான்மட்டும் சோழநாட்டின் நிலையை எண்ணிக்கொண்டு பசுமலைக்காட்டுப் பகுதியில் சென்று கொண்டிருக்கிறான். அப்போது பத்மினி என்ற அழகியின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பாண்டியத் தளபதி குமாரக் கூத்தனை கபாலிகர்களிடமிருந்து காப்பாற்றுகிறான்.

உயிர்காத்த கோபாலனை உத்தம நண்பனாக உள்ளத்தில் ஏற்றிப் பாண்டிய மன்னரைக் காண அழைத்துச் செல்கிறான். மன்னரிடம் தான் சீன நாட்டைச் சார்ந்த சம்பாபுரத்தவன் என்றும், தன் பெயர் சண்ட மாருதன் என்றும் கூறுகிறான் கோபாலன். அந்த சமயம் ஒற்றன் மூலமாக மதுரையில் கோபாலன் நடமாடும் செய்தி தெரியவரவே பாண்டியர் சந்தேகக் கண்ணுடன் தன்னை நோக்குவதை உணர்ந்த கோபாலன் அங்கிருந்து தப்பிச் செல்கிறான். உடன் பத்மினியும் செல்கிறாள். போசாள நாட்டைச் சேர்ந்த பத்மினியைச் சிறைப்பிடித்து வந்து கூத்தன் தன் காதலியாக இருத்தி வைத்துள்ளது பிடிக்காமல் கோபாலனை வற்புறுத்தி அவனோடு செல்கிறாள். நட்பிற்குத் துரோகம் இழைக்க விரும்பாத கோபாலன் பத்மினியின் மயக்கு மொழியில் மயங்கி அவளை அழைத்துச் செல்கிறான்.

வழியில் சஞ்சீவி அடிபட்டுக் கிடப்பதைக் கண்டு அவனைச் சோழபுரத்துக்கு எடுத்துச் சென்று மன்னரின் அனுமதியுடன் அரண்மனை வைத்தியரிடம் சிகிச்சை அளிக்க விட்டுச் செல்கிறான். அப்போது வைத்தியர் மலயசித்தான் மகள் நாகினியைக் கண்டு கோபாலன் சந்தேகப்படுகிறான். அவள் குமாரக் கூத்தனைக் காதலித்து வருபவள். அவனுக்காகச் சோழநாட்டுச் செய்திகளை ஒற்றறிந்து அவனுக்கு அவ்வப்போது அனுப்பி வருபவள்.

பாண்டியரிடம் நிலைமையை விளக்கிப் போர் தொடுக்க ஆயத்தமாகிறான் குமாரக் கூத்தன். நாகினியிடம் இருந்து வந்த ஓலையில் பத்மினி கோபாலனுடன் சோழபுரத்திலிருப்பதை அறிகிறான். படைகள் சோழபுரத்தை அடைகின்றன. நாகினி கூத்தனைத் தனியே சந்தித்துத் தன்னை மணந்துகொள்ள வற்புறுத்துகிறாள். மறுத்தால் அவனைக் கொன்றுவிடுவதாகக் கூறிக் கத்தியை அவன் மீது பாய்ச்ச ஆயத்தமாகும்போது கோபாலன் கூறியபடி குணமடைந்த சஞ்சீவி கூத்தனைக் காப்பாற்ற நாகினியைக் கொல்கிறான். தொடர்ந்து சென்று சஞ்சீவியைக் கண்டுபிடித்து கூத்தன் அவனைக் கொல்கிறான். இறக்கும் தருவாயில் தன் தலைவன் கோபாலனின் ஆணைப்படி நாகினியைக் கொன்று கூத்தனைக் காப்பாற்றியதாகக் கூறி சஞ்சீவி இறக்கிறான்.

கோபாலன் போருக்கான ஆயத்தங்களைச் செய்துவிட்டு பத்மினியோடு நெல்லூரை அடைகிறான். கோபாலனின் அன்பு மனைவி பட்டத்தரசி ஸ்ரீதேவி பத்மினியைக் கண்டு வேதனைப்படுகிறாள். போர் முடியும் வரை பத்மினியைக் காணக்கூடாது என கோபாலனிடம் சத்தியம் பெறுகிறாள்.

சோழபுரத்திலிருந்து பாண்டியர் சுந்தரபாண்டியரின் யோசனைப்படி பக்கத்து நாடுகளை வென்று அந்தப் படைகளுடன் நெல்லூரை அடைகிறான் கூத்தன். முதல்நாள் போரில் பாண்டியப்படை சின்னாபின்னமாக அழிக்கப்பட்டது. அன்று இரவு பாடி வீட்டிலிருந்து கூத்தன் கோபாலனைச் சந்திக்கச் செல்கிறான். நட்பின் சிகரமான இருவரும் நட்பின் பெருமை விளங்கப் பேசுகிறார்கள். ஆனால் வெற்றியையும் வீரத்தையும் விட்டுக் கொடுக்கவில்லை.

கூத்தன் கோபாலனிடம் பத்மினி அவனுடன் தானாக வந்தாளா? அல்லது நண்பனான கோபாலன் அழைத்து வந்தானா? என்று வினவ, பத்மினியிடம் அழைத்துச் செல்கிறான் கோபாலன். துரோக சிந்தனையுள்ள பத்மினியைக் கூத்தன் கொல்ல முயலும்போது ஆத்திரமடைந்த கோபாலன் கூத்தன் மீது வாளை வீச அது கூத்தனைப் பழிவாங்குகிறது. அவனுடைய உயிருக்குப் பாதுகாப்பு அளிப்பதாகக் கூறிய கோபாலன் தானே அவன் உயிரைப் போக்கியதை நினைத்துத் துடிக்கிறான். இறக்கும் தருவாயில் கூத்தனுக்கு அடுத்த சத்தியமாகப் பாண்டிய வெற்றியை அளிக்கிறான்.

போர்க்களத்தில் கோபாலன் இறந்ததாகப் பறைசாற்றப்பட்டு கூத்தனின் உடையில் பாண்டியத் தளபதியாக இருந்து நெல்லூரை அழித்து சுந்தரபாண்டியருக்கு வெற்றியைப் பெற்றுத்தந்து வீர மரணம் அடைகிறான்.

இவை அனைத்தையும் அறிந்த சுந்தரபாண்டியர் காதலால் அழிந்த தன் மகனையொத்த கூத்தனையும் நட்புக்காகக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தன் நாட்டை அழித்துப் பகைவருக்கு வெற்றியைத் தந்த கோபாலனையும் ஒப்பு நோக்கி கோபாலனின் வீரத்தை, பண்பை மனமாரப் பாராட்டுகிறார்.

நெல்லூரை கோபாலன் தம்பியிடமே ஒப்படைக்கிறார். போரில் பெற்ற பொன்னால் தில்லையம்பலவாணனுக்குப் பொற்கூரை வேய்ந்து பொன் வேய்ந்த பெருமாள் என்ற புகழ்ப் பெயரைப் பெறுகிறார். கோபாலன் வேண்டுகோளுக்கு இணங்க திருவரங்கப் பெருமானுக்கும் பொற்கூரை வேய்கிறார். இருபெரும் வீரர்களும் ஒரு பெண்ணால் அழிந்தது கண்டு வேதனையுற்று பத்மினியை அரங்கனுக்கு சேவை செய்யும் பெண்ணாகத் திருவரங்கத்தில் விட்டுச்செல்கிறார். சோழநாடு பாண்டியர் வசமாகியது.

**காஞ்சிக் கதிரவன்**

காஞ்சிக் கதிரவனான மகேந்திரவர்மன் துயில் எழுவதிலிருந்து கதை தொடங்குகிறது. அரண்மனையின் ஆராய்ச்சி மணி ஒலிக்க ஆமாத்தியர் உத்தம சோழ

பேரரையர், பல்லவச் சக்கரவர்த்தி சிம்மவிஷ்ணு, பட்டத்து மாதேவிகள், மகேந்திரன் மனைவி சங்கீரணி, மகா சேனாதிபதி செந்தலை ராஜமுத்தரையர், இசைமேதை ருத்ராசாரியார், கூனன் விஸ்வரூபன், நிருபகேசரி, வேடராஜன், மகேந்திரன் ஆகிய அனைவரும் காரணத்தை அறிந்து கூடுகையில், சுவர்ணமுகி என்ற ஒற்றறியும் பெண் கொலையுண்டு கிடப்பதைக் காண்கிறார்கள். அவளிடமிருந்த ஓலையில் விரைவில் ஒரு புதிய கதிரவன் காஞ்சியில் உருவாகப் போகிறான் என எழுதியிருந்தது. காலம் காலமாக பல்லவர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் தீராப்பகை. இந்தக் கொலையின் பின்புலம் சாளுக்கியருடையது என்பதை மகேந்திரன் யூகிக்கிறான்.

கூனன் விஸ்வரூபன் புலிகேசியின் தம்பி குப்ஜவிஷ்ணு வர்த்தனன். மாறுவேடத்தில் மகேந்திரனுக்குப் பிடித்த அர்த்தசாஸ்திரத்திற்கு அர்த்தம் கூறி அவன் மனதில் நண்பன் என்ற நீங்கா இடத்தைப் பெறுகிறான். அரண்மனையில் இருந்து கொண்டே அவ்வப்போது புலிகேசிக்குத் தகவல் அனுப்புகிறான். அவனைப் பிடிக்காத சிம்மவிஷ்ணு அவன்மீது சந்தேகம் கொண்டு அவன் நட்பு வேண்டாமென மகேந்திரனிடம் கூறியும் அவன் கேட்கவில்லை. உத்திரமேரூரில் நடந்த பரிவாதினி யாழ் அரங்கேற்றத்தின்போது மகேந்திரவர்மனையும் யாழையும் வாதாபிக்குக் கடத்துகிறான் விஸ்வரூபன். அங்கே அஜந்தாகுகையில் மகேந்திரன் சிறை வைக்கப்படுகிறான். காஞ்சியில் ஜெயதேவன் என்ற புதிய மகேந்திரன் இடம்பிடிக்கிறான்.

மகேந்திரனுக்கும் புலிகேசிக்கும் ஏற்கனவே பழைய மனத்தாங்கல் உண்டு. தெலுங்குசோழ இளவரசி, விக்ரமனின் தங்கை புவனமாதேவியை (சங்கீரணியை) மணந்து கொள்ள நடந்த போட்டியில் வெற்றி பெற்ற மகேந்திரன் சங்கீரணியை மணக்கிறான். தனக்கு வீரத் திலகமிட்ட அஜந்தாவை அழைத்துவந்து தனி மாளிகையில் இருத்தி அவளைத் தன்னுடைய ஓவியங்களுக்கு மாதிரியாக வைத்து வருவது மட்டுமல்லாமல் அவளைக் காதலித்தும் வருகிறான்.

புலிகேசியின் தங்கை மங்களீசன் மகள் பானுசந்திரிகா மகேந்திரன் மீது காதல் கொண்டு அவனைத் தப்புவிக்க முயற்சிக்கிறாள். ஜயதேவனின் காதலி கௌதமி

மகேந்திரனுக்குக் காவல். இந்நிலையில் காஞ்சியில் உள்ள போலி மகேந்திரன் அஜந்தாவின் பெண்மையை அழித்துவிடுகிறான். அவன் உண்மையான மகேந்திரன் இல்லை என்பதை அஜந்தாவே அமைச்சருக்கும் சிறிய பட்டத்தரசிக்கும் கூறி சங்கீரணியை தாய்வீடு அனுப்பி வைக்கிறாள். பெண்ணாசை மண்ணாசை கொண்ட போலி மகேந்திரன் தானே உண்மையானவன் என நிரூபிக்க முயற்சிக்கிறான். அஜந்தாவும் மகேந்திரனைத் தேட வாதாபி செல்கிறாள். பானுவின் உதவியுடன் மகேந்திரனை தேடிச்சென்ற நிருபகேசரி, விக்ரமன் ஆகியோர் மகேந்திரனை மீட்டு வருகிறார்கள். உடன் அஜந்தாவும் கௌதமியும் வருகிறார்கள். அனைவரும் பேய்க் கணவாய் வழியாக தப்பித்துச் செல்கின்றனர்.

பேய்க் கணவாயில் தொடர்ந்து வந்த புலிகேசியைத் தோற்கடித்து நாடு திரும்ப வைக்கிறான் மகேந்திரன். பின்னர் ரட்சகன் என்ற தன்னுடைய பழைய நண்பர் உதவியுடன் விசித்திரசித்தன் என்ற கபாலிகனைக் கொன்று அங்கிருந்தோரைக் காப்பாற்றுகிறான். இதனாலேயே மகேந்திரனுக்கு வசித்திர சித்தன் என்ற சிறப்புப் பெயரும் கிடைத்தது.

அங்கிருந்து மகேந்திரன், அஜந்தா, நிருபகேசரி ஆகியோர் சித்தன்ன வாயிலுக்குச் செல்கின்றனர். கொடும்பாளூர் இளவரசன் அவர்களை அங்குவிட்டுவிட்டு நாடு திரும்புகிறான். மற்றவர்களும் காஞ்சி அடைகின்றனர். சித்தனவாயிலில் அஜந்தாவை மாதிரியாக வைத்து ஓவியங்கள் படைக்கிறான் மகேந்திரன்.

பின்னர் நாடுதிரும்ப, போலிக்கும் உண்மைக்கும் போட்டி நடைபெறுகிறது. பல சந்தர்ப்பங்களில் போலி மகேந்திரன் ஜயதேவன் தானே உண்மையானவன் என்பதை நிரூபிக்க முயற்சிக்கிறான். முதலாக வாள்போட்டியில் ஜயதேவன் தோற்கிறான். தோற்ற அவன் மகேந்திரனைக் கொல்ல வாளெறிகிறான். அப்போது விஸ்வரூபன் கூட்டத்திலிருந்து குறுவாள் எறிந்து அவனைக் கொல்கிறான்.

முடிவில் தன்னை நம்பி நண்பனாக ஏற்ற மகேந்திரனிடம் மன்னிக்கக் கோரியது மட்டுமல்லாமல் தன் நன்றிக்கடனாகவே ஜயதேவனைக் கொன்று மகேந்திரனைக் காப்பாற்றியதாக கூறுகிறான். மகேந்திரன் வேண்டுகோளின்படி விஸ்வரூபனும் கௌதமியும் சிம்மவிஷ்ணுவால் வாதாபிக்கு அனுப்பிவைக்கப்படுகின்றனர். அஜந்தா தருமசேனரிடம் தீட்சைபெற்று சமணத்துறவியாக ஆகின்றாள்.

**வேங்கைவனம்**

கானப் பேரெயில் மன்னன் வேங்கைமார்பன் மதுரை இளவரசி திருமேனியின்பால் காதல்கொண்டு அவளைப் பார்க்கப் போவதாக முடிவு செய்கிறான். வேங்கை வனத்திலே அவனால் வளர்க்கப் பெறும் இருவேங்கைகள் பாசத்துடன் அவனது காலடியில் அமர்ந்திருக்க அவன்மீது காதல்கொண்ட அவனது அத்தை மகள் தியாகவல்லி வருகிறாள்.

வேங்கைமார்பன் மதுரைக்குச் செல்வதை வாழ்த்தி அனுப்புகிறாள். வேங்கைமார்பன் இந்தப் பிறவியில் திருமேனியைத் தவிர அவனுக்கு மனைவியாகும் பேறு யாருக்கும் இல்லை எனக் கூறுகிறான். தியாகவல்லியோ எடுக்கும் பிறவியில் அவனைக் கணவனாக அடைய இந்தப்பிறவியில் காதல் தவம் இயற்றுகிறாள். பெயருக்கு ஏற்றார்போல் வேங்கை மார்பனுக்காக அனைத்துத் தியாகத்தையும் செய்து அவனது காதல் ஈடேற உதவுகிறாள்.

அவளது அண்ணன் காளிங்கன் தன் தங்கையை வேங்கை மார்பனுக்கு மணமுடித்து அந்நாட்டினைத் தன் தங்கை ஆள வேண்டுமென்று கனவு கண்டு கொண்டிருக்கிறான். வேங்கை மார்பன் மதுரை செல்வது அவனுக்குப் பிடிக்கவில்லை.

மதுரை சென்ற வேங்கை மார்பன் வைகைக் கரையில் திருமேனியையும் அவளது தோழியையும் காண்கிறான். முதலையிடமிருந்து திருமேனியைக் காப்பாற்றுகிறான். விதிவசத்தால் இருவரும் ஒருவரையொருவர் தம்மை மறைத்து மந்திரிகுமாரி என்றும் வேங்கை மார்பனின் நண்பன் என்றும் கூறிக் கொள்ளுகிறார்கள்.

மந்திரிகுமாரி என்று கூறிக்கொண்ட திருமேனி அவனது தொடு உணர்வால், அவனது தோற்றம் கண்டு இனமறிந்து அவனை மணந்து கொள்ள ஆசைப்படுவதாகக் கூறுகிறாள். அவனோ தன் இதயத்தை ஏற்கனவே ஒரு பெண்ணுக்கு (திருமேனிக்கு) அளித்துவிட்டதாகக் கூறித் தன்னைச் சகோதரனாகப் பாவிக்கும்படிச் சொல்லி விடுகிறான். விதியானது கதையின் போக்கில் ஆட்சியை நடத்துகிறது.

மறுநாள் பாண்டியர் உக்கிரப் பெருவழுதியிடம் திருமேனியை மணந்து கொள்ளப் பெண் கேட்கிறான். அனைவரும் மகிழ்கின்றனர். ஆனால் பொய்யுரைத்த திருமேனி வேங்கை மார்பனை தவறாகப் புரிந்துகொண்டு மறுக்கிறாள்.

அவனைச் சந்தித்த அவனிடம் தியாகவல்லியை மனதில் கொண்டு சகோதரன் எனக் கூறிய வேங்கை மார்பனை மணந்து கொள்ள முடியாது எனக் கூறிக்கொண்டு கத்துகிறாள். வேங்கை மார்பனும் நிலைமையை விளக்குகிறான். திருமேனியின் தவறான எண்ணத்தை எண்ணிக் கோபப்பட்டு,

“என் இதயத்தில் நிரந்தரமாகக் குடிகொண்டவள் நீதான் நான் பூசிப்பதும் உன்னைத்தான்” எனச் சத்தியம் செய்கிறான். அப்படியும் மனம் மாறாமல் அவனை ஏற்பதிற்கில்லை என்று கூறிய திருமேனியிடம்,

“நான் பண்பான பாண்டிய குலத்தில் பிறந்தவன். நீ சங்கம் வைத்துத் தமிழை வளர்க்கலாம். ஆனால் நான் என்னை வைத்தே தமிழை வளர்ப்பவன். நான் உன்னை அடையவில்லை என்றால் .... நான் தமிழனல்ல, எனது மொழி தமிழல்ல, நான் தமிழ் வீரனல்ல; ஏன் நான் தமிழனுக்கே பிறந்தவனல்ல” என்று சபதம் வைத்துச் செல்கிறான்.

கானப்பேரெயிலை அடைந்த வேங்கை மார்பன் சோகமாக வந்திருப்பது கண்டு தியாகவல்லி வேதனைப்படுகிறாள். அவனது காதலை வெற்றிகொள்ளச் செய்ய தியாகவல்லி என்ன செய்வது எனச் சிந்திக்கிறாள். பல நாட்கள் கழித்து வெளியே வந்த மன்னனிடம் திருமேனியைப் போல் பொன்னால் சிலை செய்து அதனை மணக்க யோசனை கூறுகிறாள். தாமே மதுரை சென்று திருமேனியின் மனதை மாற்றுவதாகவும்

வாக்களிக்கிறாள். உடன் காளிங்கனும் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள சுய நலத்துடன் செல்கிறான்.

தியாகவல்லியும் திருமேனியின் நட்பைப் பெறுகிறாள். பாண்டியரும் தியாகவல்லியைத் தன் மகள் போல் போற்றுகிறார். காளிங்கனும் வேங்கை மார்பனைப்பற்றி தவறாகக்கூறி பாண்டியரிடம் தளபதி பதவியைப் பெறுகிறான்.

திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்ற முடிவுடன் தமிழ்ச் சங்கத்துக்கு தலைவியாக ஒப்புகிறாள் திருமேனி. தியாகவல்லியும் சமயம் கிடைக்கும்போதெல்லாம் வேங்கைமார்பனின் உண்மையான காதலைப்பற்றிக் கூறி அவள் மனதை மாற்றுகிறாள். பொற்சிலை தயாரானதும் வேங்கை வனத்துக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. ஒரு நல்ல நாளில் திருமேனியின் சிலையை மணம் செய்து கொள்ளுகிறான் வேங்கை மார்பன். செய்தி அறிந்த திருமேனி மீண்டும் கோபம் கொண்டு கானப்பேரெயில் நோக்கி படைஎடுக்கத் தூண்டுகிறாள்.

இடையே தியாகவல்லியின் உதவியால் மதுரை பொற்றாமரைக் குளத்திலிருந்து வேங்கை மார்பன் திருமேனியை கடத்திச் செல்கிறான் கானப்பேரெயில் அடைந்த திருமேனிக்கு கோபமே அதிகமாகியது. வேங்கைகள் உறுமிக் கொண்டு அவளருகே வரவே வேங்கை மார்பன் மீது மயங்கிச் சாய்கிறாள்.

காளிங்கன் தலைமையில் போர் தொடுத்துச் சிலையைக் கடத்த முற்பட்டுத் தோல்வியடைகிறார்கள். திருமேனியும் மனமாறுகிறாள். காளிங்கனை வேங்கைகள் பழிவாங்குகின்றன. போருக்கு வீரத்திலகமிட்டு அனுப்புகிறாள் திருமேனி. போர்க்களத்தில் வேங்கை மார்பன் காளிங்கனால் கொல்லப்படுகிறான். கருத்தொருமித்த காதலர்களாக வேங்கைமார்பனும் திருமேனியும் ஒன்றாகவே இறப்பைத் தழுவி சொர்க்கம் செல்லுகிறார்கள்.

மகளின் நிலைகண்ட பாண்டியர் உக்கிரப்பெருவழுதி துடிக்கிறார். திருமேனியின் சிலையை மட்டுமே நாட்டுக்கு எடுத்துச் செல்லுகிறார். வேங்கை வனத்திலேயே மீளாமல்

உறங்கும் இரு காதலர்களுக்கும் தியாகவல்லி தீபமேற்றி வணங்குகிறாள். அவளுக்குத் துணையாக வேங்கைகள், தன் தலைவன் தலைவி நினைவு வரும்போது கர்ஜிக்கும் அஃறிணைப் பிராணிகளின் உறுமலை வேங்கைவனம் அந்நாட்டு மக்களுக்கு எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

**ராஜகர்ஜனை**

ஒரு ராஜகர்ஜனை இன்னொரு ராஜகர்ஜனையின் பிடரியை சீவி முடித்த திருவிழா. மாவீரத்திலகம் ஹைதர் தனது மூத்த குமாரன் இளைய சுல்தான் திப்புசுல்தானுக்கு இளவரசுப்பட்டம் கட்டிய திருவிழாவுடன் கதை தொடங்குகிறது.

மைசூரைச் சார்ந்த பழைய ராணி லெட்சுமி அம்மாளுக்கும் அவர்களைச் சார்ந்த ராஜவிஸ்வாசிகளுக்கும் இந்த ராஜபிரகடனம் நாராசமாக ஒலித்தது. ஆனால் திப்புவின் உயிர் நண்பன் பசவராஜுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. ஹைதர் பேரம்பாக்கம் போருக்கு புறப்பட்டுக்கொண்டிருக்கிறார். அவரை வழிகூட்டி அனுப்ப பெரிய சுல்தானா, பேகம் பக்ருன்னிசா, தளபதிகள், அமைச்சர்கள், அந்தப்புரப் பெண்கள் அனைவரும் தயாராக இருந்தனர். திப்பு மட்டும் வரவில்லை. அவன் காதலி ரங்கநாயகியைப் பார்க்கப் போயிருப்பதாக நினைத்து ஹைதர் வருத்தப்படுகிறார். ரெங்கநாதர் கோயில்மணியும் ஒலித்தது. ஹைதர் தனது வெள்ளைக்குதிரையில் ஏறப்போக எங்கிருந்தோ வந்த குண்டு அவர்மீது பாய்ந்து வந்தது, தவறி குதிரையைத் தாக்க ஹைதர் கீழே விழ மெய்க்காப்பாளன் பிடித்துக்கொள்கிறான். தொடர்ந்து வந்த மற்றொன்று அவன் உயிரைக் குடிக்கிறது. இந்த சமயத்தில் திப்புவும், அவன் நண்பன் பவசராஜும், ராஜாக்கானும் எங்கிருந்தோ பாய்ந்து வந்து குற்றவாளியைத் தொடர்ந்து சென்று பிடித்து வருகின்றனர். இதற்குக் காரணம் உடனிருந்தே கொல்லும் வியாதியைப் போன்ற மீர்சாதிக் என்ற தளபதியே. அவனது கையாலேயே குற்றவாளியான அவன் ஆளுக்கு தோலுரிக்கப்பட்டு போர்ப்பயணம் துவங்குகிறது.

ஒவ்வொரு நாளும் மாலைப் போதில் ரங்கன் கோயில் மணியோசை ஒலித்ததும் திப்பு தனது காதலி ரங்கநாயகியைப் பாழ்மண்டபத்தில் சந்திப்பது வழக்கம். அவர்களுக்குக் காவலாக பசவராஜ் மற்றும் காவலரும் மறைந்திருப்பர். அக்ரகாரத்தைச் சேர்ந்த அனைவருக்கும் இந்தக் காதல் பிடிக்கவில்லை. அரண்மனையைச் சார்ந்தவர்களுக்கும் பிடிக்கவில்லை.

திப்புவின் ஆணைப்படி ஒருநாள் பசவராஜ் ரங்கநாயகியை வீட்டிற்கு அழைத்துச் செல்கிறான். வழியில் அவனுக்காக மீர்சாதிக் விரித்த வலையில் ரங்கநாயகி அகப்பட்டுக் கொள்கிறாள். பசவராஜ் பெரும் வாள்வீரன். பகைவருடன் போரிட்டு ரெங்கநாயகியைக் காப்பாற்றுகிறான். திப்புசுல்தானும் வாட்போரில் ஏற்பட்ட காயங்கள் குணமடையும் வரை நண்பனை வீட்டில் ஓய்வுகொள்ளச் சொல்கிறான். திப்புவும் ஒருநாள் பசவராஜ் வீட்டிற்கே சென்று அவன் தாய் மற்றும் நண்பனின் காதலி மஞ்சு ஆகியோரைச் சந்தித்து நண்பனின் நலன் விசாரிக்கிறான்.

பேரம்பாக்கத்திலிருந்து தந்தைக்கு உடல்நிலை சரியில்லை என்று ஓலை வர திப்பு உடனே செல்கிறான். பேரம்பாக்கத்துப் போருக்குத் தன் நண்பன் பசவராஜையும் காதலி ரங்கநாயகியையும் அழைத்துச் செல்கிறான். பசவராஜ், ரங்கநாயகி ஆகிய இருவரையும் பிடிக்காத பெரிய சுல்தானா கடிதத்தின்மூலம் ஹைதரிடம் அவர்கள் இருவரையும் அழித்துவிடும்படிக் கேட்டுக் கொள்கிறாள்.

மேலக்கோட்டை துலுக்க நாச்சியாரின் கதையானது கூறப்படுகிறது. துலுக்க நாச்சியார் ரங்கனை விரும்பி மணந்தது போல ரங்கநாயகியும் திப்புவை விரும்புவதாகக் கூறுகிறாள். பேரம்பாக்கத்துப் போரில் கர்னல் பெய்லியை முறியடித்து வெற்றியுடன் திரும்பும் மகனிடம் ஆற்காட்டு நவாபை அடக்க வேண்டுமென்று ஆணையிடுகிறார். பாடிவீட்டில் தங்கியிருந்த பசவராஜ், ரங்கநாயகி ஆகியோரை அழைத்து ஹைதர் பேசுகிறார். ரங்கநாயகி தன் தூயகாதலை ஹைதருக்கு விளக்குகிறாள். ஆற்காட்டுக்கு மகனை அனுப்பிவிட்டு தன்னைப் போல் உருவம் கொண்ட யாகின்கானை அனுப்பி ராஜாக்கானுடன் இரவே பசவராஜ் ரங்கநாயகியை பேடனூர் ஹைதர்நகருக்கு அனுப்பி

சிறை வைக்கச் சொல்லுகிறார். வழியில் முன்பே ரஜாக்கான் பசவராஜ் தன்னை கிருஷ்ணகிரி பெண் வழக்கில் அவள் கணவனுக்கு சவுக்கடி கொடுக்க ஆணையிட்டதை வஞ்சமாகக் கருதி அவனை இழுத்துக் கீழே தள்ளி சவுக்கால் ஐம்பது அடிகள் அடிக்கிறான். ரங்கநாயகியோ மிகவும் பயந்த நிலையில் இருக்க பசவராஜைத் திரும்ப வண்டியில் ஏற்றி பேடநூர் ஆதம்கானிடம் அனுப்புகிறான். அங்கே அவர்கள் சிறைவைக்கப்படுகிறார்கள்.

ஆற்காட்டுப் போரில் வெற்றி பெற்றதும் ஹைதர் தன் மகனுக்கு அங்கேயே நவாப் பட்டம் கட்டுகிறார். பசவராஜ், ரங்கநாயகியைப் பற்றிக் கேட்க அவர்கள் இருவரும் அவனுக்குத் துரோகம் இழைத்து ஓடிவிட்டதாகக் கூறுகிறார். நட்பையும் காதலையும் உயிராக மதித்த திப்பு இதனை நம்பாமல் ஸ்ரீரங்கப்பட்டணம் திரும்புகிறான்.

தன் நண்பனின் காதலி மஞ்சுவை அழைத்து வந்து லால்மகாலில் தன் மேற்பார்வையில் வைத்துக் கொள்கிறான். மீர்சாதிக் முதற்கொண்டு யாராக இருந்தாலும் தன் உடன் பிறவா தங்கை மஞ்சுவிற்குக் கேடு செய்தால் அழிக்கப்படுவார்கள் என அச்சுறுத்துகிறான்.

இடைப்பட்ட அந்த தினங்களில் எத்தனையோ சீர்திருத்தங்களைச் செய்கிறான். இஸ்லாமும் இந்துமதமும் தன் இருகண்கள் என்பதை அறிவுறுத்தி மத நல்லிணக்கத்துக்கான ஆணைகளைப் பிறப்பிக்கிறான்.

பேரம்பாக்கத்தில் ஹைதர் ராஜபிளவை நோயால் பாதிக்கப்பட்டு உயிருக்குப் போராடிக் கொண்டிருப்பதை அறிந்த திப்பு தந்தையைக் காண விரைந்து செல்கிறார். இறக்கும் தருவாயில் ரங்கநாயகிக்கும் பசவராஜிக்கும் எந்தத் தீங்கும் நேராவண்ணம் திப்புவிடம் சேர்க்கும்படி அமைச்சர் பூரணய்யாவை கேட்டுக் கொண்டு உயிர் விடுகிறார். திப்பு வருவதற்கு முன்பே இறக்கிறார். அவர் இறந்துபட்டார் என்ற செய்தியை வெளியே தெரியவிடாமல் அவருடைய உடல் கோலாருக்கு எடுத்துச் சென்று அடக்கம் செய்யப்படுகிறது.

திப்பு ஸ்ரீரங்கப்பட்டணம் திரும்புவதற்குள் அவர்தம்பி அப்துல்கரீம் உள் நாட்டுக்குழப்பம் செய்கிறான். பேடனூர் சிறையிலிருந்து பசவராஜ், ரங்கநாயகியை அழைத்துக் கொண்டு தப்பி வருகிறான். ஸ்ரீரங்கப் பட்டணத்து ரங்கன் கோயிலில் அவளைவிட்டு தான் வந்து அழைக்கும்வரை வரக்கூடாதென ரங்கன் மீது சத்தியம் பெறுகிறான். பின்பு உள்நாட்டுக் குழப்பத்தை அடக்குகிறான். போரில் வீரமரணம் அடைகிறான். திப்புவும் நண்பனது உடலை எடுத்துக்கொண்டு கண்ணீர்விட்டு அழுகிறான். அவனது இறுதிச் சடங்கில் அவன் காதலி மஞ்சு உடன்கட்டை ஏறுகிறாள்.

திப்பு ரங்கன் கோயிலில் இருக்கும்ரங்கநாயகியை அழைக்க பசவராஜிடம் ரங்கன் மீது சத்தியம் வைத்திருப்பதால் தான் வர இயலாது எனக்கூறி கோயிலேயே இருந்துவிடுகிறாள். ரங்கன் கோயில் மணியோசையே அவர்களது காதலுக்குக் கட்டியம் கூறுகிறது.

**கொல்லிப்பாவை**

கோசர் குல மாணிக்கமான பரிமளாதேவி தன்புரவிப் பயிற்சியை முடித்துக்கொண்டு, கொங்கு நாட்டுக் கடற்கரையில் கொல்லிப்பாவையென நின்று கொண்டிருந்தாள். அவளுடைய துளுநாட்டு விஜயம், கொங்கணத்தின் தலைநகரான கடம்பன் பெருவாயிலுக்கு வந்தது ஒரு சபதத்தை முன்னிட்டு, நந்திகோசர் என்ற செல்வந்தர் வீட்டில் தங்கியிருக்கிறாள். அவளது தந்தை வச்சிரகோசர், வளர்ப்புத் தந்தை மகாதேவ கோசர். இருவரும் கோசர்குல சிற்றரசர்கள் போன்றவர்கள் கதையின் போக்கில் மகாதேவ கோசரே அவளுடைய தந்தையாகக் கருதப்படுகிறவர்.

வீரமகள் பரிமளாதேவியின் புரவிப் பயிற்சி வித்தியாசமானது. ஐந்து புரவிகளில் மாறி மாறி தாவி வாட் பயிற்சி செய்வது. ஒரு நாள் கடம்பின் தலைவன் நன்னன் குடிபோதையில் தேரை ஓட்டிவந்து உயிருக்குப் போராடுகையில் பரிமளா அந்தத் தேரை நிறுத்தி அவன் உயிரைக் காப்பாற்றுகிறாள். தளபதி மிஞிலி அவளை நன்றியுடன் வீட்டுக்கு அனுப்பிவைக்கிறான். பரிமளாவை முன்னம் பயிற்சியின்போது கண்ட

நன்னன் அவளை அடையத் திட்டமிடுகிறான். பெண்களைக் காமுறும் லோலனான நன்னனுக்கு அழகிய பெண்களை அனுபவிப்பதே தீராப்பழக்கமாகிவிட்டது. பெண் கொலை நன்னன் என்றே அவனை மக்கள் நினைக்கும் அளவுக்குக் கீழ்த்தரமான எண்ணங்கள் உடையவன்.

மறுநாள் தேரை நிறுத்தியமைக்காக யாரோ ஒரு பெண்ணை அழைத்து வந்து அவளைத் தண்டிக்கிறார்கள். அதனைப் பரிமளா தடுக்கிறாள். தன் கணவன் உயிரை காப்பாற்றிய பரிமளாவைத் தெய்வமாக எண்ணிப் போற்றுகிறாள். நன்னனின் பட்டத்தரசி கொடியோள்.

பரிமளாவிடம் நன்னனின் குணத்தை விளக்குகிறாள் அரசி. நன்னனின் தீய குணங்கள் நீங்காத நிலையில் அவனுடன் முரண்பட்டு தாய்வீடு செல்கிறாள் கொடியோள். வழியில் பெருந்துறை அரசன் பிண்டன் கொடியோளைச் சிறையெடுத்துச் செல்கிறான். வாளாவிருந்த நன்னனைப் போர் செய்யத்தூண்டுகிறாள். தானே போருக்குத் தலைமை தாங்கிச் சென்று சிறைவைத்திருந்த கொடியோளை மீட்கும்போது காட்டுமிருகாண்டி உதவுகிறான். பிண்டனுக்கு புத்தி கூறி அவன் மனதை மாற்றுகிறாள். மனம் மாறிய பிண்டன் அவளை மகளே என அழைத்து அவளுக்கு உதவுகிறான். இருவரும் நன்னனைப் பழிவாங்க முயலுகிறார்கள்.

கொடியோளைச் சிறைமீட்டுப் பெருந்துறையைப் பெற்றுக்கொடுத்த பரிமளா, நன்னனிடம் சேரமான் நார்முடிச் சேரலின் மணிமுடியைக் கேட்கிறாள். இடையிடையே காட்டுமிருகாண்டி பரிமளாவின் நிழலாக இருந்து அவளுக்கு உதவுகிறான். தன்னை நார்முடிச் சேரலின் அடிமை எனக் கூறிக் கொள்ளுகிறான். பரிமளாவும் அவனை சஞ்சீவி என்றும் பெருந்துறை மன்னன் பிண்டனை வாகை வண்ணா என்றும் அழைக்கிறாள்.

நன்னன் பெருந்துறையைக் கைப்பற்றி பிண்டனின் மனைவியையும் மகளையும் கற்பழித்துக் கொல்லுகிறான். நாட்டுமக்கள் வெறுப்படையும் அளவுக்கு பெண்களுக்குத் தீங்கு செய்கிறான்.

சேரன் மணிமுடியைத் தர மறுத்த நன்னனிடம் தன் பலத்தைக் கூறுகிறாள். கோசர்குலமே வெகுண்டு எழுந்து அவனை அழிக்கும் நாளைக்கூறி அவனை அச்சுறுத்துகிறாள்.

நன்னனோ அவளை அடைவதிலேயே தன் முழுக்கவனத்தையும் காட்டுகிறான். காட்டுமிருகாண்டியாக வரும் சஞ்சீவிதான் நார்முடிச் சேரல் என்பதை ஒரு நாள் அறிந்து கொள்கிறாள். தன்னுடைய சபதமாக, தன் தங்கை அரிவையைக் கொன்ற நன்னனை பழிவாங்கத் துடிக்கிறாள்.

நார்முடிச் சேரலும் படை எடுத்துவருகிறான். நன்னனுக்குத் தகடூர் அரசன் நெடுமிடல் உதவிக்கு வருகிறான். அவனும் பரிமளாவின் வீரத்தையும் அழகையும் கண்டு அவளை அடைய விரும்புகிறான். போரில் நன்னன் தோற்கடிக்கப்பட்டு பாழிக் கோட்டைக்கு ஓடுகிறான். அங்கு ஒளித்து வைத்திருந்த சேரன் மணிமுடியை எடுத்துக்கொண்டு தப்பித்து வருகிறான். அந்நிலையிலும் பரிமளாவை அடையவே எண்ணம் கொண்டு அவள் இருப்பிடம் வருகிறான்.

பரிமளாவின் தங்கை அறியாப்பருவத்து அரிவை நன்னனின் காவல்மரத்து மாங்காயை உண்டதற்காக அவளைக் கொலைபுரிகிறான் நன்னன். தங்கையின் பெண்மையினை அழித்து அவளைக் கொன்ற நன்னனைப் பழிவாங்கக் காத்திருக்கும் பரிமளாவிடம் நன்னன் வந்து சேருகிறான். தன் தங்கைக்காக அவள் எடைக்கு பொன்னால் செய்த படிமமும் 90 யானைகளையும் கொடுப்பதாகக் கூறிய தந்தையையும் அவமதித்த மனித நேயமற்ற மனித மிருகத்தைக் கொல்ல வேட்டை நாய்களை வளர்த்து வருகிறாள் பரிமளா. தன்னை நாடிவந்த நன்னனை வாட்போரிட்டு அழைத்துவந்து தன் தங்கையின் படிமம் இருக்கும் பாதாள அறையில் அவனை விழவைக்கிறாள். விழுந்த நன்னனை அரிவையின் படிமத்திலிருந்த கத்தி கொல்கிறது. உயிர் பிரிந்த அவனது உடலை வேட்டை நாய்களுக்குப் போட அவைகளைத் திறந்துவிடப் பணிக்கிறாள்.

அப்போது போரில் வெற்றியடைந்த சேரமான் பரிமளாவைத் தடுத்து நன்னனை அவ்வாறு செய்ய வேண்டாமெனத் தடுக்கிறான். இறந்துபட்டாலும் அவன் மன்னன் என்பதால் அவனுக்குரிய மரியாதையை அளிக்க பரிமளாவிடம் கூறுகிறான்.

பரிமளா தன் சபதப்படி மானசீகக் காதலன் நார்முடிச்சேரலின் மணிமுடியையும் பெற்றுத் தந்தாள். தன் தங்கையைக் கொன்ற நன்னனையும் கொன்று சபதங்களை நிறைவேற்றிக் கொண்டாள்.

சேரமான் நாடுதிரும்பி மணிமுடிவிழாவை நடத்துகிறான். உடன் வந்த பரிமளாவை தன் காதலியை மணந்து கொள்ள எண்ணுகிறான் சேரமான். சேரன் தேவியோ பரிமளாவை பொறுத்திருக்கக் கூறுகிறாள். மனைவி என்ற பட்டத்தை விட காதலியாகத் தவம் இயற்றுவதே மேல் என பரிமளா காதல்தவம் இயற்றுவதாகக் கதை முடிகிறது.

**கங்கை நாச்சியார்**

சேதுநாட்டின் தலைவன் சடையத் தேவரின் தங்கை கங்கை நாச்சியாரின் இளைய மகன் நாராயணத் தேவன் மாறுவேடத்தில் தன் சகாக்களுடன் தூது போகிறான். தூது போவதின் நோக்கம் சேதுநாட்டவர் கப்பம்கட்டமாட்டோம் என்பது; மற்றொன்று திருமலைநாயக்கரின் மகள் கங்கை நாச்சியை நாராயணத்தேவனுக்கு மணமுடித்துக்கொடுத்து உறவினர்களாவதற்கு.

அண்ணன் ரகுநாதன் எவ்வளவோ எடுத்துக்கூறியும் கங்கை நாச்சியைக் காணவேண்டும் என்ற ஆசையுடன் தன் நண்பன் வேலுத்துரையுடன் தானே தூது வருகிறான்.

சடையத் தேவரின் தங்கை கங்கை நாச்சியைத் திருமலை நாயக்கர் பெண் கேட்க, சேதுபதி மறுக்கிறார். அவளது நினைவாகவே தனது மகளுக்கு கங்கை நாச்சி என்ற பெயர் சூட்டுகிறார் திருமலை நாயக்கர். இப்போது இந்த மணவினைக்கு ஒப்புக் கொள்வாரா என்பது நண்பர்களது உள்ளத்தில் எழுந்தது.

வழியில் நாகபூசை செய்யவந்த கங்கை நாச்சியையும் அவளது தோழியரையும் ஒற்றன் மலையப்பனிடமிருந்து காப்பாற்றுகிறான் நாராயணத் தேவன். சேதுநாட்டைச் சேர்ந்த ஒற்றன் மலையப்பன் இளவரசியிடம் தகாத முறையில் நடந்ததற்காக நாராயணத் தேவன் அவனைக் கொன்று இளவரசி கங்கை நாச்சியை மீட்டுச் செல்கிறான்.

இளவரசியைத் தேடிவந்த சின்னதுரை குமாரமுத்து நாயக்கரிடம் குத்துயிராகக் கிடந்த மலையப்பன் இளவரசியை நாராயணத்தேவன் கடத்திச் சென்றுவிட்டதாகக்கூறி இறக்கிறான். தீமை கூறிச் சென்ற பொய்யன் மலையப்பன் வார்த்தையை உண்மை என்று எண்ணி சின்னதுரை செல்கிறான்.

இளவரசி கங்கை நாச்சிக்கு நாராயணத் தேவனின் பண்பு, அன்பு ஆகியவை பிடித்ததால் அவனை உளமாரக் காதலிக்கிறாள். இருவரும் கருத்தொருமித்த காதலராகிறார்கள். மறுநாள் வேலு துரையுடன் இளவரசியைப் பத்திரமாக அனுப்பிவைத்து பின்பு அவன் தூது செல்கிறான். தூது சென்ற இருவரையும் தளபதி ராமப்பய்யன் பேச்சைக்கேட்டுச் சிறை வைக்கிறார் திருமலை நாயக்கர்.

இளவரசி நாராயணத்தேவன் தன்னைக் காப்பாற்றிக் கண்ணியமுடன் அனுப்பி வைத்தமைக்கு நன்றி கூறாது சிறையில் அடைத்தது தவறு எனக் கூறுகிறான். இதை அவனது பெற்ற தாய் தொலியம்மாள் வெறுக்கிறாள். இளவரசி நாராயணத் தேவனை மணந்து கொள்வதை விரும்பவில்லை.

பெரியம்மாள் பெரியதேவி ருத்ரம்மாள் உதவியுடன் சிறையிலிருக்கும் நாராயணத் தேவனையும் வேலுதுரையையும் காப்பாற்றுகிறாள். பெரியதேவியார் தன் மகள் கங்கைநாச்சியின் காதலை வாழவைப்பதாக வாக்களிக்கிறாள்.

நாடு திரும்பிய நாராயணத் தேவன் பெரிய தேவியாரிடம் வாக்களித்தபடி சிறை விஷயத்தை விடுத்து மீதமுள்ளவற்றைக் கூறுகிறான். மேலும் கங்கை நாச்சியை சிறையெடுத்து வருவதாகவும் கூறுகிறான். மதுரையில் பாதாளச் சிறையிலிருந்து தப்பிய

இருவரையும் அரண்மனையைச் சேர்ந்த யாரோதான் உதவி இருக்க வேண்டுமென்று நினைக்கிறார் ராமப்பய்யா கங்கை நாச்சியைச் சந்தேகப்படுகிறார். இது பெரிய தேவிக்குப் பிடிக்கவில்லை.

ஒருநாள் நாராயணத்தேவனை வரவழைத்து கங்கை நாச்சியை அவனது சித்தி பானுமதியுடன் அனுப்பி வைக்கிறாள். பானுமதியும் தேவனிடம் கங்கை நாச்சியை ஒப்படைத்துத் திரும்புகிறாள். இவை அனைத்தையும் பெரிய தேவியார் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான மன்னாரின் மூலம் செய்கிறாள்.

சேதுநாட்டை அடைந்த கங்கை நாச்சியை அனைவரும் வரவேற்கிறார்கள். அவளும் புகுந்த வீட்டிற்கு வந்ததுபோல மகிழ்ச்சியடைகிறாள். மகளைக் காணாத திருமலைநாயக்கர் அவள் எழுதிய கடிதத்தைப் படிக்கிறார். ராமப்பய்யர் போர் தொடங்கியே ஆகவேண்டுமென வற்புறுத்துகிறார்.

சேதுநாட்டை நோக்கிப் படைகள் புறப்படுகின்றன. மறவர்குலமாணிக்கமான சடையத்தேவரும், வன்னியத் தேவனும் போரிடுகிறார்கள். ராமப்பய்யன் படைகள் ஆரம்பத்தில் அழிகின்றன. வன்னியத்தேவன் நோய்வாய்ப்பட்டு இறக்கவே, பல கொடுமைகளைச் செய்து போரிலே வெற்றி பெறுகிறான் ராமப்பய்யன். ராமேஸ்வரத்திலிருந்த சடையத் தேவரையும் கங்கை நாச்சியையும் அழைத்து வருகிறான். சடையத் தேவரைக் கைதியாக பாவிக்காமல் அரசமரியாதை கொடுக்குமாறு கங்கை நாச்சி கேட்டுக் கொள்கிறாள். மதுரையை அடைந்த நாச்சி தேரிலேயே விஷமருந்தி உயிர் விடுகிறாள்.

**ரூப்மதி**

சாராங்காபுரி அரசர் தாகோர் தன் மகள் ரூப்மதி ஒரு நாடோடிக் கவிஞனுடன் நட்புக்கொண்டு பாடல்கள் பாடிவருவதாகவும் அதனால் கோபமடைந்த மன்னர் அந்த நாடோடியைப் பிடித்துவர ஆணை பிறப்பிப்பதாகவும் கதை தொடங்குகிறது.

நர்மதை ஆற்றங்கரையில் பௌர்ணமிதோறும் நாடோடிக் கவிஞனும் ரூப்மதியும் சந்திப்பது வழக்கம். ஒரு நாள் நாடோடிக் கவிஞன் அரசதோரணையுடன் வந்து ரூப்மதியை தன்னைச் சிறைஎடுத்துச் செல்லும்படி வேண்டுகிறான். பின்னர் அவனே மாண்டுவின் அரசன் பாஜ்பகதூர் என்பதை ரூப்மதி அறிந்து அவனை மணமுடித்துக் கொடுக்கும்படி தந்தையிடம் கேட்கிறாள்.

அப்போது அக்பர் பாதுஷா தனக்கு ரூப்மதியை மணமுடித்துக் கொடுக்கும்படி ஓலை அனுப்புகிறார். மறுத்தால் போர் மூளும் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்பரின் சகோதரன் ஆதம்கான் (வளர்ப்புத்தாயின் மகன்) ரூப்மதியை தானே அடைய ஆசை கொண்டு அக்பரின் உத்தரவைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முயல்கிறான்.

போர் மூளுகிறது. ரூப்மதி மாண்டுக் கோட்டைக்கு அனுப்பி வைக்கப்படுகிறாள். பாஜ்பகதூர் டெல்லிப்படைகளைப் புறமுதுகிட்டு ஓடச் செய்கிறான். வெற்றிபெற்ற பாஜ்பகதூருக்குத் தன் மகளை மணம் செய்து வைக்கிறார் தாகேர்.

மாண்டுக்கோட்டை ரூப்மதியின் காதல் கோட்டையாகிறது. அவளின் விருப்பத்திற்கிணங்க நர்மதையானது மலைமீது கொண்டுவரப்பட்டு ரூப்குண்ட் என்ற நீர்நிலை உருவாகிறது. பௌர்ணமி தோறும் நர்மதையைத் தரிசிக்கும்பேறு பெற்று கவிதைக் காதலில் சங்கமித்து வாழ்கின்றனர் ரூப்மதியும் பாஜ்பகதூரும்.

பாஜ்பகதூரைக் காணவந்த அவரது குரு இன்னும் ஒரு ஆறுமாத காலத்துக்கு ரூப்மதியைப் பத்திரமாக பார்த்துக் கொள்ளும்படி கூறிச் செல்கிறார்.

தான்சேன் என்ற இசைமேதைக்கு ஒப்பான ரூப்மதியின் இசையைக் கேட்கவேண்டும் என்ற விருப்புடன் அக்பர் திரும்ப மாண்டுவிற்கு வருகிறார். அவரை பாஜ்பகதூர் வரவேற்கிறான். ரூப்மதியோ அவரைப் பார்க்கக்கூட விரும்பவில்லை. கதவின் பின்புறமிருந்து அவள் பேசும் பேச்சை மட்டுமே அக்பரால் கேட்க முடிந்தது. தன் இசையும் அழகும் தன் கணவருக்கு மட்டுமே சொந்தம் என்று மறுதலித்த

ரூப்மதியை நினைத்துக் கொண்டே எப்படியும் பத்திரமாக அக்காதலர்களை அழைத்து வரும்படிக் கூறி டெல்லி செல்கிறார்.

தீயவன் ஆதம்கான் போரில் பாஜ்பகதூரைக் கொன்றுவிடுகிறான். ரூப்மதியை அடைய ஆசைகொண்டு வருகிறான். பாஜ் இறந்த செய்திகேட்டு ரூப்மதியும் அந்தப்புரப் பெண்களும் ரூப் குண்டத்தில் விழுந்து உயிர் விடுகின்றனர்.

**கானல்கானம்**

அறையணி நல்லூர் சிவன் கோயில் அர்த்த மண்டபத்தைக் கட்டியவன் இள வெண்மதி சூடினான். இவன் மண்டபத்தைக் கட்டிவைத்து தன்னுடைய தலையைத்தானே வெட்டி பலியாக்கிக் கொண்டான். இவன் ஒரு தாசிமகன் எனத் திருக்கோவலூர்க் கல்வெட்டு கூறுகிறது.

தன்னந்தனியனாக ஒற்றைமரமாக தாய்ப்பாசத்திற்கு ஏங்கும் அவன், காத்து வளர்த்த சொக்கநாத வேளாரும் கைவிட்டநிலையில் வாழ்ந்து வந்தான். இவன் இயல்பிலேயே நல்ல குணங்கள் அமையப் பெற்றவன். சொக்கநாத வேளாரின் மனைவி பெரியநாயகி, அவனைப் பெற்ற மகனை விட மேலாக வளர்த்தாள். அவளுடைய மகன் நல்ல பெருமாள் தீயகுணங்கள் அமையப் பெற்றவன். சொக்கநாத வேளார் தாசி செங்கமலத்துடன் தொடர்பு கொண்டவர். நல்ல பெருமாளும் தந்தையைப் போன்றே தாசி தொடர்புடையவன்; குடிகேடியவன். ஒருநாள் தாயும் தந்தையும் பேசுவதைக் கேட்டு இளவெண்மதி அவர்களது மகனல்ல என்பதை அறிந்து வீட்டை விட்டுத் துரத்தினான்.

செந்திருவேளாரும் சொக்கநாதவேளாரும் நண்பர்கள் வீணை செங்கமலத்தை சொக்கநாத வேளாரின் சிபாரிசின் பேரில் தன் மகள் சுரமாலைக்கு இசையாசிரியராக அமர்த்தியிருந்தார் செந்திருவேளார். இளவெண்மதி சூடினனுக்கு வாணிபத்திற்கு உதவியும் செய்தார். நல்ல பெருமாளை அவருக்குப் பிடிப்பதில்லை. சுரமாலையும் இளவெண்மதி சூடினானும் காதலர்கள் என்பதை அறிந்து அவர்களுக்கு

மணமுடிக்கவும் ஒப்புதல் அளிக்கிறார் செந்திருவேளார். சொக்கநாதவேளார் முன்பு செய்து கொண்ட ஒப்பந்தப்படி சுரமாலையைத் தன் மகன் நல்ல பெருமாளுக்கு மணமுடித்துக் கொடுக்குமாறு கூறுகிறார்; செந்திருவேளார் மறுக்கிறார். செங்கமலத்தின் மகனே இளவெண்மதி சூடினான் என்பது அவருக்குத் தெரியவருகிறது.

செந்திருவேளாரும் அவன் பேரில் உள்ள களங்கத்தைப் போக்க அறையணி நல்லூர் கோயிலுக்கு மண்டபம் கட்டும்படிக் கூறுகிறார். செங்கமலம் அவனுக்குப் பொருள் உதவி செய்கிறாள்; மண்டபம் முடிக்கப்படுகிறது. சுரமாலையின் இசை அரங்கேற்றத்துக்கு பாண்டிய மன்னர் சுந்தரபாண்டியர் வருகிறார். அரங்கேற்றம் இனிதாக நடந்து முடிகிறது. அப்போது சுரமாலையைத் தன் அரசவை ஆஸ்தான பாடகியாக அழைத்துச் செல்ல விரும்புகிறார். அந்த சமயம் இளவெண்மதி சூடினான் தனக்கும் செங்கமலத்துக்கும் பிறந்த மகன் என்பதை மறைத்து அவன் ஒரு தாசியின் மகன் என ஊரார் முன்னிலையில் கூறுகிறார். இதனால் வருத்தமடைந்த இளவெண்மதி தான் கட்டிய கோயில் மண்டபத்தில் தன் தலையைத் தானே வெட்டிப் பலியாக்கிக் கொள்கிறான். ஓடிவந்த செங்கமலமும் மகனுடனேயே விண்ணுலகம் செல்கிறாள். சுரமாலையோ பித்துப்பிடித்தவளாகிறாள். இன்னும் ஆற்றங்கரையில் அவளது இசை ஒலி கேட்கிறது.

**பூங்குழலி**

இந்தப் புதினம் நந்திக்கலம்பகத்தை அடியொற்றி அது எப்படித் தோன்றியது என்ற ஆராய்ச்சியின் அடிப்படையில் ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ளது. மாணிக்கவாசகரின் திருப்பொன்னூஞ்சலுக்கு இணையானது.

தமிழுக்குத் தன் உயிரைக்கொடுத்தவன், தமிழ் மீது தாளாக் காதல் கொண்டவன், தெள்ளாற்றுப்போரில் சேரபாண்டியரைப் புறம்கண்ட மூன்றாம் நந்திவர்ம பல்லவர் மல்லைக்குப் புறப்படுவதாகக் கதை தொடங்குகிறது. மன்மத சொரூபனாய் வெளிவந்த நந்தியுடன் அவரது உயிர் நண்பன் கேசிகன், மகா சேனாதிபதி கொடும்பாளூர்

பூதிவிக்ரம கேசரி, பேரமைச்சர் நம்பன் இடையூர் உடையார் அனைவரும் புறப்படுகின்றனர். இளவரசன் நிருபதுங்கவர்மனும் புதிய அமைச்சர் பிரம்மராஜனும் காழ்ப்புணர்ச்சியோடு நிற்பதைக் கழற்சிங்கரான நந்திவர்மன் கவனிக்கிறார்.

மகன் நிருபதுங்கவர்மன் பெயருக்கு அவனுக்கு முடிசூட்டிவிட்டு அனைத்து செயல்பாடுகளையும் அவரே கவனிப்பதை வெறுக்கிறான். நந்தியின் முதல் மனைவி சங்காதேவியும், நிருபதுங்கவர்மனும் தமிழையும், தமிழரையும் வெறுப்பவர்கள். இரண்டாம் மனைவியான மாறம்பாவையே இளவரசன் நிருபதுங்கவர்மனை வளர்த்தவள். அவளுக்குத் திரிபுவன தேவி என்ற மகள் மட்டுமே. தந்தையிடமும் தமிழிடமும் கருத்துவேறுபாடு இருப்பினும் சிற்றன்னை மாறம்பாவையிடம் தாளாத பாசமும், மதிப்பும் உடையவன் இளவரசன் நிருபதுங்கவர்மன்.

விஜயாலயச் சோழர் நந்திக்கு உற்ற நண்பர்; அவரது மகன் ஆதித்தன் நந்தியின் மெய்க்காப்பாளன். அவனும் திரிபுவன தேவியும் மனமொத்த காதலர்கள் பெரியவர்களுக்கும் இந்த உண்மை தெரியும். தமது காலத்திலேயே தமிழ்ச் சங்கம் வைத்து வளர்க்க வேண்டுமென்பது நந்தியின் ஆசை. பெருந்தேவனாரை வைத்து பாரதம் படைத்தார்.

மல்லைக்கு விஜயம் செய்த மாமன்னர் நந்தி, இரவு மக்களின் விருப்பிற்கிணங்க ஆய்ச்சியர் குரவை காணச் செல்கிறார். அங்கு யசோதை என்ற பெண் நந்தியைப் பற்றிய பாடலைப் பாடுகிறாள். அதனைக் கேட்ட நந்தி மயக்கமுறுகிறார். அப்பாடலில் ஒலித்த பெண்ணின் இதயத்துடிப்பு நந்தியை மயக்கமுறச் செய்தது. திரிபுவனதேவி மன்னரை மடியில் கிடத்தி வீசிக் கொண்டிருக்கையில் கூட்டத்திலிருந்து இருவர் தப்பித்து செல்வதைக் கண்ட கேசிகனும் ஆதித்தனும் ஒருவனைக் கொன்றுவிடுகின்றனர். அரசர் கண்விழித்துக் காடவனோ என வினவுகிறார். தம்பியர் எண்ணமெல்லாம் பழுதாய் என்ற வரிகளுக்கு உரிய தம்பியரில் கடையவன்தான் காடவன்.

பின்னர் பாடலைப்பாடிய யசோதையை அழைத்து வரச்செய்து அப்பாடல் யாருடையது என்று வினவ அவள் தன்னுடைய தலைவி பூங்குழலி என்றும், அவள் மதுரையில் இருக்கிறாள் என்றும் கூறுகிறாள். பாடிய பெண்ணுக்குப் பரிசுகளும் பூங்குழலிக்குக் கலம்பகமாலையையும் பரிசாகக் கொடுத்து அனுப்புகிறார் நந்தி.

கலம்பக மாலையானது காதல் வயப்பட்ட இருவரின் உள்ளத்தையும் விளக்குகிறது. பூங்குழலி மதுரைமன்னரின் அவைக்களப் புலவர். பாண்டிய இளவரசன் பராந்தகனால் பாதிக்கப்பட்டுப் பதவியைத் துறந்து வந்தவள். ஆனால் இழைக்கப்பட்ட கொடுமையை மானபங்கத்தை நந்திவர்மனைக் கொண்டு தீர்ப்பதாகச் சபதம் செய்கிறான். அவள் மார்பில் கச்சையணிவதில்லை. அதற்குக் காரணம் இந்த சபதமே.

காஞ்சிக்குச் சென்றவுடன் நந்திவர்மனின் மனமறிந்த மாறம்பாவை பூங்குழலியை அனுப்பி வைக்கும்படி தன் தந்தையான பாண்டியருக்கு ஓலை அனுப்புகிறாள். பாண்டிய மன்னன் தன்மகளின் வேண்டுதலுக்கு இணங்கி பூங்குழலியைக் காஞ்சிக்கு அனுப்புகிறார். வழியில் பராந்தகனால் தஞ்சைக்குக் கடத்தப்படுகிறாள். அவளை அழைத்துவரச்சென்ற ஆதித்தனும் தன் தந்தை விஜயாலயரிடம் இச்செய்தியைக் கூறுகிறான்.

தஞ்சை மன்னன் சாத்தன் பழியிலியின் உதவியுடன் அவளை அங்கே சிறைவைக்கிறான் பராந்தகன். இளவரசி இளைய நங்கைக்கும், இளைய ராணிக்கும் இது பிடிக்கவில்லை. விருப்பமில்லாமல் இந்த பெண் கடத்தலுக்கு உதவி செய்த செந்தலை அரசன் சாத்தன் பழியிலியின் மைத்துனன் அனந்த மேகன் மற்றைய விஷயங்களிலிருந்து ஒதுங்கிக் கொள்கிறான்.

அங்கிருந்து பூங்குழலியை மீட்க அரிசிலாற்றங்கரை போர் மூளுகிறது. திருக்கோயிலூர் அரசன், அவரது மகன், உறையூர் அரசன், சாத்தன்பழியலி ஆகியோருடன் போர் நடக்கிறது. போரில் வீரமாசிங்கமான விஜயாலயர் அனைவரையும் புறமுதுகிட்டு ஓடவைக்கிறார். திருக்கோயிலூர் இளவரசன் வைரமேகன்

சிறைவைக்கப்படுகிறான். தஞ்சை தஞ்சமடைகிறது. சாத்தன்பழியிலி போரில் வீரமரணம் அடைகிறார். விஜயாலயரோ தொண்ணூற்றாறு விழுப்புண்களைப் பெற்ற வெற்றிவீரராக ஓய்வு கொள்ளுகிறார். அவரைக் காணவந்த பூதிவிக்ரமகேசரியைக் கொல்லும்படி நிருபதுங்கன் ஆளை அனுப்புகிறான். இதனால் மனம் வேதனைப்பட்ட பூதிவிக்ரமகேசரி கொடும்பாளூரிலேயே தங்கிவிடுகிறார். பூங்குழலி மீட்கப்படுகிறாள். எனினும் தான் பூங்குழலியல்ல அவளது தங்கையெனக்கூறி நடிக்கிறாள். தன்னுடைய சபதம் நிறைவேற இதுவே சரியான யுத்தி என நினைக்கிறாள்.

வெற்றிச் செய்திகேட்ட நந்தி தஞ்சையைஅடைகிறார். சாத்தன் பழியிலியின் இரண்டாம் மனைவி பராந்தகனை நம்பிச் சென்று தன்னையும் இழந்து கொல்லப்படுகிறாள். இளநங்கையும் அனந்தனையும் நந்தி ஆசிர்வதிக்கிறார். திருக்கோயிலூர் அரசர் சித்தவடங்கர் மனம் திருந்தியதைக் கண்டு நந்தியால் பாராட்டப்படுகிறார். அவரது மகன் வைரமேகன் சிறையிலிருந்து விடுதலையாகிறான். பூங்குழலியின் பொய்யுரையை நந்தி நம்பவில்லை. விஜயாலயருக்குக் குணமடைந்த பிறகு முடிசூட்டுவதாகவும், திரிபுவனதேவிக்கும் ஆதித்தனுக்கும் திருமணம் என்றும் நிச்சயிக்கப்படுகிறது. காஞ்சிக்குச் சென்ற பூங்குழலி நந்தியிடம் தன்னை மறைக்க முடியவில்லை. தன் சபதத்தைக்கூறிப் பராந்தகனைப் பழிவாங்கக் கோருகிறாள்.

பொய்யான பூங்குழலியை அனுப்பியதாக மாறம்பாவை தந்தையிடம் கேட்க பாண்டியருடன் போர் மூளுகிறது. பராந்தகனைத் தமயன் வரகுணன் மாறம்பாவையிடம் ஒப்படைக்கிறான். பராந்தகனுக்கு பூங்குழலி அளிக்க வேண்டிய தண்டனையைத் தன் தம்பிக்கு அவளே அளிக்கிறாள்.

நந்திக்கலம்பக அரங்கேற்றம் ஏற்பாடாகிறது. நிருபதுங்கன் இதனை வெறுக்கிறான். நூறுபாடல்களையும் பூங்குழலி ஒவ்வொன்றாகப் பாட, வசைவைத்துப்பாடிய பாடல்கள் என நந்தியின் தம்பி அதைத் தடுக்கிறான். வானுறு மதியை என்ற பாடல் நந்தியைக் கொல்வதற்கே எனக் குற்றம் சாட்டுகிறான். முடிவில்

சந்தனக் கட்டைகளை அடுக்கி அதில் கலம்பகத்தை எரிக்கிறான் நிருபதுங்கவர்மன். தமிழ் சாவதைக் கண்ட நந்தியோ யார் தடுத்தும் கேளாமல் தானும் அந்தத் தீயில் இறங்கி தமிழோடு ஐக்கியமாகிறார்.

**சாம்ராட் அசோகன்**

பாடலிபுரத்து அரண்மனை உப்பரிகையில் தேவனாமப்பிரியரான மகதமகா சக்கரவர்த்தி அசோகவர்த்தனர் காலையில் அந்நகரம் எவ்வளவு அழகாக இருக்கிறது என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தார். அதேசமயம் அவர் உள்ளத்தில் தன்மகன் சந்திரமௌலியின் எதிர்காலம் பற்றிய வேதனையும் இருந்தது. அவனுக்காக அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் அனைத்தும் பாழாகிவிட்டதை எண்ணி வருந்தினார்.

கொடுமைகளின் இருப்பிடமான பெண்ணாசை கொண்ட சந்திரமௌலி இனியும் திருந்தாவிட்டால் கொடிய நரகமான சிறைக்கு அவனை அனுப்பியே தீருவேன் என்ற முடிவுடன் அசோகர் இருப்பதை அறிந்த அக்ரமகிஷி அவரது துன்பத்தில் பங்கு கொள்கிறாள். ஆனால் வேதிசமாதேவியோ அவனைத் திருத்துவதாக வாக்களிக்கிறாள். புதினத்தில் அக்ரமகிஷி, வேதிசமாதேவி, காருவகி, பத்மாவதி, திஷ்யரக்ஷகா ஆகிய அசோகரின் மனைவிகள் இடம்பெறுகின்றனர்.

தன்னை வளர்த்த தாயான வேதிசமாதேவியின் சொல்லுக்கு மட்டுமே சந்திரமௌலி கட்டுப்படுவான். எனவே சாக்கிய மதத்தைச் சார்ந்த காருவகியும் தமக்கை அவனைத் திருத்திவிடுவாள் என நம்புகிறாள். திரிஷ்யா அனைவரிலும் வித்யாசமானவள். நாகத்தைப் போன்ற கொடிய குணமுள்ளவள்.

வேதிசமாதேவியின் முயற்சியால் உபகுப்தரின் ஆசிரமம் சென்று மேற்கூறிய அனைவரும் அசோகர் உட்பட திருஷ்யா நீங்கலாக அவரின் வளர்ப்பு மகளான புஷ்பமாலிகையைச் சந்திரமௌலிக்கு ஆசிரியையாக அழைத்து வருகின்றனர்.

சந்திரமௌலியின் நண்பன் புலிந்தகன் நண்பனின் குணங்கள் அமையப் பெற்றவன். இளவரசன் மகேந்திரன் (அசோகரின் தம்பி) இவர்கள் இருவருக்கும்

சளைத்தவனில்லை. புலிந்தகன் காதலியான சிரிமாவை மகேந்திரனும் சந்திரமௌலியும் அவளின் பெண்மையை அழித்துவிடுகின்றனர். சிரியா தற்கொலை செய்து கொள்கிறாள். அவள் இறக்கும்போது இளவரசனும் மகேந்திரனும் தன்னுடைய சாவிற்குக் காரணம் என்றும், அவர்களைப் புலிந்தகன் பழிவாங்க வேண்டும் என்றும் எழுதி வைத்து இறக்கிறாள்.

இந்த வழக்கு அரண்மனைக்கு வருகிறது. சந்திரமௌலியின் ஆசிரியையான புஷ்பமாலிகை தன் புத்தி சாதுர்யத்தால் இளவரசனைக் குற்றமற்றவன் என நிரூபிக்கிறாள். மகேந்திரன் தலைமறைவாகிறான். இருப்பினும் தன் மனசாட்சியைக் கொன்று இளவரசனைக் காப்பாற்றிய தன் குற்றத்தைப் புத்தபகவானின் காலடியில் ஒப்படைக்க ஆசிரமம் செல்கிறாள். உடன் சந்திரமௌலியும் செல்கிறான். அவளின் அன்பான புத்தபகவானின் போதனையால் சந்திரமௌலி திருந்திவருகிறான். இடையே அவனைப் புலிந்தகன் கொல்லவருகிறான். புஷ்பமாலிகையின் ஊர்மக்கள் அவனை விரட்டி அடிக்கின்றனர். உபகுப்தர் வைத்த சோதனையில் சந்திரமௌவி வெற்றிபெறுகிறான்.

திருந்தி அரண்மனைக்கு வந்த தன்மகனுக்கு அதற்குக் காரணமான புஷ்பமாலிகையையே திருமணம் செய்துவைக்க முடிவு செய்கின்றனர்.

ஆனால் திரிஷ்யாவோ புத்தமதத்தை வெறுப்பவள். சாக்கிய குமாரியான வேதிசமாதேவி, காருவகி அவர்களுடன் புஷ்பமாலிகையும் சேர்ந்தால் பௌத்தம் நாடேறி ஆட்சி செய்யும் என வெறுக்கிறாள். சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம் படித்த அவள் புலிந்தகனைத் தன் வயப்படுத்திப் புஷ்பமாலிகையை கொல்லப் பணிக்கிறாள்.

இளமையும் அழகும் கொண்ட திரிஷ்யா அசோகரின் மகன் குணாளனை அடைய வேண்டுமென்ற தீய எண்ணம் கொண்டவள்.

சிரிமாவை சந்திரமௌலி கற்பழித்துக் கொன்றதைப் போல புஷ்பமாலிகையைக் கொல்ல வேண்டுமென புலிந்தகனை அனுப்புகிறாள். தனிமாளிகையிலிருந்த

புஷ்பமாலிகை புலிந்தகனால் கற்பழிக்கப்பட்டுக் கொல்லப்படுகிறாள். அவளும் இறக்கும் தருவாயில் புலிந்தகன் என் பெண்மையை அழித்து என்னைக் கொன்றான்; அவனை மன்னிக்கவும் என எழுதிவிட்டு இறக்கிறாள்.

இச்செய்தி அறிந்து அனைவரும் வர சந்திரமௌலி தான் உண்மையாக காதலித்த புஷ்பமாலிகையின் கோலம் கண்டு மீண்டும் மிருகமாகிறான். அவனைத் தேடிச் சென்று அவனைக் கொல்லுகிறான். அவனது மிருக உணர்ச்சி எல்லையை மீறும்போது அசோகரே அவனைக் கொல்ல ஆணையிடுகிறார். தடுக்கச் சென்ற வேதிசமாதேவியும் மகனைக் காப்பாற்றப் போய் அம்புபாய்ந்து மகனுடனேயே இறக்கிறாள். மகேந்திரன் மனம் திருந்தி பௌத்த துறவியாகிறான். மகதமே மணிமுடியை இழந்து உபகுப்தரின் வாக்குப்படி தர்மம் தழைக்க புத்தபிரான் அருளாட்சியை ஏற்பதாகப் புதினம் முடிகிறது.

**சேரசூரியன்**

கடம்பத்தீவின் அரசி சூரியசீலியும் அவளது தோழி நிவேதியாவும் ஒரு கப்பலில் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் காவலாக சேனாதிபதி ஐயகேசிகன் கப்பலின் மேல் தளத்தில் நின்று கொண்டிருக்கிறான். சூரியசீலி கருப்பழகி. அவள் அர்த்தசாஸ்திரம் படித்து அதனை அவர்கள் மொழியிலேயே எழுதிவைத்துக் கொண்டிருப்பவள். அவளது மனம் சேரமன்னன் நெடுஞ்சேரலாதனை விரும்புகிறது. அவனைக் காணாமலேயே அவன்பால் காதல் கொண்ட அவள் தானே மாந்தைக்குச் சென்று தன் காதலைக் கூறப்புறப்படுகிறாள். வரும்வரை நிவேதி ஐயகேசிகன் பொறுப்பில் நாட்டை விட்டுச் செல்கிறாள்.

சூரியசீலி சிக்கரையன் என்ற தளபதியுடன் மாந்தையை வந்தடைகிறாள். அப்போது கடற்கொள்ளையன் திரிலோசன கடம்பன் வருவதாக செய்திவரவே, சோதிக்க வந்த கடற்தளபதியிடம் தான் இன்னாரென்று கூற, விருந்தினர் மாளிகையில் தங்குகிறாள்.

மாந்தையில் உதியன் சேரலாதனது அறுபதாவது பிறந்தநாளைக் கொண்டாட காவிரிக்குச் செல்கிறார்கள். பட்டத்தரசி நல்லினி தேவியார், நற்சோனை நெடுஞ்சேரலாதன், பேரன் செங்குட்டுவன் இளங்கோவுடன் குடகு நோக்கிச் செல்கிறார்கள்.

விழா முடிந்ததும் நல்லினி தேவி உதியனிடம் இருவரங்களைக் கேட்கிறாள். முதலாவது, அவளது அறுபதில் உதிக்கின்ற சூரியனையும் மறைகின்ற சூரியனையும் ஒருங்கே பார்க்கவேண்டும். அதுவும் அந்த நாடு சேரனுக்கு உடையதாக இருக்க வேண்டும். மற்றொன்று இமயவரம்,கங்கை நீரில் அபிஷேகித்துக் கொள்ள வேண்டும் என்பது. இதனை நெடுஞ்சேரலாதன் நிறைவேற்றுவதாக வாக்களிக்கிறான்.

அமைச்சர் முடிநாகனாருக்கு இமயவரத்தில் உடன்பாடில்லை. திரும்ப வருகையில் அமைச்சரின் பிறந்த பூமியான நாகநாட்டுக்கு வந்து தங்குகிறார்கள். அங்கு அனைவரையும் மகிழ்விக்கும் வகையில் விழா நடக்கிறது. அவ்விழாவில் நாகா என்ற பெண் அரவங்களை அணிந்து கொண்டு நாட்டியமாடியது வினோதமாக இருந்தது. திடீரென்று திரிலோசனக் கடம்பன் வருகிறான் என்று குழப்பம் ஏற்படவே கூட்டம் சிதைகிறது. அவனை யாரும் பார்த்ததில்லை. குதிரையில் சென்ற ஒருவனைத் துரத்திச் செல்கின்றான். குடவர்கோனும் நெடுஞ்சேரலாதனும், எதுவும் தெரியாத நிலையில் திரும்பிவர நாகாவீடு திறந்திருக்க அவளை அழைத்து விசாரிக்கிறார். அங்கு இருந்த ஆண் உடைகண்டு அவளுக்கும் திரிலோசனக் கடம்பனுக்கும் தொடர்பிருப்பதாக நாகாச்சார்யாவிடம் கூறுகிறான் சேரலாதன். காலையில் முன்னிரவு தேடிச்சென்ற இடத்தில் ஒரு சுரங்கம் இருப்பது கண்டு அங்கு அத்தீனா என்ற யவணப் பெண்ணையும் அவளது தோழியையும் அழைத்து வருகிறான்.

அத்தீனா யாரென்று வினவ அவளது காதலனைப் பிரிந்துவந்த அவளை நெடுஞ்சேரலாதன் சேர்த்து வைப்பான் எனவும் அவளுக்குத் தீங்குசெய்தால் அவரை அவனே பழிவாங்குவான் என்றும் கூறுகிறாள். நெடுஞ்சேரலாதனைக் காணாத அவள்

அவன் வீரத்தின் மீதும் பண்பின் மீதும் வைத்திருந்த நம்பிக்கை பலரை வியக்கவைத்தது.

நாகாவைத் தன்னுடனே அழைத்துச் செல்கிறான். அத்தீனாவோ காணாமல் போகிறாள். மாந்தை திரும்புகிறார்கள்.

உதியனின் மறைவிற்குப் பின் அறுபதை அடையாத நல்லினியின் முதல் வரம் நிறைவேறுகிறது. தென்பாண்டி நாடு சேரநாட்டுடன் இணைக்கப்பட்டது. நின்கடற்பிறந்த ஞாயிறு பெயர்ந்தது என முடிநாகானார் பாடி மகிழுகிறார்.

மூன்றாண்டுகள் கழிந்த பிறகு நாகாவை அவன் நாட்டுக்கு அனுப்பக் கோருகிறாள் முதல் மனைவி பதுமன்தேவி. திரிமலாசனக் கடம்பன் பற்றிய உண்மையை அறிய அவனை அனுப்ப மறுக்கிறான் சேரலாதன். ஆனால் பதுமன் தேவி அவளை யாருமறியா வண்ணம் தப்பிக்க வைக்கிறாள்.

இமயவரம் தொடங்குகிறது. சேரலாதனைச் சந்தித்த சூரியசீலி தன் காதலைக் கூறுகிறாள். அவளுக்கு அரசிக்குரிய மரியாதை அளிக்கப்படுகிறது. அவளது ராஜதந்திரத்தின் மூலம் செங்குட்டுவன் கடம்பர்களை அழிக்கப் புறப்படுகிறான். பதுமன் தேவியோ தன் மக்களான நார்முடிச்சேரனையும், அவன் தம்பியையும் அனுப்ப மறுக்கிறாள். செங்குட்டுவனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டப்படுகிறது.

இமயவரத்துக்குத் தம்பியின் தளபதி வில்லவன் கோதை, நண்பன் அறுகை ஆகியோர் சேரலாதனுடன் செல்கின்றனர். சோழப்படை சேரப்படையுடன் இணைகிறது. போருக்குப் புறப்படும் தருவாயில் குமட்டூர்க் கண்ணனார் அத்தீனாவை அழைத்துவந்து சேரலாதனிடம் ஒப்படைக்கிறார்.

கூபகநாட்டு அரசி சூரியசீலியின் தோழி அவளுக்குத் துரோமிழைத்து ஐயகேசிகனை மணந்துகொண்டு தானே அரசியாகிறாள்.

அத்தீனா தன் காதலன் ஹெலன் இழந்த நாட்டை மீட்டுக் கொடுக்கும்படியும் அவளை அவனுடன் சேர்த்து வைக்கவும் வேண்டுகிறாள். சேரலாதனும் அப்படியே

செய்வதாக வாக்களிக்கிறான். படை கடம்பின் பெருவாயில் பாழியை அடைந்து நன்னனை அடக்குகிறது. தப்பித்து வந்த நாகா சிறைப்பிடிக்கப்படுகிறாள். கடம்பர்கள் அழிக்கப்படுகின்றனர். சூரியசீலி மீண்டும் அரசியாகிறாள். துரோகம் இழைத்தவருக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது. செங்குட்டுவனின் கன்னிப்போர் வெற்றியுடன் முடிந்தது.

மாறுவேடத்தில் சேரலாதன் தானே திரிலோசனக் கடம்பன் எனக் கூறி நாகாவை மிரட்டுகிறான். அப்படி ஒருவன் இல்லை என்றும் அவனது கொடுமைகளைக் கேள்விப்பட்ட அனைவரும் அஞ்சுகின்றனர். நாகாவே அவ்வாறு போலித் தோற்றம் கொண்டு நடத்தாள் என்பதையும் வாசகர்கள் அறிகிறார்கள். நாகாவின் யோசனைப்படி வெள்ளைத்தீவு முறியடிக்கப்படுகிறது. திரிலோசனக் கடம்பனான சேரலாதன் மகன் செங்குட்டுவனிடம் ஒப்படைக்கப்படுகிறான். வெகுண்ட செங்குட்டுவன் தண்டனை அளிக்க அதை நாகா தடுக்க சேரலாதனின் உண்மைத் தோற்றம் வெளிப்படுகிறது. நாகாவை வெள்ளைத்தீவின் அரசியாக்கி இமயவரம் தொடருகிறது. இடையில் அத்தீனாவை சிறைப்பிடித்து ஒளித்து வைக்கிறான் நன்னன். அவனைக் காதலன் ஹெலன் அழைத்துச் சென்றுவிட்டதாகவும் கூறுகிறான்.

இமயவரத்தில் எதிர்த்தவரையெல்லாம் வெற்றிகண்டு இமயத்தில் கோமுகியிலிருந்து உற்பத்தியாகும் கங்கை நீரைக் குடங்களில் ஏற்றிவருகிறான் சேரலாதன். இமயத்தில் விற்கொடி பொறிக்கப்பட்டு நெடுஞ்சேரலாதனின் எல்லை இமயவரம்பாகிறது. திரும்புகையில் பித்துப்பிடித்தவன் போலிருந்த ஹெலனை அழைத்து உண்மைநிலையை அறிகிறான். அவனுடைய நாடு மீட்டுக் கொடுக்கப்படுகிறது.

நன்னனிடமிருந்து சிறைமீட்டு அவனை அழித்து அத்தீனாவை ஹெலனுடன் நாட்டிற்கு அனுப்பி வைக்கிறான் சேரலாதன். சூரியசீலியை மணந்து அவ்வப்போது அங்கு சென்று வருகிறான்.

கங்கை நீரைக் கொண்டுவந்து அன்னைக்கு அபிசேகம் செய்விக்கிறான். நல்லினி தேவியின் இருவரங்களையும் நிறைவேற்றிய தன் மகனைப் பார்த்துப் பாராட்டி மகிழ்கிறாள். அவனைப் பெற்ற வயிறு மணிவயிறு என்றும் தன்மீது பேரன்பு கொண்ட செங்குட்டுவனைப் பெற்ற வயிறு மாணிக்கம் என்றும் போற்றுகிறாள். தன்னை வணங்கிய பேரன் செங்குட்டுவனை வாழ்த்தி அவனைச் சேரசூரியன் எனக்கூறி மகிழ்கிறாள். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனது மகன் சேரசூரியனாக ஒளிர்கிறான்.

**சேரன் குலக்கொடி**

வஞ்சிமா நகரின் காவல் தெய்வம் கொற்றவையை வழிபடச் செங்குட்டுவனின் வளர்ப்பு மகள் (மைத்துனி) பொற்கொடி தன் தோழி செவ்வல்லியுடன் பூசைக்குச் செல்கிறாள். கொற்றவை வழிபாடு செய்யும் பொற்கொடி அன்று ஆனைத்தோல் போர்த்து . . . . . . . என்ற இளங்கோ எழுதிய பாடலைப் பாடினாள்.

அன்றுதான் கடம்பர்களை அடக்க மாவீரர் செங்குட்டுவர் போர்ப்பயணம் துவங்குகிறார். கடம்பர்கள் நெடுஞ்சேரலாதன் காலத்தில் அடங்கியிருந்தனர். திரும்பவும் தலை எடுத்த அவர்களை அழிக்கவே அவர் வீரமா சிங்கம் என புறப்பட்டுக் கொண்டிருந்தார். அமைச்சர் அழும்பில் வேளார், புலவர் பரணர், எண்பேராயத்தவர் குழுமியிருந்தனர். குறித்த நாழிகை வந்தும் திருமோகூர் பழையர் இன்னம் வரவில்லையே என ஆதங்கத்துடன் செங்குட்டுவர் மனம் அலைபாய்கிறது.

புறப்படும் வேளையில் பழையர் வந்துவிட்டார். செங்குட்டுவரும் அவருடன் மகிழ்வுடன் பேசி அவரைத் தான் வரும்வரை விருந்தினர் மாளிகையான வேண்மாடத்தில் தங்கச் சொல்லிவிட்டுப் புறப்படுகிறார். அவரது தம்பி இளங்கோ மதுரையிலிருந்து வரும் சீத்தலைச் சாத்தனாரை எதிர்கொண்டழைக்கப் போயிருப்பது தெரியவருகிறது.

கடம்பனாம் சூரபதுமனை அழிக்கப்புறப்பட்ட முருகக்கடவுள் போன்று செங்குட்டுவர் புறப்பட்ட திருக்கோலத்தை மாறுவேடத்தில் வந்த திருமோகூர் திறமாறன் ரசிக்கிறான்.

அவன் தங்கியிருந்த தென்னவன் விடுதியில் சிலர் திருமாறனைப்பற்றிப் பேசுகின்றனர். மோகூர் அரசன் திருமாறனுக்கு வில்லவன் கோதையின் மகளைக் கொடுப்பதை விடுத்து செங்குட்டுவரின் மகள் பொற்கொடியைக் கொடுத்தால் என்ன என்பதே பேச்சின் சாராம்சம்.

முதலாவதாக வில்லவன் கோதை மாளிகையைத் திருமாறன் அடைகிறான். அங்கு தன் தோழியைக் காணவந்த பொற்கொடி வாசலைத் திறந்துவிடுகிறாள். அவளைக் கோதையின் மகளா என்று வினவப் பொற்கொடியும் ஆம் என்கிறாள். திருமாறனும் தன்னை மறைத்துத் தான் கோதையின் நண்பன் எனப் பொய்யுரைக்கிறான். அப்போது இளவரசி! இளவரசி! என தோழிப் பெண்கள் அழைக்க அவளே பொற்கொடி என்பதை அறிந்து அவள் அழகில் மயங்கி அவளையே மணமுடிக்க வேண்டுமென முடிவு செய்கிறான். திருமாறனின் முகத்தில் உள்ள மச்சத்தின் மூலம் பொற்கொடி அவனை அறிந்துகொண்டு மோகூர் அரசரே, என்னைவிட பூங்கோதை அழகானவள்; நல்ல குணவதி என்று கூறிச் செல்கிறாள். அவளது வேடிக்கையான குணத்தை ரசித்த திருமாறனும் அவளை மனமாரக் காதலிக்கிறான். பொற்கொடியும் அவ்விதமே.

சோழர்கள் சேரனை ஒழிக்கத் திட்டம் தீட்டிச் சேரநாட்டில் அலைகின்றனர். தன் தந்தை அதில் மாட்டிக்கொள்ளக் கூடாதென திருமாறன் விழிப்புடன் இருக்கிறான். மீண்டும் பாண்டி நாடு சென்று பாண்டியரைக் கண்டு உண்மையறியத் தலைப்பட்டான்.

பொற்கொடி இளங்கோவடிகளின் குணவாயிற்கோட்டம் சென்று சீத்தலைச் சாத்தனாரைச் சந்திக்கிறாள். அவளது பண்பு, குணம், திறமை, பேச்சு ஆகியவற்றைக் கண்ட சாத்தனார் அவளை நல்ல தமிழ் மகள் எனப்பாராட்டுகிறார். இளங்கோவும் அவள்மீது அளவில்லா பாசம் கொண்டவர். அவள் யாரை விரும்பினாலும் அவரையே மணமுடித்துக்கொடுப்பதாக வாக்களித்துள்ளார்.

அக்கால சோழ அரசு குழப்பம் வாய்ந்தது. உறையூரை நெடுங்கிள்ளியும் பூம்புகாரை நலங்கிள்ளி, கிள்ளிவளவனும் மற்றும் சில பகுதிகளை எழுவர் ஆட்சி செய்து வந்தனர். செங்குட்டுவர் நெடுங்கிள்ளியின் சகோதரியை மணந்திருந்த காரணத்தால் நெடுங்கிள்ளியை அழித்துப் பூம்புகார் தலைவனே முழு சோழ அரசையும் ஆட்சி செய்யப் பல சதிகளைச் செய்து வருகிறான். பூம்புகார் சோழர்கள் பழையரின் மெய்க்காப்பாளன் எரியங்கனை கையூட்டுக் கொடுத்து அவர்கள் பக்கம் இழுத்துக் கொள்கின்றனர்.

பழையரின் கூடவே இருந்த எரியங்கன் அவரது மனதை மாற்ற முயல்கிறான். பழையரோ பொற்கொடியையே அவரது மருமகளாக ஏற்றுக்கொண்டு அவளிடம் பாசமழை பொழிகிறார். எரியங்கனுடன் வந்த இருளப்பனை பழையருக்குப் பிடிக்கவில்லை. மதுரை அரசரின் ஓலையுடன் திருமாறன் சேரநாட்டிற்கு வருகிறான். வரும்போது சோழ சதிகாரர்களின் ரகசியங்களைத் தெரிந்து வருகிறான். பூங்கோதை அறுகையின் மகன் சேரன் நம்பியை விரும்புகிறாள்.

பொற்கொடி திருமாறனைத் தான் மணந்துகொண்டு அவளை அவளுடைய காதலனுடன் சேர்த்து வைப்பதாகக் கூறுகிறாள். இளங்கோவை விரும்பும் திருமேனியின் தங்கை மலர்க்குழலியைச் சந்திக்கிறான் திருமாறன் தன் சகோதரியின் தவவாழ்க்கைக்கு அவளை மணந்து கொள்ள மறுத்த இளங்கோவே காரணம் என்று சேர அரசைப் பழிவாங்க சோழர்களுடன் கைகோர்த்துக் கொண்டவள் அவள். அவளே மாறுவேட்த்தில் உலவிவரும் கிள்ளிவளவனுக்குச் சேரநாட்டு ரகசியங்களைக் கூறுவது மட்டுமல்லாமல் உதவியும் செய்து வருகிறாள்.

மலர்க்குழலி திருமாறனை விரும்புகிறாள். சகோதரி திருமேனியிடம் தான் திருமாறனின் நண்பன் என அறிமுகப்படுத்திக் கொள்கிறான். அரண்மனையில் பழையரைப் பழிவாங்க வந்த இருளப்பன் என்ற போர்வையில் இருந்த கிள்ளிவளவனை அடித்துத் துரத்துகிறான் திருமாறன்.

வெற்றியுடன் திரும்பிய சேரன் செங்குட்டுவரிடம் பொற்கொடி திருமணமும், அறுகையின் புதல்வன் சேரன் நம்பி பூங்கோதை திருமணமும் பற்றிக் கூறப்பட்டு மணநாள் முடிவு செய்யப்படுகிறது. ஒரு நல்ல நாளில் திருமோகூர் அரசன் திருமாறனுக்கும் பூங்கோதைக்கும் கருவூரில் திருமணம் நடக்கிறது. திருமணம் முடிந்ததும் மணமக்கள் மோகூர் செல்கின்றனர். பெற்ற தந்தையைப் போன்ற செங்குட்டுவர் பொற்கொடியைப் பிரிந்து அதிக வேதனைப்படுகிறார்.

மோகூர் சென்ற பொற்கொடி தனது கணவன் ஐந்து சுரங்களான பெண்களை தன் அந்தப்புரத்தில் வைத்திருப்பதையும் பெண் ஆசை கொண்டவன் என்பதையும் அறிந்து வருந்துகிறாள். திருமாறன் ஆசைக்குப் பொற்கொடி இணங்கவில்லை. அவர்கள் திருமணத்தில் நாட்டியமாடிய மலர்க்குழலியையும் ஆறாவது சுரமாக சேர்க்கிறான். மலர்க்குழலி திருமாறணை மணந்து பொற்கொடியைப் பழிவாங்கத் துடிக்கிறாள்.

சேரன் நம்பி அவளைத் தன் நாட்டின் நாட்டியப் பெண்ணாக அழைத்துச் செல்கிறான். அவளது வஞ்சத்தால் அறுகையின் நாடு திருமாறனால் பிடிக்கப்பட்டு அறுகை குற்றுயிராகச் சேரனிடம் தப்பித்துச் செல்கிறார். சேரன் நம்பி மோகூரில் சிறைவைக்கப்படுகிறான். நண்பரான அறுகையின் வேண்டுதலுக்கிணங்க மோகூர் நோக்கி சேரர் படைஎடுத்துச் செல்கிறார்.

பொற்கொடி தன் வளர்ப்புத் தந்தையான செங்குட்டுவரைப் போன்ற ஏகபத்தினி விரதமிருப்பவரையே மணாளனாக அடைய வேண்டும் என்ற லட்சியம் கொண்டவள். எனவே திருமாறனுடன் இல்லறத்தில் ஈடுபட மறுக்கிறாள் அவள். அவளைப் பிறந்த வீடு அனுப்ப முயல பழையர் தடுக்கிறார். போர் மூளுகிறது. வீரத்திலகமிட்டு அனுப்புகிறாள் பொற்கொடி. சேரவெற்றியை நிச்சயமாகக் கருதியது மட்டுமல்லாமல் திருமாறனின் பலாத்காரத்துக்கும் ஆளாவதை தவிர்க்க விஷம் அருந்தி உயிர்விடுகிறாள். போரில் திருமாறன் வீரமரணம் அடைகிறான். இறக்கும் தருவாயில் யாருமே அறியாத

பொற்கொடியின் லட்சியம்பற்றி இளங்கோவிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு உயிர் விடுகிறான்.

அரசர்கள் பல பெண்களை மணந்து கொள்வது ராஜரீதியாக உள்ள நியதி. ஆனால் திருமாறனோ கீழ்த்தரமான பெண்களுடன் உறவு கொண்டிருந்தமையால் அந்த கெட்ட ரத்தத்துடன்தான் கலக்க விரும்பவில்லை என்று பொற்கொடி இளங்கோவிடம் கூறிய உண்மையோடு கதை முடிகிறது.

**குற்றாலக்குறிஞ்சி**

தஞ்சை அரண்மனையில் சரபோஜி மன்னர் சூரிய வணக்கம் முடித்து அதிகாரிகள் வருகைக்காகக் காத்திருக்கிறார். அந்நாளைய புகழ்பெற்ற பாடகி குறிஞ்சியை அரண்மனையில் பாடச் செய்யத் தூது அனுப்புகிறார்.

குறிஞ்சி கும்பகோணம் சங்கரமடத்தில் சந்திரசேகரப் பெருமானின் முன் குற்றாலக் குறிஞ்சி ராகத்தை அரங்கேற்றம் செய்கிறாள். அவருடைய ஆசிபெற்று ரசிகை கோமதி அம்மாள் வீட்டில் தங்கியிருக்கிறாள். முத்துசாமி தீட்சதரின் சீடர்கள் பொன்னையா, சிவானந்தம் ஆகியோருடன் சரபோஜியின் தூதர்களும் வந்து மன்னர் அவளை அரண்மனையில் பாட அழைப்பதாகக் கூறுகின்றனர். குறிஞ்சியோ அதனை மறுக்கிறாள்.

பின்பு கற்பகம், ஞானசுந்தரம், மேடை அலங்காரம் செய்யும் ஜான் ஆகியோருடன் குற்றாலம் வருகிறாள். அப்போது கொள்ளையர் கூட்டம் கச்சேரியில் புகுந்து கலகம் செய்தது. கொள்ளையர் தலைவன் ராஜகாந்தி அவள்பாடிய குற்றாலக் குறிஞ்சி ராகத்தைக் கேட்டு மயங்கி அவளைத் தன் மகளாக ஏற்று அவளுக்குப் பாதுகாப்பு அளிக்கத் தொடங்குகிறான். கச்சேரிக்கு வந்திருந்த புதுக்கோட்டை அமைச்சர் சிவகங்கை இளவரசனால் ஏற்பட்ட மற்றொரு கலகத்தை அடக்கிக் குறிஞ்சியை புதுக்கோட்டைக்கு அழைத்துச் செல்கிறார். அங்கு அரசர் அவளைத் தன் சகோதரியாகப் பாவித்து அவளுக்குக் கனகாபிசேகம் செய்கிறார். அவள் பாடவே சிறைப்பட்ட ராஜகாந்தி தாமே விடுதலையாகிறான்.

குறிஞ்சியின் அறிவுரையால் அவன் திருந்தத் தலைப்படுகிறான். குறிஞ்சியும் ஞானசுந்தரமும் ஆத்மார்த்தமான காதலர்கள். இருவரும் முத்துசாமி தீட்சதரின் சீடர்கள்.

குறிஞ்சியின் தந்தை மீனாட்சி சுந்தரம்பிள்ளை புவனா என்ற புலைச்சியை மணந்து பெற்றவளே குறிஞ்சி. தீட்சதரின் வீட்டில் வேலைக்காரியாக விருபாட்சக் கவிராயர் சேர்த்து விடுகிறார்.

இசையில் அதீதஞானம் பெற்ற குறிஞ்சியைச் சந்தித்த ஆனய்யா தியாகபிரும்மத்துடன் அவளை ஒட்டி நோக்குகிறார். திருவிதாங்கூர் மன்னர் தியாகய்யரைப் பாட அழைக்க மறுதலித்த அவர் எந்தரோ மகானுபாவுலு என்ற பாட்டை நினைவு கூறுகிறார்.

கலெக்டர் சாம்சன் ஒருத்திநாடு செல்லும் வழியில் குறிஞ்சியைக் கடத்த முயலுகிறான். ராஜகாந்தி அவளை நிழலாகத் தொடர்ந்து குறிஞ்சிக்கு ஆபத்து என்றால் சரபோஜியின் மைந்தன் சிவாஜி தலை இருக்காது என்று ஓலை அனுப்புகிறான். சரபோஜி தஞ்சைப் பிரதிநிதி ஜான்பைப்பின் மூலம் கலெக்டர் நெல்சனுக்கு செய்தி அனுப்பி குறிஞ்சியை விடுவிக்கச் சொல்லுகிறார். சரபோஜியின் ராஜாளிப் பறவை தீய எண்ணம் கொண்ட நெல்சனை குத்திக் குதறுகிறது. குறிஞ்சி விடுவிக்கப்படுகிறாள்.

தஞ்சையின் இசைமேதைகள் புலைச்சியான குறிஞ்சியை ஒழிக்கச் சதிசெய்கின்றனர். ராஜகாந்தியால் அது கண்டுபிடிக்கப்பட்டு சரபோஜி அவர்களைச் சாடுகிறான். சரபோஜியின் மகன் சிவாஜி குறிஞ்சியின் மீது காதல் கொண்டு இசை பைத்தியமாக அலைகிறான்.

திருக்கடவூரிலே அபிராமபட்டரின் ஆசியுடன் மேகராகம் பாடி மழை வரவழைக்கிறாள் குறிஞ்சி. சிதம்பரத்தில் தியாகபிரும்மத்தையும் கோபால கிருஷ்ணபாரதியையும் சந்தித்து ஆசி பெறுகிறாள். ஆபோகி ராகத்தில் தியாக பிரும்மம் பாடுகிறார். பாரதியும் அதே ராகத்தில் சபாபதிக்கு வேறு தெய்வம் சமானமாகுமா எனப்பாடுகிறார். குறிஞ்சி நந்தினி ராகத்தில் பாடுகிறாள்.

அப்போது குறிஞ்சியின் வளர்ப்புத் தந்தை விருபாட்சர் பாரதியுடன் வந்து ரசிகை பாரதியின் சபதத்தை நிறைவேற்ற வேண்டுகிறார். அவளும் சம்மதிக்கிறாள். கோபாலய்யாவிடம் வாதம் செய்து வெற்றி பெறுகிறாள். அவரும் அவளின் பண்பு திறமை அறிந்து அவளைத் தன் மகளாக ஏற்றுக்கொள்ளுகிறார். பாரதியின் சபதம் வெற்றிபெறுகிறது. பாமர மக்களுக்காக அன்னைத் தமிழில் பாடி தன் இசையால் அனைவரையும் மயக்கும் குறிஞ்சியை அனைவரும் பாராட்டுகின்றனர். குறிஞ்சியைக் கடத்த சிவகங்கை இளைய ஜமீன், ஆற்காடு நவாப், தீர்த்தகிரி ஆகியோர் போட்ட திட்டத்தில் குறிஞ்சி வராமையால் நாட்டியப்பெண் போகவதியைக் கொன்றுவிட்டு அந்தப்பழியை ஞானசுந்தரத்தின்மீது சுமத்தி அவனைச் சிறையில் அடைக்கின்றனர். தன் வளர்ப்புத் தந்தையும் இறந்துவிட, ஞானசுந்தரத்தை மீட்க குறிஞ்சி சிவகங்கை வருகிறாள். இளைய ஜமீனின் அடாத செயலை அவனது மனைவியும், அவனது தந்தையும் கண்டிக்கின்றனர். முடிவில் சிறையிலிருக்கும் ஞானசுந்தரத்தை விடுவிக்க குறிஞ்சியின் குறிஞ்சிராகத்தை ஈடாகக் கேட்கிறான் இளைய ஜமீன். அவளும் அதனை அடகுவைத்து ஞானசுந்தரத்தை மீட்கும்முன் சிறையிலேயே அவனிடம் கடிதம் எழுதிவாங்கிக் கொண்டு அவனை வஞ்சகமாகக் கொன்றுவிடுகிறான் இளைய ஜமீன்.

காதலனையும், வளர்ப்புத் தந்தையையும் குறிஞ்சி ராகத்தையும் இழந்து தாளா மனச்சுமையுடன் ஒருத்தி நாடு திரும்புகிறாள். ராஜகாந்தி, ராகத்தை மீட்டுத் தருவதாகவும் குறிஞ்சிக்குத் தீங்கிழைத்தவர்களை அழிப்பதாகவும் சபதம் செய்கிறான். சரபோஜி தன்மகன் சிவாஜியை மணந்து கொள்ளும்படி குறிஞ்சியை வேண்டுகிறார். அவள் மறுக்கிறாள்.

தன்னைப் பார்க்க வந்த திருவாரூர் கமலத்தின் மூலம் தன் குரு முத்துசாமி தீட்சதரின் வறுமை நிலையை அறிந்து அவரைக்கண்டு அவருக்குக் கனகாபிஷேகம் செய்கிறாள்.

சிவாஜியின் பிறந்தநாளில் குறிஞ்சி பாடவேண்டுமென சரபோஜி கேட்டுக் கொள்கிறார். அவள் மீதும் அவள் இசையின்மீதும் பைத்தியமாகத் திரியும் சிவாஜியைக் காப்பாற்ற வேண்டுகிறார். அவள் அடகுவைத்த குறிஞ்சி ராக ஓலையையும் மீட்டுத்தருவதாக வாக்களிக்கிறார்; பாடுவதற்குக் குறிஞ்சி ஒப்புதல் அளிக்கிறாள். சிவகங்கை இளைய ஜமீன் கைது செய்யப்பட்ட நிலையில் குறிஞ்சியிடம் அவள் அடகு ஓலையை ஒப்படைக்கிறான். குறிஞ்சியும் குறிஞ்சி ராகம் பாடுகிறாள். உச்சஸ்தாயியை பாடி மயங்கி விழுகிறாள்; அப்படியே அவள் உயிரும் பிரிகிறது. மகளே என ஓடிவந்த ராஜகாந்தியை நெல்சனின் துப்பாக்கிக் குண்டு பழிவாங்குகிறது. ராஜகாந்தி தன் (மகளுடனேயே) குறிஞ்சியுடனே விண்ணுலகம் செல்கிறான். இனி இதுபோன்ற குறிஞ்சி எப்போது வந்து பாடுவாள் என கதை முடிகிறது.

**செம்பியன் செல்வி**

முதலாம் குலோத்துங்கனது கலிங்கப்போர், ஜெயம் கொண்டாரது கலிங்கத்துப்பரணி பற்றியதே செம்பியன் செல்வி என்ற இந்த வரலாற்றுப் புதினம். குலோத்துங்கச் சோழ சக்கரவர்த்தி, தன்படைத்தலைவன் கருணாகரன் மற்றும் இளவரசன் விக்கிரம சோழன் ஆகிய இருவருக்கும் தேரோட்டியாக அமர்ந்து அழைத்து வருவதாகப் புதினம் தொடங்குகிறது.

சோழநாட்டுக்குக் கப்பம் கட்ட மறுத்த கலிங்க மன்னன் அனந்தவர்மன் நாடான கலிங்கத்துக்குச் சென்று அவனுக்குத் திறம் வாய்ந்த கோட்டையை அமைத்துக் கொடுத்து வருகிறான் கருணாகரன். இது குலோத்துங்கச் சோழரது ராஜ தந்திரமாகும்.

ஆலம் சுற்றி வரவேற்க வந்த தியாகவல்லி தேவியாரை எங்கிருந்தோ வந்த ஈட்டி தாக்கியது. அதிர்ச்சியடைந்து செயலிழந்த நிலையில் கருணாகரன் வேலைப்பாய்ச்ச முயல சக்கரவர்த்தி தடுக்கிறார். ஆனால் விக்ரமனோ அந்தச் செயலை செய்து ஒற்றனைக் கொல்லுகிறான். விக்ரமனின் பொறுமையற்ற செயல்கள் சக்கரவர்த்திக்குப் பிடிப்பதில்லை.

மதுராந்தகி தேவியாரின் எண்ணக் கனவுகளை நிறைவேற்றவும், காலதேவப்புலவரின் சபதத்தை நிறைவேற்றவும் அடங்கா அனந்தவர்மனின் கொட்டத்தை அடக்கவும் ராஜதந்திரியான குலோத்துங்கன் கருணாகரனை கலிங்கத்துக்கு அனுப்பி கோட்டையைக் கட்டிவரச் செய்கிறான்.

அங்கே அனந்தவர்மனின் நல்லெண்ணத்தைப் பெற்றதுமட்டுமல்லாமல் அவன் நண்பனின் தங்கை அருண்மொழியின் காதலைப் பெறுகிறான். ஆனால் மதுராந்தகி தேவியாரிடம் செய்து கொடுத்த சத்தியத்தின்படி மெய்தீண்டா மனக்காதலை மட்டும் வேள்வி செய்கிறான்.

சோழரின் எதிரிகளான பாண்டவர்களில் பராந்தர பாண்டியரைத்தவிர மற்ற நால்வரும், சாளுக்கிய விக்ரமாதித்தன், அனந்தபாலன் ஆகியோரும் அனந்தவர்மனோடு சேர்ந்து சதித்திட்டம் வகுக்கின்றனர்.

அவ்வப்போது கலிங்கநாடு செல்லும் ஓலைகளைத் திருத்தி அனுப்பிவருகிறார் சோழச் சக்கரவர்த்தி. மதுராந்தகி தேவியாரின் மரணத்தால் ராஜதந்திரமாக அவர் செய்யும் செயலில் தவறு ஏற்படுகிறது. அதனால் பராக்கிரமன் மூலம் உண்மை அறிந்து செயல்படுவதை சோழத்தளபதி (ஒற்றன்) முடிகொண்டான் மூலம் உண்மை உணர்த்தப்பட்டு இருவரும் தப்பிக்கின்றனர். கருணாகரன் பகைவரிடம் மாட்டிக்கொள்ள விக்ரமன் கருணாகரரை, தாய்க்குக் கொடுத்த வாக்கின்படி காப்பாற்றுகிறான்.

ஆரம்பத்தில் கருணாகரன் மீது வெறுப்புக் கொண்ட அவன், பின்னர் படிப்படியாக மாறுகிறான். முன்னாளில் விக்ரமன் மீது அவன் வெறுப்புக் கொள்ளக் காரணம் பல்லவ குலத்தைச் சார்ந்த அரசமரபின் காலிங்கராயரின் தம்பி என்பதுதான். காலிங்கராயரோ குலோத்துங்கருக்கு உயிரான தளபதி; என்றாவது ஒருநாள் தாம் இழந்த பல்லவநாட்டை குலோத்துங்கன் திருப்பித் தருவார் என்ற நினைப்பில் உள்ளார். தம்பி கருணாகரனையும் தளபதி ஆக்கினார். அவரது உயிரான தங்கை இளநங்கை விக்கிரமனைக் காதலிக்கிறாள். உடனிருந்தே கொல்லும் வியாதி என குலோத்துங்கனின்

மூன்றாவது மகன் ராசேந்திரன் பகைவருடன் தொடர்பு கொண்டவன். அவனே தம்பிக்கு கருணாகரன் காலிங்கராயர் மீது வெறுப்பு ஏற்படும்படி செய்து விடுகிறான்.

விக்ரமன் தன்னை வெறுப்பதை உணர்ந்த கருணாகரன் முன்பொருநாள் ஆத்மதியாகம்செய்து கொள்ள சோழகங்கத்திற்குச் செல்கிறான். அப்போது மதுராந்தகி தேவியார் சென்ற படகு கவிழ அவரைக்காப்பாற்றி மூர்ச்சையாகிறான் கருணாகரன். அன்றிலிருந்து தான் பெற்ற மகனாகத் தத்து எடுத்துக்கொள்கிறார் மதுராந்தகி தேவியிடம்பெண் மோகம் கொள்வதில்லை எனச் சத்தியம் செய்தே சென்றான் கருணாகரன். கருணாகரனை இளவரசி அம்மங்கை விரும்புவதை அறிந்த மதுராந்தகி தேவியார் இறக்கும் தருவாயில் கருணாகரனுக்கு அம்மங்கையை மணமுடித்துக் கொடுக்க ஆவனசெய்யும்படி தியாகவல்லி தேவியைக் கேட்டுக் கொள்கிறாள்.

விக்ரமன் இளநங்கையின் காதலை குலோத்துங்கன் ஆதரித்தபோதும் தன் சகோதரியின் மகளான ஏழிசை வல்லபியே பட்டத்தரசியாக்கும் நிலை இருப்பதை அறிந்து வருந்துகிறார்.

தாய் மதுராந்தகி தேவியாரின் மரணம் கருணாகரனைப் பாதிக்கிறது. அவனைத் தேடிவந்த அருள் மொழியை ராஜதந்திரமாகக் குலோத்துங்கரே மணந்து கொள்கிறார். அதனால் ஆத்திரமுற்ற அருள்மொழி சோழநாட்டிலிருந்து கொண்டே கலிங்கனுக்கு செய்தி அனுப்புவதோடு கருணாகரனைப் பழிவாங்கத் துடிக்கிறாள். குலோத்துங்கரிடம் தன் வயிற்றில் பிறக்கும் மகனுக்கே அரசுரிமை வேண்டுமென (பட்டயம்) ஓலை எழுதிப் பெறுகிறாள். விக்ரமனைத் தன்பக்கம் இழுத்து கருணாகரனிடமிருந்து பிரிக்கிறாள். ஓலையானது கலிங்க நாட்டிற்கு அனுப்பப்படுகிறது. அதை கருணாகரன் மீட்கும்போது சுரங்கப்பாதையில் சக்ரயுத்தனால் தாக்கப்பட்டு மீண்டும் சுயநினைவை இழந்து அரண்மனையில் சிகிச்சை பெறுகிறான்.

சக்ரயுத்தன் அருள்மொழிக்கு உதவியாக இருக்கிறான். கலிங்கப்போர் மூளுகிறது. பாண்டியர் நால்வரும், அனந்தபாலன், சாளுக்கிய விக்ரமாதித்தன்

அனைவரும் போரில் தோற்றோடுகின்றனர். அனந்தவர்மன் தோல்வியடைகிறான். காலதேவர் குலோத்துங்கன் வெற்றியைக் கலிங்கத்துப்பரணியாகப் பாடுகிறார். விக்ரமன் கருணாகரனை உணர்ந்து கொள்கிறான். காலிங்கராயர் பகைவர் பக்கம் இழுக்கப் பெற்றபோதும் தன் தவறுணர்ந்து கலிங்கப் போரில் கலந்து குலோத்துங்கனுக்கு வெற்றித் தேடித்தருகிறார். வெற்றிபெற்றுவந்த கருணாகரனுக்கு அம்மங்கை மணமுடிக்கப்படுகிறாள். விக்ரமன் இளநங்கை காதல் ஈடேறுகிறது. ஆனால் இளநங்கை பாண்டியனால் கொல்லப்படுகிறாள். சக்ரயுத்தனாக வந்த குலோத்துங்கரிடமே அருண்மொழிக்கு எழுதிக்கொடுத்த ஓலை இருக்கிறது. விக்ரமனால் சக்ரயுத்தன் பிடித்துவரப்பட்டுத் தண்டனை அளிக்கும் தருவாயில் அவரே குலோத்துங்கன் என அறியப்படுகிறது.

**தொகுப்புரை**

படைப்பாசிரியரின் பிறப்பு, கல்வி, படைப்புகள், பெற்ற விருதுகள், இல்லறம் ஆகியன ஆய்வில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள புதினங்களின் சுருக்கம் ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.

## இயல் - 2

# கோவி. மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் கலை நுணுக்கத் திறன்

### முன்னுரை

புதினத்தில் அமையும் பல கூறுகளில் கலைநுணுக்கத்திறன் முக்கிய இடம் பெறுகிறது. ஒரு புதினத்தை ஆசிரியர் படைக்கும் போது அவரது திறமைகள் வெளிப்படுகின்றன. வரலாற்றை அப்படியே கூறினால் அது சுவைபடாது. கற்பனை நயம் கலந்த கதையாகக் கூறும்போது அது படிப்பவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தும். ஆசிரியர் தன் படைப்பை வெற்றி பெறச் செய்யப் பயன்படுத்தும் நுணுக்கங்கள் கலை நுணுக்கத் திறன்களாகின்றன. இதனை ஆசிரியர் கடைப்பிடிக்கும் உத்திகள் என்றும் கூறலாம்.

“படைப்பாளன் தான் கூற விரும்பும் கருத்துக்களைப் படிப்போர் மனதில் பதியவைக்க எண்ணுகிறான். அவ்வாறு எண்ணும்போது அக்கருத்துக்களைச் சாதாரணமாகக் கூறினால் வாசகர்களை ஈர்க்காது என்பதால் அவனுக்கு ஆர்வத்தைத் தூண்டுவதற்குப் படைப்பாளன் பயன்படுத்தும் நுணுக்கத்தை உத்தி என்று கூறலாம்”[1] என்னும் கருத்து இங்குக் குறிக்கத் தக்கது.

“இலக்கியத்தில் உத்தி என்பது கூறவிரும்பும் பொருளை நேரடியாகக் கூறாது அதனை விளக்குவதற்குப் பொருத்தமான அல்லது இணையான மற்றொரு பொருள் மூலம் பெறவைத்தல் எனக்கூறலாம்”[2] என்பதும் சுட்டத்தக்கது. புதின இலக்கியத்திற்குரிய உத்திகள் தொடக்கம், முடிவு, நோக்குநிலை, முன்னோக்கு உத்தி, கடிதம், நினைவுக்காட்சி, கற்பனை, உவமை, உருவகம், வருணனை, கால உணர்வு, நடை முதலானவையாகும். இசை, ஓவியம், கல்வெட்டு, செப்பேடுகள் ஆகியவையும் உத்திகளாகப் பயன்படுத்தப்படுகிறது.

படைப்பாசிரியரின் ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள புதினங்களில் இடம்பெறும் கலை நுணுக்கத் திறன் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**தொடக்கம்**

கதையின் தொடக்கம் படிப்பவரின் மனதைக் கவரும் வண்ணம் இருக்க வேண்டும். இதனை பிலிப்ஸ்டீவிக், "படிப்பவரின் கவனத்தை ஈர்க்கும் வகையிலும் புதினத்தை தொடங்க வேண்டும்"[3] என்று கூறுகிறார்.

கோவி மணிசேகரனின் ராஜகர்ஜனை என்ற வரலாற்றுப் புதினத்தில்,

"அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திரு நாமத்தால் எல்லாப் புகழும் இல்லாவுக்கே! படைப்புகள் யாவற்றையும் படைத்து போஷித்து பரிபக்குவப்படுத்துகிறவன்.

குடிமகனாய் பிறந்து முடிமகனாய்ச் சிறந்து வெள்ளைக் கும்பினியர்க்கு இடிமகனாய், தேவியக் கொடி மகனாய்த் திகழ்ந்து வரும் தென்னகத்து மாவீர சுல்தான் மைசூர்புலி ஹைதர் அலி தமது இனிதான தொழுகையை முடித்துக்கொண்டு எழுந்து நின்று வானத்தை அண்ணாந்து கவனிக்கிறார். மேற்கு வானில் நெருப்புச் சூரியன், அஸ்தமனத்தில்தான் நிஜமான உதயமே இருக்கிறது என்பதைப் போலப் புனிதமான திருக்குரானின் இனிய ஒலி காதுக்குப் பரிசுத்தமான சுருதி கூட்டிக் கொண்டிருக்கிறான்"[4] என்ற தொடக்கம் அமைகிறது.

இறையன்புடன் சுதந்திர வேட்கையும் கொண்ட இரு பெரும் கதாநாயகர்களைப் பற்றியதாக இறை மணத்துடன் தொடங்கும் இத்தொடக்கம், வாசகர்களை ஈர்க்கும் தன்மையுடையதாக அமைந்துள்ளது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தின் தொடக்கம்,

"வைகறைப் பெருமாள் வானக் கூரைக்கும் பொன்வேய்ந்து கொண்டிருந்தான். பொன்னான பூரிப்புடன் கெடிலநதி கலகலப்பான ஓடிக் கொண்டிருந்தது. தெள்ளிய

நீரோட்டம் நிறைந்த அந்த நதிக்கரையில் நான்கு புரவிகள் தாகத்தை தனித்துக் கொண்டிருந்தன. விலாழி தள்ளும் வாயுடன் நீர்பருகும் அந்தப் புரவிகளைப் பார்க்கும் போது வெகுதூரம் பயணப்பட்டுடனவாகத் தெரிந்தன"[5] என்று குதிரைகளில் வந்திருப்பவர்கள் யாரென சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தின் தொடக்கம் வாசகரை ஈர்க்கும் தன்மையுடையதாக அமைகிறது.

"தென்றலழகி அந்தி மாலை அணிந்து பூக்களில் முகம் பார்த்துத் தேமதுரத் தமிழ்நாட நந்தவனத்து வாசமிகு வண்ணப்பாதையில் வலம் வந்து கொண்டிருந்தான். தோகைகளில் பொற்காசுகள் கொண்ட மயில்கள் எங்குநோக்கினும் வாக நடம் புரிவதால் தான் அந்தப் பகுதிதோகையூர் எனப் பெயர் கொண்டதோ"[6] எனத் தொடங்கப்பட்டுள்ளது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், "திரு நிறைந்த கோலமுடன் பகலவன் கதிரொளி பரப்பி உதயமாகிக் கொண்டிருக்கின்றான். புலரி பண்பாடும் புள்ளினங்கள் இனிமைச் சிறகு விரித்து வான வீதியை எழிலார்ந்த ஓவியமாக்கிக் காண்போர் கண்களை இன்ப மனோலயத்தில் மூழ்கடித்தன. செம்மைபரவிய வான வீதியில்தான் எத்தனை இந்திர விசித்திரங்கள்! பொன்னுலகம் இதுதானோ? போற்றி வியக்கும் சொர்க்கமும் இதுதானே"[7] என்ற தொடக்கம் வாசகர்களை ஈர்க்கும் விதத்தில் அமைந்துள்ளது.

"விடிவெள்ளியின் முணுமுணுப்பைக் கேட்டு பனிப்படலங்கள் மெல்ல மெல்ல விலகி வழிவிட்டன. ஒளிமயமான வான வனத்தில் பூத்துக் குலுங்குகின்றன. பொலிந்து புன்னகை பூக்கின்றன. என்ன பயன்? பிற்போதில் ஒளிமடல் விரிந்து ஒற்றைச் சக்கரத்தேர்ப் பவனி வரும் இந்த ஏழுவண்ப் பெருமாளுக்கு இருக்கும் பெருமையே பெருமைதான்! ஒற்றை மலராய் மலர்ந்து ஒளிமணம் பரப்பும் இந்த பெருமைக்குரிய கதிர்ப்பூவால் வானப் பொழிவெல்லாம் வண்ண வண்ணமான கலகலப்பு விழித்தெழுந்த கானப் பறவைகளின் நவ நவமான கிலுகிலுப்பு பூவாத வஞ்சியென்று புலவர் நாவில் ஓயாத புகழ் மணக்கும் சேரர் தலை நகராம் வஞ்சிமாநகரம் காலை போதின் இனிய

காவியம் போல் காட்சி அளிக்கிறது"[8] என்று சேரன் குலக்கொடி புதினத்தில் தொடக்கம் வாசகரை ஈர்க்கும் வகையாக அமைந்துள்ளது.

"ரஜபுதன வரலாற்று வீரப் பொன்னேட்டில் காவியம் மணக்கும் காதல் பண்ணிசை கேட்டு உலகம் வியந்தது. அந்தப் பண்ணோடு காதல் பதமோடுதான் சீதன முழுமதியாய் உதய கண்ட அழகின் சீதனம் ரூப்மதி அவளை மணக்க ரஜபுத்திர விரக்களைகள் பலர் நீ, நான் என்றிருக்க, இந்த அழகின் திலகவதி அறிவின் முழுமதி கலையின் சரசுவதி ஏனோ ஒரு நாடோடிக் கவிஞனைக் காதலிக்கிறாளாமே"[9] என்று புதினம் தொடங்குகிறது.

படிப்பவரின் சிந்தனையைத் தூண்டும் வகையில் கானல் கானம் என்ற புதினத்தின் தொடக்கமும் அமைந்துள்ளது.

"மா . . . . . . . என்று இனிதாக அழைத்த அந்தக் கன்றை இன்றைக்கெல்லாம் பார்க்கலாம் போல் தெரிந்தது இளவெண்மதி சூடினனுக்கு. இளஞ்சிவப்பேறிய கன்றின் பூப்போன்ற வாயும் இதழ்போன்ற நாவும் தெய்வ சந்நிதானமாகவே காட்சியளித்தன. பசுவிலும் தெய்வத் தன்மை காணும் ஒரு பண்பு இம்மண்ணின் மாண்புமிக்க பண்பாயிற்றே. தனக்குள் ஒரு முறை மா என்று முனகிக் கொண்டான் இளவெண்மதி சூடினன். தொலைவிலிருந்த தாய்ப்பசுவும் கன்றின் குழைவான் குரல் கேட்டு மா என்று இனிதாக அழைத்தது. மா என்ற சொல் அதிலுமா? அன்னையென்ற புனிதப்பாசம் அழியா அநாதை இளவெண்மதி சூடினன்"[10] எனத் தொடங்குவதிலிருந்து அவன் யார் என அவனைப் பற்றியறிய சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

"அக்கினிமலர் கிழக்கு வானில் அழகுத் திருக்கோலமாக மலர்ந்து பொன்னாய் மணக்கிறது கல்வியில் கரையிலா காஞ்சிமாநகரம் காப்பியமாய்க் கண்விழிக்கிறது பல்லவபம்பரையில் ஒரு புதிய படலத்தைப் புரட்டிய புரவலர். தமிழ் என்றால் தம்மையே தாரைவார்க்கு தார் வேந்தன், குஞ்சரக் குடைசாய குருக்கோட்டை நகரை குருசேத்திரமாக்கிய கோமகனார் தினவெடுத்த பாண்டியரைத் தெள்ளாற்றில் புறம்கண்டு

வெற்றியின் உணவெடுத்த வீரசிங்கம்"[11] நந்திவர்ம பல்லவர் மாமல்லபுரம் நோக்கிப் பயணமாகும் மர்மம் புரியாது விதிர்த்தனர் என்ற தொடக்கம் பூங்குழலி என்ற புதினத்தில் வாசகரின் சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

செம்பியின் செல்வி என்ற புதினத்தில், "சோழமா காவியத்தின் பொன்னேடு திறக்கிறது. கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டு இறுதியும் பனிரெண்டாம் நூற்றாண்டின் தொடக்கமும் நம்முடைய காப்பியகாலமாய் பார்வைக்கு காட்சி தருகின்றன"[12] என்னும் தொடக்கம் அமைகிறது. அந்தக் காட்சி தரும் இனிய நாட்களில் ஒருநாள், தேர்வலத்திருநாள். அது என்னவாக இருக்கமுடியும் என்ற சிந்தனையை வாசகரிடத்து ஏற்படுத்துவதாக இந்தத் தொடக்கம் அமைகிறது. காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தின் தொடக்கமானது,

"கதிரவன் உதயம் காஞ்சிமாநகரை காவியாக மலரச் செய்கிறது. வானமண்டலத்தில் கானமிசைக்கும் சிறகு ஜுவன்கள் பல்லவராட்சிக்கு பூபாளம் பாடுகின்றன ஏகாம்பரரேசுவரர் ஆலயமணி சுநாதமாய் ஒலிக்கிறது. அந்த இனிய நாதத்தில் நகரேஷ் காஞ்சி நகரேஷ் காஞ்சி என்கிற பெருமைக்குரிய அர்ச்சனை சொற்கள் தவறுகின்றன. முகில் தவழ்ந்து முத்தமிடும் நந்திக்கொடி வானளாவப் பறந்து பல்லவ அரண்மனைக்கு அழகு சேர்க்கிறது"[13] என்று அமைகிறது.

"ஆகாய வீதியில் அக்கினி ரதம் பவனி வந்து மேலை வாசலை முத்தமிடுகிறது கருப்பும் சிவப்புமாயிருந்த மேகங்கள் மத்தியமாவதி பாடுகின்றன. தமிழ் வளர்த்த மதுரையில் வாழ்கிறோம் என்கிற பெருமைமிகு மமதையில் புள்ளினங்கள் கம்பீரமாகப் பறந்து கூடு நோக்கி செல்கின்றன"[14], என கங்கை நாச்சியார் என்ற புதினத்தின் தொடக்கம் அமைகிறது. இது வாசகரை ஈர்க்கும் தன்மையுடையதாக அமைந்துள்ளது. வேங்கை வனம் என்ற புதினத்தின் தொடக்கம் வாசகரை ஈர்க்கும் தன்மையுடையதாகவே அமைந்துள்ளதை,

"திசைகளின் உதயவாசல் பிரகாசமாய் இராக் கதவங்களைத் திறக்கிறது. நட்சத்திரங்கள் மின்னென்று ஒளி நகை புரிந்து ஆர்ப்பரிக்கின்றன தென்றல் சுருதிகூட்ட,

தென்மலர்கள் இசைபாட என்றுமே இரவென்றால் இன்பமென்று இராப்பறவை முழவு கொட்ட, பொங்கிவரும் பெருநிலவாய் முழுமதிப் பேரழகி மன்மதத் தாண்டவம் புரிய வருகை தருகிறாள்”[15] என்னும் பகுதி மூலம் அறியலாம்.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில், “பிரணவத்தின் அலங்கார தேவதையாம் பூமியென்னும் பேரழகி புல்லாங்குழல் ஏந்திப் பூபாளம் பாடத் தொடங்கிவிட்டாள். யாழினிமை அவளுக்குத் தெரியாதா? ராஜதிசையாம் ராக திசையில் உதயம் காணும் குங்குமச் சூரியனுக்குப் பூபாளம் பாடும் குழலும் தானே பொன்னான வரவேற்பு”[16] என்ற தொடக்கம் படிப்பவர் மனதை ஈர்க்கும் தன்மையுடையதாக அமைந்துள்ளது.

சேரசூரியன் என்ற புதினத்தின் தொடக்கம்,

“வானம் குடைப்பிடிக்க காற்று கவரி வீசிக் கனல் கட்டியம் கூற வையமெனும் பேரழகி நீலக் கடலாடையுடுத்திக் காலமென்னும் பெருவழியில் கண்றுறங்காது நடைபழகுகிறாள். அவள் உறங்கிவிட்டால் இயக்கம் ஏது? இயற்கை ஏது? எழில் ஏது”[17] என வாசகரை ஈர்க்கும் தன்மையுடையதாக அமைந்துள்ளது.

**முடிவு**

புதினத்தின் கட்டமைப்பில் தொடக்கத்தைப் போலவே முடிவும் இன்றியமையாதது. புதினத்தின் முடிவுப் பகுதியில் “தலைப்பினைக் கூறி முடித்தல், பாத்திரக் கூற்றுடன் முடித்தல், வருணனையுடன் முடித்தல், ஆசிரியர் கூற்றுடன் முடித்தல், திடுமென முடித்தல், வியப்பூட்டும் முறையில் முடித்தல் என ஆறு வகை உத்திகள் கையாளப்படுகின்றன”[18],

இதனை ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்கள் வழி ஆராயலாம். சேர சூரியன் என்ற புதினம்,

கங்கை நீர் கண்களில் வழி ஆனந்த நீராகச் சொட்ட ராஜமாதா “பெருவீரனாய்த் திகழ்ந்து பெறுவாழ்வு பெருவாயாக! என்று வாழ்த்துகிறாள். மண்டபத்தில் ; இளவரசர் செங்குட்டுவன் வாழ்க! வாழ்க! என்ற வாழ்த்தொலி வானைமுட்டியது. செங்குட்டுவனே

நீயும் இன்னொரு சேர சூரியனாய் ஒளிமிகுந்து வாழ்க! வளர்க! வெல்க!"[19] என முடிக்கப்பெறுகிறது. இது புதினத்தின் தலைப்பைக் கூறி முடிக்கும் முறையாக அமைந்துள்ளது.

ராஜகர்ஜனை என்ற புதினம், "பின்னாளில் பரந்து விரிந்து ஒரு மாமாங்க காலத்துக்கு சொல்லவிருக்கிற மாவீரத் திலகம் திப்பு சுல்தானுடைய வீரமும் சோகமும் நிறைந்த சரித்திரத்துக்கு இந்த கோவில் மணி ஒரு சேகரம் போல் ஒரு மகுடம் போல் ஒலித்து எண் திசையிலும் புகழ் மணம் பரப்பப் போகிறது"[20] என ஆசிரியர் கூற்றாக முடிக்கப்பட்டுள்ளது.

"கௌந்தியான அஜந்தா அருகமாய் முறுவலிக்கிறாள். ரதம் புறப்படுகிறது. நிலவான் மஞ்சத்தில் நித்திலங்கள் கண்சிமிட்ட ஞாலமாய் பேரழகி கதிரவனின் காதலி, நிலவழகி கோலமாய் பேரழகை ஒரு தியாகத்தின் சந்நிதானத்தில் நின்று துறவு பூண்ட மலர்களின் ராஜ தேவதை மகேந்திரச் சித்திரம் அஜந்தாவைக் கண்குளிர மகிழ்ந்து மனம் குளிர வாழ்த்துகிறாள்"[21] என காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தின் முடிவு வருணனையுடன் முடிகிறது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் திடீர் முடிவு கூறப்பட்டுள்ளது. சடையத்தேவர் தாமே கைதாகி மதுரை இளவரசி கங்கை நாச்சியுடன் புறப்பட்டு வருகிறார். இளவரசி கங்கை நாச்சியோ அவருக்கு ஒரு அரசருக்குரிய மரியாதை அளிக்கப்பட வேண்டுமென ஆணையிடுகிறாள். தளவாய் ராமப்பய்யரும் அவ்விருவரையும் அழைத்து வருகிறார். சடையத் தேவரைக் கண்ட திருமலை நாயக்கர் கோபம் கொண்டு, "சடையத் தேவனை சிறையில் தள்ளுங்கள் என்று உன்று ஆத்திரம் கொதிக்க ஆணையிடுகிறார். பெரிய தேவி ருத்ர பதியமாளின் குரல் ஒலிக்கிறது. எங்கே என் கங்கை நாச்சி என்று யாராவது கேட்டீர்களா? எனக் கதற தளவாயும் ரதத்திலிருக்கிறாள் என்கிறான். அனைவரும் ரதத்தை நாடிச் சென்று கவனிக்க மதுரை இளவரசி கங்கை நாச்சியார் தான் வைத்திருந்த வைரக்கல் பொடியை விழுங்கி வாயில் ரத்தம் வழிய உயிர் பிரிந்து சாய்ந்து கிடக்கின்ற கோலம் சேது குலத்தை தனது சாவின் மூலம் கௌரவித்துவிட்டாள்"[22] என முடிகிறது. இது எதிர்பாராத திடீர் முடிவாகும்.

"இரவு பகல் எந்த நேரமும் அந்த வேங்கைகள் தன் தலைவனையும், தலைவியையும் எண்ணி பெரிதாக உறுமிக் குரல் கொடுத்துக் கூப்பிடும் தொலை தூரத்தில் செல்பவர்களின் காதுகளில் இந்த அழைப்புக் குரல் கேட்கும் அப்போதெல்லாம் அவர்கள் வேங்கை வனக் கதையை எண்ணி இரு சொட்டுக் கண்ணீர் உகுப்பர்"[23]. இது வேங்கை வனம் என்ற புதினத்தின் முடிவு. இந்த முடிவு வியப்பான முடிவாக அமைந்துள்ளது.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினம், "குறிஞ்சி இறந்ததும் கச்சேரி கேட்க வந்த ராஜகாந்தியும் அவள் காலடியில் உயிரை விடுகிறான். அப்போது அந்த தம்பூர் எழுப்பும் ஒலியைக் கேட்டு மக்கள் குரல்கள ஒலிக்கின்றன. அவளது தம்பூர் . . . . . அது எழுப்பிய இனிய நாதம் எண் திசைகளிலும் இனிதாய் நிறைந்து புகழ் பரப்பியதை யாரோ மறப்பர்? இன்னொரு தமிழ்க் குறிஞ்சி எப்போது பிறந்து மக்கள இதயங்களில் பாடப்போகிறாள்?"[24] என ஆசிரியர் கூற்றுடன் முடிகிறது.

"சோழமா காவியத்தின் பொன்னேடு முடிகிறது. வெற்றித் தமிழ் மகள் தன்னுடைய வீரகாவியத்தைப் படித்த உங்கள் நெஞ்சத்தை இனிக்கச் செய்கிறாள். நினைவை மகிழ்ச்சி நிரம்பிய இதயத்தில் தாலாட்டுகிறாள். அவளுடைய தமிழ்க்குரலில் தவழ்ந்து வரும் இனியபரணி மயக்கத்தில் இந்த உலகமே மெய்யலர்ந்து, மேனி சிலிர்த்து பொய்யற்ற புகழுரையால் போற்றிக் கீதம்பாடி அஞ்சலி செலுத்துகிறது"[25] என செம்பியன் செல்வி புதினத்தின் முடிவு ஆசிரியர் கூற்றாக முடிக்கப்பெறுகிறது.

பூங்குழலி என்ற புதினத்தின் முடிவு,

"தமிழுக்கு உயிர் துறந்த தார் வேந்தனுக்கு ஈமக்கிரிகைகள் செய்யலாமா? அது தமிழுக்கும் செய்தது போலாகுமே எனவே மாறாம்பாவையையும், பூங்குழலியையும் திரிபுவன தேவியையும் ரதத்தில் அமர்த்தி தாமே தேரோட்டியாக அமர்ந்து நந்திபுரம் நோக்கிச் செல்கிறார் விஜயாலயச் சோழர் . . . .

காஞ்சி மக்கள் பலரும் கண்ணீரை அஞ்சலியாக்கி கரம் கூப்பி வழி நெடுக வணங்குகின்றனர். திரண்ட மேகங்களிலிருந்து தூரல்கள் விழுகின்றன. கண்ணீரால்

வாழ்த்துத்தான் கூறுகின்றதோ! ஓ நந்தி கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்”[26] என ஆசிரியர் கூற்றாக முடிகிறது.

“அடி பரிமளா! பெண்மையின் பல்கலைக்கழகமே! உன் பாசாங்கும் பவித்திரமானதே! இதயம் கண்ட ரணத்தைக் கால மருத்துவன் ஆற்ற எத்தனை நாள் பிடிக்கும்? உனது சபதம் எப்படி மகோன்னதமாக நிறைந்ததோ காதல் ராணியின் கனவும் விரைவில் மகிமை நிறைந்த நனவாகும் என் இனிய வாழ்த்துக்கள்.

நீடுதுயில் நீங்கபாடி வந்த பெரு நிலவு வானில் நின்று பிரகாசமாக வாழ்த்துகிறது. நெஞ்சு நிறைகிறது. நியாயம் நிறைகிறது. அதன் நிவேதனம் நிறைகிறது”[27] என கொல்லிப்பாவை என்ற புதினத்தின் முடிவு கூறப்பட்டுள்ளது. இம்முடிவு பரிமளாவின் மனம் சொல்லும் முடிவாகவும் அமைவதால் இதை பாத்திரக் கூற்று முடிவு எனக் கூறலாம்.

“சேரன் குலக்கொடி நீ வாழ்க! என்று மனத்திற்குள் வாழ்த்திக் கொண்டார். அகிலத்தின் ஞானப்பாலான தமிழையருந்திய தவப்புதல்வர் இளங்கோவடிகள் அவருடைய காவிய இதயத்துடன் கற்பின் இதயம் இணைந்தது. அந்த இலக்கிய அலைப்பு இலக்கணச் சந்திப்பு தமிழர் நெஞ்சில் அழியா ஓவியமாய் கண்ணகி காவியமாக நிறைந்துவிட்டது போலும்! வாழி என் பொற்கொடி! வாழி நீ சேரன் குலக்கொடி!”[28] என அமையும் முடிவு, பாத்திரக் கூற்றுடன் ஆசிரியர் விளக்கமும் அமைந்ததாகக் காணப்படுகிறது. தலைப்பினைக் கூறி முடிக்கும் தன்மையும் பெற்றுள்ளது. சாம்ராட் அசோகன் என்ற புதினத்தின் முடிவானது,

“மகதப் பேரரசே பௌத்தாலயமாகிவிட்டது. பொளத்தத்தின் தலைவராக அசோகவர்த்தன மகா சக்ரவர்த்தியே அமர்ந்துவிட்டார். அவருடைய இரு கண்களில் பெரிய தேவியாரும் புஷ்பமாலிகையும் அமர்ந்து இமைகளைத் திறந்துவிட்டனர். இதயத்தை பீடமாக்கிக் கொண்டு புத்தபகவான் அமர்ந்து பௌத்த தருமங்களைப் போதிக்கத் தொடங்கிவிட்டார்.

அன்று இறக்கிய மகுடத்தைப் பின்னர் அவர் புனைந்து கொள்ளவே இல்லை. அவருடைய திருப்பணிகள் புத்தபகவான் பொற்பாத கமலங்களை அலங்கரிக்கத் தொடங்கின"[29] என ஆசிரியர் கூற்றாக அமைந்துள்ளது.

"பத்மினி அரங்கனுக்கு பூசை செய்ய வேண்டும் நீர் கொண்டுவா! பிரதானப்பட்டர் கட்டளைக் குரல் எழுப்பினர். இதோ கொண்டு வருகிறேன் சுவாமி! என தன்னைத் தெய்வமகளாக்கிக் கொண்டவளாய் இடுப்பில் குடத்தைச் சுமந்து கொண்டு குளக்கரை நோக்கிச் சென்றாள். அரங்கனை மூன்றாம் காதலனாக முடிந்த காதலாக வரித்துக்கொண்ட அழகரசி பத்மினி அவளுடைய நடையில் அடக்கம் அமைதி கண்டது ஆத்மீகம் கொண்டது.

வைகறைப் பெருமாள் வானக்கூரைக்கும் பொன் வேய்ந்து கொண்டிருந்தான். வாழ்க கோயில் பொன்வேய்ந்த மகபிதி! வாழ்க மண்டலம் யாவையும் கொண்டவன்! வாழ்க சுந்தர மன்னவன் தென்னவனே"[30] என பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் ஆசிரியர் கூற்றாக முடிவு அமைந்துள்ளது.

"திருப்பணி செய்து முடித்து இன்று முதல் இவள் கோயில் பெண்ணாக இருந்து அரங்கனுக்கு சேவை செய்யட்டும். அந்த சேவையின் மூலம் அவனுடைய பாவங்கள் மட்டுமல்லாமல் இந்நாட்டுக்கு ஏற்பட்ட பாவத்தையும் துடைக்கட்டும். இனி அவள் அரங்கன் அணங்கு. இதுவே அவளுக்குரிய தண்டனை! பாண்டியன் வழங்கும் தண்டனை! "[31] என பாத்திரக் கூற்றாக முடிகிறது. ரூப்மதி என்ற புதினத்தின் முடிவு. இது ஆசிரியர் கூற்றாக முடிவதைக் காணமுடிகிறது,

"காதல் காவியமான மாண்டு நகரமே இன்னும் நீ மதண்டுவிடவில்லை. இன்றைக்கும் பயணிகள் அங்கு சென்று பார்வையிடுகின்றனர். இடிபாடுகளுக்கிடையே காட்சிதரும் அந்தக் காதல் காவியம் பலரை பிரமிக்கச் செய்து கொண்டிருக்கிறது. சற்று சிந்தனையுள்ளவர்கள் பாஜ்பகதூரைப்பற்றியும் ரூப்மதியைப் பற்றியும் கற்பனை செய்து பார்க்கிறார்கள். அப்படி அவர்கள் கற்பனைத் தவத்தில் ஆழ்ந்து போகிறபோதெல்லாம் அந்தக் காதல் காவியம் விட்டுச் சென்ற ராகமான ரூப் கல்யாண்

ஒலிக்கத்தான் செய்கிறது, அந்த ராகம் அன்றளவும் வடக்கின் தம்பூர்களில் வாழ்ந்து கொண்டும் இருக்கிறது"[32] என ஆசிரியர் கூற்றாக அமைந்துள்ளது. கானல் கானம் என புதினத்தின் முடிவும் ஆசிரியர் கூற்றாக அமைந்துள்ளது.

"சுரமாலை இந்த மண்ணில் மடிந்து மண்ணாகி எத்தனையோ நாட்கள் மாதங்கள் வருடங்களாகிவிட்டன. இப்போது அந்தப் பெண்ணை நதிக்கரையில் இரவு நேரங்களில் எங்கிருந்தோ கானம் கேட்பது போன்ற பிரமை ஏற்படும் உற்றுக் கேட்கும்போது அது கானலாகி – கானல் ஒலியலைகளாகி மறைந்து விடுகிறது. ஒருவேளை சுரமாலை அந்நாட்களில் பாடிய துன்பியல் கீதத்தை கேட்டுக் கேட்டுத் தம்முள் பதித்துக் கொண்ட காற்றும், நதியும், மலைகளும் எதிரொலித்துக் கொண்டிருக்கலாம் அல்லவா?"[33] என ஆசிரியர் கூற்றாக முடிகிறது.

**நினைவுக்காட்சி**

நினைவுக்காட்சி என்பது முன் நடந்த நிகழ்வுகளை இன்பமோ, துன்பமோ மனதால் பாதிக்கப்பட்ட நிலையில் அதனை நினைவுகூறுவது. தலைவன், தலைவி ஆகிய பாத்திரங்கள் மட்டுமல்ல, புதினத்தில் வரும் எந்தப்பாத்திரமும் முன்னால் நடந்த நிகழ்வுகளை நினைவுகூர்ந்து மகிழ்ச்சியோ துன்பமோ அடையக்காட்டுவது நினைவுக் காட்சி. இது கனவிலிருந்து வேறுபட்டது.

புலிந்தகன் சிரிமாவை இழந்து தவித்துக் கொண்டிருக்கிறான். அவன் சிரிமாவை நினைத்துப் பார்க்கிறான். "யமுனை நதிக்கரையில் அவள் குடமேந்தி வரும் ராதையைப் போல் எத்தனை முறை காட்சி தந்திருக்கிறாள். அவளுடைய களங்கமில்லா முகத்தைக் கண்டு எத்தனை நாட்கள் கனவுலகில் சஞ்சரிக்க நேர்ந்தது. அவள் சிரித்தால் யமுனை சிரிக்குமே; யமுனை சலசலத்தால் அவளுடைய பாதச்சிலம்புகள் பாவிசைப்பாடுமே"[34] என சிரிமாவை நினைத்து புலம்பும் காட்சி அவனது துன்பத்தை எடுத்தியம்புகின்றது. எஞ்சிய புதினங்களில் இவ்வுத்தி கையாளப்படவில்லை.

**உவமை**

புதின இலக்கியத்தில் இடம்பெறும் பல்வேறு கலை நுணுக்கத்திறன்களுள் உவமையும் ஒன்றாகும். இது பொருள்களை ஒப்புமைப்படுத்திக்காட்டும். உவமை குறித்து தொல்காப்பியம், தண்டியலங்காரம் முதலான இலக்கண நூல்கள் தரும் வரையறை குறிப்பிடத்தக்கதாகும்.

"பண்பும் தொழிலும் பயனுமென்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை"[35]

பொதுவாகப் புரியாததைப் புரியவைப்பதற்கும் தெரிந்தவற்றை அழகுபடுத்திக் காட்டுவதற்கும் உவமை பயன்படுகிறது.

"புலனல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்"[36] என உவமையின் பயன்பற்றி தொல்காப்பிய பொருள் இலக்கணம் கூறுகிறது. கடினமான பொருளை உவமையினைக் கொண்டு விளக்கலாம்.

உவமை என்பது "எடுத்துக்கொண்ட பொருள், அதனையொத்த பொருள், இரண்டிற்கும் இடையேயுள்ள பொதுத்தன்மை, இவ்விரண்டையும் இணைப்பதற்கு பயன்படும் சொல் என்னும் உவம உருபு என நான்கு கூறுகள் கொண்டது. இதனை தொல்காப்பியர் வினை உவமம், பயன் உவமம், மெய் உவமம், உருவ உவமம் என நான்காக பாகுபாடு செய்கிறார்"[37] என ந.பிச்சமுத்து அவர்கள் கூறுவது இங்குச் சுட்டத்தக்கது.

உருவகம் என்பது "உவமானம் உவமேயம் ஆகிய இரண்டையும் வேறுபடுத்திக் கூறாமல் உவமானத்தின் தன்மையை உவமேயத்தில் ஏற்றிக் கூறுவது"[38] என வளவன் கூறும் கருத்தும் எண்ணத்தக்கது.

ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள புதினங்களில் எடுத்தாளப்பட்டுள்ள உவமைகள் இங்கு குறிக்கத்தக்கன.

**வினை உவமை**

வினையை மையமிட்டதாக அமையும் உவமை வினை உவமை எனப்படும்.

சேரசூரியன் என்ற புதினத்தில் அத்தீனாவைத் தேடிக்கொண்டு சேரலாதன் செல்வான் என்பதை உணர்ந்த உதியன் சேரலாதன் அவன் எங்கும் சென்றுவிடாதபடி பார்த்துக்கொள்ள மாறம்பாவைக்குக் கட்டளை இடுகிறார். மாறம்பாவையும் இதனை வலியுறுத்தவே நெடுஞ்சேரலாதன் இச்செய்திகேட்டு, "மெழுகுக்கூண்டில் அடைபட்ட புலியாய் அடங்கிப் போனான்"[39] என்ற விடத்து வினை உவமை இடம் பெறுகிறது.

"கடற்கோள் போல கடம்பர்களின் நாவாய்களும் கடல் மீது மிதக்கத் தொடங்கிவிட்டன. வேறுசில வெள்ளைத்தீவு மரக்கலங்கள் கடம்பர்கள் வாழும் தீவுகள் அனைத்தும் நெடுஞ்சேரலாதனின் படையெடுப்பால் கடற்கோள்போல் கொந்தளித்துக் கொண்டிருந்தன"[40] என்ற உவமை செயலை அடிப்படையாகக் கொண்டு காட்டப்படுகிறது.

ராஜகர்ஜனை புதினத்தில், பசவராஜுக்கென விரிக்கப்பட்ட வலையில் ரங்கநாயகி மாட்டிக்கொண்டபோது "சங்கரா மீனைப்போல"[41] துடிக்கிறாள் என்ற அவளது நிலை செயல் அடிப்படையில் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளது.

கொல்லிப்பாவையில் "குரங்கு கிளைக்கு கிளை தாவுவதுபோல"[42] பரிமளா ஐந்து குதிரைகளின் மீது ஏறி வாளைவைத்துக்கொண்டு ஒவ்வொரு குதிரையான மாறிமாறித் தாவி ஏறி பயிற்சி செய்கிறாள். அந்தப் புரவிப் பயிற்சியைப் பற்றிக் கூறும்போது குரங்கு கிளைக்கு கிளை தாவுவது போல! என்ற செயல்பற்றிய உவமை இடம்பெற்றுள்ளது.

"பன்றிகளை அடித்துக் கொல்வதுபோல"[43]

நல்லனை எதிர்த்து போர் செய்யும் போது பிண்டன் போர்க்களத்தில் கொல்லப்படுகிறான். நன்னனையும் நெடுமிடலையும் பரிமளாதேவி புரவியின் மீது பாய்ந்து பாய்ந்து தாக்குகிறாள். அவளது தாக்குதல் பன்றிகளை அடித்துக் கொல்வது

போல இருந்தது என்று அவளது செயல் காட்டப்பட்டுள்ளது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் "அடவி அழிக்கும் கன்றுபோல"[44] "குமுதம் உதய நிலவை நோக்குவது போல"[45] ஆகிய உவமைகளும் சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் "பாம்பை மிதித்தவர் போல"[46] "பனைநார் உரிப்பது போல"[47] ஆகிய உவமைகளும், கானல்கானம் என்ற புதினத்தில் "வெட்டுண்ட அரணைவால் போல"[48] என்ற உவமையும், பூங்குழலி என்ற புதினத்தில் "நில நடுக்கம் கண்ட மாளிகை போல"[49] என்ற உவமையும், வேங்கைவனம் என்ற புதினத்தில் "பூந்தோட்டத்து வேலி போல"[50] என்னும் உவமையும் கங்கைநாச்சியார் என்ற புதினத்தில் "அரக்கர் குலத்தை அழிக்கவந்த அனுமார் போல"[51] என்னும் உவமையும், செம்பியன் செல்வி என்ற புதினத்தில் "மகுடி கேட்ட நாகம் போல"[52] என்ற உவமையும் செயலை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன.

**மெய் உவமை**

தோற்றம் பற்றி அமையும் உவமை மெய் உவமை எனப்படும். சேரசூரியன் என்ற புதினத்தில் நாகநாட்டு மலைமுகட்டின் வழியாக நாகநதி "நாகம்போல்"[53] வளைந்து நெளிந்து ஓடிக்கொண்டிருக்கின்றது என்றவிடத்து நதியின் தோற்றமானது நாகத்தை ஒப்புமையாக்கிக் கூறப்படுதலால் இந்த உவமை மெய் உவமையாக அமைகிறது.

"சோனை நதியின் அழகுபோல்"[54] நாகநாட்டில் தங்கியிருந்த போது நற்சோனை நெடுஞ்சேரலாதனை உணவருந்தத் தேடி வருகிறான். எங்கெல்லாம் உங்களைத் தேடுவது எல்லோரும் உணவருந்தக் காத்திருக்கிறார்கள் என்று கூறும்போது அவளுடைய தோற்றம் சோனை நதியின் அழகுபோல் காட்சியளித்தது என்ற விடத்து இந்த உவமை கையாளப்பட்டுள்ளது.

திரிலோசனக் கடம்பனைத் துரத்திப்பிடித்து வெற்றிக்கொடி நாட்டிவரும் சேர இளவரசன் செங்குட்டுவன் கடம்பர்களை அழிக்கப் புறப்பட்டு வரும் செய்தியைக் கேட்ட

“கடம்பர்களின் மரக்கலங்களும் நாவாய்களும் கடல்மீது மிதக்கத் தொடங்கிவிட்டன, அவை மரக்கலங்களா? திமிங்கலங்களைப் போலல்லவா காட்சித்தருகின்றன”[55] என அவற்றின் தோற்றம் பற்றி இந்த உவமை அமைகிறது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில் “அழகுநிலா அக்கினிச் சூரிய கோலம் பூண்டது போல”[56] பரிமளா ஆண்வேடம் தாங்கி போர்களம் புறம்படும்போது அவளுடைய தோற்றமானது அழகுநிலா அக்கினிச் சூரிய கோலம் பூண்டதுபோல! இருந்தது என இந்த உவமை அமைந்துள்ளது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில் திப்பு சுல்தானின் சுதந்திர வேட்கைக்கு நேர் எதிரிடையான குணமுள்ள அவரது தம்பி கரீமை அவர் கண்டித்தபோது சரித்திரம் தெரியாத சண்டாளர்களுடன் நீ பழகி வருகிறாய் எனக் கூறுகிறார். அப்போது திவான் மீர்சாதிக்கின் முகம் “வெயிலைக் கண்டு சுருங்கும் பாகற்கழத்தைப் போல”[57] சுருங்கியது என மீர்சாதிக்கின் முகம் பற்றிக் கூறும்போது இந்த உவமை யையாளப்பட்டுள்ளது. இது மெய் உவமை வகையாகும்.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் “இந்திரஜித்தை நினைவுபடுத்துவதுபோல”[58] என்ற உவமையும், பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் “குண்டு மல்லிகை போல”[59], “வானகங்கையில் நீராடிவந்த தேவதை போல”[60] ஆகிய உவமைகளும், சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் “பிடரியை சிலிர்த்து எழும் அரிமாவைப் போல”[61], நின்று நிதானித்து எழும் பசுவைப் போல ஆகிய உவமைகளும், பூங்குழலி என்ற புதினத்தில் “பனியில் நனைந்த மலர்போல”[62] என்ற உவமையும், வேங்கைவனம் என்ற புதினத்தில் “தமிழைப்போல”[63] என்றும் உவமையும் மெய்உவமைகளாக இடம் பெற்றுள்ளன.

**பயன் உவமை**

ஏதேனும் ஒரு பயன் கருதி அமையும் உவமை பயன் உவமையாகும்.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில் பயன்பற்றிய உவமையாக “நெருப்பிலும் நீர்கசிவது போல”[64] என்ற உவமை இடம்பெற்றுள்ளது. பெருந்துரைப்போரில் நன்னன்

பிண்டனைத் தோற்கடித்து அவனது மனைவி மகளைச் சிறைப்பிடித்துச் சென்று கற்பைச் சூரையாடிக் கொன்றுவிடுகிறான். இந்த செய்தியை அறிந்து வந்த பிண்டனிடமும் பரிமளாவிடம் கூறும்போது காட்டுமிருகாண்டியின் நிலை நெருப்பிலும் நீர்கசிவது போல இருந்தது உவமை. அந்த உள்ளுணர்வின் பயனைக் காட்டுகின்றது. பரிமளாதேவி நார்முடிச்சேரனுடன் போரிடும்போது அவன் ஊர்த்துவதாண்டமுறையை கையாளுகிறான். பரிமளாவட்டுடைத் தரிக்காத காரணத்தால் தோற்றுவிடுகிறாள். இந்த நிலை "பரமசிவனிடத்து பார்வதி தோற்றது போல"[65] இருந்தது எனப் பயன் உவமையாகக் கையாளப்பட்டுள்ளது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில் அமைதியாகக் காணப்பட்ட ரங்கநாயகி "ஒரு கவிதையின் ஆழம்போல்"[66] மௌனமாகக் காணப்பட்டாள். இங்கு அவளது செயலின் பயன் மறைமுகமாகக் காணப்படுகிறது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில், பேய்க் கணவாயில் மகேந்திரவர்மனைத் தொடர்ந்து வந்த புலிகேசி போரிட்டுத் தோல்வி அடைகிறான். அப்போது மகேந்திரவர்மன் இது உன் முதல்தோல்வி எனக் கூறியதும் அவனுக்கு "நெஞ்சில் கோடரி பாய்ந்தது போல"[67] இருந்தது என்றவிடத்து இந்த உவமை கையாளப்பட்டுள்ளது. இது பயன் உவமையாகும். அசலபுரத்தைச் சார்ந்த ஸ்ரீ விஜயன் என்பவன் தனது நண்பன் ஜயதேவனை (போலி மகேந்திரவர்மனை) காண வருகிறான். அவர்களது நட்பைப்பற்றி அவன் கூறும்போது "வேதமும் சாரமும்போல"[68] ஒன்றிப் பழகினோம் என்று கூறுகையில் அவர்களது ஒற்றுமை பயன் அடிப்படையிலான உவமையாக அமைகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் "நிலாச்சோறு ஊட்டுவது போல"[69] என்னும் உவமையும், பூங்குழலி என்ற புதினத்தில் "ஏழு பிறவித் தவம்போல"[70] என்னும் உவமையும், செம்பியன் செல்வி என்ற புதினத்தில் "தேடப்போனத் தெய்வம் கூடவந்த கதைபோல"[71] என்னும் உவமையும், பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் "பொன்னுருவம் உயிர் உடைத்தாற் போலன்றோ"[72] என்ற உவமையும்,

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் "நீருற்றைத் தேடிச் சென்றவர்க்குத் தேனருவியே கிடைத்தாற்போல"[73] என்ற உவமையும், குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில் "தன்யாசி ராகம் கேட்டது போல"[74] என்ற உவமையும் பயன் உவமைகளாக இடம் பெற்றுள்ளன.

**உரு உவமை**

இது நிறத்தை அடிப்படையாகக் கொண்டு அமைவதாகும். நிறத்தை இயல்பாகக் கூறாமல் அடைமொழியுடன் கூறுவது சிறப்பானதாக அமைகிறது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில், திப்பு சுல்தானும் ரங்கநாயகியும் கருத்தொருமித்த காதலர்களாக வாழ்ந்தது அக்ரகாரத்திற்கு மட்டுமல்ல; அரண்மனை முதல் அனைவருக்கும் தெரிந்த செய்தி ரங்கநாயகியின் மீது கோபம் கொண்ட சாஸ்திரோத்மர் ரங்கநாயகியைப் பொரிந்து தள்ளினார். அவரது கண்கள் "தூபெகலசத்து நெருப்புத் துண்டுகளைப்போல"[75] கனன்று காட்சி அளித்தன என்பதில் அவரது கண்கள் கோபத்தில் சிவந்து நெருப்பைப் போல் காணப்பட்டதால் இது உரு(நிறம்) உவமையாகும்.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில், மகேந்திரவர்மனைக் கடத்திச் சென்ற சுரங்கப் பாதையில் நிரூபகேசரியும் ஆமாத்தியரும் ஒரு லட்சினையையும் ஓலைச் சுவடியையும் கண்டு எடுக்கிறார்கள். அது சாளுக்கியர் சூழ்ச்சி என்பது புலனாகிறது. அந்த நிகழ்ச்சி "இருட்டில் பூக்கும் இருவாட்சி போல"[76] இருட்டில் கருமையில் வெண்மை தெரிவது போல என்ற பொருளில் நிறம்பற்றியதாக உரு அடிப்படையில் உள்ளது.

செம்பியன் செல்வி அனந்தவர்மனின் தோழன் அவனுடைய சதிக்கும்பலில் ஒருவரான அனந்த பாலய்யனுக்கு பேய் என்றால் பயம். காட்டுப்பள்ளிப் படையில் தோழர்களோடு தங்கியிருந்த அவன் கண்களுக்கு இரண்டுகொள்ளிக் கண்கள் மரத்திலிருந்து காண்பதைக் கண்டு அஞ்சிவிட்டான். அந்த இருளில் காணும் பொருள்களெல்லாம் அவனுக்கு அச்சத்தைக் கொடுக்கின்றன. இருளில் அந்த கருமை

நிறத்தில் ஒளிவிட்ட இரு கொள்ளிக் கண்களைக் கண்ட அவனுக்கு "மருண்டவன் கண்ணுக்கு இரண்டது எல்லாம் பேய்"[797] என்ற உவமை அமைகிறது. நிறத்தை அடிப்படையாகக் கொண்டு உரு உவமையாகக் கையாளப்பட்டுள்ளது. எஞ்சிய புதினங்களில் இத்தகைய உவமைகள் இடம்பெறவில்லை.

**வருணனை**

ஒரு சொல் அல்லது தொடர்மூலம் படிப்போரின் கண்முன் காட்சிப்படுத்திக் காட்டும் வகையில் அமையும் விரிவான விளக்கமே வருணனையாகும். இது இடம், பொழுது, செயல், உருவம், பண்பு ஆகிய பலவகைகளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. வரலாற்றுப் புதினத்தில் வருணனை மிகுதியாக இருப்பது இயல்பு. மேற்கூறிய வகைகள் புதினத்தில் பின்பற்றப்படும்போது புதினம் சிறப்படைகிறது.

கலைநுணுக்கத்திறனில் வருணனை என்ற உத்தியானது ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்களில் இடம்பெறும் தன்மை இங்குச் சுட்டத்தக்கது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் ஒரு மண்டபத்தைப் பற்றிய வருணனை இடம் பெறுகிறது. "பள்ளமாகவும் மேடாகவும் செங்குத்தாகவும் பெரிய பெரிய பாறைகளைக் கொண்டும் உயர்ந்த மலைப்பகுதிகளின் நடுவே அக்காலத்துப் பாழ் மண்டபம் ஒன்று சிதிலமாகிக் கிடந்தது"[78] அதனைத் தொண்டைமான் இளந்திரையன் காலத்து மண்டபம் எனச் சொல்லிக் கொண்டனர் என்னும் வருணனையைச் சான்றாகச் சுட்டலாம்.

ராஜகர்ஜனை என்னும் புதினத்தில் "எங்கும பசிய போர்வை கண்களுக்குக் குளுமையாகத் தெரிகிறது"[79] என மேலக் கோட்டையின் தோற்றம் வருணிக்கப்படுவது இடம் பற்றிய வருணனையாக அமைகிறது.

வேங்கைவனம் என்னும் புதினத்தில் அங்கே "பாறைகள் அடுக்கடுக்காய் வரிசைகட்டிக் காணப்பட்டன. ஒரு செங்குத்தான பாறைக்குள்ளிருந்த சமமான பாறைகளில் தனிமைநாடி அமர்ந்து கொண்டான்"[80] என வைகைத் துறையின் வருணனை இடம்பற்றியதாக அமைகிறது.

குற்றாலக் குறிஞ்சியில், “எப்படியிருந்த சொர்க்கம் படைத்த சோழப் பேரரசின் தலைநகரம் தஞ்சை மாநகரம் இப்போது எவ்வாறெல்லாம் சேர்ந்தும் ஊர்ந்தும் தேய்ந்தும் இறுதியில் மராட்டியர் மடியில் சாய்ந்தும் இப்போது இரண்டாம் சரபோஜி மன்னரின் கரங்களில் அமர்ந்தும் தீய்ந்தும் இறுதியில் ஆங்கில கும்பினியரின் புஜங்களுக்குப் பயந்து மாய்ந்தும் பல நிஜங்களை ஜீரணிக்க முடியாமல் ஜீவித்துக் கொண்டிருந்தது”[81] என தஞ்சையைப் பற்றிய வருணனை இடம் பெற்றுள்ளது.

செம்பியின் செல்வி என்னும் புதினத்தில், “வெண்ணிறக் கரைபோட்ட நீலநிறச் சேலையை என்றென்றும் ஆடையாக அணிந்து கொள்ளும் கடற்கன்னி கலிங்கநாட்டின் மணல் வெளிப்பகுதியில் அமைதியைக் குலைந்து சோ என ஆர்ப்பரித்தாள் ....... கரைக்குச் சற்றே தூரத்தில் நந்திபோல் படுத்திருந்த பாறையின் மீது கவலைக் கன்னியாய் அமர்ந்து கடற்கன்னியை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்”[82] என கடற்கரையைப்பற்றிய வருணனை இடம்பெற்றுள்ளது.

சேரன்குலக்கொடி என்னும் புதினத்தில் “பூவாத வஞ்சியென்று புலவர் நாவில் ஓயாது புகழ் மணக்கும் சேரர் தலைநகராம் வஞ்சிமாநகரம் காணப்போதின் இனிய காவியம்போல் காட்சியளிக்கிறது. ஐசுவரியங்களனைத்தும் தன்பால் கொண்ட அமராவதிப் பட்டினத்து அரசனான தேவேந்திரனுடைய நவரத்தினப்பெரும் பேழையொன்றைத் திறந்துவிட்டாற்போன்று விளங்கிய அந்த தலைநகரை.......

வானம் பொய்யாது, வளமை குன்றாது, நீள்நில மாமன்னன் கோல் சிறப்புப் பிறழாத, பத்தினிப் பெண்டிரின் பாதச் சிலம்பொலிக்கும் பொன்னகரமாயிற்றே வஞ்சிமாநகரம்”[83] என வருணிப்பது இடம் பற்றிய வருணனையாக அமைகிறது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் “வைகரைப் பெருமாள் வானக்கூரைக்கு பொன் வேய்ந்து கொண்டிருந்தான். பொன்னான பூரிப்புடன் கெடிலநதி கலகலப்பாக ஓடிக் கொண்டிருந்தது. தெள்ளி நீரோட்டம் நிறைந்த அந்த நதிக்கரையில் நான்கு புரவிகள் தாகத்தை தணித்துக் கொண்டிருந்தன”[84] என கெடில நதிக்கரையைப் பற்றிய வருணனை இடம் பெற்றுள்ளது.

பூங்குழலி என்னும் புதினத்தில் “தேன் கூட்டில் உதயமான தமிழுலாவும் நான்மாடக் கூடலாம் மதுரை மாநகர் தனிசிறந்து காணப்படுகிறது”[85] என்றும், “கல்வியில் கரையிலா காஞ்சிமாநகரம் காப்பியமாகக் கண் விழிக்கிறது”[86] என இடம்பற்றிய வருணனை காட்டப்படுகிறது.

சேரசூரியன் என்ற புதினத்தில் “நிலா வெளிச்சத்துக் கடற்கரையில் நீராடும் மணற்பரப்பில் சீராடும் கவிதையன்ன பெண்கள், காளையனைய ஆண்கள், ஓ கள்ளுண்டும் காதல் சொல்லுண்டும் காமத்தெளிவுண்டும் அடடா ஓ . . . . . அடடா ....... ஆங்காங்கு வேடிக்கை ஆயினும் பாங்கான கேளிக்கை கெக்கலிப்பும் நக்கலிப்பும் எக்களிப்புமாய் நீண்ட கடற்கரையில் யானைகள் அமர்ந்தும் நின்றும் காணப்படுவன போன்ற கற்பாறைகள். அவற்றின் மீது சிற்சில இடங்களில் அணுக்கள் மோதி நுரைப் பூக்களை அள்ளி வீசுகின்றன. சுபகத்தீவின் கலாச்சாரப்பண்பாடே ஓர் அலாதியான அகவற்பா”[87] என கூபகத்தீவைப் பற்றிய வருணனை இடம்பெறுகிறது.

சாம்ராட் அசோகன் என்னும் புதினத்தில் “மனதுக்கினிய மாடமாளிகைகளும், பகைவரின் கொடுமையைக் காக்கும் கோட்டைக் கொத்தளங்களும் மனிதரின் குணத்தில் கொழுந்துவிடச் செய்யும் கூட கோபுரங்களுமாக நிறைந்த மகதப்பேரரசின் தலைநகராம் பாடலிபுத்திரம் கதிரவன் பொன்னொளிபட்ட காரணத்தால் பொன்னுலகம் தானோ போற்றி வியக்கும் சொர்க்கம் இதுதானோ என்று சொல்லி மகிழும் தன்மையதாய் விளங்கியது பாடலிபுத்திரம்”[89] என இடம்பற்றிய வருணனை இடம் பெற்றுள்ளது.

ஏனைய புதினங்களான கங்கை நாச்சியார், ரூப்மதி, கானல்கானம் ஆகியவற்றில் இடம்பற்றிய வருணனை இடம் பெறவில்லை.

**பொழுது பற்றிய வருணனை**

பொழுதை மையமிட்டு அதனைச் சுட்டிக்காட்டுவதாக அமைவது பொழுது பற்றிய வருணனையாகும்.

காஞ்சிக் கதிரவன் என்னும் புதினத்தில் “இரவுப் பேரரசின் அரசவை நர்த்தகியான நிலாப்பேரழகி நாளைய ஒருதினம் பூரண ஓய்வு கொள்ளப்போகிறாள். அந்தப் பூரிப்பில் தனது கரிய பெரிய கூந்தலைப் பரக்க அவிழ்த்துவிட்டு அட்டகாசம்புரிய ஆரம்பித்துவிட்டாள் கறுப்பழகி இருட்டுக்கன்னி ”[89] என்று இரவுப் பொழுது பற்றி வருணிக்கப்படுகிறது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் “ஆகாய வீதியில் அக்கினி ரதம் பவனி வந்து மேலை வாசலை முத்தமிடுகிறது. கறுப்பும் சிப்புமாய் இருந்த மேகங்கள் மத்யமாவதி பாடுகின்றன”[90] என காலைப்பொழுது வருணிக்கப்படுகிறது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில், “இரவு நடுநிசி மௌனத்தவம் புரிகிறது. காற்று சோ என்று வீசுகிறது. சுற்றிலுமாக இருநத கூடாரங்களுள் எங்கோ சிலவற்றில் விளக்குகள் மங்கலாக எரிந்து கொண்டிருக்கிறது. நடுவே நடப்பட்டிருந்த நீண்ட கம்பகத்தில பெரிதான தீவட்டி விளக்கு ஒன்றாக ஒளி உமிழ்ந்து கொண்டிருந்தது. இராப் பறவைகளின் கோஷங்கள் அவ்வப்போது ஆனந்தமாகவும் அவலமாகவும் ஒலிக்கின்றன”[91] என்பது பொழுது பற்ய வருணனையாக அமைந்துள்ளது. கொல்லிப்பாவை என்ற புதினத்தில் “செக்கர் வானத்து அக்கினிச்சக்கரம் மேலை திசையில் கோலம் வரைந்து வையத்துக்கு வாழ்த்துக்கூறி குதுகூல விடை பெற்றுக் கொண்டிருக்கிறது”[92] என மாலை பொழுது பற்றிய வருணனை இடம் பெற்றுள்ளது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், “திரு நிறைந்த கோலமுடன் பகலரசன் கதிரொளி பரப்பு உதயமாகிக் கொண்டிருந்தான். புலரிப்பண்பாடும் புள்ளினங்கள் இனிமையில் சிறகு விரித்து வான வீதியை எழிலார்ந்த ஓவியமாகி காண்போர் கண்கள் இன்ப மனோலயத்தில் மூழ்கடித்தன. செம்மை பரவிய அந்த வான வீதியில்தான் எத்தனை சித்திரவிசித்திரம்”[93] என காலைப் பொழுதின் வருணனை இடம் பெற்றுள்ளது.

வேங்கைவனம் என்ற புதினத்தில், “திசைகளின் உதயவாசல் பிரகாசமாய் இராக்கத்தவங்களைத் திறக்கிறது. நட்சத்திரங்கள் மின்னென்று ஒளிநகை புரிந்து

ஆர்ப்பரிக்கின்றன. தென்றல் சுருதி கூட்ட, தேன்மலர்கள் இசைபாட என்றுமே இரவென்றால் இன்பமென்று இராப்பறவை முடிவு கொட்ட பொங்கி வரும் பெரு நிலவாய் முழுமதிப் பேரழகி மன்மதத்தாண்டவம் புரிய வருகை தருகிறாள்"[94] என இரவுப் பொழுது வருணிக்கப்படுகிறது.

குற்றாலக் குறிஞ்சியில் "பிரணவத்தின் அலங்கார தேவதையாம் பூமியெனும் பேரழகி புல்லாங்குழால் எந்த பூபாளம் பாடத்தொடங்கிவிட்டாள் . . . . . . ராஜதிசையாம் ராக திசையில் உதயம் காணும் குங்குமச் சூரியனுக்குப் பூபாளமும் குழலும் தானே பொன்னான வரவேற்பு? பிரபஞ்சத்தின் நித்திய மகாசக்ரவர்த்தியான ஆதிபகவன் வருகை தருகிறான் என்பதை எடுத்துக்காட்ட செக்கர் வானில் சிவப்பு நிறம் பாயிரம் வழங்குகிறது"[95] என காலைப் பொழுதின் வருணனை குறிப்பிடப்பட்டுள்ளது.

செம்பியன் செல்வியில் "கங்கை கொண்ட சோழபுரம் இரவின் நடுநிசியில் ஆழ்ந்து கிடந்தது எங்கும் அமைதியின் ஊமைக் கூத்து அரங்கம் அமைத்துக் கொண்டிருந்தது. வளர்பிறை நிலவு பால் அமுதை சொரிந்து கொண்டிருந்தது. அந்த துல்லியமான ஒளியில் சோழபுரம் பொன்னுலகமாய் பொலிவுற்றுத் திகழ்ந்தது. வரிசை பிறழாமல் கட்டப்பட்டிருந்த பெரும் மாளிகைகளின் இடையிடையே தெருவிளக்குகள் மின்னிக் கொண்டிருந்தன. அவைகளை இராக்காவலர்கள் நிலவின் வருகையால் அணைக்கொம்பு கொண்டு அனைத்துக் கொண்டிருந்தனர். மக்களரவம் அடங்கிய அந்நேரத்தில் முச்சந்தி கழுதைகளும், வீதியிலே படுத்துறங்கும் நாய்களும் சத்தமிட்டு அழகிய அமைதியை அலைமோதச் செய்தன. இராப்பறவைகள் கிறிச்சிட்டுச் சிறகுகளைப் படபடக்கச் செய்தன"[96] எனப் பொழுது வருணனை காட்டப்பட்டுள்ளது.

சேரன் குலக்கொடியில் "விடி வெள்ளியின் முணு முணுப்பு கேட்டுப் பனிப்படலங்கள் மெல்ல மெல்ல விலகி வழிவிட்டன. இராப்போதில் எத்தனை எத்தனையோ எண்ணற்ற ஒளிமலர்கள் வான் வனத்தில் பூத்துக் குலுங்குகின்றன. பொலிந்து புன்னகை பூக்கின்றன. . . . . பகற்போதில் ஒளிமடல் விரித்து ஒற்றைச் சக்கரத் தேர்ப்பவனி வரும் இந்த ஏழுவண்ணம் பெருமலர்க்கு இருக்கும் பெருமையே

பெருமைதான். ஒற்றை மலராய் மலர்ந்து ஒளிமணம் பரப்பும் இந்தப் பெருமைக்குரிய கதிர்ப்பூவால் வானப் பொழிவெல்லாம் வண்ண வண்ணமான கலகலப்பு விழித்தெழுந்த கானப் பறவைகளின் நவநவமான சிலு கிலுப்பு”[97] என காலைப் பொழுதின் வருணனை இடம் பெற்றுள்ளது.

பூங்குழலி என்ற புதினத்தில் “அக்கினிமலர் கிழக்கு வானில் அழகுத் திருக்கோலமாய் மலர்ந்து பொன்னாய் மணக்றது”[98] என காலைப் பொழுது வருணிக்கப்பட்டுள்ளது.

சேரசூரியன் என்ற புதினத்தில், “வானம் குடைபிடிக்க காற்று கவரி வீசிக் கனல் கட்டியம் கூறவையமென்னும் பேரழகி நீலக்கடலாடையுடுத்திக் காலமென்றும் பெருவழியில் கண்ணுறங்காது நடைபழகுகிறான். அள உறங்கிவிட்டால் இயக்கமேது? இயற்கை ஏது? எழில் ஏது? தூரிகை கொண்டு எழுதாத காரிகையன்ன பெருநிலவு வெள்ளிய நகைபுரிந்து மேலே துல்லியமாய்க் கரம் கொட்டிச் சிரிக்கிறது”[99] என இரவுப் பொழுது பற்றிய வருணனை இடம் பெற்றுள்ளது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் “தேனிலவின் சீதனச் செல்வமாக வந்த தென்றலெனும் மென்காற்று தன்னை இனிமையாக அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறது. திறந்துவிட்ட அரை சாளரங்களில் பாலாவிதிரைச் சீலைகள் அழகாக ஆடி அசைந்து கொண்டிருந்தன. அவற்றின் மீது படர்ந்து கம்மென்று மணம் பரப்பிக் கொண்டிருந்த மலர்க்கொடிகள் தத்தம் ஆயிரமாயிரம் கரங்களை வளை வளைய அசைத்து தென்றல் நடம் புரிந் கொண்டதற்கு ஏற்ப சாளரக் கதவங்களின் கிறீச்சிட்ட ஓசையலப் பிரமாணமான சொற்கட்டுகளை வாரி வழங்குபவன் போல் தெரிந்தது. நில ஒளியின் அமுதக்கிரணங்களின் ஆனந்தமே ஆனந்தம்”[100] என இரவுப் பொழுது வருணிக்கப்பட்டுள்ளது. ஏனைய புதினங்களான, ரூப்மதி, கானல் கானம், கங்கை நாச்சியார், குற்றாலக் குறிஞ்சி ஆகியவற்றில் பொழுது பற்றிய வருணனை இடம் பெறவில்லை.

**செயல்பற்றிய வருணனை**

செயலை மையமிட்டு அதனைக் காட்டும் வகையில் இடம் பெறும் வருணனை செயல் பற்றிய வருணனையாகும்.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் "கலைக்கடலில் மூழ்கியெடுத்த வலம்புரி முத்தனைய முத்துக்கு முத்தம் கொடுத்த முத்து மோகனப்புன்னகைப் புரிவது மகேந்திர சித்திரத்தைச் சித்திரக் குகையில் சிறை வைத்தும் சீக்கிரம் விடுவித்த செயலை எண்ணியா? புலிகேசி என்றும் புயலை எண்ணியா? அவனை வீழ்த்திய தனது விழிக்கயலை எண்ணியா?"[101] என்ற வருணை அஜந்தாவின் செயலை வருணிக்கிறது.

ராஜ கர்ஜணையில் "பலபல அர்த்தங்களைப் பேதாபேதமுடனும் ஆரோகண அவரோகணமாகவும் ஆரோக்கியமாக அங்கீகரித்தும் ஆரோக்யமற்று நிராகரித்தும் விழுங்கியும், ஏப்பம் விட்டு அனுபவம் கண்ட ஹைதர் அலிகான் நவாப் பகதூரின் கண்கள் சற்றே அகன்று விரிந்து ரங்கநாயகியை நோக்கின்றன. ரங்கநாயகியின் பூஞ்சைக் கண்களோ அலமரல் நிலைகண்டு பயத்துடன் இமைக்கின்றன"[102] என இருவரின் செயல்களும் வருணிக்கப்பட்டுள்ளன.

வேங்கைவனம் என்ற புதினத்தில் "தியாகவல்லி புழுதிக்கிடையே அலை மோதும் புல்லாங்குழலானாள் அவளது அபசுரம் அவளுக்குப் புரியவில்லை. ஆனால் அரசனது அபசுரம் அவளது செவிகளை காயப்படுத்தியது. அவள் சிதைந்த ஓவியமானாலும் சிறந்த ஓவியத்துக்காக ஓயாமல் புலம்புகிறாள்"[103] என்பது செயலைச் சுட்டிக்காட்டும் வருணனையாக அமைகிறது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில், "அழித்தெழுதா ஓவியமான பரிமளா ஒரு பாறைமீது நின்று தனது கவனத்தை எங்கோ தொலைவில் அவளது புரவிமேய்ந்து கொண்டிருந்தாலும் சிந்தனைப்புரவி மட்டும் சேரநாட்டை நோக்கி சிறகுகட்டிப் பறந்து சேரனைத் தரிசித்துக் கொண்டிருக்கிறது"[104] எனச் செயல் வருணனை இடம்பெறுகிறது.

குற்றாலக் குறிஞ்சியில் “ராஜகாந்திக்கு அசுணமாப் பறவையின் மயக்கம் ராஜநாகத்தின் அடக்கம், மதம் கொண்ட யானையின் மலைப்பு

நண்பர்களே! அவள் என் மகள்! அவள் உடம்பில் ஊசி முனையளவு ரணமானாலும் என் தலையை நானே சீவிக் கொள்வேன், தப்பி ஓடுங்கள் தப்பி ஓடிவிடுங்கள் . . . . . எந்த சங்கீதம் எனக்கு விலங்கிட்டதோ அதே சங்கீதம் என்னை விடுதலை செய்யும்”[105] . . . . . என ராஜகாந்தியின் செயல் வருணிக்கப்படுகிறது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில், “கடற்கரை வெளியிலே, காதல் வரும் போதையிலே கருத்தை இனிப்பாக்கிக் கண்களைச் சொர்க்கமாக்க் கொண்டிருந்த கருணாகரன் . . . . . செங்கோட்டியாழ் தந்த நாதமோ? பேரியாழ் பெற்றெடுத்த ஆயிரம் அனுசுரத்தின் ஒலியோ? என்று ஐயத்தை கிளப்பிடும் அருள் மொழியின் ஆனந்தக் குரல் கேட்டுத் திரும்பினான் புன்னகை அரும்பினான்”[106] என்றும்,

சேரன்குலக்கொடி என்ற புதினத்தில், “வானத்து கருமுகிலெல்லாம் திரண்டு வந்து வையத்து மண்ணில் பரவி, இடியையும், மின்னலையும் எதிரொலிப்பன போலக் காட்சி தந்த கடற்போர்ப்பயணத்துக்கேற்ற கோடான கோடிக் கண்களுள் சற்றே மாறுபட்ட பார்வையும் வேறு பட்ட பாவனையையுமாகக் காணப்பட்டன. இரண்டு கண்கள் வெருட்சியும் மருட்சியும் அந்தக் கண்களில் விளையாடின. இவற்றுடன் வியப்பும் திகைப்பும் கூட வேரூன்றின. மயங்கிய கண்களை துடைத்துவிட்டுக் கொண்டான் அந்த இளைஞன். . . . . அதிர்பட்டு அகன்று மருண்ட அந்த கண்கள் அமைதிப்பட்டு நிலைபெற்றனவோ அலை விரிந்து வியந்த விழிப்புக்கு எல்லையில்லாமல் போயிற்று”[107] எனவும்,

பூங்குழலி என்ற புதினத்தில் “பூங்கண்கள் வேங்கையனைய வீரம் படைத்த நந்தி போத்தரையரை நளினமாகக் கவனிக்கின்றன. பழுது கண்டாய் இதைப் போய் பகர்வாய் சிறைப் பைங்குருகே என்று பச்சைக்கிளியை தூதனுப்பிய பசுங்கொடி துவளுகின்றது. கண்முன்னே காட்சியளிக்கும் காமரூபத்தைத் தரிசித்தும் வரம் கேட்க முடியாமல் கண்ணீரை உள்ளுக்குள் உகுத்துக் கொள்கிறாள்”[108] எனவும்,

சேரன் சூரியன் என்ற புதினத்தில் "நற்சோனை சிலையன்ன நின்றாலும் சிலைக்கும் வியர்க்குமோ என்று வியர்த்துப் போனாள் ஏன்? விதிர்த்தும் போனாள்"[109] . . . .என்றும் செயல்பற்றிய வருணைகள் அமைந்துள்ளன.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் "எத்தனை பயங்கரமான கபாலிகர்கள் இவர்கள் குங்குமமும் சந்தனமும் குழைந்த நெற்றியும் குவியல் குவியலாகக் கோத்தணிந்த மண்டையோட்டு மாலைகளும் எவ்வளவிற்கு குலை நடுக்கம் கொடுக்கின்றன? . . . . கூட்டம் கூட்டமாக வல்லவோ கூடி நின்று எதிர்க்கின்றனர். அவர்களிடம் தான் அந்தப் பாண்டியன் படைத்தலைவன் என்ன சாமர்த்தியமாக வாளை வீசிக் கொண்டிருக்கின்றான்"[110] ..... எனவும்,

கானல் கானம் "பொன் போன்ற இனிய குரலெடுத்துக் கணீர் என்று பாடத் தொடங்கினாள் மான் போன்ற கம்பீர அழகு படைத்த சுரமாலை"[111] என்றும்,

மீட்டிக் கொண்டிருந்த வீணையின் சாரனைத் தந்தியில் அழுத்தமாக விரல் பட்டதால் சுருதி கலைந்து பேதலித்தது. மனதின் சுருதி கலைந்து எத்தனையோ கணங்கள் உருண்டோடிவிட்டன. பிருடைகள் கார்ரென்று சுழன்று தளர்ந்தன. வாழ்வின் சுருதியின் அந்தரகாந்தாரம் எங்கோ அந்தரத்தில் ஒலித்தது"[112] எனவும்,

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் "மேல்திசை முத்தமிட்டு கொண்டிருந்த கதிரவன் கீழ் திசைக்கு வணக்கம் போக்கிக் கொண்டிருந்தான். செம்மை நிறம் பூண்ட வானத்தைக் கவனித்து துய்த்தவனாய் வெண்புரவியில் வீற்று விரைந்து சென்று கெண்டிருந்தான், மகத இளவரசன் சந்திரமௌலி"[113] எனவும் செயல் வருணனை இடம் பெற்றுள்ளன.

**பண்பு வருணனை**

பாத்திரங்களின் பண்பை வெளிப்படுத்தும் வருணனை பண்பு பற்றிய வருணனை ஆகும். கானல் கானம் என்ற புதினத்தில் "பெரியநாயகி ஆள்தான் தடிமனேயொழிய அவளுடைய உள்ளம் பூப்போன்றதாயிற்றே முகந்தால் வாடக்கூடிய

அனிச்சமலருக்குகூட அந்த மனதை ஒப்பிடலாம்"[114] என அந்த அம்மையின் பண்பு கூறப்படுகிறது.

சாம்ராட் அசோகனில், "ராட்சஸிக்கும் மருட்சி உண்டா என்ற உண்மையை புரிந்து கொண்டவர் போல் சக்ரவர்த்தி அசோகவர்த்தனர் மெல்லத் தொலைவிலிருந்த பொன்னூஞ்சலில் சென்றமர்ந்தார். அது அவருடைய மனதைப் போல அசைந்தது, ஆடியது"[115] என்ற வருணனை திரிஷ்யாவின் பண்பை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

"காதல் எங்கு உதயமாக வேண்டும் என்ற நியதி இல்லை. முரடன் இதயத்திலே காதலும், முள்ளில் தாழம்பூவும் உதயமாவதற்கு எந்த நியதியுண்டு. முரடனான புலிந்தகனின் உள்ளங்கையளவான இதயத்தில் உலகளவு காதல் உதயமானது"[116] என்பதும் மனித இதயங்களின் பண்பை விளக்குவதாக அமைந்துள்ளது.

உருவ வருணனை என்பது உருவத்தை பற்றிய வருணனை ஆகும். காஞ்சக்கதிரவன் என்ற புதினத்தில், "கறுப்பு முத்தைப்பொடித்துச் சித்திரம் வரைந்தது போல காணப்பட்ட அழகியொருத்தி கறுப்பு முத்தே போன்ற கண்களை உருட்டி உருட்டியாரை எதிர்பார்க்கிறாள்.

உச்சிக்கு சற்றே கீழ் நோக்கிச் சரிந்த கொண்டை அதனள்ளிருந்து காரருவி வீழ்வது போன்ற புரிகுழல் . . . . அங்கே சீதேவி, வலம்புரி, பூரப்பாளை அணிகலன்கள், செவிகளில் பத்திரக் குண்டலங்கள் கழுத்தில் சரப்பாணி முத்தாரம் கரங்களில் நவரத்தின சூடக வளையல்கள் விரலில் மகரவாய் மோதிரம், இடையில் விரிசிகை மேகலை, கால்களில் பாடகச்சதங்கை, மேனியில் கலிங்கம் பாலாவி அன்னத்துகில்"[117] என பானுமதியின் அலங்கார உருவத்தை வருணிப்பது உருவவருணனையாகும். "கலையின் தேவபுருஷன் காமனின் அத்யந்த நண்பன், அபிமன்யுவின் ஆண்மை, அர்கணனின் பேரழகு"[118] என மகேந்திரவர்மன் வருணிக்கப்படுகிறான்.

ராஜகர்ஜணையில் "ஆகாயத்திலிருந்து ஒருதுண்டு வெண்மேக பிட்டுக் கொண்டு வந்து பூமியில் விழுந்து அது குதிரை வடிவம் தாங்கி திப்பு சுல்தான் என்கிற தேவபுருஷனை சுமந்து கொண்டு ஓடிவருகிறது"[119] என குதிரையைப் பற்றியும் திப்புவைப் பற்றியும் வருணிக்கப்பட்டுள்ளது.

வேங்கைவனம் என்ற புதினத்தில் "முழுநிலவும் பின்னணிக் கேற்ப மோகினியாய் வெண்ணாடை அணிந்து, முத்துக்களால் அலங்காரம் செய்துகொண்டு, மோகனமாய் பல்வரிசை காட்டி முன்னே வந்து நிற்கிறாள்"[120] என்றும்,

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், "அள்ளி சொருகினாற்போல் சக்கர வட்டமாக முடித்த கூந்தலில் கருமேகம் கருணையுடன் படர்ந்து சுருள் சுருளாக வளைவு பெற்றிருந்தாக உணர்ந்தான். அந்தச் சக்கரவட்டக் கொண்டையில் மெல்லிதாகச்சில இழைகள் பிரிந்து அருவிபோல அவளுடைய தோளில் பாய்ந்து வீழ்ந்து கொண்டிருந்தன. ஒற்றைவெண்தாமரை மலர் அந்தக் கூந்தலில் நீடுதுயில் நீக்கபாடிவந்த சந்திரனைப்போல் காட்சி தந்தது. பிறைநுதலில் தீபச் சுடரொத்த திகலம் ரத்தமாகப் பிரகாசித்தது. பொன்வண்டுகளைப் போலச் சிறிதாக இருக்கும் நீலவண்ணத் தேன் சிட்டுகள் மெல்லிதான சிறகுகளை விரிந்து பறப்பனபோல அவளுடைய குனித்த புருவங்களுக்கு கீழே கரு நீலவிழிகள் காணப்பட்டன. எடுப்பாக அமைந்த கூரிய நாசியில் வியர்வைத்துளிகள மோகத்தின் உதயகீதம் பாடின கொவ்வைச் செவ்வாயின் சிரித்த இதழ்களுக்கிடையே வெண்பரல்கள், பிளந்த சிவந்த மாதுளையில் ஒட்டிக் கொண்டிருக்கும் வெண்முத்துக்களாகவே தோற்றமளித்தன. சங்கு கழுத்தென்ன பங்கமில்லா விரிந்த தோள்களுக்கு கீழே . . . . . . இயற்கை சிற்பியின் கடைசல்களாக அமைந்த தளிர்க்கரங்கள் நாணத்தின் அசைவுகளை நயம்பட உரைத்துக் கொண்டிருந்தன. இடையில் உடுத்தியிருந்த உடுக்கையில் மேகலாபரணம் . . . . . . கொசுவிய பாவாடை, காற்றுப்பட்டாலோ குழைந்திடும் மேலாடை இவை வெண்பட்டு நூலாடை பாலாவி அன்னத்துகில், கொஞ்சிடும் நூபுரம்"[121] என்றும்,

குற்றாலக் குறிஞ்சியில், “வற்றாத அழகின் வார்ப்படத்தில் பிரமன் குற்றாலக் குறிஞ்சியைப் பொன்னாய் உருக்கி வார்த்துப் பூவுலகத் தேவதையாகப் படைத்துவிட்டான்”[122] எனவும்,

செம்பியன் செல்வி என்ற புதினத்தில், “எழிலான முகத்திலே எடுப்பான மூக்கு அந்த எடுப்பான மூக்கின் கீழ் அரும்பான மீசை கனத்த கழுத்தும் யானையின் மத்தகத்தைப் போன்ற புயங்களும் முக்கோண கேடயத்தைப் போன்ற மார்பும் மார்பை போர்த்தியிருந்த இணையறவாளும் அம்மங்கையை வியப்பில் ஆழ்த்தின”[123] எனவும்,

“தேயாத நிலா முகத்தில் அவளுடைய கண்கள் தேடாத கயல்களோ? அன்றி களத்திலும் காணாத வேல் முனையோ? குமிழ்ப்பூபோன்ற மூக்கிலே முத்தோடு கூத்தாடும் முக்கனியும் அவசியமோ? அவளுடைய செவ்வாயின் முன்னே செங்கமலம் பங்கமலம், உடுக்கை இடைமூடி உடுத்திய உடையில்தான் எத்தனை ஒய்யார ஒப்பனை! வட்டக் காதணியைத் தொட்டு மகிழும் கூந்தலைக் கட்டி முடித்தவளின் கைத்தொழில் திறனன்றோ! மொத்தத்தில் அம்மங்கை சித்திரப் பாவைதான்! சிங்காரச் சிற்பம்தான்! சிந்திக்காத உயிர்க் கவிதைதான்”[124] எனவும்,

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், “மத்தகபுயங்களும் மகாமேருவென நிமிர்ந்த மார்பும் வித்தக கண்களும் வெஞ்சமர் வெறிதூண்டும் வளைந்த மீசையும், கார்விரிந்த கேசத்தில கடலலை படர்ந்த அழகும் காண்பவரை மெய்மறக்கச் செய்யும் வீரலட்சணங்களாய் விளங்கின. கடைந்தெடுத்த தொடையினை சற்றே கவினசைவால் நெளித்து புடைதெழுந்த கரத்தினை வீரப்புலமை பேச நிமிர்த்தி நீட்டியவாய் நிறைந்த புன்னகையால் வரவேற்றார். வேம்பணியும் மீனவரின் வேந்தர்க்கு வேந்தர்”[125] எனவும்,

சேரன் குலக்கொடியில் என்ற புதினத்தில், “அந்த தெய்வத் திரு உருவின் அருள் நிறைந்த வாழ்க்கையே இலக்கியச் சுவை நிரம்பிய கவிதைதான். திருமேனி என்ற பெயருக்கேற்ப திருமேனி கொண்டவள். கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் திருச்செல்வி,

ஒத்தொளிபவளத்து உள்ளொலி சிறந்த நித்தில இளநகையை நிரந்தரமாகக் கொண்ட நிறையினள். புங்த்தொளி வாழ்வே நித்திய வாழ்வாகக் கொண்டு புறவாழ்வை வெறுத்துப் புதிய நோண்புகாணும் புண்ணியவதி. பிறந்ததுதாசி குலம் வாழ்வது தவவாழ்க்கை"[126] என திருமேனி பற்றியும்,

"போருடைதாங்கி, வீருநடைபோட்டு ஏற்போல் வந்து கொண்டிருந்தார் வீரமாமன்னர் சேரர் செங்குட்டுவர். அவருடைய முகமே மலராகவும், மலரே அவருடைய முகமாகவும்"[127] எனவும்,

"கொற்றவையின் சென்னியில் பிறையாகிய வெளியிதழ் இமையாத நெற்றிக்கண், பவள வாயில் முத்துநகை நஞ்சுண்ட கண்டம், நச்சரவின் கச்சு, வளையணிந்த கரங்களில் நிலையான திரிசூலம், வளைவான வாள், கரித்தோல் போர்வை, புலித்தோல் மேகலை இடக்காலில் சிலம்பு, வலக்காலில் வீரக்கழல், சீரடிகளின் கிழே எருமலைத் தலைகொண்ட மனித அரக்கனான மகிடாசூரன் . . . . . கொற்றவை தெய்வத்தின் தோற்றம் வருணிக்கப்பட்டுள்ளது. கரித்தோல் போர்வை புலித்தோல் மேகலை இடக்காலில் சிலம்பு வலக்காலில் வீரக்கழல், சீரடிகளின் கீழே எருமைத் தலை கொண்ட மனித அரக்கனான மகிடாசூரன். . . . ."[128] எனவும்

பூங்குழலி என்ற புதினத்தில், "ஈரிணைக் கண்கள் எழுபிறவித் தவம் போலச் சந்திக்கின்றன. விசும்பிடையே ஒளிந்து தனது பால்வண்ண மேனியை முழுதாகக் காட்டிவிட்டால் பாழ்படுமோ என்றஞ்சும் கருமுகில் நிலவாகக் கவனிக்கிறாளே இந்தக் கவிதையழகி . . . . . நயனங்கள் மூன்றுடை நாதனை வழிபடும் நந்திவர்ம போத்தரைன் இவர்தானோ? பயனுள்ள பனுவலாய் பூபாளத்தை தாங்க வந்த பைந்தமிழ்க்கோன் நந்தி இவன்தானே"[129] என்றும் உருவ வருணைகள் அமைந்துள்ளன.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில், "மூங்கில் புதர்களுக்கிடையே ஒரு புல்லாங்குழல் போல ஒற்றைக் குயில் உணர்ச்சிப் பிரவாகமாய் குக்கூ குரல் கொடுக்கிறது. இந்த அழகின் அகராதியை ரசித்தவாறு பேரழகின் நிகண்டனைய பரிமளா

தேவி அழித்தெழுதா ஓவியமாய் பழித்தறியாக் காவியமாய் ஒரு பாறை மீது நின்று"[130] என அவளது தோற்றம் வருணிக்கப்பட்டுள்ளது. "புள்ளிப் புள்ளியாகப் பொட்டிடப் பெற்ற சேலையை அணிந்திருந்த அவளையும், அவள் இறங்கிய பாவனையையும் கண்ட கண்களுக்கெல்லாம் புள்ளிமானின் துள்ளலோ நினைவுக்கு வந்தது. யார் இந்த தேவமகள் என்ற ஐயத்தை எழுப்பிக் கொள்ளாத கண்களே இல்லை. அவளை தேவமகளாகவே கருதினால் . . . . புகழ்பெற்ற நான்கு நடனமாதர்களுள் ஒருத்தியாக இவள் இருக்கலாமோ?"[131] என பத்மினியைப் பற்றிய வருணனை இடம்பெற்றுள்ளது.

சேரசூரியன் என்ற புதினத்தில் "அதோ ஒரு தேவதா விலாசமான பெண் . . . . உணர்வைத் தூண்டும் உன்னத செம்பொன்னழகி வேகமாக ஆவேசம் கண்டவள் மாதிரி ஓடியாடி வருகிறாள். அவள மார்பில் கச்சு அணிந்திருந்தாள். ஆடைகள் வண்ண வண்ணமானவை, பட்டால் நெய்யப்பட்டவை, பொன்னாபரணங்கள் பூமாலை கழுத்தில் . . . . அந்தப் பெண் கூட்டத்தில் நாகதேவதையே போன்று ஆடுகிறாள் . . . "[132] என்றும்,

கானல்கானம் என்ற புதினத்தில், வீணை செங்கமலம் ஒரு நித்திய அலங்காரப்பிரியை, "அன்றலர்ந்த பாரிஜாத மலரைப்போல் அழகுடன் விளங்கிய செங்கமலத்தை உற்று கவனித்தான். இத்தனை வயதாகியும் இந்த அம்மாள் எத்தனை அழகாக இருக்கிறாள்"[133] என்றும் தோற்றத்தை அடிப்படையாகக் கொண்டு உருவ வருணனை இடம் பெற்றுள்ளன.

பண்பு வருணனை என்பது, ஏதேனும் ஒரு பண்பை வெளிக்காட்டுவதாக அமைவது பண்பு பற்றிய வருணனையாகும். காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில், "வண்ணமும் தூரிகையும் யுத்தம் நிகழ்த்தும் சித்திரங்கள் அஜந்தா குகையாக மாறலாம். வண்மைமிக்க பாறைகள் சிற்பங்களாக மாறலாம். வார்ப்படங்கள் சிலைகளைத் தரலாம் . . . . . "[134] என்ற வருணனை பண்பை வெளிப்படுத்தும் முகமாக அமைந்துள்ளது.

ராஜகர்ஜனையில் "அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாவின் திருநாமத்தால் எல்லாப் புகழும் அல்லாவுக்கே! படைப்புகள் யாவற்றையும் படைத்தும் போஷித்தும் பரிபக்குவப்படுத்துகின்றவன், அளவற்ற அருளாளன்! நிகரற்ற அன்புடையோன்ஸ தீர்ப்பு நாளின் அதிபதி! எல்லாம் வல்ல இறைவன்"[135] என அல்லாவின் பண்புகளை காட்டுகின்றன இந்த வருணனை வரிகள்.

வேங்கைவனம் என்ற புதினத்தில் திருமேனியின் தவறான புரிதலால் எற்பட்ட கோபத்தையும் வெறுப்பையும் கண்ட வேங்கைமார்பன் தன் காதல் புனிதமானது, தூய்மையானது, திருமேனியைத் தவிர அவன் மனதில் யாரும் இல்லை என்பதை உணர்த்தச் சபதம் செய்கின்றான்.

"நான் பண்பான பாண்டிய குலத்தில் பிறந்தவன். நீ சங்கம் வைத்து தமிழை வளர்க்கலாம் . . . . . நான் என்னை வைத்தே தமிழை வளர்ப்பவன். நான் உன்னை அடையவில்லை என்றால் நான் தமிழனல்ல, எனது மொழி தமிழும் அல்ல. நான் தமிழ் வீரனல்ல, ஏன் நான் தமிழனுக்கே பிறந்தவனல்ல "[136] எனக் கூறும் வருணனை அவனது பண்பினை விளக்குகிறது.

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், "நாற்பது நாழிகை நட்புச் செல்வங்களான கண் கோபாலனையும், குமாரக் கூத்தனையும் நினைத்துப் பார்க்க சுநதரபாண்டியருக்கு ஒருவித இனம் தெரியாத துக்கமே மேலிட்டு உணர்ச்சிகளை முறைப்படி அடக்கம் செய்துவிட்டு வெகுநேரம் வரை குழந்தைபோல் வளர்த்த குமாரக் கூத்தனையும், வீரன் விஜயகண்ட கோபாலனையும் ஒப்பிட்டு எண்ணி துடிக்கிறார். குமாரக்கூத்தனால் தமிழ்ப் பண்புக்கு இழுக்கும், கோபாலனால் அது உயர்வதையும் நினைக்கிறார்.

இவனும்தானே வீரன்? எனினும் ஒரு பண்பு நிறைந்த தியாக வீரனாகத் தோற்றம் எடுத்து நெஞ்சில் அழியாப் புகழோவியமாக நிலைத்துவிட்டானே, இவனன்றோ மனிதன்! மனித மாவீரன்! வீரத் திருவுருவம்! உருவின் உண்மைத் தத்துவம்! தத்துவத்தின் உயிர்வடிவம்"[137] எனவும்,

“அலங்கோலமாக இரத்தக் காயங்களுடன் விழுந்து கிடந்த சஞ்சீவியைப் பார்க்க பார்க்க கண்ட கோபாலனுடைய கண்கள் கணத்துக்கு கணம் கணன்று கொண்டிருந்தன. இதயம் இம்மியும் மேற்கொண்டு சிந்திக்க விடாமல் பிழியாப் பிழிந்தது. பேய்கொண்ட நிலையில் மனமோ அலையாய் அலைந்து உடலில் இருந்த எலும்புகள் அனைத்தையும் புளிய மரக்கிளையைப் போல உலுக்கென்று உலுக்கியது”[138] என்றும் பண்பு வருணனைகள் இடம்பெற்றுள்ளன.

குற்றாலக் குறிஞ்சியில் “இசையை எளிய அருவியாக்கிணும் இந்தக் குற்றால இனிய அருவி தீட்சிதர் என்ற மலைபோன்ற பாறையான அழுத்தப்புலமையிலிருந்து வெடித்து வந்ததல்லவா? ராகப்பிழிவுக்கு தீட்சர்”[139] என அவர் பாடும் சங்கீதம் பற்றிக் கூறும்போது அவரது குணம் பண்பு வெளிப்படுகிறது.

“. . . . பாஷாங்கமாகிவிட்ட குழந்தைகளும், வக்ர புத்தி படைத்துவிட்ட குழந்தைகளும் பட்டியலில் அடங்கா”[140] என்றும், செம்பியன் செல்வி என்ற புதினத்தில் “சித்திரைத் திங்களிளே செங்கதிர் மருமகனின் சினம் மீதும் காரணத்தால் மனத்திருப்பம் உண்டாகிக் கோபத்தை அடக்கக் கோடையைத் தணிக்க வந்தமாம் தோழியை வரவேற்றுத் தூதனுப்பும் மாமியே! சித்திரைத் திங்களில்தான் செங்கதிரோன் தகராறோ! வானமாதேவி உன் நிலைமை பரிதாபம்”[141] எனவும்,

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில், “மண்ணில் மாசறு பொன்னும், கடலில் வலம்புரி முத்தும் தோன்றுவது இயற்கையானதால், மனிதருள்ளும் தெய்வங்கள் பிறப்பது பரிபூரண உண்மை”[142] எனவும், பூங்குழலியில் “தமிழ் என்றால் தம்மையே தாரைவார்க்கும் தார்வேந்தர் என்பதில் தமிழுக்கு தன்னையே கொடுக்கும் பண்பு குஞ்சரங்கள் குடைசாயக் குருக்கோட்டை நகரைக் குருஷேத்திரமாக்கிய கோமகனார்”[143] எனவும், சேரசூரியன் என்ற புதினத்தில், “ஆடவற்கோ பெண்டிற்கோ அரையாடை மேல் தளத்து மக்களுக்கு மட்டுமே மேலாடை. அதிகார வர்க்கத்துக்கு அனைத்தும் பாலாடை அந்த வர்க்கம் இட்டது சட்டம். தொட்டது பட்டம் . . . . வர்கபேதத்தின் ஒதுக்கீடு அங்கும்

கிளிஞ்சல் விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தது. இந்த இடம் வரையிலும்தான் பாதியாடைகள் பல்லவி பாடலாம். ஏனைய இடங்கள் அனுபல்லவிகளுக்கும் சரணங்களுக்கும் என கூபகத்தீவு மக்களின் பண்பாடு”[144] எனவும், “அந்நாளைய கடம்பர் குல சூரபதுமன், அவன் ஏறெடுத்துப்பார்த்தலே எட்டு யானைகள் சரணடையும்”[145] எனவும் பண்பை வெளிப்படுத்தும் வகையில் பண்பு வருணனையாக இடம் பெற்றுள்ளன.

**நடை**

இலக்கியப் படைப்பின் வெற்றிக்கு நடையும் ஒரு இன்றியமையாக் காரணமாகிறது. இதனை ஒரு இலக்கிய உத்தி எனவும் கருதலாம். அகத்தின் அழகை முகம் காட்டுவது போல நடை என்பது சிந்தனையின் தெளிவைக் காட்டும். கலை நுணுக்கத்திறனில் நடை என்பது முக்கியப் பங்கு வகிக்கிறது.

“நடை என்பது மொழிப்பிரயோகத்திற்காக மட்டுமில்லை. அது ஆசிரியரின் ஊனோடும் உயிரோடும் ஒன்றிக் கலந்திருக்கிறது”[146] என்னும் கருத்து குறிக்கத்தக்கது.

நடையைப் பற்றி மறைமலையடிகள், “அது ஒரு தனிப்பட்ட அறிவுக் கூறுபாடு அல்லது சிந்தனை முறை”[147] என்று கூறிச்செல்கிறார். மேலும் நடை என்பது கருத்து வெளிப்பாட்டு உத்தி என்று கூறி ஆசிரியர் தமது கருத்தை வெளிப்படுத்துவதற்கு, மற்றவருக்கு எளிதில் புரியும் வண்ணம் வெளிப்படுத்தக் காரணமாக அமைகிறது என்றும் கூறுவர். மேலும் நடையைப் பற்றி “ஒரு படைப்பாளனை இனம் கண்டு கொள்ளத் துணை நிற்கும் தனித்தன்மைக் கூறுகளின் தொகுதி”[148] என்றும் கூறப்படுகிறது.

“கருப்பொருள், கதை சொல்லும் உத்தி, கதை மாந்தர் படைப்பு ஆகிய மூன்று அம்சங்களுமே வைப்பு முறையையும் திறமையையும் உருவாக்க உதவுகின்றன. அந்த மட்டோடு நின்று விடாமல் நாவலாசிரியர்கள் தமக்கென்று ஒரு நடை வகுத்துக்கொண்டு மேற்சொன்ன அம்சங்களை கையாண்டால் அவருடைய நாவல்களுக்கு ஒருத்தனித்

தன்மை கிடைப்பதோடு அவருடைய படைப்புகளையும் வாசகர்கள் சிறப்பாக இனம் கண்டு கொள்ள வாய்ப்பு கிடைக்கிறது"[149] என சிவத்தம்பி கூறுவதும் நோக்கத்தக்கது.

மேலும் நடையானது, "கருத்தின் கணத்திற்கும் உணர்வின் தீவிரத்துக்கும் ஏற்ப வெளிப்பாடு பல முறைகளில் அமைவதே நடைமாறுபாட்டிற்கு காரணமாகிறது"[150] எனத் திறனாய்வாளர் கூறுவர். எனவே இலக்கியத்தின் கருத்து வெளிப்பாட்டிற்கும், படைப்பாளனின் தன்னியல்பை விளக்குவதும் நடையே என்று கூறலாம். மேலும் கதைமாந்தர் தோற்றம், சூழ்நிலைக்காட்சி ஆகியவற்றை வர்ணிப்பதும் என்றும் கூறப்படுகிறது.

"நடை தேம்ஸ் ஆற்றின் ஓட்டம் போலத் தெளிவும், மென்மையும், வன்மையும் பெற்று விளங்க வேண்டும்"[151] என்று அறிஞர் சர்ஜான் டென்காம் கூறுவதும் கருதத்தக்கது.

உடைநடை, சொற்களைப் பயன்டுத்துதல் பாத்திரங்களின் உரையாடல்கள், வருணனைகள், பழமொழி, உவமைகள், இலக்கிப்பயிற்சி கல்வெட்டு, கதை சொல்லும் உத்தி, மொழிக்கலப்பு வழக்குச் சொற்களைப் பயன்படுத்துதல், கடிதம், இசை ஆகிய கலை நுணுக்கத் திறன் கூறுகள் நடையின் அமைப்பிலும் காணப்படும். "நடை என்பது கேவலம் தூய சொற்களினால் மட்டும் உண்டாவதன்று. அது சொற்களின் சேர்க்கையினாலும் . . . .. . அச் சேர்க்கை கலப்பிலும் பிறக்கும் வேகத்தினாலும் உண்டாவதாம்"[152],

"சேரி மொழிற் செவிதிர்கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்து தோன்றின்
புலனென மொழிப் புனுனர் தோரே"[153]

என்றும் "கூத்து முதலான வெண்குறைச் செய்யுள் போல்வன"[154] எனவும் குறிக்கப்படுகிறது.

ஒவ்வொரு படைப்பாளனுக்கும் தனித்தன்மை என்பது உண்டு. கல்கிக்கென ஒரு தனி நடை, கோவி, சாண்டில்யன், பார்த்தசாரதி, அகிலன், ஜயகாந்தன், ஜெகசிற்பியன்,

விக்ரமன், லெட்சுமி போன்றவர்கள் தனக்கென்றொரு தனித்தன்மையை உடையவர்களாக இருப்பர். கோவி மணிசேகரன் தனக்கென்றொரு தனி நடையைப் பின்பற்றுவதை ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்கள் மூலமாக அறிய இயலுகிறது.

**நடையின் வகைகள்**

நடையானது

1. எடுத்துரை நடை
2. கதைத்தொடர் நடை
3. உரையாடல் நடை
4. வருணனை நடை என வகைப்படுத்தப்படுகிறது.

ஆய்வுக்குரிய கோவி மணிசேகரனது புதினங்களில் இந்நடை வகைகள் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்பது குறிக்கத்தக்கது.

**1. எடுத்துரை நடை**

“காட்சியையும் நிகழ்ச்சிகளையும் நயங்களுடன் விளக்குவதற்கு மேற்கொள்ளும் நடை எடுத்துரை நடையாகும்”[155],

காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் நலமுடன் விளக்க இலக்கிய ஆட்சி பெரிதும் உதவுகிறது. படிப்போரின் கவனத்தை ஈர்க்கும் வகையில் இந்த உத்தி கையாளப்படுகிறது.

காஞ்சிக்கதிவரன் என்ற புதினத்தில், “சுட்டுவிரலோடு முந்தானை சுடுபட்டு கொட்டும் கண்ணீரைக் கொந்தளிக்கும் துயரூற்றை விட்டுவிட்டுத் துடைத்து விக்கி விக்கி அழுகிறாள். தூரிகை தொட்டுத் தொட்டு எழுந்த தோகை மயில் அஜந்தா”[156] என அவளுடைய துயரத்தை காட்ட இந்த நடை பின்பற்றப்படுகிறது.

“நான்பட்ட ஆசை தேன்பட்டுத் தித்திக்க கூடாதென்று வீண்பட்டுப் போகச் செய்துவிட்டாரோ”[157] என பானுசந்திரிகா புலம்புவதை எதுகை மோனையுடன் கூறுகிறார்.

நான், தேன், வீண் போன்ற சொற்கள் இலக்கிய இலக்கண நடையுடன் அமைந்து எடுத்துரை நடைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

சேரசூரியன் என்ற புதினத்தில், சேரமா தேவி நல்லிணி கேட்கும் வரங்களை எடுத்தியம்பும்போது, "ஒரு சித்திரைப் பௌர்ணமியில் குமரி முனையில் நின்று முழுநிலவின் உதயத்தையும் சூரியன் மறைவதையும் ஒரு சேரப் பார்க்க வேண்டும். அந்தப் பூமி என் பூமியாக இருக்க வேண்டும். ஏனென்றால் சூரியன் மறையும் பூமி சேர நாடு. உதிக்கும் பூமியும் சேரநாடாக இருக்க வேண்டும். அவ்விதமான எனது பூமியில் கிழக்கு கடல் நீரையும், மேற்கு கடல் நீரையும் ஒரே சமயத்தில் கொண்டு வந்து திருமுழுக்காடி குமரியில் நின்று சூரிய சந்திரரை தரிசிக்க வேண்டும்"[158] எனக் கூறுவது எடுத்துரை நடையாக அமைகிறது. "குன்றுக்குள் ஒரு குகை. அதனுள் ஒரு பெண் இது இயல்பேயானாலும் வியப்பூஞ்சலில் நாக சேனாபதியும் நெடுஞ்சேரலாதனும் ஒரு கணம் திகைத்துப் போயினர்"[159] என எடுத்துரை நடை கையாளப்பட்டுள்ளது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் "இந்தப் பரந்த தமிழ் சாம்ராஜ்யம் உலகிலேயே நாகரீகத் தொட்டிலாக விளங்கியது. சேர, சோழ, பாண்டியர்களால் சிறப்பிக்கப் பெற்றது. அந்த தமிழ் அரச ரத்தமே குன்றி எங்கோ போய்விட்டது. இப்போது பெயர் சொல்லக்கூட ஒருவரும் இல்லை. பாண்டிய வம்சத்தில எப்படியோ ஒரு மரபு தலைதூக்கி இருக்கிறது என்றால் அது மறவர் மரபு"[160] எனவும் சேதுநாட்டு மரபைப்பற்றி ஆசிரியர் எடுத்துரைப்பது எடுத்துரை நடையாகும்.

வேங்கைவனம் என்ற புதினத்தில், "வேங்கைகள் சிலிர்த்து நிமிர்ந்து வாயைக் கம்பீரமாய் பிளந்து உறுமிக் கவனிக்கின்றன. நாகங்களில் எப்படி ராஜநாகமோ அப்படி புலிகளில் ராஜபுலியாயிற்றேவேங்கை"[161] என்றும், ரூப்மதி என்ற புதினத்தில், "நாம் இந்து முஸ்லீம்களாக வாழ்வதைவிட எல்லோரும் இந்திய சகோதரர்களாக வாழ வேண்டும். இதனை அக்பர் சாதித்தான் என்கிற பெருமை சரித்திரத்தால் எழுதப்பட வேண்டும்"[162] எனவும், சாம்ராட் அசோகனில், "நல்லநாளாவது? இன்றே நல்ல

நாள்தான் என்றும் நாட்களிடம் தீமை கிடையாது. மனிதர்களிடம்தான் தீமை இருக்கிறது. நாம் என்றைக்கு ஒரு பாவம் செய்கிறோமோ அன்றைக்கு நம்மை பொறுத்தவரை கெட்ட நாளே! நாம் தேவையான புண்ணியம் செய்யவேண்டாம் தேவையற்ற பாவம் செய்யாமலிருந்தாலே அதுவே போதும். அன்பு செலுத்தும் ஒவ்வொரு கணமும் ஆண்டவனாக நாம் மாறிக் கொண்டிருக்கிறோம். கோவிலுக்குச் சென்றோ கடவுளை வணங்கியோ புண்ணியம் தேடிக்கொள்ள வேண்டும் என்பதில்லை. தினமும் ஒரு ஆத்மாவை நினைவுபடுத்துவுமேயானால் அந்த ஆத்மாவை உள்ளடக்கிய உடலே கோயிலாக நின்று காட்சி தருகிறது"[163] எனவும்,

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் "பாண்டியன் சடையவர்மன் போர்முகம் நோக்கி படை நடத்தி வருவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. படைக்குத் தலைமை தாங்கி வருபவன் குமரக்கூத்தன் என்றும் மாவீரன்"[164] எனவும்,

கானல் கானத்தில் "யாரோ ஊர்பேர் தெரியாதவனாம், அநாதையாம் அதற்கேற்றார்போல இப்போது தனிமையாகப்பிரிந்துவிட்டார்"[165] எனவும்,

குற்றாலக் குறிஞ்சியில் "தெய்வங்களை எங்கே எப்போது அழைத்துப்பாட வேண்டுமோ அங்கே அப்போது அழைத்துப் பாடவேண்டும் என்கிற புதிய கொள்கை படைத்த தமிழ்ப்பாடகியல்லவோ குறிஞ்சி . . . . . . . தமிழ் காப்பியங்கள் மட்டுமே ஆரம்பமாகக் கூறும் உலகு என்ற சொல்லின் உண்மையறிந்து உலகைப் பாடுபவளாயிற்றே குறிஞ்சி"[166] என்றும்,

"அப்போதெல்லாம் கல்வியை கறும்பலகை ஆக்குவது கிடையாது, நெஞ்சங்களாக்குவர். வினாத்தாள்களின் மூலம் பணத்துக்கு கனாக் காண்பதில்லை. குணத்தாள்களில் பணத்தைக் கொட்டிய காலம் வகுப்பின் முதல் பிரிவுப் பாடமே வாழ்க்கைக்கு முதல் தேவையான பண்பாடு பிறகுதான் எண்பாடு எழுத்துப்பாடு என்றும் எழுத்தும் இரு கண்களானால் பண்பாடு ஒன்றே நெற்றிக்குள் மறைந்திருக்கும் கண்பாடு"[167] எனவும்,

ராஜகர்ஜனையில், “வீரனுக்கு போர்க்களம் விளையாடும் பூஞ்சோலை, தமது வாழ்நாளில் தொண்ணூறு சதவீதம் போர்க்களமே பொழுது போக்காக எண்ணி இந்த தென்னகம் மட்டுமல்லாமல் வட புலத்திலுத் தமது புலிக் கொடியை நிறுவி எல்லைகளைப் பரப்புவதில் எல்லையில்லா பெருமகிழ்ச்சியும் பெரு முயற்சியும் கொண்டிருப்பவராயிற்றே ஹைதர் அலி”[168] எனவும் அமையும் பகுதிகளை எடுத்துரை நடைக்குச் சான்றாகக் கொள்ளலாம். மேலும்,

கொல்லிப்பாவையில், “நான் சேரமானைத் தலைவனாக இன்னமும் மதிக்கிறேன். அவர்தான் என்னை நண்பனாக மதிக்கவும் நாணப்படுகிறார். இந்தப் பகைக்குக் காரணம் நன்னனை எதிர்த்து பூழி நாட்டுப் போரில் அவருக்கு நான் உதவ மறுத்தேன். தோல்வி கட்டது மட்டுமல்லாமல் மணிமுடியையும் பறி கொடுத்தார். ஏன் உதவி செய்ய மறுத்தேன். அதற்கு முன்பு நான் கொடியோனை விரும்பு இழந்தபோது அவனைச் சிறைஎடுத்து மணக்க விரும்பிப் போர் உதவி கேட்டேன். சேரமான் உதவ மறுத்தார். நானும் பூழி நாட்டு யுத்தத்துக்கு உதவ முன்வரவில்லை”[169] என்றும், செம்பியன் செல்வி என்ற புதினத்தில், “சக்கரக் கோட்டப் போரில் வெற்றி கண்டு வயிரறாகரம் என்னும் ஊரை எரியூட்டி, எண்ணிறந்த யானைகளைக் கைப்பற்றி தாராவர்ஷனைத்தாள் பணியச் செய்து குலோத்துங்கன் என்ற பட்டப் பெயரை புனைந்து சோழப் பேரரசின் முடியைச் சூட்டிக் கொண்டபோது ஏற்படாத பெரும் வைபவத்தை காணவே ஒரு சாரார் வியந்தனர்”[170] என்றும், பூங்குழலியில், “மன்மதனின் மறு பிறவியாய் இதழ்மலர்த்திய நந்திவர்மா . . . . . . இந்த ஐம்பது வயதைத் தாண்டியும் இப்படி ஒரு வீறு கொண்ட ஏறுநடையா? எழில் தோற்றமா? வியந்து கவனிக்கிறார் கொடும்பாளூர் பூதிவிக்ரமாகேசரி . . . . . முதலாம் நந்திவர்மா காலத்தில் இல்லாத தமிழ் இரண்டாம் நந்திவர்ம காலத்தில் செல்லாத தமிழ் இந்த மூன்றாம் நந்திவர்மா காலத்தில் மட்டும் இந்த பொல்லாத தமிழுக்கு என்ன பொற்காலம்”[171] என்றும்,

“தஞ்சையை ஆண்டு வந்த ஒரு முத்தரையன் அவன் பெயர் சாத்தன் பழியிலி. இவன் பல்லவர் பாலிருந்து விஜய சோழர் மேல் கொண்ட வன்மத்தால் பாண்டியரை

ஆதரித்துக் கொண்டிருந்தவன். முத்தரையர் என்பார் களப்பிரர் அழிந்து பட்ட பிறகு செந்தலையை தலைநகராகக் கொண்டு தஞ்சைப் பகுதியை ஆண்டவர்கள்"[172] எனவும்,

சேரன் குலக்கொடியில், "வரலாற்றில் கடம்பர் தலைமைத் தாயகம் வனவாசி பன்னீராயிரம் என்று குறிக்கப்படுகிறது. இதில் கடற்கரையோரப் பகுதியாகிய இகொண்கானம் தொளாயிரமும் உள் நாட்டுப் பகுதியாகிய ஹல்சி பன்னீராயிரமும் சேர்ந்திருந்தன. கடற்கொள்ளைக் காரர்களாக வாழ்ந்த கடம்பர்கள் மேலைக் கடற்கரையோரம் முழுவதும் பரவி வந்தனர். வெள்ளைத் தீவான துவக்கல் என்ற தீவை வாழுமிடமாகக் கொண்டு வழிப்பறிக் கொள்ளையடித்து பொருளைக் குவித்தனர். லெயூகே என்ற கிரேக்கர் வாங்கும் வெள்ளைத்தீவு இதுவே என்பர்"[173] எனவும் எடுத்துரை நடை கையாளப்பட்டுள்ளது.

**கதைத்தொடர் நடை**

புதினத்தின் கதை நிகழ்ச்சியை விவரித்துச் சொல்லும் நடை கதைத் தொடர் நடையாகும்.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், சிவமதத்தை தவிர்த்து வேறு எந்த மதமும் மகதத்தில் பரவக்கூடாது என்பது திரிஷ்யாவின் எண்ணம் அதற்கு அசந்த மித்திரையும் பத்மாவதியும் ஒத்துழைத்தார்கள். மெல்ல மெல்ல பரவி வந்த பௌத்த மதத்தையும் சமண மதத்தையும் பிந்துசாரர் ஆதரிக்க விரும்பவில்லை. தம் ஆசானாகிய சாணக்கியர் இயற்றிய அர்த்தசாஸ்திரமே அரசாங்க சட்டமாக இருந்தது . . . . "சந்திரகுப்தர் ஆட்சியில் கலவரம் நிகழ்ந்தது. இந்த மதக் கொள்கையை முன்னிட்டுத்தான் . . . . எந்த சாணக்கியரால் நந்த வம்சத்தை ஒழித்து சந்திரகுப்த சகாப்தம் தொடங்கியதோ அநத சந்திரகுப்தரால் மௌரிய சாம்ராஜ்யம் பொடிந்துபோக இருந்தது. தாம் உண்டுபண்ணிய சாம்ராஜ்யத்தை தாமே அழிக்கவும் துணிந்தார் மகாராஜதந்திரியான சாணக்கியர். காரணம் பத்திரபாகு என்பாரை சந்திரகுப்தர் ஆசானாகக் கொண்டார்"[174] என மகத சாம்ராஜ்யத்தைப் பற்றிய வரலாற்றைக் கதைபோலக் கூறிச் செல்கிறார் ஆசிரியர்.

“சாணக்கியர் பிந்துசாரர் மீது கருணை வைத்து பொறுமையாக நாட்டைத் துறந்து வெளியேறினார். சாணக்கியரின் சாணக்கியத்தையும் தந்திர சாஸ்திரங்களையும் அறிவுப் பசிக்காகப் படித்தவள் திரிஷ்யா. அவள் நல்ல ராஜதந்திரி . . . . ஆனால் குணாளனைச் சந்தித்தது முதலாக இவளுடைய நிலைமையே தலைகீழானது. அவனை அடையும் மார்க்கத்துக்காக தன்னுடைய முயற்சிக் கணைகளை ஏவினாள். பாவம் அவள் கற்ற வித்தைகள் குணாளனிடம் பயன்பெறவில்லை. சில வித்தைகள் சிலரிடம் தான் செல்லுபடியாகும். ஏவல் பில்லிசூன்யங்கள் ஆழ்ந்த பக்திமானை அணுகமுடியாமா?”[175] எனக் கதைத்தொடர் நடை உத்தியை கையாண்டு சில வரலாற்று உண்மைகளையும் வாசகருக்குப் புரிந்துகொள்ள வைக்கிறார்.

மேலும் மௌரியப் பேரரசின் நிலையை புஷ்பமாலிகா சந்திர மௌலிக்குக் கூறுவது போலவும் விளக்குகிறார்.

என்னைப்போன்ற மிருக மனிதர்களும் ஏன் உற்பத்தியாக வேண்டும்? என சநதிரமௌலி கேட்டதற்கு, “அது அவரவர் எச்சத்தின் குறைபாடு. உங்கள் குறைபாடு அல்ல . . . . . நந்தர்கள் கொடியவர்கள். காரணம் நாவிர ரத்தம். நந்தனுடைய தாய் ஒரு நாவிதன்பால் ஆசைப்பட்டதன் களங்கம் அது. எனவே மரபு அரச அமைதியை இழந்துவிட்டது. எங்கள் பாட்டனாரும் உரிய ஒழுங்கான அரச குருதியில் வந்தவரல்லர். ஆனால் மகா மேதையான சாணக்கியரின் சேர்க்கையில் சிறந்து விளங்கத் தலைப்பட்டார்.

சந்திர குப்தர் குருவுக்கே துரோகியானார். சிவபக்தரான சாணக்கியரைப் பகைத்து சமணரானார். பத்திரபாகு என்ற சமயாச்சாரியனைத் துணை கொண்டார்”[176] என்ற வரலாற்று உண்மையைப் பாத்திரத்தின் வாயிலாகவே கதைபோன்று கூற வைத்துள்ளார். இதன்மூலம், சந்திரகுப்தரும் தன் இறுதி நாட்களை கர்நாடகாவைச் சேர்ந்த சமணரின் சிராவணபெலகோலா என்றவிடத்திலே கழித்து உயிர்விட்டார் என்னும் உண்மை வெளிப்படுகிறது.

மேலும் பிந்துசாரருக்கு அறுபது மனைவியர்கள் நூற்றி ஓர் பிள்ளைகள் என்றும் அசோகர் இளம் வயதில் முரண்டு கொலைகாரர், சகோதரர்களை கொன்று குவித்தர் என்பதும் அதனாலேயே நரக சிறை உருவாகியது என்ற உண்மையும் கதையின் போக்கில் கூறப்படுகிறது.

காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில், சிம்ம விஷ்ணுவைப் பற்றிக் கூறும்போது, "அவன் பரமபாகவதன் வைஷ்ணவபற்றுக் கொண்டு மலைக் கடலோரத்தில் ஆதிவராகர் கோயில் எழுப்புவதிலும், திருப்பணிகள் செய்வதிலுமே பொழுது போக்குகிறான். எதிரிகள் யாரும் இல்லை. சோழனும் கொடும்பாளூரானும் இவனது கைப்பாவைகள். களப்பிறர் கொடுமைக்குப் பிறகு இப்போதுதான் பாண்டிய நாடு துளித்து இருக்கிறது"[177] எனக் கூறுவதும்,

சேரசூரியனில் "மேற்கு மலைத் தொடர்ச்சியின் அபூர்வங்களில் ாக நாடும் ஒன்று. அதன் தலைநகரம் நாகளூர். சின்னஞ்சிறியதே. ஆனாலும் பென்னம் பெரிய வரலாற்றுப புதையலைக் கொணடது நாகர்கள் என்பவர் யார்?

ஆயிரம் ஆயிரமாயிரம் பக்கங்களுக்கு உரிய அசல் தமிழர்கள் குமரிக் கணடத்திலிருந்து வந்தவர்கள். ஆதி மனித இயக்கம் கோயில்களில் அறச்சிந்தனையுடன் வழிபாடு நடத்த தமிழினம் பிரித்து தந்த தனி இனம் இந்த இனம் தான். அறங்காக்க வேண்டும். அரசு காக்க வேண்டும் இந்த நாக இனத்துக்குரிய மொழிதான் நாகரி. இந்த மொழி பேச்சு வழக்கில் இல்லாமல் ஆலய வழக்கிலும் அரசு வழக்கிலும் இருந்து வந்தது. தேவர்களுக்கு ஒப்பாகத் தமிழர்கள் இவர்களைப் பேணினர்"[178] என்று கூறுவதும் கதைத்தொடர் நடைக்குச் சான்றுகளாக அமைகின்றன.

"அநாதி காலத்தில் உலகத்தில் அக்கிரமங்கள் தலை தூக்கத் தொடங்கிவிட்டன. இந்த போக்கைத் தெய்வத்தால் தாங்கமுடியவில்லை. மிகப்பெரிய பிரளயத்தையுண்டு பண்ணி உலகை அழித்துவிட்டார். இரண்டேபேர் உயிர் தப்பினர். ட்யூக்கேலியான் பிர்ரா இந்த ஆண் பெண்ணுக்கு ஹெலன் என்ற மகன் பிறந்தான். இவன் ஆட்சியை நிறுவ

முயன்றான். இவன் வழிவந்தவர்கள்தான் ஹெல்லனீயர்கள். நாட்டின் பெயர் ஹெல்லான். இதுவே பிற்காலத்தில் கிரேக்க நாடாயிற்று என்பதும் கதைத்தொடர் நடையாக அமைந்துள்ளது. கங்கைக் கரையின் மீது அலெக்சாண்டருக்குப் பின் படையெடுத்து வந்தவர்களுள் எனது தந்தையும் ஒருவர். என்தாய் இமயமலையைப் பார்க்க ஆசைப்பட்டாள். அப்போது நான் அவளது வயிற்றை மலையாக்கிக் கொண்டிருந்தேன்.

என் தாய் எனது ஐந்தாவது வயதில் உடலை கங்கைக்கரையில் போட்டுவிட்டு உயிரை கிரேக்கம் நோக்கி எடுத்துச் சென்றுவிட்டாள். என் தந்தை ஐந்து ஆண்டுகளுக்கு முன்புதான் இறந்துவிட்டார். ஒரே குழந்தையான அவளுக்கே ஆட்சி வரவேண்டும். சேனாதிபதி துரோகம் செய்கிறான்"[179] என்று கூறுவதும், கங்கை நாச்சியாரில், "முன்னம் சேதுநட்டை ஆண்டவர் காலம் சென்ற கூத்தன் சேதுபதி. சேதுநாட்டுக்கு அவர் தமது தநதையாரான முதலாம் சடையத் தேவருடனிருந்து மிகப் பெரிய தொண்டாற்றி வருகிறார். அதன்பிறகு அவர் ஏறத்தாழ பதினான்கு ஆண்டுகளே ஆட்சிபுரிகிற போது சிறியதாய் இருந்த ராமேஸ்வரம் கோவிலைப் பெரிதாக விஸ்தரித்துப் புனருத்தாரணம் செய்த பெருமைக்கு ஆளானார். அவரது காலத்துக்கு பிறகே ஆட்சிக்கு வந்தார். அவருடைய வீர மைந்தன் இரண்டாம் சடையத்தேவர்"[180]என்பதும்,

வேங்கைவனம் என்ற புதினத்தில், "இது ஒரு பொற்காலம். அகநானூறு அரங்கேறிய இந்தக் காலத்தில் தமிழகத்து முப்பெரும் வல்லரசுகள் ஒற்றுமையுடன் திகழுகிறார்கள். மூவரும் ஒன்றாக இருந்ததை எனக்கு முன்பிருந்த சங்கத்தலைவி ஒளவைப்பிராட்டியார் நேரில் கண்டு பாப்புனைந்திருக்கிறார். இந்த அரங்கேற்றத்துக்கும் சேரமான் மாரி வெண்கோவையும், சோழமான் ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளியையும் வரவழைப்பதாகத்தான் இருந்தார் மாமன்னர். என்ன காரணம் பற்றியோ . . . . இளவரசி திருமேனி மறுத்துவிட்டார். நமது மாமன்னரே குறிஞ்சியையும் மருதத்தையும் புனைந்து பாடுவதில் வல்லவர்"[181] என அன்றை காலகட்டத்தை மாங்குடி மருதனார் கூறுவதும்,

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், “சம்புகுலம் பழமையான ஒரு மரபு. அது சீனத்தில் தோன்றி இப்போது நம்முடைய தமிழகத்தின் ஒய்மாநாட்டு மாவிலங்கையில் முடிந்திருக்கிறது. அந்தச் சம்புவராயர்களுடைய மரபை கதிகலங்கச் செய்தவன் கண்டகோபாலன் என்ற தெலுங்குச்சோழன்”[182] என்று கூறுவதும்,

ரூப்மதி என்ற புதினத்தில், “பிற்காலத்தே மகோன்னத ஆட்சிக்கு மகுடமாய் விளங்கிய அக்பர் பாதுஷா அந்நாளையில் சாதாரண நிலையில் அரசு பீடத்தில் அமர்ந்தார் . . . .

தில்லி பாதுஷா ஹுமாயூன் இறந்தபிறகு அவர் பிடியில் இருந்த பல ராஜ்யங்கள் சுதந்திரப் பிரகடனம் செய்து கொள்ளத் தலைப்பட்டன. பைரம்கான் என்கிற நம்பிக்கையும் உண்மையுமுள்ள வீர விசுவாசியின் பெரு முயற்சியால் ஹுமாயூனின் மூத்த புதல்வரான அக்பரை அரியணையில் அமர்த்த நேரிட்டது. அப்போது அவருக்கு வயது பதிமூன்று. ஓராண்டு காலத்தில் தமது தலைநகர் தில்லியையும் ஆக்ராவையும் ஒரு நிலைப்படுத்தி யார் யார் சுதந்திரப் பிரகடனம் செய்து கொண்டார்களோ அவர்களையெல்லாம் தமது விசுவாச வீரபுருஷர்களைக் கொண்டு யுத்தம் செய்து அடிபணிய செய்ய முனைந்தார். இந்த பதின்மூன்று வயதிலேயே அரிய பெரிய சிந்தனைகள் இந்துக்களிடம் எப்போதும் கவுரவம் வைப்பதன் மூலமே ஆட்சியை விரிவு செய்ய முடியும் என்கிற தீர்க்க தரிசனமான முடிவுக்கு வந்தார்”[183] என்று வரலாறு பற்றிக் கூறுவதும், கானல் கானம் என்ற புதினத்தில், “செங்கமலம் தஞ்சை சிவானந்த நட்டுவனாரிடம் குருகுலவாசம் செய்து இசை பயின்றவள். அந்த நட்டுவனார் குடும்பம்தான் இசையில் பெயர் போன குடும்பம் நட்டுவனார் மறைவுக்குப் பிறகு அவருடைய மகன் பொன்னுசாமிதான் இருக்கிறான். அவனோ இளவெட்டுப்பிள்ளை. அதுகளை நம்பி பெரிய இடத்து பெண்களை ஒப்படைக்க முடியுமா? அப்படி ஒப்படைத்தாலும் அவன் ஒரு முசுடு. சிட்சை சொல்லிவைக்க அவனுக்குத் தகுதி போதாது”[184] என செங்கமலத்தைப்பற்றி கூறும் செய்திகளும்,

குற்றாலக் குறிஞ்சியில், "இது என்ன அபிராமி சோதனை? அன்று நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் இசை விளையாட்டு விளையாடினார்கள் என்றால் அவர்கள் ஞானதீபங்கள்! பின்னர் முத்துத்தாண்வருக்கு நீயே நீலி வேஷம் போட்டு சந்நிதியில் சோறு கொடுத்தாய். இசைப்பேறு கொடுத்தாய். எனது சமகாலத்தில் ஆசான் தீட்சிதரும், சியாமா சாஸ்திரிகளும், தியாகய்யரும் இசைசித்து விளையாடுவது கைவரப்பெற்ற கான ஞானம்? இங்கு நாயன்மார்கள் கதவைத் திறக்கவும் கதவை மூடவும் பாடிய விளையாட்டு, முத்து தாண்டவருக்கு நீலிவேஷம் போட்டு சோறு கொடுத்தது . . . . . தியாகய்யருக்கு ராமன் சிலை கிடைத்தது"[185] . . . . . போன்ற கதைகள் உள்நோக்கமாக வைத்துச் சொல்லப்பட்டு இருப்பதும்,

ராஜகர்ஜனையில் "சுல்தான் அவர்கள் கவனிக்க வேண்டும். இவர்தான் சாட்சாத் திரு நாராயண எம்பெருமாள். இவரை செல்லப் பிள்ளைராயர் என்றும் அழைப்பர். இதற்குக் காரணம் இதோ இருக்கிறாளே இந்த பீகம் நாச்சியார்தான். இவள் பெயர் வரதநந்தினி. தில்லி சுல்தான் தென்னாடுக் கோயில்களைக் கொள்ளையடித்துச் சென்றபோது இதோ இருக்கிற உற்சவர் மூர்த்தத்தையும் கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டார். இந்த விக்ரகத்தை தெய்வச் செயலாக இந்த சுல்தான் மகள் வரத நந்தினி பார்த்துவிட்டாள். பெருமாளுடைய அழகில் மனசைப் பறி கொடுத்து காதலித்து விட்டாள். கலிகாலத்தில் இப்படியும் ஏற்பட்டிருக்கிறது"[185] என்ற வரலாற்று உண்மையும்,

"அகலிகையின் புருஷனான கௌதம முனிவர் நமது காவேரிக்கரையில் பர்ணசாலை அமைத்திருந்ததாகவும், ஒரு நாள் காவிரி வெள்ளம் புரண்டு வந்ததாகவும், அதனால் பர்ண சாலையையும் தன்னையும் இந்தக் காவிரி வெள்ளம் அடித்துச் சென்றுவிடுமோ என்று பயந்து அந்த பரந்தாமனான மகாவிஷ்ணுவை அழைத்ததாகவும் அவருக்கு இருக்கிற வேலைகளை எல்லாம் விட்டுவிட்டு ஓடோடி வந்து காவிரி வெள்ளத்துக்குக் குறுக்கே படுத்துக் கொண்டதாகவும் உடனே பர்ணசாலையும் கௌதமரும் காக்கப்பட்டனர் என்றும், ஆனால் ஸ்ரீ ரங்க நாதருடைய அணைத்தடுப்பால் காவிரி இரண்டாகப் பிரிந்து மறுபடியும் ஓர் இடத்தில் ஒன்றாகக்கூடியதாகவும்

அதனாலேயே ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு கௌதமகேந்திரம் என்கிற பெயருமுண்டு"[187] என்ற கதையும்,

கொல்லிப்பாவையில் "என் காவல் மரமான மாமரத்து அபூர்வக்காயை நன்னன் மட்டுமே உண்ண வேண்டும் தவறி எவரேனும் பறித்தோ அல்லது அதுவே தவறிக் கீழே விழுந்துவிட்டால் எடுத்து உண்பார்களேயானால் மரண தண்டனை. இது நாடறிந்தது. அரண்மனையை ஒட்டி ஓடும் ஓர் ஓடையின் நீர்க்கரையில் நீள்விழி அரிவை நீராடிக் கொண்டிருந்தாள். . . . . காவல் மரத்தில் அப்போது காய்த்திருந்த மாங்காயை இலைகளுடன் கொத்தோடு ஒடித்தான். மிஞலி அதனை ஓடையில் எறிந்தான் அடித்துவரும் நீரில் அது மிதந்து சென்று அரிவையின் மேல் இடிக்க எடுத்து பார்க்கிறாள். அவள் அறிவாளா? அது காவல் மர மாங்காய் என்பதை? . . . . . . மாங்காயை எடுத்து கடித்து உண்ணவும் தொடங்கிவிட்டாள். கடம்பின் பெருவாயில் வீரர்கள் அரிவையை சிறைப்படுத்துகின்றனர். கோசர் கோமான் வச்சிரகோசர் ஓடோடி வருகிறார். அரசே கெஞ்சிக் கேட்கிறேன்! மகள் மீது கொண்ட பாசத்தால் மன்றாடுகிறேன். அது அறியாமல் செய்த பிழை அதற்காக அவள் பிழை பொறுக்க, அவள் உருவத்துக்கு அவள் எடைக்கும் பொன்னாலான பதுமைப்பாவை செய்து பிராயச்சித்தமாகத் தருகிறேன் என்பத்து ஓர் யானைகளை அபராதமாக அளிக்கிறேன் அருள் கூர்ந்து விடுதலை செய்ய வேண்டுகிறேன் என கேட்க மறுத்த நன்னன் அவளை கொலை செய்கிறான்"[188] என்னும் வரலாற்று உண்மையும்,

செம்பியன் செல்வி என்ற புதினத்தில், "அப்போது பாண்டியர்கள் இரண்டாம் முறையாக உண்டாக்கிய பெருங்கலகம் காட்டுத்தீயைப் போல நாட்டில் பரவிய நேரம் அதாவது கருணாகரன் தளபதி மூன்று வயதுச் சிறுவனாக இருந்தபோது கங்கை கொண்ட சோழபுரத்தில் அடி எடுத்து வைத்த பொன்னான நாள். கருணாகரன் புத்தி தெளிந்த பிறகு தன்னுடைய அண்ணாரின் மூலமாகவும் அப்பாவின் மூலமாகவும் பல நிகழ்ச்சிகளைக் கேள்விப்பட்டிருக்கிறான். விடதராச பயங்கரர் குலோத்துங்க சோழ சக்ரவர்த்தி அரசுக் கட்டிலேறிய பதினைந்தாம் ஆண்டு மேற்கண்ட நிகழ்ச்சி நடந்தது.

அந்நிகழ்ச்சியின் போது சோணாடே அல்லோல கல்லோலப்பட்டது . . . . . அந்த அபாயத்தின் எதிரொலியை அடக்க குலோத்துங்கச் சோழர் பெரும், பெரும் தொல்லைகளை ஏற்க நேர்ந்தது. . . . . பதினைந்து ஆண்டுகட்கு முன்னம் அதிராஜேந்தர் நோய்வாய்பட்டிருந்ததும் இச் சோழநாடு எந்த நிலைமையிலிருந்து . . . . . . . . சக்ரவர்த்தி சூழ்ச்சியால் அதிராசேந்திரரைக் கொன்றார் என்பதே எத்தனை பொய்! எத்தனை புனைச்சுருட்டு . . . . அதிராசேந்திரன் இறந்ததும் ஆட்சியை ஏற்க மரபில்லாமல் இந்த சோழநாடு எத்துணை அவதியுற்றுள்ளது . . . . ராஜேந்திர சோழரின் மகள் வயிற்றுப் பேரன் எஞ்சிய ஒரே மாவீரர் குலோத்துங்க சோழர் ஆட்சியை ஒத்திராவிட்டால் இந்த உள் நாட்டுக் குழப்பத்தை ஏற்படுத்திய பாண்டியரை அடக்க ஒரு இளைய வீரர் எதிரே வந்து வணங்கினார். அவருக்கு வயது பதினைந்து இருக்கும். ஆனால் ஏறு போன்ற வீறு கொண்ட தோற்றமுடன் இருந்தார். கலகத்தை அடக்கிய அவ்வீரரை கலகம் நீக்கிய காளிங்கராயர் என்று வானளாவ புகழ்ந்து வாழ்த்தொலி எழுப்பினர்”[189] என்று அன்றைய வரலாற்றைக் கதைபோலக் கூறுவதும்,

பூங்குழலியில், “மூன்றாம் நந்திவர்ம பல்லவமாமன்ன போதாதிராஜனின் இறுதிப்போராக சரித்திரம் செப்பும்போர் இப்போர் (அரிசிலாற்றங்கரைப்போர்) தெள்ளாற்றுப் போருக்கோ வடபுலத்து குருகோட்டைப் போருக்கோ இணையானது எனச் சொல்ல முடியாவிட்டாலும் மானத்துக்குரிய பிரச்சனைப் போராக அமைந்து நின்றது நிருபதுங்கவர்மன் தலைமையில் அனுப்பிய குடமூக்குப் போரில் பல்லவர்கள் தோல்வி கண்டிருக்கிறார்கள்”[190] இவர்களைப் பல்லவர்கள கொன்றும் குவித்து இருக்கிறார்கள். “அன்னை அக்களநிம்மதி தேவி அயல் நாடாம் கதம்ப நாட்டுக்குடையவள். தமிழ் மீது வெறுப்பு கொண்டவள். எனவே தமிழாவது? தரித்திரமாவது என்று அந்தப் புதிய பொன் மாளிகையைத் தன் வயப்படுத்திக் கொண்டதோடல்லாது பெயரை மாற்றி கனகமணி மாளிகையாக்கினாள் . . . . . . . . பின்னர் முதல் மனைவியாக வாய்த்த இராஷ்டிரக்கூடத்து மகளான சங்காதேவி திருமகளின் அவதாரம் என்று அந்நாளில் பேசினாலும் திருந்திய அவதாரமல்லவே. மக்களைக் காப்பதில் மாதா மனம்

படைத்தவள். அறிவுடையவள் ஆயகலையுடையாள் என்று அனைவரும் புகழ்ந்தாலும் இவை கையூட்டில் பெற்ற காணிக்கை வாசகங்கள் பாண்டிய நாட்டிலிருந்து பைந்தமிழ்ச் செல்வி மாறம்பாவை இரண்டாம் மனைவியாக வசந்த வருகை தரவே சங்காவுக்கு தமிழ்பால் சழக்கே கண்டது"[191] என்று வரலாறும்,

"நந்திவர்ம பல்லவரது தந்தையின் வைப்பு மனைவியாக இருந்தவர்க்கு பிறந்த நான்கு தம்பிகள் சித்திரமாயன், ரணமல்லன், குணதீரன், காடவராயன் ஆகிய நான்கு தம்பிகள் இந்த காஞ்சியைக் கைப்பற்ற எப்படியெல்லாம் சூழ்ச்சி செய்தார்கள். அவர்களது சூழ்ச்சி அவர்களையே பலி கொண்டுவிட்டது மிஞ்சியிருப்பவன் காடவன்"[192] என்ற வரலாற்றுச் செய்தியும்,

சேரன்குலக்கொடியில், "மலர்க்குழலியைப்பற்றிச் சொல்லும் முன் அவளுடைய தமக்கை திருமேனியைப்பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அந்தத் தெய்வத் திருவுருவின் அருள் நிறைந்த வாழ்க்கையே இலக்கியச்சுவை நிரம்பிய கவிதைதான். திருமேனி என்ற பெயருக்கேற்பத் திருமேனி கொண்டவள். கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் திருச்செல்வி ஒத்தொளி பவளத்து உள்ளொலி சிறந்த நித்தில் இளநகையை நிரந்தரமாகக் கொண்ட நிறையினள் பிறந்தது தாசிகுலம் வாழ்வது தவசி வாழ்க்கை. நினைத்தது இல்லறம், நடந்தது துறவறம். இத்தனைக்கும் ஒரே காரணம் அந்த ஒருவர் சேரமாமன்னர் செங்குட்டுவரின் இளவல் இளங்கோவடிகள். அந்தக் காரணம் பொய்யறியாய் புரை தீர்த்த மெய்க் காதல், தெய்வீகக் காதல் இலக்கிய மணம் கமழும் இன்பக் காதல் ஆனாலும் கைக்கிளைக்காதல்"[193] என திருமேனியைப் பற்றிக் கூறுவதும் கதைத்தொடர் நடையாக இடம் பெற்றுள்ளன.

**உரையாடல் நடை**

பாத்திரங்களை உரையாடச் செய்யும் இந்த நடை சிறப்பானதாகக் கருதப்படுகிறது. "நல்ல உரையாடல் பெரிதும் விளக்க முறை அமையும். இதனை முறையாகவும் உரிய நேரத்திலும் பயன்படுத்துவது படைப்பாளனின் கலை நுணுக்கத்திறனுக்கு சான்றாக அமையும்"[194] என்று கூறுகிறார் அட்சன்.

“நாடகம் முழுவதும் உரையாடல்களால் உருவாகின்றன. நாவலிலும் உரையாடல் சிறப்பிடம் பெறுகிறது. நாவலின் நாடகக்கூறாகவே உரையாடல் விளங்குகிறது. கதை மாந்தர்களின் பண்பு நலன் அவர்களின் உரையாடலில் பளிச்சிட வேண்டும். பேசுவோரின் தரத்திற்கேற்ப உரையாடலின் மொழி நடை அமைய வேண்டும்”[195] என பூவண்ணன் கூறுகிறார்.

“உரையாடல் என்பது புதினத்தில் தோன்றும் பல பாத்திரங்களின் மனம், பண்பு, குறிக்கோள், உணர்ச்சிகள் முதலியவற்றை நமக்கு எடுத்துக் காட்டும் கண்ணாடி”[196] என்று ஞானசம்பந்தன் கூறுகிறார். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் அமையும் உரையாடல் நடையும் குறியாகச் சுட்டத்தக்கன.

காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில், அஜந்தா மகேந்திர வர்மனைத் தேடி வாதாபிக்கு வருகிறாள். புலிகேசியை கவரும் எண்ணத்துடன் அவனைப் புகழ்ந்து பேசுகிறாள். அவள் அழகையும் பேச்சுத்திறனையும் கண்ட புலிகேசி வியக்கிறான். அவளைப் புரிந்து கொள்ள இயலவில்லை என்று கூறும் புலிகேசியிடம் உரையாடும் போது,

“அஜந்தா நான் என்ன அகராதியா? சூடாமணியா? நிகண்டா? வராகநாயகமா என வினவுகிறாள். புலிகேசி மூன்றும்தான், அழகில் சூடாமணி, இளமையில் நிகண்டு, பேசுவதில் அகராதி”[197] எனக் கூறும்போது ஒப்புமை அறிய பேச்சுத்திறன் விளங்க படிப்பவருக்கு சுவையூட்டுவதாக இவ்வரிகள் அமைந்திருக்கின்றன. மகேந்திரனை அஜந்தா குகையில் சந்திக்க வந்த பானுசந்திரிகா புலிகேசி வருவதை அறிந்து தப்பித்துச் செல்கிறாள். அப்போது மகேந்திரனை மீட்க வந்து விக்ரமன், நிரூபகேசரியிடம் மாட்டிக் கொள்கிறாள். மகேந்திரன் இன்னும் நீ செல்லவில்லையா என்று வினவ,

“பன்றியிடம் தப்பிச் சென்று எருதுகளிடம் அகப்பட்டுக் கொண்டேன்”[198] எனக் கூறுகிறாள். பன்றியிடம் தப்பித்து என்பது பற்றிக் கொடியுடைய புலிகேசியையும் எருதுகள் என்று கூறிய நந்திக் கொடியுடைய பல்லவர்கள் என்பதையும்

புலப்படுத்துகிறது. இது இலக்கிய நயமும் கருத்தாழம் மிக்கவையுமாக இந்த வரிகள் அமைந்துள்ளன.

வேங்கைவனம் என்ற புதினத்தில்,

**புலவர்**

“தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் ஓகாரஈறு . . . . . திருமேனி ஓகார இறுதி ஏகார இயற்றே! இது அவ்வழி ஓகார ஈற்று இடைச் சொல்லானால் மான் கொள் எச்சமும் வினாவும் ஐயமும் கூறிய வல்லெழுத்து இயற்கையாகும்.

**ஐயூர் மூலங்கிழார்**

சொல்லதிகாரத்து வினை இயலில் உயர்திணைத் தன்மைப் பன்மை வினைமுற்று பற்றிய சூத்திரம்?

**திருமேனி**

அவைதாம் ஆம் ஆம் எம் ஏம் என்னும் கிளவியும் உம்மொடுவரு உங்கடதற என்னும் அந்நாற்கிளவியொடு ஆயெண் கிளவியும் பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே இந்த உரையாடலில் திருமேனியின் தமிழறிவு புலப்படுகிறது. அவையோர் அனைவரும் இவளல்லவோ “முதுக்குறைவி”[199] என வியந்தனர் என்று கூறப்படுகிறது. இந்த உரையாடல் திருமேனியின் தமிழறிவை விளக்குவதாக அமைந்துள்ளது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் புலிந்தகனின் தந்தையும் புலிந்தகனும் உரையாடுவதாக அமைந்தது. இளவரசன் சம்மந்தப்பட்ட வழக்கு என்பதால் நியாயம் கிடைக்காது என்ற உண்மையையும் பழிவாங்குதல் வேண்டாம் என்றும் ஒரு தந்தையின் அறிவுரையாக தன் கடமையைச் செய்கிறார் என்பதை இந்த உரையாடல் விளக்குகிறது.

புருஷோத்தமர்: “புலிந்தகா பழிக்குப் பழிவாங்குவதால் இறந்த சிரிமா உயிருடன் வந்து விடுவாளா?

புலிந்தகன் : அவள் ஆத்மாவாவது சாத்தியடையும் அல்லவா அப்பா?

புருஷோத்தமர் : பைத்தியக்காரா! இமயமலையில் உன் தலையை முட்டுகிறாய் சிறு பாறை கூட அசையாது.

புலிந்தகன் : புலிந்தகன் தலை எஃகு கோடாலி

புருஷோத்தமர் : வீணில் மழுங்கும்

புலிந்தகன் : போகட்டுமே யாருக்காக அது கூர்தீட்டி நிற்க வேண்டும்?

புருஷோத்தமர் : ஏன் இந்த உலகில் சிரிமாவைத் தவிர வேறு யாருமில்லையா?

புலிந்தகன் : இல்லை நிச்சயமாக இல்லை.

புருஷோத்தமர் : “பைத்தியக்காரா! காதல் ஒரு வாலிப வினை. இது உனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் ஓர் அப்பனிருக்கிறான் என்பதையும் மறந்து நிச்சயமாக இல்லை எனக் கூறுவாயா?”[200] என்ற உரையாடலில் காதலியை பறிகொடுத்த உள்ளமும் பெற்ற பாசமும் பிரதிபலிப்பதை காணலாம்.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில்,

கண்ட கோபாலன் : “குமாரக் கூத்தரே! இந்த நேரத்தில் என்னை காண வந்ததன் நோக்கம் மிகச் சிறியதுதான். ஆனால் அதுசாதிக்கவிருக்கும் காரியம் மிகப் பெரியது.

குமரக் கூத்தன் : மிகப் பெரியது

கண்ட கோபாலன் : ஆமாம் மிகப் பெரியது.

குமரக்கூத்தன் : அது என்ன அத்தனை பெரியது

கண்ட கோபாலன் : பாண்டியத் தானைத் தலைவனின் நெல்லூர் வெற்றி

குமரக் கூத்தன் : ஓகோ

கண்ட கோபாலன் : ஏன் இந்தச் சிரிப்பு

நெல்லூர் அரசன் விசயகாண்ட கோபாலன் கரங்களுக்கென்றே போர்க்கருவிகளை அக்காலத்தவர்கள் கண்டுபிடித்துவிட்டு போயிருக்கிறார்கள். ஆகவே அவனுடைய கரங்களில் வளையல்கள் இருப்பதாக பாண்டியத் தளபதி நினைத்தால் அந்த நினைவை மாற்றிக் கொள்ளுங்கள்.

குமரக் கூத்தன் : உண்மைதான் நண்பரே! நான் வந்த விஷயத்தைப் பற்றிக் கூறுமுன் ஒரு வேண்டுகோள்!

கண்ட கோபாலன் : அது என்ன?

கூத்தன் : நான் என்னுடைய துகின் மனைக்குச் செல்லும்வர என் உயிர்க்கு உத்தரவாதமளிப்பதாக வாக்குறுதி தேவை.

கண்ட கோபாலன் : உயிருக்கு வாக்குறுதி தருகிறேன். வெற்றிக்கு என்னால் முடியாது.

கூத்தன் : அதை உங்களிடம் நான் யாசிக்கவும் வரவில்லை யாசிப்பவனுமல்லன்

கண்ட கோபாலன் : அப்படியா"[201] என்ற உரையாடல் கதையின் திருப்பு முனைக்கு காரணமாக அமைகின்றது.

சேரசூரியன் என்ற புதினத்தில்,

நல்லினி : இமயவரம் முடித்து திரும்பிய சேரலாதன் தாயின் பாதம் பணிந்து வணங்குகிறான். "இமயவரம்பா! என்மகனே! பூரிக்கிறேன்! உன்னை பெற்ற வயிறு! மணிவயிறு எழுந்திருடா கண்ணே!

செங்குட்டுவன் : அப்படி என்றால் பாட்டி என்னைப் பெற்ற வயிறும் மணிவயிறு தானே!

நல்லினி : . . . . . . அது மணி வயிறல்லடா செங்குட்டுவா

செங்குட்டுவன் : . . . . . . . . . பின்பு

நல்லினி : . . . . . . . மாணிக்கவயிறு! நீ கருவில் திரு உடையான்

இளங்கோ : அவ்வாறெனில் நான்? (எனக் கேட்டான் தம்பி இளங்கோ)

நல்லினி : நீ கருவில் தமிழுடையான்"[202] என்று தன் இரு பேரப் பிள்ளைகளுடன் உரையாடும் நல்லினி தேவியின் பெருந்தன்மையான மனதும் பாசமும் வெளிப்படுகிறது.

ரூப்மதி என்ற புதினத்தில்,

பாஜ் பகதூர் : ரூப்! தில்லி பாதுஷா – ஷாகின் – ஷா வந்திருக்கிறார்.

ரூப்மதி : ஏன் வந்திருக்கிறார்?

அக்பர் : ரூப்மதி? நான் வந்திருப்பது எந்த உள்நோக்கமும் இல்லை. உனது பேரழகையும் உன் பேரிச்சம் பழத்திலும் இனிய சங்கீதத்தை பார்க்கவும் கேட்கவும் வந்திருக்கிறேன். தயவு செய்து கதவைத் திறந்து எனது கணிந்த விருப்பத்தினை பூர்த்தி செய்.

ரூப்மதி : எனது பேரழகு என்பது எனது கணவருக்கு மட்டுமே! இதை காண வேண்டும் என்பதன் அசவியம்? நாகரீகமா?

அக்பர் : நீ ஊர்வலம் செல்லுகிற போது மக்கள் பார்க்கிறார்கள்

ரூப்மதி : இது அரசியின் கடமை

அக்பர் : இது?

ரூப்மதி : அதர்மத்தின் ஆசை ஷா–இன்–ஷா நீங்கள் போகலாமே எனது அழகு எனது சங்கீதம் எனது கணவருக்கே உரியன"[203] என அக்பர் பாதுஷாவிடம் ரூப்மதி உரையாடும் உரையாடல் புதினத்தில் சுவைமிக்கதாயும் கதைக்கு விறுவிறுப்பை அளிப்பதாகவும் அமைந்துள்ளது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில்

நாராயணத் தேவன் : “கங்கை நாச்சி! எந்த தைரியத்தில் நீ இந்த ராத்திரியில் சிறைநாடி வந்தாய்?

கங்கை : எனது பெரியம்மாள் தைரியத்தில் பிரபோ!

நாராயணத்தேவன் : பெரியநாயக்கமாதேவியா?

கங்கை : ஆமாம்

நாராயணத் தேவன் : அப்படி என்றால் நம் காதல் நிச்சயம் ஈடேறும்.

கங்கை : சத்தியமாக ஈடேறும்! என் சின்னம்மாளே துணைக்கு என்னுடன் வந்திருக்கிறார்கள்.

நாராயணத் தேவன் : அப்படியா?

கங்கை : ம் ம்

நாராயணத் தேவன் : நான் கூட சந்தேகப்பட்டேன். இருட்டியதும் இங்கிருக்கிற கைதிகளையெல்லாம் அழைத்துச் சென்று வேறிடத்தில் அடைத்தார்கள் ஏன் இவ்வாறு இப்பகுதியை துப்புரவு செய்தார்கள் என்பது அப்போதைக்கு புரியவில்லை. இப்போது புரிகிறது . . . . அடுத்த திட்டம் என்ன?

கங்கை : நீங்கள்தான் சொல்லவேண்டும்.

நாராயணத் தேவன் : நீ என்ன நினைக்கிறாய்? அதைச் சொல் கங்கை நாச்சி.

கங்கை : நீங்கள் எப்படியும் தப்பிவிடவேண்டும். நானும் உங்களுடன் சேதுநாட்டுக்கு வந்துவிட வேண்டும்.

நாராயணத் தேவன் : நீயுமா?

கங்கை : ஆமாம் நீங்கள் சென்ற பிறகு இங்கு நான் ஒரு நாழிகையும் இருக்க முடியாது, இருக்கவும் கூடாது. நமது காதல் ஈடேற பல சோதனைகள் நிகழும். ஏன் உங்களுக்கு ஏதேனும் ஆட்சேபனையா?

நாராயணத் தேவன் : ஆட்சேபனையாவது? பின் விளைவு பற்றி யோசிக்கிறேன்.

கங்கை : எப்படியும் யுத்தம் நிச்சயம். அது எந்த ரூபத்தில் ஏற்பட்டால் என்ன"[204] என்ற உரையாடல் கதையின் திருப்பத்திற்கு காரணமாக அமைகிறது.

கானல்கானம் என்ற புதினத்தில்,

செங்கமலம் : "ஏன்? என்ன விசேஷமா இங்கு வந்தீர்கள்? அதுவும் தேவையில்லாத இந்த நேரத்தில்? இங்குவர உங்களுக்கு முகம் இருக்கிறதா?

சொக்கநாதர் : முகம் இல்லை. ஆனால் மனம் இருக்கிறது.

செங்கமலம் : அதுவும் இருக்கிறதா? சரி அந்த மனதை திறந்து காட்டலாம்.

சொக்கநாதர் : உனக்கு உடல் நலமில்லை என்று கேள்விப்பட்டேன்.

செங்கமலம் : இப்போது மட்டும் உடல் நலமாக இருக்கிறது என்று உங்களுக்கு யார் சொன்னது?

சொக்கநாதர் : அதனால்தான் நிற்கவைத்தே பேசுகிறாயோ?

செங்கமலம் : எனக்கு அதிகாரமிருந்தால் உங்களைத் தூக்கில் தொங்க வைத்து பேசியிருப்பேன்"[205] என்ற உரையாடல் படிப்பவரின் கவனத்தை ஈர்ப்பதாக அமைந்துள்ளது.

குற்றாலக்குறிஞ்சி என்ற புதினத்தில்,

அபிராமிபட்டர்: “குறிஞ்சி நான் உன்னிடம் ஒன்றைத் தெரிந்துகொள்ளலாமா?

குறிஞ்சி : சுவாமி இது என்ன வார்த்தை? தங்களுக்கு தெரியாதா? இந்த உலகில் எல்லாம் தெரிந்தவறுமில்லை, ஒன்றுமே தெரியாதவருமில்லை

அபிராமிபட்டர்: குறிஞ்சி! இரவு மழைக்காகப் பாடிய ராகம் வருணப்பிரியாதானே

குறிஞ்சி : இல்லை சுவாமி!

அபிராமிபட்டர்: மேகராகக் குறிஞ்சியா? இப்போது தேவாரப் பாசுரங்களை மேகராகக் குறிஞ்சி என்கிற பெயரால் நீலாம்பரியில் அல்லவா பாடுகிறார்கள்?

குறிஞ்சி : இது தவறு சுவாமி. வழக்கில் மேகராகக் குறிஞ்சியை நீலாம்பரியாக பாடி வருகிறார்கள். தாலாட்டுக்கும் மேகங்களுக்கும் என்ன தாத்பரியம்? மேகங்கள தூங்கி விட்டால் மழை பொழிவதாவது? இன்றைய வருணப் பிரியாவே அன்றைய மேகராகக் குறிஞ்சி!

அபிராமிபட்டர்: கொஞ்சம் மாறுபட்ட வித்தியாசம் தெரிந்ததே

குறிஞ்சி : ஷட் சுருதியைச் சொல்லுகிறீர்களா?

அபிராமிபட்டர்: அதில்லை சப்த சுருதியைக் கூட அக்காலத்தில் யாழ் முறையில் கண்டுவிட்டார்கள். வர்ஜ வக்கிர மாதிரி பாடியது.

குறிஞ்சி : . . . . . சம்பூர்ண மேளகர்த்தாவைப் பாடுகிறபோது வர்ஜமான நல்ல குழந்தைகளையும் வக்கிரமான போக்கிரி குழந்தைகளையும் ஞாபகப்படுத்துவது போலப் பாடுவது எங்களுக்குத் தவறாகப்படவில்லை. அவசாரியான பாஷாங்கக் குழந்தையைத்தான் விலக்கிட வேண்டும்! வாஜவக்கிரப்

பிரயோகங்கள் ஆலாபனைக்கு மட்டும்தான்”[206] என்ற உரையாடல் இசையைப் பற்றியதாக அமைந்துள்ளது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில் இந்த உரையாடல் மாவீரன் திப்பு சுல்தான் தனது காதலி ரங்கநாயகியை போர்க்களத்துக்கு அழைத்து வந்து விடுகிறான். பசவராஜையும் ரங்க நாயகியையும் பிடிக்காத ஹைதர் அவர்களிருவரையும் அழைத்து வரச்செய்து உரையாடுகிறார்.

ஹைதர் : “உனக்கு ஏன் திப்புவை காதலிக்க வேண்டுமேன்ற ஆசை பிறந்தது ரங்கநாயகி?

ரங்கநாயகி : கேள்வி சரியில்லை மகாராஜா! குமாரசுல்தான் அவர்களுக்கு என்மீது காதல் கொள்ள வேண்டிய நிலைமை அல்லது நிர்பந்தம் ஏன் ஏற்பட்டது என்பதுதான் இதுகாறும் எனக்கு புரியாத புதிராக இருக்கிறது.

ஹைதர் : ஓகோ! இப்போது நீயாக அவனை விரும்பவில்லை என்கிறாயா?

ரங்கநாயகி : மகாராஜா! தெய்வமாகப் பார்த்து ஒரு பக்தையை ஆட்கொள்ளுகிற போது அந்த பக்தை தெய்வத்திடம் சரணாகதி அடைந்து விடுவதை விட மிகப் பெரிய பாக்கியம் வேறு என்ன இருக்க முடியும். குமார சுல்தான் என்னை விரும்பியது ஒரு பிரசன்னம். நான் அவரை விரும்பி ஏற்றது ஒரு தவம்! எங்கள் காதல் சென்ற பிறவியின் ஒரு மகாயக்ஞம்!

ஹைதர் : புரியவில்லை.

ரங்கநாயகி : புரியாமல் இருப்பதும் புரிந்து கொள்ள முடியாததுமாக இருப்பது தெய்வம். எங்கள் காதல் அதுபோன்றது உங்களுக்கு மட்டுமல்ல மகராஜா! யாருக்குமே புரியாது.

ஹைதர் : நான் ரொம்பவும் கவலைப்படுகிறேன் ரங்கநாயகி

ரங்கநாயகி : அவசியமில்லை மகாராஜா! கவலை என்பது கண்ணீரின் பரிபாஷை நாங்கள் பன்னீர் மலர்கள் எங்களுக்கு வாசணையின் ப ரி ப ா ை ஷ ே ய புரியம் என்னுள் சர்வ வல்லமை பொருந்திய மகா சுல்தான் ஹைதர் அலிகான் நவாப் பகதூர் பெற்றெடுத்த வீரதீரகர்ஜனைக்குரிய இஸ்லாமிய சிங்கம் திப்பு சுல்தான் இருக்கிறார்பேசுவது நானல்ல, அவர் ஜஹாம்பனா"[207] என்ற உரையாடலில்ரங்க நாயகியின் உண்மை காதலும் அவரின் களங்கமற்ற பண்பும் ஹைதரின் மனக்கவலையையும் புரிந்து கொள்ளும்விதத்தில் அமைந்துள்ளது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில்,

பரிமளா : "எதற்காக இந்த அழுகை?

பிண்டன் : என் மனைவி மக்கள் . . . . .

பரிமளா : நன்னன் நாகரிகம் அறியாதவன். காமம் கண்களை மறைத்து விட்டது. ஆயினும் இது ஊழ். நீ புயலை விதைத்தாய்! தென்றலையா அறுவடை செய்யமுடியும்? நாம் பிறன்மனை நோக்கினால் நம் மனையை பிறன் நோக்குவான்.

பிண்டன் : ராமன் மண்டோதரியையா நோக்கினான்?

பரிமளா : ராமனா நன்னன்? சே இவ்வளவுதானா உன் அறிவு. கல் நெஞ்சம் சிந்திக்க மறுக்கிறது.

பிண்டன் : இது கல்மனம்தான் மகளே! ஆனால் ஈரமுண்டு.

பரிமளா : இதையறிந்துதான் நெல்லாயிருந்த உன்னை உமி நீக்கி அரிசியாக்கி விடுதலை செய்தேன். பொறுமை அவசியம்"[208] என்ற உரையாடல் மூலம் பிண்டனது துன்பம் புலப்படுகிறது. பிண்டனின் மனமாற்றத்துக்கு இந்த உரையாடல் காரணமாக அமைகிறது.

பூங்குழலி என்ற புதினத்தில்,

பூங்குழலி : “யார்? யசோதையா? வாடி! ஏது இந்த நேரத்தில் என்னடி முகமத்தில் நெய்யொழுகுகிறது?

யசோதை : நான் ஆயர்குலத்தவளாயிற்றே. ஆனால் நிச்சயமாய் பொய்யொழுகாது.

பூங்குழலி : நல்லவேளை! என்னைப்போல நந்திவர்ம பல்லவரை எண்ணி மெய்யொழுகாது என்று சொல்லாமல் விட்டாயே

யசோதை : ஓலையில் என்ன? வழக்கம் போல நந்தி கீதமா?

பூங்குழலி : வேறு கீதம் எனக்குத் தெரியாதேடீ! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா! நான் அவைப்புலவர் பதவியைத் தூக்கி எறிந்து விட்டேன்.

யசோதை : எத்தனை நாட்களாக?

பூங்குழலி : இருதினங்களாயிற்று

யசோதை : எதனை நம்பி, நந்தியை நம்பி செய்துவிட்டாய் பூங்குழலி என்ன காரியம். நீ கனிக்கனவு கணடுவிட்டாய்!

பூங்குழலி : என் கனவு பலிக்கும்! கதவும் திறக்கும்”[209] என்ற உரையாடல் இடம் பெறுகிறது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில்,

மதுராந்தகி தேவியார் : “கருணாகரா நீ கலிங்கம் செல்லும் முன் நான் ஏதேனும் கேட்கலாமா?

கருணாகரன் : மகனிடம் தாய் கேட்கும் முறை இப்படியில்லையே தாயே!

மதுராந்தகி : அறிவேன் கருணாகரா கலிங்கம் சென்றால் உன்னுடைய கவனம் எதில் இருக்க வேண்டும் தெரியுமா?

கருணாகரன் : செயலில் சோழநாட்டைக் காக்கும் தன்மையில்.

மதுராந்தகி : ஆம் சோழநாட்டைக் காக்கும் தன்மையில் அதன் காரணமாக எனக்கு இரு பெரும் பொருள் பற்றியதில் உன்னால் ஆணையிட்டுத் தரமுடியுமா?

கருணாகரன் : தாயே!

மதுராந்தகி : ஆம் கருணாகரா! தருவாயா?

கருணாகரன் : இருபெரும் பொருளென்ன தாயே! எந்தப் பொருள் பற்றியதிலும் கருணாகரன் உங்கள் கட்டளையை மீற மாட்டான்.

மதுராந்தகி : மகிழ்கிறேன் மகனே! என்றாலும் என் மன அமைதிக்கு ஆணை தேவைப்படுகிறது. ஆனை ஒரு முறை மனிதனை பணிய வைத்துவிட்டால் தினம் தினம் அது நினைவு படுத்திக்கொண்டே இருக்கும். இது மனநிலைப் பொருள் பற்யது கருணாகரா! சக்ரவர்த்தி உன் பேரில் என்னென்ன எண்ணியிருக்கிறாரோ . . . அதே போல் நானும் ஒன்றை எண்ணியிருக்கிறேன். கலிங்கம் சென்றதும் தான் ஒரு சோழதளபதி என்பதை மறவாமல் நீ பணியாற்றிவிட்டு வரவேண்டும் அடுத்து எந்தப் பெண்ணையும் தீண்டாமல் திரும்பவேண்டும். இவ்வாறு கடைப்பிடிப்பேன் என்று உறுதி தருவாயா?

கருணாகரன் : நம் குல தெய்வம் திருச்சிற்றம்பலவர் மீது ஆணையாக வாக்குறுதி தருகிறேன் தாயே! இரண்டும் என்னால் கடைப் பிடிக்கப்படும்.

மதுராந்தகி : பெற்றவயிற்றினும் பெரிதும் மகிழ்கிறேன் கருணாகரா! வெற்றியுடன் திரும்ப திருச்சிற்றம்பலவன் அருள் புரியட்டும்”[210]

என்ற உரையாடல் மூலம் மதுராந்தகி தேவியார் கருணாகரன் மீது வைத்திருந்த பாசமும் நம்பிக்கையும் தெரிய வருகிறது.

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில்,

பாண்டியன் நெடுஞ்செழியன் “திருமாறா இது என்ன திடீர் போர்ப்பயணம்?

திருமாறன் : மானத்தை அடிப்படையாகக் கொண்டு தொடங்கிய போர் பாண்டியர் பூபதி.

நெடுஞ்செழியன்: அறிவேன் திருமாறா நன்றாக அறிவேன். ஆனாலும் நன்கு சிந்தித்துதான் இப்போரைத் தொடங்கினாயா என்பதுதான் என் கேள்வி.

திருமாறன் : மன்னரே! ஒரே ஒரு காரணத்தை வைத்து மட்டும் இப்போரைத் தொடங்கவில்லை. பல நாள் பகையுணர்வும் ஒரு காரணமாகும்.

நெடுஞ்செழின்: ஓகோ அப்படியா? செங்குட்டுவருடைய அருமை நண்பர் அறுகை என்பது உனக்குத் தெரியும்தானே?

திருமாறன் : நன்றாகத் தெரியும்.

நெடுஞ்செழியன்: அதனால் ஏற்படப் போகும் பின்விளைவுகளைப் பற்றியும் . . .

திருமாறன் : எழும் என்று தாங்கள் கருதுகிறீர்களா?

நெடுஞ்செழியன்: எழாமலிருக்கும் என்று நீ எப்படி எண்ணுகிறாய்?

திருமாறன் : நான் சேரர் குல மருமகன் என்பதை சேரமன்னர் மறந்துவிட மாட்டாரல்லவா?

நெடுஞ்செழியன் : நீ நடந்து கொண்ட விதம் மறக்கச் செய்திருக்கலாம் அல்லவா? படையுடன் புறப்பட்டுவிட்டாய். ஆகவே வேறொன்றைச் சொல்வேன். இந்தப் போரின் மூலம் சேரர் செங்குட்டுவரின் மனம்

கொதிப்பு கொள்ளுமாயின் அவரை அமைதிப்படுத்துவது உன் பொறுப்பாகும்”[211] என்ற உரையாடல் மூலம் திருமாறன் அறுகையின் மீது போர் தொடுத்துச் செல்வது சரியானதல்ல என்பதை பாண்டியர் திருமாறனுக்கு உணர்த்துவதாக அமைந்துள்ளது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்,

வேதிசமாதேவி : “எத்தனை நாளைக்குத்தாண்டா, மகனே உன் வாழ்வு இப்படிச் செல்வது? நாட்டின் இளவரசன் என்பதை ஒரு நாளேனும் சிந்தித்ததுண்டா?

சந்திர மௌலி: இளவரசன்தான் யர் இல்லை என்று சொன்னது? எனக்கு வீரமில்லையா?

வேதிசமாதேவி : நிறைய இருக்கிறது! ஆனால் விவேகம்தான் இல்லை.

சந்திரமௌலி : அதை எப்படி நீங்கள் தீர்மானிக்கலாம்?

வேதிசமாதேவி : அப்படிக் கேள்! நீ செய்யும் எத்தனையோ பல அக்கிரமமான செயல்களை . . . . . நானும் தரும மகா மாத்திரரும் கலந்து மறைத்தவராவிட்டால்?

சந்திரமௌலி : என்ன நடந்துவிடும்?

வேதிசமாதேவி : உன் தலை உருண்டிருக்கும்! இப்போது உன் அப்பா தீவிரமாக நேர்முக வழக்குக்காக எதிர்பார்க்கிறார். அப்படி வருமானால் நரகச் சிறைக்கூடத்துக்கே உன்னை அனுப்பத் தயங்க மாட்டார்.

சந்திரமௌலி : உயிர்தானே அம்மா போகும்! உலகை அனுபவிக்கத் தெரியாத ஜடங்களைவிட நான் . . . . .

வேதிசமாதேவி : சொல்லேண்டா மகனே!

சந்திரமௌலி : அம்மா! யாரிடமோ பேசுவதாக நினைத்துக்கொண்டு எதையோ பேசிவிட்டேன். மன்னியுங்களம்மா!”[212] என அவன் கூறுவதிலிருந்து தாய்ப்பாசம் மகன் பாசமும் தெற்றென விளங்குகிறது இது புதினத்தில் உரையாடல் நடையாக இடம் பெற்றுள்ளது.

**வருணனை நடை**

நடை அமைப்பில் வருணனை நடை என்பது, “புலன் உண்வு ஏற்படு அனுபவங்களை வருணித்துக் காட்டும் உரை நடையை வருணனை நடை என்பர். மனிதர்களையும் பொருள்களையும் இவை வருணிக்கும் படிப்பவர்களின் உணர்வுகளைத் தட்டி எழுப்பும் ஆற்றல் இதற்கு உண்டு”[213] என மா.ராமலிங்கம் கூறியிருப்பது இங்குச் சுட்டத்தக்கது.

கற்பனை வருணனை மட்டுமல்ல ஆசிரியரின் நடையும் புதினத்துக்கு முக்கியமானதாக அமைகிறது. வரலாற்றுக் காலத்தில் பேச்சுவழக்கு, தமிழின் இனிமை சிறப்பு ஆகியவை ஆசிரியரின் கைவண்ணமாக அமைகிறது.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இந்த வருணனை நடை எவ்வாறு இடம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், “அழகிய வெண்சுதையால் சிற்பங்களை உருவாக்கி இருந்த அந்த அறை பார்க்க மிக்க கவர்ச்சியாக இருந்தது. சிற்சில சுவர்களில் வண்ண ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. மேலே வளைவுகளிலும் கனத்த தூண்களிலும் கதைச் சிற்பங்களும் பூ வேலைகளும் மௌரியருக்கான நாகரிகத்தைப் பறைசாற்றின என விருந்தினர் மாளிகையைப் பற்றிய வருணனை படிப்பவருக்கு அந்த இடத்தின் கண்முன் காட்டுவதாக அமைந்துள்ளது”[214].

இயற்கையை வருணிக்கும் முகமாக “நிலவும் நீலவானில் பவனி வந்து கொண்டிருந்தது. தாலாட்டும் நட்சித்திரங்கள் யின்னிசை பாடின”[215] என

கூறப்பட்டுள்ளது. பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் “உதய சூரியனின் அமுத கிரணங்கள் பலகனி வழிய நுழைந்து உறங்கிக் கொண்டிருந்த கோபாலனுடைய முகத்தில் சுரீர் என்று உறைத்தது. துயில் எழுந்த கோபாலன் முதல் செய்கையாக முற்றாத ஒளி வட்டத்தினை துதி செய்தான்”[216] இந்த வருணனை படிப்பவரின் மனதைக் கவருவதாக அமைந்துள்ளது.

“நல்லினத்து நங்கையர்தம் அதரம் போல குங்குமமாய்ச் சிவந்திருந்த குடதிசை வானம் கொள்ளினத்து கயவர்தம் குகை மனம் போல கரியாய் இருண்டு கருணையை இழந்து கொண்டிருந்தது. சற்றைக்கெல்லாம் ஒளிமுகம் காட்டி ஒய்யாரப் பவனிவர புறப்பட்டார் கோளினத்துக் கோதை பால் வண்ண சுந்தரி பருவநிலா”[217] என்ற இரவுப்பொழுது துவங்கும் காட்சியானது அழகாக வருணிக்கப்பட்டு படிப்பவர் மனதைக் கவர்வதாக அமைகிறது.

காஞ்சிக்கதிரவனில் இரவை வர்ணிக்கும்போது “மேகங்கள் நிலவைக் காதலிக்கத் தொடங்குகின்றன”[218] எனக் கூறுவது அழகும் கவர்ச்சியும் உடையதாக அமைந்துள்ளது. சங்கீராணியைப் பற்றி ஜெயதேவன் மனக்கணக்கிட்டு எண்ணுகிறான் என்பதை,

“குரல் குயிலாக ஒலித்தாலும் அழகு மயிலாகத் தோகை விரித்து மயக்குகிறது”[219] என்ற வருணனை நடை வாசகரை மகிழ்ச்சிப்படுத்துவதாகவும் கவரக்கூடிய வகையிலும் அமைந்துள்ளது. “கலா ஞானத்துப்பிரகாச ஜீவியான அஜந்தாவைக் கவனிக்கிறான்”[220] விசித்திரங்களுக்கெல்லாம் சித்திரமான மகேந்திரவர்மன் என இந்த புதினத்தில் பரவலாக வருணனை நடை பின்பற்றப்பட்டுள்ளது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில், “குன்று போல் நிமிர்ந்து கோபுரம் போல் உயர்ந்து கோலமுகத்தில் ஞானத்தையே விழுங்கும் கொக்கரிப்புடன் மன்றம் போல் சூழ்ந்த மக்களை நோக்குகிறாள் பரிமளாதேவி”[2201] எனவும்,

“அடலேறு அடி எடுத்து அழகுமயில் துடித்தொடுத்து ஒயிலான நடை நடந்து ஒசிந்து வந்த பேரழகை சிலம் போசை இசைச் சித்திரமாய் எடுத்துக்காட்டிய பாங்கை நோக்கி மனத்தளவில் கிடையாக விழுந்துபட்டவன் நெடுமிடல்”[212] எனவும், சேரசூரியனில், “வைகரையின் ஞானக்கண் பொன்னாய் மலர்ந்து கொண்டிருந்தது. மடல் விரித்த தாமரைகள் சூரியனுக்குக் காதல் வணக்கம் செலுத்தின. புள்ளினங்களின் புறநீர்மைப் பண், பூபாளமாய் ஒலித்தது”[223] எனவும், “ஓ இப்படி ஒரு சௌந்தர்ய தேவதையா? இளமை கூடுகட்டி எழில் விச்சுலி பாட்டமிடும் இந்தப் பொன் மேனியார் யார்? யவன தேசத்தவள் என்பது அவளுடைய விழிகளில் வாசலில் முகவரி இட்டுத் தெரிகிறது. ஆனால் தப்பி வந்த தேவதை போல் குகைபட்ட காரணம் புரியாது நிற்கும் இவள் யார்?”[224] எனவும்

குற்றாலக்குறிஞ்சியில், “இளவேனில் இன்பத்தை இந்த குயில் ஒரு கலா ரசனையுடன் அனுபவிக்கின்றன போலும். வானில் வட்டநிலா அவனைக் கண்டு சிரிக்கிறதோ அல்லது நிலாராகம் பாடுகிறதோ? அப்படி ஒரு ராகம் இல்லை”[225] எனவும், ராஜகர்ஜனையில் பசவராஜ் திப்பு இருவருக்கும் ஏற்பட்ட வாட்போர் போட்டியை வருணிக்கும்போது, “மலையும் மலையும் மோதியது போல, மத்தகமும் மத்தகமும் மோதி மதநீர் சுரந்து வெறி கொண்டன போல, கூரிய வாள்களில் வீரிய மின்னல்கள் பிறக்ன்றன. கணங் கணங் கண, கண, கண . . . .. வானம் கிழிபட பூமிபொடிபட அண்டம் பொடிபட”[226] என்றும், திப்புவின் மன உணர்வைக் காட்டும் விதமாக,

“உருதுக் கவிதைக்குள் ஓடிவந்த உயிரோவியம்
உணர்வு அழுகிறது
எனது காதல் வானின் ஜோதிக் கீற்று,
தேயாத தேனிலவு,
எனக்கென்றே ஆண்டவன் அனுப்பிவைத்த
பூங்காற்று . . .. . எனது இதய அரங்கில் பொன்மயிலாய் புதுமயிலாய் தோகை கண்ட மயிலாய் ஆடுகிறாள். உனது ஆட்டம் எங்கே? ஒளி எங்கே? உணர்வுகள

எங்கே? அதோ மைசூர் மலைச்சிகரங்களில் வண்ண வண்ண மேகங்கள் வருவனவும் போவனமாயுமிருக்கின்றன. . . . . . ஓ மேகங்களே? ரங்கநாயகி எங்கிருக்கிறாள்? உங்களுக்குத் தெரிந்தால் தூதுசென்று எனது நைந்த நிலையை கண்ணீர்க் கவிதையை அவளுக்கு அறிவித்து படித்துப்படித்து சொல்லுங்கள் . . . . . . அவளது பூ மழையில் நனைந்த பிறகு புதைகுழியில் இறங்குகிற நாள்களை எண்ணிக் கொண்டிருக்கின்றேன். எனது கனிந்த சொற்களை சாறு பிழிந்து அவளது மலர் விழிக் கவிதைகளை மரணத்தின் கதவுகளில் எழுதிக் கொண்டிருக்கிறன்"[227] என்றும்,

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில், "பூபாளப் புறநீர்மை புள்ளினங்கள் குரலில் பூபாளத்தை விழிக்கச் செய்து வருகை புரிந்த பூரண ஜோதியின் வாழ்த்தாய் ஒலிக்கிறது"[228] என்றும்,

வேங்கை வனம் என்ற புதினத்தில், "அந்தக் கருக்கல் விடியல் போதுக் கருப்பம் கட்டிக் கொண்டிருந்த வேளையில்"[229] எனவும், ரூப்மதியில், "ஓடிவந்த ரூப்மதி – அழகின் திருக்கொலு ஆனந்தத்தின் காதல் செய்யுள் இசையின் பொன்னகரம், இன்பத்தின் கடைசி காவியவரி ரூபகுண்டமாம் நருமதை நீரில் பாஜ் என்னரும் பாஜ் என்ற பெரும் கூச்சலுடன் குதித்தாள்"[230] என்றும்,

கானல் கானம் என்ற புதினத்தில், "கானலைக் கண்டு நாவை நீட்டித் துள்ளி துள்ளி ஓடும் பஞ்சு போன்ற மென்மையான இதயமுடைய கதிதான் அவனுடைய கதியும்"[231] எனவும்,

"பொன்னிறமான பூக்களை பிரசித்துப் புன்னகை புரிந்த வண்ணமிருக்கின்றன. உன்ன மரங்கள் கைமாறுகருதா இயற்கை அளித்த காணிக்கைகளாக விளங்கிய அவற்றின் இனிய தோற்றம் தான் மனதிற்கு எத்துணை சுகமாக இருக்கிறது"[232] என்றும் வருணனை நடை சிறப்பாகப் பயின்று வந்துள்ளது.

செம்பியன் செல்வியில், "வெண்ணிறக் கரைபோட்ட நீலநிறச் சேலையை என்றென்றும் ஆடையாக அணிந்து கொள்ளும் கடற்கன்னி கலிங்க நாட்டின் மணல்

வெளிப்பகுதியில் அமைதியைக் குலைத்துச் சோ ஆர்ப்பரித்தல் . . . . . ஆபரணங்களைப் பூட்டி வைத்து அழகு பார்க்கும் அணங்குகள் உலகில் உண்டா? என்று தினம் தினம் தன்னை நாடுபவர்களின் கால்களை இருகரம் நீட்டிக் கழுவிக் கேட்கும் அந்தக் கடற்கன்னி அலங்கார உருவத்தினளான அருண் மொழிக்கு என்ன கதையைச் சொல்லப் போகிறாள்”[233] என இயற்கையை வருணிப்பதும், அருண் மொழியின் நிலையை விளக்குவதாக அமைந்துள்ளது.

பூங்குழலியில், “மாலைப் போதே ஒரு கலம்பகம் தானாமே! அந்திப் போதுக்கு மாலைப்போது என்று பெயர் வந்ததே காலையாகிய சூரியோதயமும் மாலையாகிய சூரியன் தமனமும் ஒரே நிறம் கொண்டு ஒரே மாதிரியான தோற்றம் கண்டு கதம்ப மாலையின் இருமுனைகளிலும் ஒரே மாதிரியான மலர்களைக் கொண்டு முடிப்பது போல பொழுது முதலால் அதற்கும் மாலைப்போது என்று பெயர் வந்தது”[234] என்பதும்,

சேரன் குலக்கொடியில், “காலமாகிய பேரழகி ககனமாகிய மஞ்சத்தில் கரிய பெரிய திரைச்சீலையை விரித்து துயில் கொள்ளத் தொடங்கினாள். தாரகைத் தொழிகளெல்லாம் அவளுக்கு தாலோ பாடிக் கொண்டிருந்தனர். கொஞ்ச நேரம் வரை மேற்பார்வையிட்டுவிட்டு விடை பெற்றாள் நிலவுக் கன்னி. மண்ணும் விண்ணும் மௌனவிரதம் பூண்டன. அமைதியின் சுகானநதமான கானத்தில் காலப்பேரழகி நன்றாகவே கண்ணயர்ந்து போனாள். இரவின் இரண்டாம் யாமம் நடைபெற்றுக் கொண்டிருநத நேரம் அது. கருங்கும்மென்ற இருளான மருட்சூழலில் வஞ்சிமா நகரம் தவமியற்றிக் கொண்டிருநதது”[235] எனவும் படிப்பவரின் மனதைக் கவரும் வகையில் பாத்திரங்களின் பண்பு, உணர்வு ஆகியவற்றை வெளிப்படுத்தும் வகையிலும் வருணனை நடை இடம் பெற்றுள்ளது.

**கடிதம்**

கலை நுணுக்கத்திறனில் கடித உத்தியும் சிறப்பான இடத்தை வகிக்கிறது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம்பெறும் கடிதங்கள் கதையின்

திருப்பத்திற்கும் கதைக்கருவிற்கும் புதினம் சுவைபடவும் உரித்தாக அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், “இளவரசன் மகேந்திரன் என் கற்பை சூரையாடிவிட்டார்கள். நான் இனியும் வாழச் சம்மதியாமல் உயிரை மாய்த்துக் கொள்கிறேன் என் காதலராகிய நீங்கள் பழிக்குப்பழி வாங்க வேண்டும்”[236] – சிரிமா

இந்தக் கடிதமானது இளவரசன் மகேந்திரன் என சக்கரவர்த்தியின் தம்பியைக் குறிப்பிடுவதாகவும், இளவரசன், மகேந்திரன் என இருவரையும் சுட்டுவதாகவும் அமைந்துள்ளது. புஷ்பமாலிகா தன் அறிவுத்திறத்தால் சந்திரமௌலியை விடுவித்து மகேந்திரனை குற்றவாளியாக்க காரணமாக அமைந்தது. கதையின் போக்கில் இக்கடிதம் முக்கிய இடம் பெறுகிறது.

இதனைப் போலவே,

“புலிந்தகன் வந்தான். பழிக்குப்பழி தீர்த்துக் கொண்டான். ஆமாம், முதலில் கற்பைக் கொன்றான். பிறகு என்னைக் கொன்றுவிட்டான். தயவு செய்து அவனை மன்னித்து விடுங்கள், ஏனென்றால் அவன் அறிவிலி. மகுடத்தின்மீது ஆணை! நான் என்றும் உங்கள இதயத்துள் வாழ்வேன் – புஷ்பமாலிகை”[237].

இந்தக் கடிதம் சந்திரமௌலியின் மனமாற்றத்துக்கு காரணமாக அமைகிறது. திருந்திய சந்திரமௌலி மீண்டும் மிருகமாக மாறுவதற்கு இக்கடிதம் காரணமாகிறது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில்,

“விரைவில் காஞ்சியில் ஒரு புதிய கதிரவன் உதயமாகப் போகிறான்”[238]

கதையின் தொடக்கத்தில் சுவர்ணமுகி கொலையுண்டு கிடக்கிறாள். அவளது ஆடையில் இருந்த ஓலை நறுக்கில் இருந்த செய்தியே மேற்கண்டது. இந்த கடிதமானது கதைக்கு ஆதாரமாக விளங்குகிறது. மற்றொரு இடத்தில் காட்டப்படும் கடிதத்தில்,

"அந்த ஓலையில் காஞ்சிக் கோட்டை வழிமுறைகள் படைபலத்து ரகசியங்கள், சுரங்கப்பாதைகள், துணையரசர்கள் போன்ற செய்திகள் இருந்தன"[239]

ஆனால் அவை அனைத்தும் தவறாகக் கூறப்பட்டிருக்கின்றன என்பது நிரூபகேசரிக்கு மட்டுமே தெரியும். வாதாபி எல்லையில் விக்ரமன் நிரூபகேசரி இருவரும் சாளுக்கிய ஒற்றர்களிடமிருந்த ஓலையைக் கைப்பற்றுகின்றனர். பொய்யான மகேந்திரவர்மனிடம் அஜந்தா தவறான செய்திகளைக் கூற அது விஸ்வரூபன் மூலமாக புலிகேசிக்கு அனுப்பப்பட்டது. இந்தக் கடிதமும் ஒற்றர்களும் விஸ்வரூபனை அறிய ஆதாரமாக உள்ளது. கதையின் திருப்புமுனைக்கு காரணமாகவும், இனி என்ன நேரப்போகிறது என்ற எதிர்பார்ப்பையும் அளிக்கின்றது.

கங்கைநாச்சியார் என்ற புதினத்தில்,

"அப்பகாரு! வந்தனம்: நான் எந்த வடுகரத்தத்தில் சங்கமமாவேன். தேடிப்பார்த்தால் என் தந்தைக்கு நிகரான வடுக அரசு எனக்கிருப்பதாக தெரியவில்லை. எனவே, மறவர்குடி சம்பந்தம் நமக்கு மகிழ்ச்சிக்குரியது. நான் சேது இளவல் நாராயணத் தேவரைக் காதலிப்பது சத்தியமான உண்மை. என்னை ஓரளவு பாதுகாத்து, என்னைத் தீண்டாமல் பாதுகாத்து தங்களிடம் ஒப்படைத்த பெருந்தன்மையை முதலில் காதலித்தேன். பின்னர்தான் அவரை நீங்கள் சிறையில் அடைத்ததும் அந்த மாவீரர் பால் இரக்கம் கொண்டேன். அந்த இரக்கமே காதலாக மலர்ந்தது.

மறவர் நாட்டு தம்பித் தேவர் எப்போது அரண்மனையுள் நுழைந்தாரோ அப்போதே மதுரை ஆட்சியில் ஆமை புகுந்துவிட்டதாக எண்ணிவிட்டேன். வீணாக ஒரு தம்பித் தேவருக்காகப் போர் முழங்குவதை விட எனது காதலுக்காக அந்த வீரமுரசும் கொட்டட்டுமே என்ற சிறப்பான எண்ணத்துடன் நான் சேது இளவல் நாராயணத் தேவருடன் புறப்பட்டுவிட்டேன். சத்தியமாக அவர் என்னைக் கடத்திச் செல்லவில்லை. நானாக மனமுவந்து அவரைப் பின்பற்றிச் சென்று விட்டேன். எங்கள் காதலை நீங்கள் பிரிக்க முயன்றீர்களேயானால் எனது உயிரை உடலிருந்து பிரிப்பதாகும் – கங்கைநாச்சி"[240].

இந்தக் கடிதம் கதையின் திருப்பு முனைக்குக் காரணமாக அமைந்துள்ளது.

சேர சூரியனில், “சேரநாட்டு மாமன்னர் பெருமானார்க்கு அத்தீனா வணங்கி எழுதும் நற்செய்தியாவது எனது அன்பிற்கினிய காதலர் ஹெல்லன் என்னை அழைத்துச் செல்ல வந்தார். அவசரமும் இருந்தது. எனவே, என்மீது பேரன்பு கொண்ட தாங்கள் இதனை வாழ்த்தி வரவேற்பீர்கள் என்கிற பெரிதான நம்பிக்கையுடன் இவ்வோலையை எழுதி வைத்துவிட்டு தங்களை பிரார்த்தித்துப் புறப்படுகிறேன். நிச்சயமாக தாங்கள் இமய வெற்றி கண்டு திரும்புகிறபோது கங்கைக் கரையில் எனது காதலருடன் வந்து நின்று தங்கள் ஆசீர்வாதத்தைப் பெற்று மகிழ்வேன்.

இங்கனம்

அத்தீனா”[240]

என்ற இக்கடிதமானது நன்னன் போலியாக அத்தீனா எழுதியது போல் எழுதிய கடிதம் அவளைப் பாதாளச் சிறையில் வைத்துவிட்டு நெடுஞ்சேரலாதனிடம் பொய்யுரைக்கிறான். இமய வரம்பிற்குப் பின் திரும்பி வரும் சேரலாதன் ஹெல்லன் மூலமாக உண்மையறிந்து நன்னனை பழிவாங்கி அத்தீனாவை மீட்கிறான். இக்கடிதம் புதினத்தின் போக்கில் வாசகர் மனதில் எதிர்பார்ப்பையும் அத்தீனாவின் நிலையையும் விளக்குவதாக அமைந்துள்ளது.

வேங்கைவனம் என்ற புதினத்தில்,

ஓலையில் உள்ள சூதகமான வாசகம் உ, ங, ரு, எ, அ இரண்டு, மூன்று, ஐந்து, ஏழு, எட்டு கடைசியில் குறிப்பிடுகிற எண் பகுத்தல் என்பது தமிழ் எழுத்துக்கள் தாறுமாறாக எழுதப்பட்டிருந்தது. அந்த கடிதத்தில் உள்ள செய்தியானது,

“இளவரசியை உடனே கடத்திடல் வேண்டும்”[242] என்பதாகும். இக்கடிதம் வாசகருக்கு ஆர்வமூட்டுவதாகவும், விடுகதை போன்றும் அமைவதால் புதினத்துக்கு சுவையூட்டுகிறது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில்,

கடிதம் எனக் குறிப்பிட்டுள்ளதே தவிர கடிதத்தின் வடிவில் அதன் செய்திகளை அடக்கியவாறு அமையவில்லை.

"ரகசிய கடிதங்களை கொண்டுவந்த அந்தச்சிப்பாய் ஒரு மரத்தடியின் கீழ் அகோரமாய் கொலையுண்டு கிடந்தான்"[243] என்று மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில்,

அருமைத்தளபதி கூத்தர் அவர்கட்கு

அடியாளின் வணக்கம். இதற்கு முன் எழுதியனுப்பிய மூன்று ஓலைகளும் கிடைக்கப் பெற்றிருப்பீர்கள் என்று பெரிதும் நம்புகிறேன். இந்த ஓலை எல்லாவற்றிலும் முக்யத்துவம் வாய்ந்ததாகும். ஏனென்றால் இதற்கப்புறம் தாங்கள் சோழியத் தலைநகரை அடைந்துவிடுவீர்கள். பிறகு ஓலையை கிழித்துவிட வேண்டியதுதானே? அதாவது அடியாளின் வாழ்வாகிய ஓலையும்தான் சேர்த்து இவ்வாறு கூறுகிறேன் . . . . . கண்ட கோபாலன் எந்தவிதமான இடர்பாடின்றியும் இங்கு வந்து சேர்ந்துவிட்டான் . . . . கோப்பெருஞ்சிங்கரைவிட்டுத் தங்களை எதிர்க்கத் தூண்டிருக்கிறான் கண்டகோபாலன் . . . . . . தங்கள் அருமைக் காதலி பத்மினி எல்லாவித நலன்களைப் பெற்று இனிதாக இங்கு தங்கியிருக்கிறாள். . . . பத்மினி உண்மையில் என்னைவிட மகா பேரழகிதான். ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என்னைவிட ஏனைய விஷயத்தில் அவள் மிக மிகத் தாழ்ந்தவன்தான். குறிப்பாகத் தங்கள்மீது கொண்ட காதல் விஷயத்தில் அவள் கொஞ்சமும் தகுதியற்றவள். இப்போதாவது என்னை நம்புங்கள்

தங்கள் அடியாள்

நாகினி"[244]

இக்கடிதம் நாகினியாரென்பதை வாசகருக்கு உணர்த்துகிறது.

குற்றாக் குறிஞ்சி என்ற புதினத்தில்,

“நான் வணங்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் மேல் சத்தியம் வைத்து ஸ்ரீ சிவகங்கை இளைய ஜமீன்தார் இளைய வல்லபத் தேவ உடையாருக்கு குறிஞ்சியாகிய புகழ் பெற்ற பாடகி எழுதித்தரும் உறுதி மிக்க அடகு சாசனமாவது. நானும் கொலைக்குற்றத்திலிருந்து விடுதலையாகப்போகிற என் காதலன் ஞான சுந்தரமும் நாங்கள் கண்டுபிடித்த எங்களுக்கே சொந்தமான அபூர்வராகமான குற்றாலக் குறிஞ்சியை இவர்முன் பாடுகிறோம். பாடத்தவறினால் இந்த ராகம் மேற்சொன்ன ஜமீனுக்கு அடிமையாகிவிடுகிறது. இந்த ராகத்தை மீட்காமல் நான் வேறு எங்கும் அதை பாடமாட்டேன் என்று சத்தியம் செய்து அடகு வைக்கிறேன் நாங்கள் இருவரும் எப்போது வந்து பாடுகிறோமோ அப்போது வந்து மீட்டுக் கொள்கிறோம்

இப்படிக்கு

குறிஞ்சி”[245]

இக்கடிதமானது கதைக்கருக்கே சொந்தமான அந்த ராகத்தை அடகு வைப்பதால் திருப்பம் ஏற்பட காரணமாகிறது.

“என் அருமைக் குறிஞ்சி! எப்போது பழி சுமத்தப்பட்டுச் சிறையில் அடைபட்டேனோ அப்போதே மானம் மரியாதை அனைத்துமே மாண்டு போயின! இனி நான் உயிருடன் இருப்பதா? என்னை மீட்க நீ வந்திருக்கிறாய் என கேள்விப்பட்டேன். உன்னை இளைய ஜமீன்தார் இந்நேரம் கற்பழித்து இருப்பான். எனவே நான் என் உயிரை மாய்த்துக்கொண்டேன்.

இப்படிக்கு

ஞான சுந்தரம்”[246]

ஞானசுந்தரத்தை மீட்க வந்த குறிஞ்சிக்கு தெரியாமலே ஞானசுந்தரம் கொல்லப்படுகிறான். இதுவும் கதை நிகழ்ச்சியை ஆர்வமுடன் எடுத்துச் செல்வதாக அமைந்துள்ளது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில்,

“கவிச்சக்கரவர்த்தி காலதேவர் அறிவது. . . . கலிங்க வேந்தர் தங்களுடைய பிரிவிற்குப் பிறகு பெரிதும் கலங்கினார். அந்தக் கலக்கம் ஒரு குழந்தையின் கலக்கமாக இருந்தது. தாங்கள் பெரியவர். தந்தைக்குச் சமமானவர். பொறுத்தருளும் பெருந்தன்மை தங்களைப் போன்ற புனித உருவங்களிடமிருந்துதான் பிறக்கிறது. கலிங்க வேந்தரும் உங்களுக்கு முன் ஒரு குழந்தைதான். அந்த குழந்தையைப் பொறுத்தருள வேண்டும்

எங்கராயர்”[247]

இந்த கடிதமானது பரணிபாடிய (ஜயங்கொண்டார்) காலதேவரை கலிங்க மன்னன் அவமானப்படுத்தியதற்கு பொறுத்ருளுமாறு அமைச்சர் எழுதிய கடிதம்.

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில்,

“திரு மோகூர் பழையர்க்கு பாண்டியர் விடுக்கும் திருமுக ஓலை இதைக் கொண்டு வருபவர் என் நம்பிக்கைக்கும் மதிப்புக்கும் உரியவர். நீங்கள் அங்குள்ள நிலைமையை ஓரளவு அறிந்ததன் காரணமாக வலிமை வாய்ந்த ஒரு துணைவரை ஏற்பாடு செய்து அனுப்பிருக்கிறேன். உங்களுக்கு பலவிதங்களில் இவர் உறுதுணையாயிருப்பார்”[248] என மறைமுக திருமாறனைப் பற்றி குறிப்பிடுவதாக அமைந்துள்ளது.

ஆய்வு மேற்கொண்டுள்ளவற்றுள் எஞ்சியுள்ள புதினங்களில் இந்த உத்தி இடம் பெறவில்லை.

**பழமொழி**

பாத்திரங்களின் உரையாடல்களில் பழமொழியைப் பயன்படுத்துவது பாத்திர எதார்த்தத்தை தோற்றுவிக்கும். பழமொழியைப் பயன்படுத்துவது அறிவுத்திறனை விளக்கவும் அனுபவத்தை வரைமுறைப்படுத்துவதற்காகவும் பயன்படுவதாக அமைகிறது.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம் பெறும் பழமொழிகளை ஆராய்வது குறிக்கத்தக்கதாக அமைகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்

சந்திரமௌலிக்கு புஷ்பமாலிகை என்ற உபகுப்தரின் மகளை ஆசிரியையாக அமர்த்தப் போவதாக சாக்கியகுமாரி வேதிசமாதேவி கூற பெண்லோலன், கொலைகாரன், கொடுமைக்காரனான சந்திர மௌலிக்கு தெரிந்தே அந்த அழகிய பெண்ணை ஆசிரியையாக அமர்த்த வேண்டும் என்று கூறும்போது, “வினையை விலைகொடுத்து வாங்குகிறாய்”[249] சாக்கியகுமாரி என அசோகச் சக்ரவர்த்தி கூறுகிறார்.

அசோக சக்கரவர்த்திகளின் மனைவிகளில் ஒருத்தியான திருஷ்யாவின் மாளிகையில் நுழைந்த வெள்ளை நாகத்தைக் கண்டு அனைவரும் அச்சத்துடன் கூக்குரலிட்டு ஓடுகின்றனர். புதினத்தில் இந்த இடத்தில் “பாம்பென்றால் படையும் நடுங்கும்”[250] என்ற பழமொழியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மகேந்திரன் இளவரசன் புலிந்தகனின் காதலியான சிரிமாவை அனுபவித்து அவளது தற்கொலைக்கு காரணமாகின்றனர். இந்த வழக்கில் புலிந்தகனது வாதம் எடுபடாமல் போகிறது. இருப்பினும் அவர்கள் இருவரையும் போன்ற குணமுடைய புலிநதகன் அவர்கள்தான் குற்றவாளி என்பதை தெளிவாக உணர்ந்து செயல்படத் தொடங்குகிறான். அந்த இடத்தில் “பாம்பின் கால் பாம்பறியும்”[251] என்ற பழமொழி இடம் பெறுகிறது.

அசோகனின் தம்பி மகேந்திரனை சிரிமா கொலை வழக்கிலிருந்து தப்பிக்க அவனை நாட்டைவிட்டுப் போகும்படி திரிஷ்யா அனுப்பி வைக்கிறாள். அதுவிஷயம் அசோகருக்கும் ஒரு வேளை தோழி சாலாவதியின் மூலம் உண்மை தெரிந்திருக்குமோ? அவள் “பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழி”[252] என நடந்து கொண்டிருப்பாளோ என்று சந்தேகப்படும் இடத்தில் இந்த பழமொழி இடம் பெற்றுள்ளது.

தன்னுடைய மகன் மகேந்திரனுடன் சேர்ந்து சிரிமாவை அனுபவித்து கொலை செய்தது இளவரசன் செய்த தவறை எல்லோருக்கும் காட்டுகிறது. என்னதான் புஷ்பமாலிகை அவனுக்காக வாதாடினாலும் உண்மையானது எல்லோருக்கும் தெரிந்ததே இந்த இடத்தில் "கைபுண்ணுக்கு கண்ணாடி தேவையா"[253] என்ற பழமொழி இடம் பெற்றுள்ளது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் "கரணம் தப்பினால் மரணம்"[254], "பகலில் உறங்குகிறவன் வாழ்நாளை சாகடித்துக் கொள்கிறான்"[255], "ஓணான் வேலி தாண்டுகிறதோ"[256] என்பதையும், பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், "குருவிப்பால் தேடிவந்த கதை"[257], "காவலற்ற மரமானால் பறவைகள் கூடுகட்டத் தாமே வரும்"[258], "பாம்புக்கும் தேளுக்கும் பட்சதாபம் பார்க்க முடியுமா"[259], "முள்ளைக் கொண்டதான் முள்ளை எடுக்க வேண்டும்"[260], "அறத்திற்கும் அளவுண்டு"[261] என்பவையும், கானல் கானம் என்ற புதினத்தில் "வண்ணம் நிறைந்தது எல்லாம் வானவில்லாக முடியாது"[262], "சிவந்தது எல்லாம் புஷ்பம்"[263], "கலைக்கு குலமில்லை"[264], "தினை விதைத்தவன் தினையை அறுவடை செய்வான், வினை விதைத்தவன் வினையை அறுவடை செய்வான்"[265] என்பவையும், கங்கை நாச்சியார் என்ற புதினத்தில், "கூண்டோடு கைலாசம்"[266] என்பதுவும், பூங்குழலி என்ற புதினத்தில் "பானைச்சோற்றுக்கு ஒரு சோறு பதம்"[267] என்பதுவும், செம்பியன் செல்வி என்ற புதினத்தில் "கருவம் பிறரை அழிக்காது தன்னைத்தானே அழித்துக் கொள்ளும்"[268] "ஆழம் தெரிந்து காலைவிடு"[269], "மதில் மேல் பூனை"[270] ஆகியவையும், சேரசூரியன் என்ற புதினத்தில் "உண்மை எப்போதும் நிதரிச்சனமானது"[271], "மீன்குட்டியின் சுமை மீனுக்குத்தான் தெரியும்"[272] ஆகிய பழமொழிகளும் புதினத்தின் சுவைக்கும், இடத்திற் கேற்பவும் அமைந்துள்ளன. எஞ்சிய புதினங்களில் இந்த உத்தி இடம் பெறவில்லை.

**இசை**

இனிமையைத் தருகின்ற ஒலியே நாதம் அல்லது இசையாகும். இசை என்ற சொல்லுக்கு இசைய வைப்பது என்பது பொருள். மனிதன் மற்ற உயிரினங்கள் அதற்கும்

மேலாக நம்மைப் படைத்த இறைவன் அனைவரையும் இணங்கச் செய்கின்ற இசைய வைக்கின்ற ஒன்றே இசையாகும்.

இசை என்பது கட்டுப்பாடுள்ள இனிமையான ஒலியாகும். "இறைவன் இசைவடிவாய் இருக்கிறார் என்பது ஒரு முதுமொழியாகும். ஏழிசையாய் இசைப்பயனாய் என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே என்று அப்பர் பெருமானும், பண்ணமர் வீணையினான் என ஞானசம்பந்தரும் இறைவனைப் பாடிப்பரவுகின்றனர்"[273].

மனித வாழ்வில் இசை என்பது பிறந்த பொழுதிலிருந்து இறக்கும் வரையிலும் தொடர்ந்து வந்து வாழ்க்கையின் ஒரு அங்கமாகவே விளங்குகிறது.

அத்தகைய இசையானது வடமொழியில் நாதம் என்றும் ஆங்கிலத்தில் Music என்றும் அழைக்கப்பட்டு வருகிறது. இன்றைய உலகில் உள்ள இசைக்கு ஆதரமே ஏழு சுரங்கள் ஆகும். எந்த மொழி இசையாய் இருப்பினும் இதுவே அடிப்படையாகும்.

"நாதம் என்ற இசை ஒலியை ஒரு கடலுக்கு ஒப்பிட்டால் சுரங்களை கடலில் உள்ள முத்துக்களுக்கு ஒப்பிடலாம்"[274].

தமிழிசையில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனச் சொல்லப்படும் ஏழு சுவரங்களும் முறையே கர்நாடக இசையில் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என அழைக்கப்படுகின்றன.

"ச ரி க ம ப த நி"

| | | | | |
|---|---|---|---|---|
| ச | – | ஷட்ஜம் | – | குரல் |
| ரி | – | ரிஷபம் | – | துத்தம் |
| க | – | காந்தாரம் | – | கைக்கிளை |
| ம | – | மத்தியமம் | – | உழை |
| ப | – | பஞ்சமம் | – | இளி |
| த | – | தைவதம் | – | விளரி |

நி – நிஷாதம் – தாரம்

என்பன ஆகும்.

"சுரங்களின் எண்ணிக்கை அமையும் விதம், ஒலிக்கும் நீட்சி இவைகளைக் கொண்டு ராகங்கள் பிறந்துள்ளன. இந்த ராகங்கள் தாய் ராகம் (ஜனகராகம்) சேய்ராகம் (ஜன்யராகம்) வர்ஜராகம், உக்ரராகம், உபாங்கம், பாஷாங்கம் என வகைப்படுத்தப்படுகின்றன"[275]. ஒரு ஜன்யராகத்தில் ஆரோகண அவரோகணத்தில் ஏதாவது சுரங்கள் "ஏழு சுரங்களும் ஏறு வரிசையில் ஒலிக்கும் போது அது ஆரோகணம் (ஸரிகமபதநி) என்றும் இறங்குவரிசையில் ஒலிக்கும்போது அது அவரோகணம் ஸநிதபமகரி"[276] என்றும் கூறப்படுகின்றன.

ஜனகராகம் எனப்படும் தாய் ராகங்கள் எழுபத்திரெண்டு. அதிலிருந்து அநேக ராகங்கள் பிறக்கின்றன. தாய் ராகங்கள் மேளகர்த்தா எனச் சொல்லப்படுகின்றன.

"ஜன்யராகம் என்பது ஆரோகணமும் அவரோகணமும் சம்பூர்ணமாக இருப்பது பைரவி ராகத்திற்கு ஸரிகமபதநிச என்ற ஆரோகணமும், ஸநிதபமகரிச என்ற அவரோகணமும் சம்பூர்ணமாக அமைந்துள்ளதால் இது ஜன்யராகம் எனப்படும்"[277]. இது இருபதாவது மேளகர்த்தாவாகிய நடபைரவியின் ஜன்யராகம். இங்கு நடபைரவி என்பது தாய் ராகம். பைரவி என்பது சேய்ராகமாகும்.

"சில சமயங்களில் ஜன்யராகங்களில் ஆரோகணத்திலோ, அவரோகணத்திலோ சில சுரங்கள் விலக்கப்பட்டிருக்கும். அத்தகைய ராகங்கள் வர்ஜராகங்கள்"[278] எனப்படும்.

மோகணம் வர்ஜராகம் ஆ ஸ ரி க ப த ஸ அவ ச த ப க ரி ச தாய் ராகத்தின் சுரங்கள் விடுபட்டிருப்பின் அது வர்ஜராகம் எனப்படும்.

"ஒரு ஜன்ய ராகத்தில் ஆரோகணத்தில் அல்லது அவரோகணத்தில் அல்லது இரண்டிலுமே ஸ்வரங்கள் ஒழுங்கான வரிசையில் இல்லாமல் முன்னும் பின்னுமாகச் செல்லுமேயானால் அது வக்ரராகம் எனப்படும்"[279]. ஆனந்த பைரவி என்பது

நடனபைரவியின் ஜன்யராகம். இதில் சகரிகமபதபச என்ற ஆரோகணமும் சநிதபமகரிச என்ற அவரோகணமும் அமைந்துள்ளபடியால் இது வக்ரராகம் எனப்படும்.

மேலும் “தாய் ராகத்தின் சுரங்களை மட்டும் எடுத்துக்கொள்ளும் ஜன்யராகம் உபாங்கம்”[280] என்றும், “தாய் ராகத்தின் சுரங்களைத்தவிர ஒன்றிரண்டு அந்நிய சுரங்களையும் எடுத்துக் கொள்ளும் ஜன்யராகம் பாஷாங்கம் ராகம்”[281] எனப்படும்.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் பெரும்பான்மையானவற்றில் இசையைப் பற்றிய கருத்துக்கள் பரவலாகக் காணப்படுகின்றன. இதன் மூலம் படைப்பாசிரியரின் இசைப்புலமை தெற்றெனப் பளிச்சிடுகிறது. (பார்க்க பி.இ.1)

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்,

“பூரண சுரங்களைக் கோவையாக்கி கமகங்களைத் தேக்கி நிறைவு செய்தாள். அவற்றை சமயங்களில் வர்ஜமாகவும், வக்கிரமாகவும் மாற்றிப் புதிய சாயல்களைக் கொண்டுவந்து காட்டினாள். இன்னும் ஓரிரு சமயங்களில் பாஷாங்கமாக்கி உயிரைக் கவ்வும் உணர்ச்சியான ஒலிரேகையைப் படரவிட்டாள். முடிவில் தான மிசைத்துக் காட்டினாள்”[282] என புஷ்பமாலிகை யாழ் வாசிப்பதை ஆசிரியர் இசை நுணுக்கத்துடன் காட்டுகிறார்.

காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில், “சுருதி சேர்க்கப்படுகிறது. குரலும் இனியும் புருஷன் மனைவிபோலப் புதினமாக இழைகின்றன. இன்றைக்கும் சுருதி சேர்க்கும்போது ச.. ப... ச... என்றே சட்ஜமும், பஞ்சமமும் அதாவது குரலும் இளியுமே சேர்க்கப்படுகின்றன. எல்லா இசைக்கும் ஆதாரம் இதுவே ஆகும். மகேந்திரவர்மன் பரிவாதினி யாழை எடுத்து மடியில் வைத்து தெய்வங்களை வணங்குகிறான். தென்புலத்து இசைஞானி நாரதப் பெருமானையும், வடபுலத்து இசைஞானி அனுமந்தப் பெருமானையும், வணங்குகிறேன். இவர்களுடன் இன்றைக்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்த இசைப் பேரறிஞர் இளங்கோவடிகளாரையும் சிரம்தாழ்த்தி வணங்குகிறேன். எனது கண்கண்ட ஆசான் ருத்ராச்சாரியப் பெருமானை கரம் கூப்பி வணங்குகிறேன்.

இந்த யாழ் எட்டுக்கும் ஏழுக்கும் உரியது. ஏழு பாலைகளுடன் இது எட்டையும் இணைக்கிறது. ஒரே யாழில் ஏழு பண்கள் வாசிக்க முடியும். அதுவும் சுருதி பேதமுறையில் இந்தப் பரிவாதினியில் எட்டாவது முறை உடன்பாடுவது. நான்கு யாழ்முறை என்பது வேறானது. இது நாரதர் வீணையின் ஓர் அம்சம்"[283] என்று கூறி யாழை மீட்டுகிறான்.

சரிகபதச – சதபகரிச என்ற ஆரோகண அவரோகணம் கொண்ட மோகன ராகம் அந்தக் காலத்தில் முல்லைப்பண் எனப்பட்டது. "இந்த மோகன ராகமானது ஒடைவ வர்ஜராகம் ஆகும். ஒடைவம் என்பது ஆறு சுரங்களை உடையது"[284]. " யாழ், பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டு யாழ் என நான்கு வகைப்படும். பேரியாழ் 21 நரம்புகளையும், மகர யாழ் 17 நரம்புகளையும், சகோடயாழ் 14 நரம்புகளையும், செங்கோட்டுயாழ் 7 நரம்புகளையும் உடையவையாகும்"[285].

மேலும் யாழைச் சுத்தமேளமாகிய செம்பாலை என்ற ஹரிகாம்போஜியில் சுருதி கூட்டிக் கொண்டனர். பின்பு வேறு ராகங்களை கிரகபேதம் செய்து வாசித்தனர். "மகேந்திரன் வாசிக்கும் முல்லையப்பன் செம்பாலையாகிய ஹரிகாம் போஜியின் ஜன்யராகம் ஆகும்"[286].

குறிப்பாக பாலை என்பது மேளகர்த்தா எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேளகர்த்தா என்பது ராகம் ஆகும்.

ஏழு ராகங்களுக்குரிய யாழானது "செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற் செம்பாலை"[287] ஆகிய ஏழும் தனித்தனி யாழ்; கொண்டு வாசிக்கப்பட்டன.

பரிவாதினியில் ஏழு பாலைகளுடன் எட்டாவதையும் வாசிக்கக் கூடியதாக அமைக்கப்பட்டிருந்தது. பரிவாதிநியைப்பற்றிய கல்வெட்டும் இதையே உணர்த்துகிறது.

"தமிழ் இலக்கியமான சிலப்பதிகாரத்தில் செம்பகை, ஆர்ப்பு, அதிர்வு, கூடம் என்று வேனிற்காதையில் கூறப்பட்டுள்ள நான்கு குற்றங்களையும் நீக்கி வாசிப்பவனே யாழ்வல்லோன் என இளங்கோவடிகள குறிப்பிடுகிறார்"[288].

இப்புதினத்தில் வரும் மகேந்திர பல்லவன் இசைமேதைமட்டுமல்ல யாழ்வல்லோன் எனவும் காட்டப்படுகிறான்.

“மகேந்திரவர்மன் அஜந்தா மாளிகைக்குச் சென்று வந்து உறங்குவதைக் கணட சங்கீரணி ஒரு புதிய பாஷாங்கராகம் கேட்பது போன்ற பிரமையை உணருகிறாள்”[289] என்ற வரிகளில் பாஷாங்கம் என்பதன் உள் அர்த்தத்தை ஆசிரியர் குறிப்பாக உணர்த்துகிறார்.

புலர்ந்த காலையின் பூபாளப் பிரகாசம் அரண்மனையைத் துயில் எழுப்புகிறது என்ற வரிகளில் பூபாளம் என்பது காலையில் பாடும் ராகம் என்பது குறிப்பாக உணர்த்தப்படுகிறது. மகேந்திரபல்லவன் சங்கீரண ஜாதி என்ற புதிய தாளவகையை கண்டுபிடித்தவன் என்பதும் வரலாறு கூறும் உண்மை.

“தென்றல்வடிவும் சிவனார் திருவடிவும்
மன்றல் வடிவும் மதன் வடிவும் – குன்றாத
வேயினிசை வடிவும், தேவவடிவுகானிஸ்
ஆய தாளம் காணலாம்”[290]

என்ற பழந்தமிழ்ப் பாடலின்படி தாளத்தின் முழுவடிவை காண்பது கடினம்.

நம் இசையில் உள்ள முக்கிய தாளங்கள் ஏழு. இவற்றை சப்ததாளங்கள் என்று கூறுவதுண்டு. அவையாவன “துருவம், மட்டியம், ரூபகம், ஜம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம்”[291] என்பன.

இவை ஒவ்வொன்றும் 5 ஜாதி பேதங்களை உடையவை. “திச்ரம், சதுச்ரம், கண்டம், மிச்ரம், சங்கீர்ணம்”[292] என்பவை. இதில் இறுதியில் கூறப்பட்ட சங்கீரண ஜாதியை மகேந்திரவர்மன் கண்டுபிடித்தான் என்பது வரலாறு. அதன் காரணமாகவே தன்னுடைய மனைவி. புவன முழுதுடையாளுக்கு சங்கீரணி என்ற பெயர் வைத்ததாகக் கூறப்படுகிறது.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினமானது, இசைப்புதினம் ஆகும். ஒவ்வொரு இயலும் இராகங்களின் பெயர்களைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டுள்ளன. குற்றாலக் குறிஞ்சி என்பதே இராகத்தின் பெயராகும். இப்புதினத்தில் இடம் பெற்ற இராகங்களாவன, பூபாளம், சுத்த தன்யாசி, ராஜகாந்தி, சந்திரசேகரப்பிரியா, பைரவி, குறிஞ்சி, கோகிலானந்தி, தன்யாசி, முக்தாம்பரி, சூத்திரதாரி, ராஜாளி, போகலீலா, நாட்டைக்குறிஞ்சி, தபஸ்வின, நீலி, மேக ராகக் குறிஞ்சி (அமிர்தவர்ஷினி) மலையமாருதம், ஆரபி, ஆபோகி, நந்தினி, பாரதி, தர்பார், சல்லாபம், போகவதி, தாண்டவம், அக்கினிக்கோபம், முகாரி, கமலம், மாஞ்சி, தோடி, விலாசினி, குற்றாலக் குறிஞ்சி ஆகியனவாகும்.

புதினத்தின் இயலின் தலைப்பில் குறிப்பிட்டுள்ள ராகங்கள தவிர ராஜகாந்தி, குறிஞ்சி, ராஜாளி, பாரதி, போகவதி, கமலம் போன்றவை பாத்திரங்ளின் பெயர்களாக சுட்டப்பட்டு இருக்கின்றன.

"குறிஞ்சி! பிறட்பால நீ தயங்குவதானால் ஒன்றைச் சொல்வேன். நீ பாடிய சுத்ததன்யாசி ராகம் எதில் பிறந்தது. கரகரப்பிரியாவில் பிறந்ததாக அடம்பிடிப்பதில் அர்த்தமிருப்பதாகத் தெரியவில்லை. தன்யாசி போல சுத்ததன்யாசியும் தோடியில் பிறந்தது என்றால் ஒதுக்கமுடியுமா?"[293] உனது பிறப்பும் அப்படியே! என ஞானசுந்தரம் குறிஞ்சியிடம் கூறும்போது அவளது பிறப்பிற்கு ராகங்களின் பிறப்பைக் கூறி சமாதானப்படுத்துகிறான்.

மேலும் குறிஞ்சியின் தந்தையான மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் இறப்பிற்கு வருந்தியவர் விருபாட்ச கவிராயர். உறங்குவது போலும் சாக்காடு என்று தமிழில் மட்டும்தோன்றவில்லை. புனரபி ஜனனம் புரைபி மரணம் என்று சமஸ்கிருதத்திலும் தேற்றுகிறார். "புனரபி ஜனனம் என்பது பூபாள ராகமானதால் மரணம் என்பது முகாரி ராகம் என்று இசையிலும் தேற்றுகிறார்"[294] பூபாளம் என்பது காலையில் பாடும் ராகம். முகாரி என்பது சோகரசம் ததும்பும் ராகம் என்பதை ஆசிரியர் இடத்திற்கேற்ப குறித்துள்ளார்.

மீனாட்சி சுந்தரம் பிள்ளைக்கும், புலைச்சிக்கும் பிந்த பெண்தான் குறிஞ்சி. "தந்தையின் மிருதங்கத்தை குறிஞ்சி வாசிக்கிறாள். தாளத்தில் கலிங்கமான (கலப்பு) சங்கீரண ஜாதியில் வாசிக்கிறாள்.. கண்களில் துன்பியல், குற்றால நீர்வீழ்ச்சி"[295] என்பதில் சங்கீரண ஜாதியைப்பற்றிக் கூறப்படுகிறது.

"இசகுபிசகான ராகம் குறிஞ்சி என்பதால் இவ்வாறு சூட்டினாரோ? சங்கராபரணம் என்கிற சக்கரவர்த்தி ராகத்தில் பிறந்தாலும் குறிஞ்சி இசகுபிசகான ராகம் தானே?"[296] என்ற வரிகள் குறிஞ்சியின் தாய் ராகம் சங்கராபரணம் என்பதைக் காட்டுகிறது.

இருப்பினும் "இந்த ராகத்தை நிஷாதாந்தி என்றும் சொல்லமுடியாது. தைவதாந்தி என்றும் வாதிக்கமுடியாது. வர்ஜவக்ரமென்றும் சோதிக்கமுடியாது. இது ஒரு சொப்பனராகம் எனக் குறிப்பிடுவது ராகத்தை மட்டுமல்ல குறிஞ்சியையும் பெருமைப்படுத்துவதாக அமைகிறது"[297] அவளை முத்துச்சாமி தீட்சதர் வீட்டிற்கு மாணவி ஆக்குவதற்கு அழைத்து வருகிறார்.

"இந்த பாஷாங்க சுரத்தை ஒரு ராகாங்கத்துடன் சேர்ப்பதாவது, சங்கீதம் பாஷாங்கமாகலாம். ஜனங்கள் பாஷாங்கமாகலாம். ஏன் . . . . . சாஸ்திரம் பாஷாங்கமாகலாமா என குறிஞ்சியாகிய புலைச்சிப் பெண்ணை தீட்சதர் வீட்டில் விடுவதற்கு தயங்குகிறார்"[298]. இங்கு பாஷாங்கம் என்பது கலப்பினத்தின் பிறப்பான குறிஞ்சியை சுட்டுவதாக அமைகிறது.

"அழுகை ராகமான முகாரியில் சங்கீத சாஸ்திர ஞானமு என்று ஐயர்வாள் பாடவில்லையா? சங்கீதம் தோஷமற்றது. அதற்குப் பாவம் பைரவியாகவும், புண்ணியம் நட பைரவியாகவும் இல்லை?"[299] என்ற வரிகள் ஜன்யராகமான பைரவி தாய் ராம் என நடபைரவியின் புண்ணியத்தால் புகழப்படுவது என்ற கருத்தை குறிஞ்சியின் பிறப்பை மையமாக வைத்து காட்டுகிறார்.

இதுபோன்ற பல இசைப்பற்றிய குறிப்புகள் புதினம் முழுவதும் பரவலாக பயன்படுத்தப்பட்டுள்ளன. வர்ணம், ஜாவளி, தில்லானா போன்றவை யாவும் பயிற்சி

இலக்கணங்கள். கச்சேரியைக் கவரக்கூடியவையல்ல. ஆனால் நாட்டியக் கலையின் நயங்கள் எனக் குறிஞ்சி கூறுவதாக கூறப்பட்டுள்ள வரிகளில் நாட்டியக்கலையையும் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

இந்த புதினத்தில் இடம்பெறும் இசைக்கலைஞர்கள் முத்துசாமி தீட்சதர், சியாமா சாஸ்திரிகள், தியாகபிரும்மம், சுவாதித்திருநாள், ஆனைய்யா, பல்லவி கோபாலய்யா, கோபாலகிருஷ்ண பாரதி, சின்னச்சாமி தீட்சதர், பாலசாமி தீட்சதர், திருக்கடையூர் பாரதி, வள்ளலார் கோயில் அம்மணி, திருவாரூர் கமலம், வீணை வெங்கடராமய்யர், தேவூர் சுப்பிரமணிய யைர், கூரைநாடு ராமசாமி, திருவழுந்தூர் பில்வவனம், திருவாரூர் நட்டுவனார் ஐயாசாமி முதலானோர். ஒவ்வொருவரும் தனித்திறமை உடையவர்கள் என்பது புதினத்தின் போக்கில் காட்டப்பெறுகின்றது.

ரூப்மதி என்ற புதினத்தின் கருவும் இசையை அடிப்படையாகக் கொண்டது. கதைத்தலைவி ரூப்மதியும் கதைத்தலைவன் பாஜ்பகதூரும் இசை மேதைகள். “அக்பர் அவையின் அரசவை இசைக்கலைஞர் தானசேனுக்கு ஒப்பானவள் ரூப்மதி”[300]. இப்புதினத்தில் போக்கில் இடம்பெற்ற ராகங்கள் அக்கினிக் கோபம், தர்பார், ரூப் கல்யாண் முதலியன.

“அந்த மண்டபத்தில் அமர்ந்து பாஜ் எழுதும் கவிதைகளுக்கு ரூப்மதி இசையமைத்துப் பாடுவாள். ரூப்மதி இயற்றும் கவிதைகளுக்கு பாஜ் மெட்டமைத்துப் பாடுவான். இருவர் மீட்டும் தம்பூர் ஒலி மலையடிவாரத்தில் வாழ்மக்கள் செவிகளை நிரப்புகிறபோது அவர்கள் மகிழ்ந்த மகிழ்ச்சிக்கு எல்லையேது?”[301] என இசையைப் பற்றிய வரிகள் இடம் பெற்றுள்ளன.

கானல் கானம் என்ற புதினத்தில், “மீட்டிக் கொண்டிருந்த வீணையின் காரனைத் தந்தியில் அழுத்தமாக விரல்பட்டதால் சுருதிகலைந்து பேதலித்தது. மனத்தின் சுருதி கலந்து எத்தனையோ கணங்கள் உருண்டோடிவிட்டன. பிருடைகள் கார் ரென்று சுழன்று தளர்ந்தன. வாழ்வின் சுருதியின் அந்தர காந்தாரம் எங்கோ அந்தரத்தில் ஒலித்தது”[302]

என வீணை செங்கமலத்தின் மன நிலை இசையின் அடிப்படையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. "சாரணித்தந்தி என்பது நான்கு வாசிப்புத் தந்திகளில் முதலாவது மற்றயது பஞ்சமம், மந்தரம், அனுமந்தரம் என்பவையாகும்"[303]. சுரமாலை அப்பர் பெருமானின் பாடலைப் பாடிக் கொண்டிருந்தாள். சுரங்களை மாலைமாலையாகக் கோத்து இசைத்து தெய்வத்துக்குச் சூட்டிக் கொண்டிருந்தாள்.

"சுரமாலை என்றழைத்த இளவெண்மதி சூடினான். குரல் அடிநாசியில் இருந்து வெளிப்பட்டது. மந்தரஸ்தாயியின் சட்சம ரிஷபத்தோடு நின்றது. . . . . . . . . . சுரமாலையின் முடிவு ஆதார சட்சமத்துக்கு அவனை அழைத்தது"[303]. மேற்கண்ட வரிகளில் மந்தரஸ்தாயி, சட்சமம், ரிஷபம், ஆதார சட்சமம் போன்ற இசை பற்றிய சொற்கள் இடத்திற்கேற்ப பயன்படுத்தப்பட்டுள்ளன.

"மந்திரஸ்தாயி என்பது மெலிவு மண்டிலம். ஸ்தாயி என்பது, ஷட்ஜம் முதல் நிஷாதம் வரையில் உள்ள சுரக்கோர்வையை அல்லது சுர எல்லையை ஒரு ஸ்தாயி என்கிறோம். இதனை பண்டைய காலத்தில் மண்டிலம் என்று கூறினார்"[304].

வட்டம் என்பது வகுக்கும் காலை ஓர் ஏழ் தொடுத்த மண்டிலம் ஆகும் என சிலப்பதிகாரத்தில் (ஆய்ச்சியர் குரவையில்) இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்"[305]. இங்கு மந்திரஸ்தாயி ஷட்ஜம் ரிஷபத்தோடு நின்றது என்ற வரிகள் இளவெண்மதி சூடினான் தயக்கத்துடன் மெல்லியதாக சுரமாலை என்றழைத்தது கப என்ற சுரங்கபோடு நின்றது எனக்கூறுகையில் அவனது உள்மனத்தில் மகிழ்ச்சியுடன் கூடிய தயக்கமான சொல் வெளிப்பட்டதற்கு இசையை அடிப்படையாக வைத்து கூறப்பட்டுள்ளது.

"தார ஷட்ஜமம் என்பது வலிவுமண்டிலம் எனப்படுகிறது"[306]. அவளது மனம் அவனை ஆழமாக விரும்புவதைக் காட்டுகிறது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில், "குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழு சுரங்களில் அதாவது சரிகமபதநி என்னும் சுரங்களில் முதல் கைக்கிளையை காந்தாரத்தை அழுத்தமாகத் தொட்டு அசைத்தாள். அதில் செம்பாலை சீர்தூக்கி நின்றது"[307].

பாலை என்றால் மேளகர்த்தாவாகும். அதன்படி "அருள் மொழி நங்கை செம்பாலை என்ற அரிகாம் போதி ராகத்தை இசைத்தாள். காந்தாரம் அந்தரத்தில் சுந்தரம் பேசியது. அடுத்து வந்த மத்திமத்தின் சுத்தமோ, ரிஷபத்தின் சதுசுரமோ மூர்ச்சனைக்கு முத்தாய்ப்பு கொடுத்தது. ஆம் அவளுடைய விரல் கீழ் நிலையிலுள்ள கைசிக நிஷாதத்தை காட்டி அரிகாம்போதி என்று நன்கு பறை சாற்றியது"[308] என்ற வரிகள் இசையைப் பற்றியே பேசுகின்றன.

செங்கோட்டியாழில் இத்தகைய வினோதங்களை காண்பித்த அருண்மொழி நங்கையின் இசையில் குலோத்துங்கரும் காலதேவரும் மட்டுமல்ல அனைவருமே மயங்கினர்.

1229 ஆண்டுகளுக்கு முன்னர் மகேந்திர பல்லவர் சங்கீரண ஜாதியைக் கண்டுபிடித்தவர் என்பதையும் பரிவாதினியை யாழை கண்டுபிடித்து இசைமேதை என்பதை உலகுக்கு உணர்த்தியவர் என்பதையும் வரலாறு கூறுகிறது. "இருபத்தோரு நரம்புகளையுடைய பேரியாழ், பத்தொன்பது நரம்புகளையுடைய மகரயாழ், பதினான்கு நரம்புகளையுடைய சகோடயாழ் ஆகியவற்றையே பாணர்கள் வாசித்தனர். செங்கோட்டியாழ் என்பது இசைவாணர்களால் மட்டுமே வாசிக்கக்கூடியது"[308] என்பதை கதையின் போக்கில் கூறப்பட்டுள்ளது.

இதனை, "சோமசுந்தரக் கடவுள் விறகுவெட்டிக் கோலம் பூண்டு தன்னுடைய பக்தன் பாணபத்திரனுக்காக சதாரிப்பண் (பந்துவரானி) பாடி வடநாட்டு இசைஞன் ஏமநாதனை விரட்டியடித்தபோது உதவிய செங்கோடியாழல்லவா அருள்மொழி நங்கை பெற்றிருந்தது"[310] எனக்கூறுவது யாழ் வகைகளைப் பற்றியும், பண்களைப் பற்றியும் கூறுவது கதையின் போக்கில் அருள்மொழியின் திறமையைக் கூற பயன்படுத்தப்பட்டுள்ளது.

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில், கதைத் தலைவன் திருமாறன் நல்ல ரசிகன் மட்டுமல்ல இசைக்கலையில் ஓரளவு தேர்ச்சி பெற்றவன். எனவேதான் அந்தப்புரத்தை

அலங்கரிக்க சப்தகன்னிகளை தேர்ந்தெடுத்தான். "தனக்கு வரும் பட்டத்தரசி தவிர மற்ற அறுவருக்கு ஐவரை ஐநது தேசங்களிலிருந்து கண்டெடுத்து வந்து அவர்களுக்கு சப்தசுரங்களின் பெயர்களை இட்டு அழைத்து வந்தான். அவர்கள் துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம் ஆகியவர்கள். பட்டத்தரசியை ஆதார சட்சமமாக குரலாகப் பெயர் வைத்து அழைக்க விரும்பினான். இளியாகிய பஞ்சமத்திற்கு மலர்க்குழலியை தேர்ந்தெடுத்தான்"[311]. இசைக்கு ஷட்ஜமம், பஞ்சமும் ஆகிய இரண்டும்தான் ஆதாரம் என கூறுவது இசையைப் பற்றிய செய்தியாகும். இசையோடு ஒன்றிய நாட்டியம் பற்றியும் இப்புதினத்தில் கூறப்படுகிறது.

"இசை நூலும், கூத்து நூலும் இயம்பும் மாசற்ற இலக்கணங்கள் நன்கு பயின்றவளும் மாகலைவாணி திருமேனி தெய்வத்துதி பாடினாள். . . . . . . . . குரலும் இசையும் குழல்வழி நின்றன. உழையில் நின்று வர்த்தனமிட்டாள். யாழொழி தொடர்ந்து உழைக்கு உயிரூட்டியது. திருமேனி செம்பாலை பாடினாள். மலர்க்குழலி பொதுவியல் ஆடினாள். திருமேனியின் கட்டளை திருமகள் ஆடும் பாவைக்கூத்து . . . . . . . . ஆனால் மலர்க்குழலி ஆடுவது . . . . . . . . . ஊழிக்கூத்து"[312] என்ற வரிகள் இசையோடு ஒன்றிய நாட்டியத்தைப் பற்றியும் கூறுகிறது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில், "மாலைக்கதிரவன் மலயமாருதம் பாடிக் கொண்டிருக்கின்றான்"[312] என்ற வரிகள் மலய மாருதம் என்னும் ராகத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இந்த ராகம் 16-வது மேளமாகிய சக்ரவாகத்தின் ஜன்யராகம். இது விடியற்காலையில் பாடவேண்டிய ராகம்.

சேர சூரியன் என்ற புதினத்தில், "அந்த தீக்குண்டத்தைச் சுற்றிலும் நாகக் கன்னிப் பெண்கள் வண்ண வண்ணமான மாலைகளை அணிந்து கொண்டு கும்மியடித்துப் பாட்டப்பாடத் தொடங்கினர். . . . . . அவர்கள் பாடும் ராகத்திலும் கூட சில புதிய கமகங்கள்"[314] இருக்க முடிநாகனார் வியந்து கவனிக்கிறார். நற்சோனையோ இது யாழ் முறையில் எத்தனையாவது நரம்பு என யோசிக்கிறாள். அந்த நாளில் நரம்புகளைச் சுருதியாகக் கொண்டே பண்களை மீட்டுவர்.

அவர்களின் இசைக்கேற்ப நாகாபுதுவிதமான நடனமாடுவதை மக்கள் கவனிக்கின்றனர் என இசையோடு ஆடலையும் சேர்த்து குறிப்பிடுவது குறிப்பிடத்தக்கதாக அமைகிறது.

இவை தவிர கொல்லிப்பாவை, வேங்கைவனம், பொன் வேய்ந்த பெருமாள், ராஜகர்ஜனை ஆகிய புதினங்களில் இக் கலைநுணுக்கத்திறன் இடம் பெறவில்லை.

**நோக்குநிலை உத்தி**

இந்த உத்தியானது நான்கு வகைப்படும் என மா.ராமலிங்கம் கூறிச்செல்கிறார்.

1. “கதைத் தலைவன் அல்லது கதைத்தலைவி தங்கள் வாழ்க்கையைக் கூறுவதுபோல் அமைந்த புதினம்.
2. கதைத்தலைவனும் தலைவியும் மாறிமாறிக் கூறுவதுபோல் அமைந்த புதினம்.
3. கதை மாந்தர் பலரும் ஒருவர் மாற்றி ஒருவர் பேசுவது போல அமைந்த புதினம்.
4. ஆசிரியரே படர்க்கை இடத்தில் நின்று கதையை சொல்வது போல் அமைந்த புதினம்”[315].

இவை நான்கனுள் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்கள் அனைத்தும் ஆசிரியரே படர்க்கை இடத்தில் நின்று கதையைக் கூறுவது போல் அமைந்துள்ளன.

**முன்னோக்கு உத்திநிலை**

புதினத்தின் பிற்பகுதியில் நிகழவிருக்கும் ஒன்றைக் குறியீடாக உணர்த்துவதை முன்னோக்கு உத்தி என்பர். இது வாசகர்களிடையே தூண்டுதலை ஏற்படுத்துவதோடு புதினத்திற்கு வெற்றியையும் தேடித் தருகிறது.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இவ்வுத்தி இடம்பெறும் விதம் இங்குக் குறிக்கத்தக்கது.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில், கதைத்தலைவி குறிஞ்சி திருக்கடவூர் என்னும் ஊரில் பாடி முடித்துவிட்டு அபிராமி பட்டரிடம் ஆசி பெறுகிறாள். “புகழுடம்பைப்

பெறுவாய்"[316] என்று அவர் கூறுவதன்மூலம் குறிஞ்சிக்கு ஏதோ நடக்கப் போகிறது என்பதை முன்னால் உத்தியாகச் சுட்டிக் காட்டுகிறார் ஆசிரியர்.

காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில், "விரைவில் காஞ்சியில் ஒரு புதிய கதிரவன் உதயமாகப் போகிறான்"[317] என்ற செய்தியானது கொலையுண்டு கிடக்கும் சுவர்ணமுகியிடம் இருந்து எடுக்கப்பட்ட ஓலை நுணுக்கில் உள்ளது. இது பின்னர் நடக்கவிருக்கும் ஒரு நிகழ்வை நமக்கு முன்னதாக உணர்த்துவதாக இருக்கிறது. உண்மையான மகேந்திர பல்லவன் கடத்தப்பட்டு பொய்யன் ஜெயதேவன் போலி மகேந்திரனாக உலாவரும் நாட்களில் இச்செய்தியானது வாசகருக்கு திருப்பிப் பார்க்கும் (Recall) எண்ணத்தை உருவாக்குகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், புலிந்தகன் புஷ்பமாலிகாவை கொலை செய்துவிட்டான். பிணமாகக் கிடந்த இந்த அழகிய மலரைக் கண்ட சக்கரவர்த்திக்கு மனம் பேதலிக்க கண்கண பணிக்க மகா மாத்திரரைப் பார்த்தார்.

"மெல்ல மகுடத்தைக் கழற்றி மகா மாத்திரரிடம் கொடுத்தார். அப்போது மகாமாத்திரருடைய கவனக்குறைவால் மகுடம் தவறி தரையில் விழுந்துவிட்டது. புகழ் வாய்ந்த அந்த மகுடத்தின் கதையும் அத்துடன் முடிந்துவிட்டது. அதன்பின் அசோகர் அந்த மகுடத்தைச் சூட்டிக்கொள்ளவே இல்லை. புத்தமதத்தை தழுவிய அசோகர் அதனை சூட்டிக் கொள்ளவில்லை"[318]. எனவே பின்னால் நடக்கவிருக்கும் நிகழ்வை முன்னதாக உணர்த்த மகுடம் தவறிவிழுந்த செய்தி காட்டப்படுகிறது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில், அமைச்சர் நன்னனது தீய எண்ணம், பரிமளாவிடம் அவன் நடந்து கொள்ளும்விதம் தவறானது என்பதை உணர்த்த அவளது வீரத்தையும், பெண்மையையும் மதிக்க வேண்டும் என்று கூறுமிடத்து "அவள் ஒரு கொல்லிப்பாவை"[319] எனக் கூறுகிறார்.

கொல்லிப்பாவை என்பது கொல்லிமலையில் காணப்படும், சொல்லப்படும் ஒரு தெய்வ சக்தி. அழகிய பெண் உருக்கொண்ட அது தீயவர்களை அழைத்துச் சென்று

கொன்றுவிடும். அதனைப்போலவே பரிமளாவுக்கு தீங்கு செய்ய நினைத்து, அவளை அடையத் துடிக்கும் நன்னன் பழிவாங்கப்படுவான் என்ற கருத்தை உணர்த்த முன்னதாகவே பின்னால் நன்னன் அழியப்போகிறான் என்பதை உணர்த்த கொல்லிப்பாவையே அவள் எனக் குறிப்பிடப்படுவது முன்னோக்கு உத்தியாகும்.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில், பசவராஜ் ரங்கநாயகியை அரங்கன் கோயிலில் விட்டு தான் மட்டுமே வந்து அழைத்தாலே ஒழிய அவள் கோயிலைவிட்டு வரக்கூடாது என சத்தியம் பெற்றுச் செல்கிறான். சென்றவன் போரில் வெற்றிபெற்று கலகத்தை அடக்கி மாண்டு போனான். திப்பு வந்து அழைத்தும் அவன் வரமாட்டேன் என்கிறாள். "பசவராஜ் அண்ணன் வந்து அழைத்தால் மட்டுமே தான் வரமுடியும் என்கிறாள்"[320]. இறந்தவன் மீண்டும் வர இயலாது. ஆகவே அவனுக்கு செய்து கொடுத்த சத்தியத்தை மீறலாம் என தீப்பு கூற அவன் இறந்துபட்டாலும் கோயில் உள் அரங்கன் விழித்துக்கொண்டுதான் இருக்கிறான் என அவன் கூறி மறுக்கிறாள். திப்பும், ரங்கநாயகியும் சேரமுடியாது என்பதை விளக்க இந்த சத்தியம் பற்றிய நிகழ்வு முன்னோக்கு உத்தியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில்

மண்ணுமங்கல விழாவில் குலோத்துங்கன் திறைப்பொருளாக வந்த அருள்மொழியை தானே மணந்து கொள்வது ஒரு முன்னோக்கு உத்தியாக அமைந்துள்ளது.

மதுராந்திகியின் எண்ணம் ஈடேற வேண்டுமானால் கருணாகரன் அம்மங்கையை மணந்துகொள்ள வேண்டும். அருள்மொழியிடமிருந்து கருணாகரனைப் பிரிக்க வேண்டும். எதிரியின் ஆளான அருள்மொழியை ராஜதந்திரமாக மணந்து கொள்வதன் மூலம் அரசியல் சதுரங்கம் ஆடுகிறார் குலோத்துங்கன்.

பின்னால் நிகழவிருக்கும் தன் மகளின் திருமணத்திற்காக அருள்மொழியை குலோத்துங்கன் தானே மணந்து கொள்வது முன்னோக்கு உத்தியாகச் செயல்படுகிறது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், குமாரக் கூத்தன் பத்மினியை பார்ப்பதற்காக விஜயகண்ட கோபாலனைக் காண அவனது பாடிவீட்டிற்கு வருகிறான். நட்பின் மீது நம்பிக்கை கொண்டு, தான் தன்னுடைய இருப்பிடம் அடையும் வரை தனது உயிருக்கு பாதுகாப்பு வேண்டுமென்று கோபாலனிடம் சத்தியம் பெறுகிறான். இந்த சத்தியமே கதையின் திருப்பத்திற்கு பாண்டியரின் வெற்றிக்கு, தன் நாட்டைத் தானே தாரைவார்த்து தரும் நிலமையை கோபாலனுக்கு உண்டாக்கியது. அந்த சத்தியம் ஒரு முன்னோக்கு உத்தியாகச் செயல்படுகிறது.

வேங்கைவனம் என்ற புதினத்தில் பாண்டிய இளவரசி திருமேனியைக் காண வரும் திருமாறன் அவளை வைகைக் கரையில் முதலையிடமிருநது காப்பாற்றுகிறான். அவர்களிருவரும் தங்களை ஒருவருக்கொருவர் மறைத்து தன்னை மந்திரிகுமாரி என்றும், திருமாறன் தன்னை திருமாறனின் நண்பன் என்றும் கூறிக்கொள்வது விதிவசத்தால் ஆனது என்றாலும் அவர்கள் திருமணத்திற்கு ஏற்படப்போகும் தடங்கலுக்கு அதுவே காரணமாக அமைகிறது. இந்த நிகழ்வு முன்னோக்கு உத்தியாகச் செயல்பட்டுள்ளது.

சேரன்குலக்கொடி என்ற புதினத்தில், பொற்கொடி, திருமாறனின் முதலிரவை தள்ளிப்போடச்சொல்லி பரணர் கூறுகிறார்.

இந்த நிகழ்ச்சியை அவர்களுக்கே உரிமையாக்கிவிடு. ஏனென்றால் பொற்கொடி ஒரு சாதாரணப் மானிடப் பெண்ணல்ல? என்று கூறுவது அவளின் கற்பு பற்றிய கருத்தை உணர்த்துவதாக அமைகிறது. ஆண்களுக்கும் கற்பு உண்டு என்ற விளக்கத்தை அவள்மூலம் அறிந்த இளங்கோவடிகளும் பெண் போலனான திருமாறனை அறிந்து அவளாகவே அவனை ஏற்றுக் கொள்வதும், கொள்ளாததும் அமையட்டும் என்ற நிலையை உண்டாக்குவதற்கு இந்த செய்தி முன்னோக்கு உத்தியாக அமைந்துள்ளது. இறுதிவரை திருமாறனை தன் மனதளவிலேயே கணவனாக ஏற்ற அவள் அவனோடு இல்லற சுகத்தை அனுபவிக்க விரும்பாத தெய்வப் பெண் என்ற நிலையை உணர்த்துவதற்கு காரணமாக அமைகிறது.

ஏனைய புதினங்களான பூங்குழலி, கங்கை நாச்சி, சேரசூரியன், ரூப்மதி, கானல் கானம் ஆகியவற்றில் இந்த உத்தி இடம் பெறவில்லை.

**இலக்கியம்**

தமிழ்மொழிக்கு இலக்கியமும் இலக்கணமும் கண்களைப் போன்றவை. இவ் உத்தியானது ஆசிரியரின் படைப்புகளில் பெரும்பான்மையும் காணப்படுகின்றது.

இலக்கியம் ஆசிரியரின் அனைத்துப் புதினங்களிலும் கதையின் போக்கிலேயே எடுத்துக்காட்டாகவும், உவமையாகவும் கூறப்பட்டுள்ளது. இதிகாசங்கள், வேதங்கள் ஆகியவற்றில் உள்ள கருத்துக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. அபிமன்யு, இந்திரஜித் போன்ற இதிகாச வீரர்கள் புதினத்தில் வரும் பாத்திரங்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளனர். ஆய்வுக்குரிய புதினங்களில் காஞ்சிக் கதிரவன் என்னும் புதினத்தில், சிம்மவிஷ்ணுவின் அவையில் விஸ்வரூபன் கௌடில்யம் பற்றிக் கூறுகிறான். மகேந்திர வர்மனுக்கு கௌடில்யம் பற்றி அறிய அதிக ஆசை என்பதை அறிந்து அவனைக் கவர்ந்து அவனது மனத்தில் இடம்பிடிக்க இந்த உத்தியை கையாளுகிறான் புலிகேசியின் தம்பி விஸ்வரூபன்.

" கௌடில்யம் ஒரு தொகுப்பு நூல். அரசியல் மட்டுமல்லாது மருத்துவம், கணிதம், மது காய்ச்சுதல், பொன் தயாரித்தல் போன்ற சங்கதிகளும் இருக்கின்றன. பிருகஸ்பதி, விசாலாக்ஷன், சுக்கிராச்சாரியார், இந்திரன், பாரத்துவாஜன், கௌரசிரஸ், பிரசேதசமனு ஆகியோர் ராஜசாஸ்திரம் எழுதியவர்கள் ஆவார்கள்.

பிரமன் எழுதியது 1,00,000 அத்தியாயங்கள். சிவபெருமான் அதைச் சுருக்கி 10,000 அத்தியாயங்களாக ஆக்கினார். இந்திரன் அதை 5000 ஆக சுருக்க கடைசியாக சுக்கிரன் 1000-மாக ஆக்கினார். அதுவே சுக்ரநீதி. இவற்றின் பிரதிபலிப்பே கௌடில்யம் என்னும் அர்த்தசாஸ்திரம்"[321]. இக்கருத்துக்கள் பாத்திரத்தின் வாயிலாக சொல்லப்பட்டுள்ளன.

**வேதங்கள்**

இவைபற்றிய குறிப்புகள் புதினத்தில் கதையின் போக்கில் கூறப்பட்டுள்ள விதத்தினை காணலாம்.

"விடியல் ரேகைகள் ரிக் வேதத்தில் சொல்லப்பட்ட அக்கின மநதிரங்களை ஜபிக்கின்றன. யஜுர் வேதத்தில் சொல்லப்பட்ட வாயு மந்திரங்கள் . . . . பறகைளின் கீதமொழிகள் சாமவேதம் பாடுகின்றன"[322] என்று விடியற்காலைப் பொழுதை வர்ணிக்கும்போது வேதங்களை உவமையாகக் கூறுவது படிப்பவருக்கு பயனுள்ள கருத்தாகும்.

பேய்க் கணவாயின் தலைவன் பற்றிக்கூறும்போது துஷ்பிரயோகிகளால் ஞானதிருஷ்டி பெறமுடியாது. அதர்வம் அறியாமலேயே தன்னை அறிந்து கொண்ட ஜீவமுக்தர்களால் மட்டும்தான் முடியும் என்ற கருத்து கூறப்படுகிறது.

அதர்வண வேதம் பற்றிய குறிப்பு : "உருவங்களை அல்லது வரைந்த சித்திரங்களை எதுவேண்டுமானாலும் செய்யமுடியும். இவர்கள் அங்கிரஸர்கள். தீமை செய்யவே நான்காம் வேதத்தினை உணர்ந்தவர்கள். அதர்வத்தின் கறுப்பு நிற தெய்வங்களை வசியப்படுத்திக் கொண்டு சித்து செய்பவர்கள். நன்மையான தெய்வங்களை வசியம் செய்பவர்கள்தான் அசல் சித்தர்கள். உங்கள் விசித்திர சித்தன் பௌஷ்டிகாணி மந்திரத்திற்கு அப்பாற்பட்டவன் இவன் அபிசாரவாதி"[323]

என அதர்வம் பற்றிய கருத்துக்களை மகேந்திரவர்மன் கூறுவதாக புதினத்தில் கூறப்படுகிறது. இவ்வாறு நான்கு வேதங்களான ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள் பற்றிய குறிப்புகள் புதினத்தில் உள்ளன. மேலும் ராஜகர்மாணி என்றும் மந்திரங்கள் அரசகுலத்தை காக்கும் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. "சடோபநிஷத"[324] என்பது எமனிடமிருந்து மீளும் மந்திரம் என்பதும் குறிக்கப்பட்டுள்ளது.

அதர்வண வேதம் என்பது "அதர்வாங்கிரஸ், பிருகுவாங்கிரஸ் என்றும் பிரம்ம வேதம் என்றும் சொல்வர், பிரம்ம வேதம் என்பது பிற்கால வழக்கானாலும் மகேந்திரன் காலத்தில் வழக்கத்தில் இருந்தது"[325] என்ற ஆசிரியரின் குறிப்பு வாசகர்களுக்கு

வேதங்களைப் பற்றிய அறிவை போதிப்பதாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில்,

"பாரதப்போரில் அரவான் முதல் பலியானான். பாரதம் இனிதாக முடிந்ததாம். இதோ கோப்பெருஞ்சிங்கனுடைய வீரப்புகழ் முதல் பலியானது"[326] சுந்தர பாணடியனின் போர்ப் பயணத்தில் வெற்றியே வந்து குவிந்தது என்பதற்கு இந்த மகாபாரத கருத்து எடுத்தாளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

வெற்றிபெற்ற சுந்தரபாண்டியர் தில்லைக் கோயிலுக்கு பொன் வேய்ந்ததும், துலாபாரம் ஏறி தானம் கொடுத்ததும் வரலாற்றின் மூலம் அறியலாம். அப்போது அவர் பலருக்குத் தானமளிக்க ஒரு புலவன்,

"சினவரிக் கிம்புரி வெண்பிறைக் கோட்டி கல்வெங்கருங்கட்
சின்மத வெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லைமன்றில்
வனசத் திருவுடன் செஞ்சொல் திருவைமணந்த தொக்கும்
கனகத் துலையுடன் முத்துத் துலைவல் கலந்ததுவே"[327]

எனப் பாடிய பாடல் புதினத்துக்கு சுவையூட்டுவதோடு ஆசிரியரின் இலக்கியத் தாக்கத்தையும் புலப்படுத்துவது குறிப்பிடத்தக்கது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில்,

"ஆதியை, அமுதை, என்னையாளுடை அப்பனை
ஒப்புவர் இல்லார் . . . . . . . . "[328] என்ற ஆழ்வார்களின் வாக்கும்,

"வைகுண்டேதுபரேலோகே, ஸ்ரீஸஹாயோஜனார்த்தனர் என்ற வடமொழி ஸ்லோகமும்"[329] ரங்கனின் பெருமையைப் பறைசாற்றுவது போல அமைந்துள்ளதும்,

"வானங்கள் மீதும் பூமியின் மீதும் ஆட்சி
அல்லாவுக்கே உரியது"[330] என்ற திருக்குரானின் வாசகமும், இலக்கியத் தாக்கமுடையதாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில்,

திருக்குறளின் ஆட்சி பல இடங்களில் இடம் பெற்றிருப்பது சுட்டத்தக்கது.

"வன்கண குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினையோடு

ஐந்துடன் மாண்டது அமைச்சு"[331] என்ற குறல் அமைச்சர் நாராயணபட்டரின் திறமையை பண்பை வெளிப்படுத்தும் இடத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.

"கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம் அஃதின்றேல்

புண்ணென்று உரைக்கப்படும்"[332]

என்ற குறள் கலிங்க வேந்தன் அடிபட்டு விழுந்தவனை காலால் புரட்டிப் பார்த்தபோது எங்கராயர் அரசனுடைய உயரிய பண்பை மறந்து செயல்படும் அனந்தவர்மனை நினைத்து வேதனைப்படும்போது இக்குறள் கையாளப்பட்டுள்ளது.

இராசேந்திர சோழரின் மகள் வயிற்றுப் பெயரனான குலோத்துங்கள் ஆட்சியேற்ற பிறகு சோழநாட்டின் நிலையை,

"பரிசில் சுமந்தனர் கவிஞர்!

பகடு சுமந்தன திறைகள்!

அரசு சுமந்தன இறைகள்!

அவனி சுமந்தன புயமும்!"[333]

என்ற கலிங்கத்துப்பரணி பாடல் குலோத்துங்கனின் ஆட்சியை புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

மேலும் விக்ரம சோழன் கருணாகர பல்லவனிடத்து கொண்டிருந்த வெறுப்பை மாற்ற கால தேவர் பல்லவ மன்னன் மூன்றாம் நந்திவர்மனைப்பற்றி கூறும்போது,

பிற்காலப் பல்லவர்களின் தமிழுக்காக உயிர்நீத்த நந்திவர்மன் பற்றி நாடறியும் உண்மையினை அறிந்திலையோ என்று கூறும்போது,

"செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச்

சந்தனம் என்றாரோ தடவினார் – பைந்தமிழை

ஆய்கின்ற கோன் நந்தி ஆனம் தழுவாமல்

வேகின்ற பாவியேன் மேல்ஸ"[334] என்ற பாடலும்,

"வானுற மதியை அடைந்ததுன் வதனம்

மதிகடல் புகுந்ததுன் கீர்த்தி

கானுற புலியை அடைந்ததுன் வீரம்

கற்பகம் அடைந்ததுன் கரங்கள்

தேனூறு மலரால் அரியிடம் புகுந்தாள்

செந்தழல் அடைந்ததுன் தேகம்

நானும் என் கலியும் எவ்விடம் புகுவோம்

நந்தியே நந்தயாபரனே"[335]

என்ற பாடலும் நந்திவர்மனின் புகழை அவனது பண்பை தியாகத்தை தமிழ்மீது கொண்ட பற்றை விளக்குவதாக எடுத்தாளப்பட்டுள்ளது.

கலிங்கம் நோக்கிச் சென்ற படைகளின் காட்சியை, கலிங்கத்துப் பரணியில்,

"கொண்டை மாகணம் உவணம் வாரணம்

கேழில் ஆளிமா மேழி கோழிவில்

கொண்ட ஆயிரம் கொடி நுடங்கவே

குமுறு வெம்புலிக் கொடி குலாவவே!"[336]

மீன்கொடி, பாம்புக்கொடி, கருடக்கொடி, யானைக்கொடி, பன்றிக்கொடி, சிங்கக்கொடி, கலப்பைக் கொடி, கோழிக்கொடி, விற்கொடி ஆகியவையும்,

"நீலமாமணிச் சிவிகை வெள்ளமும்

நித்திலக்குலக் கவிகை வெள்ளமும்

காலினான் வரும் யமுனை வெள்ளமும்

கங்கை வெள்ளமும் காண்மின் என்னவே?"[337]

என காலதேவர் என்ற ஜெயங்கொண்டார் சிவிகைகள் மற்றும், கொடிகளையும் கொண்ட அரசர்கள் பற்றிய பாடலும் புதினத்தில் இடம் பெற்றுள்ளது இலக்கியத் தாக்கத்தினை குறிப்பதாக அமைந்துள்ளது.

பூங்குழலி என்ற புதினம் முழுமையும் ஒவ்வொரு இயலின் தொடக்கமும் ஒரு நந்திக் கலம்பகப் பாடலைக் கொண்டு தொடங்கப்பட்டுள்ளது. வானுறமதியை என்ற பாடல் குறிப்பிடத்தக்கது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்,

"ஒருநாட் பழகினும் பெரியோர்க் கேண்மை
இருநிலம் பிளக்க வேர் வீழ்கும்மே"[338]

என்ற ஔவைப்பிராட்டியின் பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது. வயதில் பெரியவர்களாய் இருப்பவர்களல்ல, வயதில் சிறிய புஷ்பமாலிகாவைப் பற்றிக் கூறுகையில் அவள் பௌத்த நூல்களையும், சமயநூல்களையும், இலக்கியங்களையும், தர்க்கசாஸ்த்திரங்களையும் படித்தவள் எனக்கூறும்போது மேற்கூறிய பாடல்வரிகள் எடுத்தாளப்பட்டுள்ளது இலக்கியத்தாக்கத்தைப் புலப்படுத்துகிறது.

"புத்தம் சரணம் கச்சாமி!
சங்கம் சரணம் கச்சாமி!
தம்மம் சரணம் கச்சாமி!"[339]

என்ற புத்தநாமத்தை வேதிசமாதேவி இசைப்பதாக காட்டப்பட்டுள்ளது.

"புஷ்பமாலிகை பலதரப்பட்ட நூற்போதனைகளின் சுருக்கங்களை சந்திர மௌலிக்கு கூறும்போது இடையே தம்மபதத்தை எடுத்துக்கூறி விளக்கம் சொல்வாள்"[340] என்ற வரிகள் தம்மபதம் பற்றிக் கூறுகின்றன.

குற்றாலக் குறிஞ்சி என்னும் புதினத்தில்,

"குறிஞ்சி சிலப்பதிகாரம், கம்பராமாயண நயம்
தமிழுக்கு இனிமை தருகின்றன. தீட்சதரிடம்
தொல்காப்பியம் கற்றுக்கொள்; சியாமா சாஸ்த்திரிகளிடம்
சிலப்பதிகாரம் கற்றுக்கொள், தியாகய்யரிடம் கம்பராமாயணம்
தெரிந்து கொள்"[341]

என ஞானசுந்தரம் கூறும் கருத்து இலக்கியங்களின் பெருமையை உணர்த்துவதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

தீட்சதரின் முன் மாஞ்சி ராகத்தைப்பாடிய குறிஞ்சியை பாராட்டும்போது,

"உனது இந்தப்புகழை கம்பனிருந்து பாடவேண்டும்! காளிதாசனிருந்து பாடவேண்டும்! காளிதாசனின் காளி வரப்பிரசாதத்தையும், கம்பனின் தமிழ் ஞானத்தையும் பெற்ற ஒருவன் என்றைக்காவது உன்னைக் காப்பியத்தலைவியாக்கி எழுதுவான்"[242] என்று கூறி ஆசிர்வதிக்கிறார். இந்த வரிகள் இலக்கியத் தாக்கமுடையதாக அமைந்திருப்பது சுட்டத்தக்கது. வேங்கைவனம் என்ற புதினத்தில் தொல்காப்பியக் கருத்துக்கள் கதையின் போக்கில் அமைந்துள்ளது.

"எழுத்ததிகாரத்தில் ஓகார ஈறு . . . . . .
ஓகார இறுதி ஏகார இயற்றே"[343]

சொல்லதிகாரத்தில் உயர் திணைத் தன்மைப் பன்மை வினைமுற்று சூத்திரம்,

"அம் ஆம் எம் ஏம் என்னும் கிளவியும்
பன்மை உரைக்கும் தமிழ்ச் சொல்லே"[344]

பொருளதிகாரத்தில் அவத்தைகள் ஆறுபற்றியும் குறித்திருப்பது, கதைத்தலைவியைக் கொண்டு கூறுவது இலக்கணம் பற்றியதாக அமைந்துள்ளது.

கொல்லிப்பாவை என்ற புதினம்,

அகநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இலக்கியங்களை கதையின் போக்கில் காட்டிச் செல்கிறது.

"மண்ணிய சென்ற ஒன்றுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொரு அவள் இறை
பொன் கெப்பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண் கொலை புரிந்த நன்னன் . . . . . . . "[345]

என்ற பாடலின் கருத்தே புதினத்தின் கருவாக அமைந்துள்ளமையும்,

"இரும்பொன் வாகைப் பெருந்துரைச் செருவில்
பொலம்பூண் நன்னன் . . . . . . . . . . .
. . . . . . . . . . . . .
கலிங்காய் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடு தந்தன்ன
வளம் பெரிது பெறினும் வாரலென்யானே"[346]

என்ற அகநானூற்றுப் பாடலும்,

"உருள் பூங்கடம்பின் பெருவாயில் தன்னை
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்ப
செரும்பல செய்து செங்களம் வேட்டு
. . . . . . . . . . . . .
களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக்"[347]

காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய பதிற்றுப்பத்துப் பாடல்களும் கருவிற்கு ஆதாரமாக உள்ளன.

"கரும்பரிக் குதிரை ஆய் எயினன்
நெடுந்தேர் மிஞலியொடு பொழுது களம்பட்டென்"[348]

என்ற அகநானூற்றுப்பாடலின் செய்தியும் புதினத்தில் காட்டப்படுகின்றது. இந்தப் புதினத்திலும் வரலாற்றுச் செய்திகள் இலக்கியம் மூலமாக கதையின் போக்கில் காட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. சேர சூரியன், சேரன் குலக்கொடி ஆகய புதினங்கள் பதிற்றுப்பத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவை.

சேரசூரியனின் கதைத்தலைவனான நெடுஞ்சேரலாதனை குமட்டூர் கண்ணார் பாடிய பாடல்களும், சேரன் குலக்கொடியின் கதைத் தலைவனான செங்குட்டுவனை பரணர் பாடிய பதிற்றுப்பத்து பாடல்களும், சிற்சில இடங்களில் சிலம்பின் வரிகளும் இலக்கியத்தன்மையை பறைசாற்றுவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. மேற்கூறிய இரு புதினங்களுக்கான பதிற்றுப்பத்துப் பாடல்கள் வரலாற்றுச் செய்திகள் என்ற இயலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

எஞ்சிய புதினங்களான ரூப்மதி, கானல்கானம், கங்கை நாச்சியார் ஆகியவற்றில் இந்த உத்தி கையாளப்படவில்லை.

**ஓவியம்**

கலைகளில் ஓவியக்கலையானது காண்போர் மனதையும் கருத்தையும் கவரக்கூடியது. இந்த உத்தியானது ஆய்வுக்குரிய புதினங்களில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

காஞ்சிக்கதிரவன் என்னும் புதினத்தில் மகேந்திரவர்மன் ஓவியக் கலையில் சிறப்புடையவனாகத் திகழ்ந்தான். இதற்குச் சான்றாக அமைந்தது. சித்தன்னவாசல் ஓவியங்கள், சித்திரம் தீட்டுவதற்காக “சன்னமாக சலித்த களிமண், சுண்ணாம்பு, பசுஞ்சாணம், வைக்கோல், கடுக்காய் முட்டைக்கரு ஆகியவற்றை குழைய குழைய அரைத்து எடுத்த ஆதாரச்சுதையை பூசியிருந்தான். சற்று ஈரம் உலர்ந்திருந்தது . . . . . . மஞ்சள் கிழங்கைக் கொண்டு வடிவக் கோட்டினை முதலில் வரைகிறான். சுண்ணச் சேர்க்கையால் சுதையில் சிவப்புக் கோடாகிறது. பின்னர் வண்ணவண்ணமான இலைகளைப் பொடித்துக் குழைத்த வண்ணங்களால் சித்திரம் தீட்டுகிறான்.

மெல்லிய ஈரச்சுதையில் வண்ணங்கள் உள்நோக்கிப் பாய்ந்து அழியாமுறைக்கு அடிகோலுகின்றன. ஈரம் உலர்ந்த பின்னர் பெரிய கூழாங் கல்லைக் கொண்டு அதன்மீது மெதுவாகத் தேய்க்க அது உறுதியாகிறது, பளபளக்கிறது "[349].

"இதனை Frescobouno என்றும் Frescoseceo அல்லது Tempera என்றும் கூறுவர். அக்காலத்தில் வண்ணங்கள் உருவாக்கிய முறையையும் சித்திரங்கள பளபளக்கும் திறனையும் அறிந்துகொள் முடிகிறது"[350]

ஓவியக்கலைப்பற்றி இராசமாணிக்கனார் தமது நூலில் கூறுவதாவது,

"சுவர்ப்புறம் மேடுபள்ளம் இல்லாமல் சமமாக இருப்பதற்காகச் சுவர்மீது ஒரு நெல் அளவுக்கு சுண்ணாம்புச்சாந்து பூசப்படும். பாறை தன்மீது தீட்டப்பெறும் நிறத்தை ஏற்றுக்கொள்ளும் இயல்பற்றது. ஆதலின் சுண்ணாம்புச் சாந்து அதற்குப் பயன்பட்டது. சலித்து எடுக்கப்பட்ட பூமணல், வைக்கோல் கடுக்காய் முதலியவற்றுடன் கலந்து வெல்ல நீருடன் அல்லது பனஞ்சாற்றுடன் அரைத்த சாந்து சுவரில் அல்லது கூரையில் உறுதியாகப் பற்றிக் கொள்ளும். அதை எளிதில் பெயர்க்க முடியாது. ஈரம் காயும் முன்பே ஓவியக்காரன் மஞ்சள் கிழங்கைக் கொண்டு இரேகைகளை வரைந்து கொள்வான். சுண்ணாம்புடன் கலந்த மஞ்சள் நிறம் மாறி சிவப்பாகத் தோன்றுவதுடன் பிறகு அழியாமல் இருக்கும் தன்மையும் வாய்ந்தது. ஓவியக்காரன் புனையா ஓவியம் என்னும் இந்த ரேகைகளை வரைந்து கொண்டபிறகு நிறங்களைத் தீட்டுவான். சிவப்பு, மஞ்சள், வெண்மை, நீலம், பச்சை, கறுப்பு ஆகிய நிறங்களைத் தரும் பச்சிலை நிறங்களையே பயன்படுத்துவான். ஈரம் காய்ந்தபிறகு சுவர் நன்றாக உலர்வதற்கு முன்னரே கூழாங்கற்களைக் கொண்டு சுவர்களை வழவழப்பாகி மெருகிடுறான். இது அழியாமல் நெடுங்காலம் இருக்கும்"[351]

சித்தன்னவாயில் ஓவியங்கள் இவ்வாறே வரையப்பட்டிருக்கலாம் என எண்ணப்படுகிறது.

"அந்த தாமரைத் தடாகத்தில் மீன்கள், அன்னங்கள், யானைகள், எருமைகள் இவற்றின் படங்கள் காணப்படுகின்றன. இவற்றுடன் கையில் தாமரைமலரைத்

தாங்கியுள்ள சமணர் இருவரும் இடக்கையில் பூக்கூடைகொண்டு மலர் பறித்திடும் சமணர் ஒருவரும் சித்தரிக்கப்பட்டுள்ளனர்”[352]

இங்கு வரையப்பட்டுள்ள நடனமாதற்கு மூக்கண இல்லை. ஒரு தூணின் உட்புறத்தில் ஓர் அரசன் தலையும் அவன் மனைவியின் தலையும் வரையப்பட்டுள்ளன. இது மகேந்திரவர்மனும் அவன் மனைவியும் என்று எண்ண வாய்ப்புள்ளது.

புதினத்தில் அஜந்தா மாதிரி ஓவியமாக நிற்க சித்திரம் வரையப்பட்டது. மகேந்திரனும் “அஜந்தா நான் உனக்கு அழியா வரமளித்துவிட்டேன் எனக் கூறுவதிலிருந்து அந்த சித்திரங்கள் மகேந்திரவர்மனும் அஜந்தாவுமாக இருக்கலாம் என வாசகர் மனதில் கருத்து எழ வாய்ப்புள்ளது.

ஆனால் இந்த சித்திரங்கள் சமணமதத்தை படம் பிடித்துக்காட்டுவதால் மகேந்திரவர்மன் சமணத்திற்கு மாறிய பிறகு வரையப்பட்டிருக்கலாம் என்ற கருத்துக்கும் இடமளிக்கிறது. அஜந்தா கற்பனை பாத்திரமாதலால் மகேந்திரனின் மனைவியையே (அரசன் அவன் மனைவி) சித்திரம் குறிப்பதாகவும் எண்ணக்கூடிய கருத்தும் ஏற்புடையதாகும். மகேந்திரவர்மன் தட்சணசித்திரம் என்னும் நூலுக்கு உரை எழுதியவன்”[354] என்பது வரலாற்று மெய்மையாகும்.

ஆசிரியர் கருத்து : ஓவியச் செந்நூல் உரை நூற்கிடக்கையும் என்று சிலப்பதிகாரத்தில் தெரிய வரும். நூல்தான் பிற்காலத்தில் தட்சண சித்திரமாக மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும் என்ற மயிலை வேங்கடசாமியின் கருத்தை ஏற்றிருப்பது தெரியவருகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்,

விருந்தினர் மாளிகையைப் பற்றிய வருணனையில் அழகிய வெண்சுதையால் சிற்பங்களை உருவாக்கியிருந்த அந்த அறை பார்க்க மிக்க கவர்ச்சியாக இருந்தது. சிற்சில சுவர்களில் வண்ண ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. மேலே வளைவுகளிலும் கனத்த தூண்களிலும் சுதைச் சிற்பங்களும், பூ வேலைகளும் மௌரியர்களுடைய

நாகரிகத்தைப் பறைசாற்றின என்ற வரிகள் ஓவியக்கலை அக்காலத்தும் இருந்தது என்பதை வெளிப்படுத்துகிறது. எஞ்சிய ஆய்வுப் புதினங்களில் இவ்வுத்தி கையாளப்படவில்லை.

**தொகுப்புரை**

புதினத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள கலைநுணுக்கத் திறன்கள், அதற்கான விளக்கம் சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. தொடக்கம், முடிவு, நினைவுக் காட்சி, நோக்குநிலை உத்தி, வருணனை, உவமை, நடை, கடிதம், இசை, பழமொழி, இலக்கியம், ஓவியம் முதலான கலை நுணுக்கத்திறன்கள் ஆய்வில் விளக்கப்பட்டுள்ளன.

நடையின் வகைகளான எடுத்துரை நடை, கதைத்தொடர் நடை, வருணனை நடை, உரையாடல் நடை ஆகியவை புதினங்களைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளது. இசையைப் பற்றிய அடிப்படைக் கருத்துக்கள் மேளகர்த்தா, ஜனகம், ஜன்யம், தாளவகை, ராகவகை ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. (பார்க்க பி.இ.3)

## சான்றெண் விளக்கம்

1. ச. முருகேசன், ஏசு, ஏசு, தென்னரசு புதினங்கள் ஆய்வு, ப.38.
2. இரா. தமிழரசி, தமிழ் இலக்கிய உத்திகள் ஓர் அறிமுகம், Papers on Tamil Studies, ப.44.
3. ம. திருமலை, தமிழ் மலையாள நாவல் ஒப்பாய்வு, ப.50.
4. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.9.
5. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள் ப.1.
6. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.5.
7. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.9.
8. கோவி. மணிசேகரன், சேரன் குலக்கொடி, ப.1.
9. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.5.
10. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.93.
11. கோவி. மணிசேகரன், பூங்குழலி, பக்.10, 11-12.
12. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.11.
13. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.9.
14. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.9.
15. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.9.
16. கோவி. மணிசேகரன், குற்றாலக் குறிஞ்சி, ப.1.
17. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.1.
18. வீ.ஜீவா, கோவி. மணிசேகரனின், குற்றாலக் குறிஞ்சி ஒரு ஆய்வு, ப.23.

19. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.328.

20. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.352.

21. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், பக்.335, 336.

22. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.212.

23. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.275.

24. கோவி. மணிசேகரன், குற்றாலக் குறிஞ்சி, ப.364.

25. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.479.

26. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 368.

27. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 239.

28. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.504.

29. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.326.

30. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.288.

31. மேலது., ப.288.

32. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.89.

33. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.200.

34. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.167.

35. தண்டியலங்காரம், பொருளணியல், நூற்பா-5.

36. தொல்காப்பியம், பொருள், ப.395.

37. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கிய கொள்கைகளும், ப.92.

38. சா.வளவன், பெண் படைப்பாளர் தம் படைப்புகள், ப.73.

39. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 86.

40. மேலது., ப. 216.

41. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.42.

42. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 195.

43. மேலது., ப. 215.

44. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.254.

45, மேலது., ப. 67.

46. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.37.

47. மேலது., ப. 313.

48. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.101.

49. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 354.

50. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 150.

51. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.146.

52. கோவி. மணிசேகரன், செம்பியின் செல்வி, ப.55.

53. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 31.

54. மேலது., ப. 76.

55. மேலது., ப. 216.

56. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 189.

57. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.119.

58. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.105.

59. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப. 86.

60. மேலது., ப.31.

61. கோவி. மணிசேகரன், சேரன் குலக்கொடி, ப. 485.

62. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 32.

63. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 17.

64. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 43.

65. மேலது., ப. 153.

66. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.32.

67. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.255.

68. மேலது., ப.271.

69. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.42.

70. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 216.

71. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.135.

72. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.81.

73. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப. 68.

74. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.15.

75. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.27.

76. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.130.

77. கோவி. மணிசேகரன், செம்பியின் செல்வி, ப.91.

78. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.38.

79. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.103.

80. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 22.

81. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.2.

82. கோவி. மணிசேகரன், செம்பியின்செல்வி, ப.237.

83. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.11.

84. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.1.

85. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 70.

86. மேலது., ப. 11.

87. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 2.

88. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.1.

89. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப. 38.

90. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப. 9.

91. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.220.

92. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 6.

93. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.9.

94. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 9.

95. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.1.

96. கோவி. மணிசேகரன், செம்பியின் செல்வி, பக். 27-28.

97. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.10.

98. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 11.

99. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 1.

100. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.106.

101. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.224.

102. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப. 199.

103. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.51.

104. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.1.

105. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.30.

106. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.170.

107. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.41.

108. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 216.

109. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.15.

110. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.22.

111. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.190.

112. மேலது., ப.149.

113. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப. 32.

114. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.91.

115. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.104.

116. மேலது., பக். 166, 167.

117. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.135.

118. மேலது., ப.140.

119. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.14.

120. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.12.

121. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், பக். 249, 250.

122. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப. 57.

123. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப. 228.

124. மேலது., ப.290.

125. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.40.

126. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.109.

127. மேலது., ப.30.

128. மேலது., ப.14.

129. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 216.

130. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.6.

131. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், பக். 99, 100.

132. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 38.

133. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப. 167.

134. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப. 224.

135. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.9.

136. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 46.

137. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.279.

138. மேலது., ப.92.

139. கோவி. மணிசேகரன், குற்றாலக் குறிஞ்சி, ப. 22.

140. மேலது., ப.22.

141. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.170.

142. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப. 152.

143. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 21.

144. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.2.

145. மேலது., ப.3.

146. மேற்கோள் : ஞானாம்பிகை, அரு.ராமநாதன் வரலாற்றுப் புதினங்கள், ப.151.

147. மறைமலை அடிகள், இலக்கியக் கொள்கைகள், ப.37.

148. சு. வெங்கட்ராமன் (ப.ஆ) மு.வ.கருத்தரங்கக் கட்டுரைகள், ப.83.

149. கோ. சுந்தரராஜன் & சோ.சிவபாத சுந்தரம், தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும், ப.270.

150. இந்திரா ஜானகிராமன், நாவல் நடை, வையாபுரி, விடியல் வட்டக் கருத்தரங்கு, ப.100.

151. மேற்கோள் : ஞானாம்பிகை, அரு.ராமநாதன் வரலாற்று புதினங்கள், ப.152.

152. மறைமலை அடிகள், Chert and elegant diction of Tamil, ப. 167.

153. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், பக்.44-45.

154. சா. வளவன், பெண் படைப்பாளர் தம் படைப்புகள், ப.79.

155. மேலது., ப.79.

156. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.159.

157. மேலது., ப.180.

158. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.22.

159. மேலது., ப.66.

160. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.120.

161. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.11.

162. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.34.

163. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், பக். 96-97.

164. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.112.

165. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப. 138.

166. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப. 47.

167. மேலது., ப.62.

168. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.10.

169. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, பக்.84-85.

170. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப. 14.

171. கோவி. மணிசேகரன், பூங்குழலி, பக். 13-14.

172. மேலது., ப.69.

173. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, பக். 35-36.

174. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப. 183.

175. மேலது., ப.257.

176. மேலது., பக்.214-215.

177. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப. 46.

178. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 31.

179. மேலது., ப.206.

180. மேலது., பக்.132-133.

181. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.110.

182. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், பக். 42-43.

183. கோவி. மணிசேகரன், ரூப்மதி, பக். 32-33.

184. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப. 41.

185. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப. 175.

186. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப. 156.

187. மேலது., பக். 320-321.

188. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, பக். 225-226.

189. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, பக். 42, 43, 44, 45.

190. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 47.

191. மேலது., பக். 22-23.

192. மேலது., பக். 55-56.

193. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, பக். 109-110.

194. Hutson, An Introduction to the study of literature, P.154.

195. பூவண்ணன், கல்கியின் வரலாற்று நாவல்கள், பக்.208-209.

196. ஞானசம்பந்தன், இலக்கியக் கொள்கை, ப.159.

197. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.213.

198. மேலது., ப.200.

199. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 111.

200. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப. 167.

201. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப. 255.

202. கோவி. மணிசேகரன், சேரசூரியன், பக். 217-218.

203. கோவி. மணிசேகரன், ரூப்மதி, பக். 76-77.

204. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், பக். 69-70.

205. கோவி. மணிசேகரன், கானல்கானம், பக். 182-183.

206. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, பக். 181-182.

207. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, பக். 202, 203, 204.

208. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, பக். 111-112.

209. கோவி. மணிசேகரன், பூங்குழலி, பக். 71-72.

210. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, பக். 120-121.

211. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, பக். 462-463.

212. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப. 115.

213. மா. ராமலிங்கம், புதிய உரைநடை, ப.13.

214. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.211.

215. மேலது., ப.79.

216. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.30.

217. மேலது., ப.79.

218. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப. 154.

219. மேலது., ப.154.

220. மேலது., ப.243.

221. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 134.

222. மேலது., ப.135.

223. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 323.

224. மேலது., ப.66.

225. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப. 69.

226. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப. 135.

227. மேலது., பக்.281-282.

228. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.38.

229. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.85.

230. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப. 37.

231. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.93.

232. மேலது., ப.115.

233. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப. 237.

234. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 242.

235. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, பக். 54-55.

236. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப. 69.

237. மேலது., ப.312.

238. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.11.

239. மேலது., ப.177.

240. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், பக். 158-159.

241. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 291.

242. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 128.

243. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப. 187.

244. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், பக். 132-133.

245. கோவி. மணிசேகரன், குற்றாலக் குறிஞ்சி, ப. 305.

246. மேலது., ப. 307.

247. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.63.

248. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப. 139.

249. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.22.

250. மேலது., ப.25.

251. மேலது., ப. 50.

252. மேலது., ப. 105.

253. மேலது., ப. 128.

254. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.106.

255. மேலது., ப. 111.

256. மேலது., ப. 183.

257. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப. 61.

258. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.41.

259. மேலது., ப. 44.

260. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப. 128.

261. மேலது., ப. 44.

262. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப. 142.

263. மேலது., ப. 142.

264. மேலது., ப.135.

265. மேலது., ப. 110.

266. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.153.

267. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 351.

268. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப. 50.

269. மேலது., ப. 133.

270. மேலது., ப. 185.

271. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 126.

272. மேலது., ப. 149.

273. பி.டி.செல்லத்துரை, தென்னக இசையியல், ப.1.

274. மேலது., ப. 3.

275. மேலது., ப. 307.

276. பி.டி.செல்லதுரை, தென்னக இசையியல், ப.34.

277. மேலது., ப. 35.

278. மேலது., ப. 36.

279. மேலது., ப.37.

280. மேலது., ப. 37.

281. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.267.

282. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.72.

283. மேலது., 72.

284. பி.டி.செல்லத்துரை, தென்னக இசையியல், பக்.129-130.

285. மேலது., ப. 131.

286. மேலது., ப. 72.

287. பி.டி. செல்லத்துரை, தென்னக இசையியல், ப.130.

288. மேலது., ப. 46.

289. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப. 66.

290. பி.டி. செல்லத்துரை, தென்னக இசையியல், ப. 46.

291. மேலது., ப. 46.

292. மேலது., ப. 46.

293. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.16.

294. மேலது., ப.62.

295. மேலது., ப.58.

296. மேலது., ப.59.

297. மேலது., ப.63.

298. மேலது., ப.63.

299. மேலது., ப.63.

300. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.8.

301. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.149.

302. மேலது., ப.131.

303. மேலது., பக். 124-125.

304. பி.டி. செல்லத்துரை, தென்னக இசையியல், ப.18.

305. மேலது., ப. 5.

306. மேலது., ப.18.

307. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.265.

308. மேலது., ப.265.

309. பி.டி. செல்லத்துரை, தென்னக இசையியல், ப.130.

310. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.264.

311. கோவி. மணிசேகரன், சேரன்குலக்கொடி, ப.278.

312. மேலது., பக். 356, 357.

313. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.135.

314. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப. 37.

315. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், பக்.116-117.

316. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.186.

317. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.11.

318. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.326.

319. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.10.

320. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.349.

321. கோவி. மணிசேகரன், காஞ்சிக் கதிரவன், ப.55.

322. மேலது., ப. 252.

323. மேலது., ப. 244.

324. மேலது., ப. 246.

325. மேலது., ப. 243.

326. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.140.

327. மேலது., ப. 159.

328. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.148.

329. மேலது., ப. 148.

330. மேலது., ப. 148.

331. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.23.

332. மேலது., ப. 44.

333. மேலது., ப. 44.

334. மேலது., ப. 159.

335. மேலது., ப. 159.

336. மேலது., ப. 395.

337. மேலது., ப. 395.

338. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.172.

339. மேலது., ப. 182.

340. மேலது., ப. 248.

341. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.142.

342. மேலது., ப. 327.

343. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப. 111.

344. மேலது., ப. 112.

345. கா. அப்பாத்துரையார், தென்னாட்டுப் போர்க்களம், ப.96.

346. புலியூர் தேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப.189.

347. V.P.புருஷோத்தம், சங்ககால வரலாறு, ப.174.

348. புலியூர் தேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப.74.

349. கோவி. மணிசேகரன், காஞ்சிக் கதிரவன், ப.286.

350. மேலது., ப. 23.

351. ராசமாணிக்கனார், பல்லவ வரலாறு, ப.289.

352. மேலது., ப. 89.

353. கோவி. மணிசேகரன், காஞ்சிக் கதிரவன், ப.287.

354. மேலது., ப. 23.

355. மேலது., ப. 23.

356. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.115.

**இயல் - 3**

# கோவி மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் பாத்திரப்படைப்பு

## முன்னுரை

ஓர் இலக்கியப் படைப்பு வெற்றி பெறுவது அதன் பாத்திரப் படைப்புகளின் வெற்றியைச் சார்ந்துள்ளது. கதையின் போக்கிற்கு உயிரோட்டம் தருவது பாத்திரமாகும். "பாத்திரப்படைப்புகளைக் கொண்டே நாவலாசிரியர்களின் பெருமையையும் திறமையையும் வாசகர்கள் மதிப்பிடுகிறார்கள்"[1] என்பது அறிஞர்கள் கருத்தாகும். அத்தகைய பாத்திரங்களைப் படைப்பதற்குப் படைப்பிலக்கிய ஆசிரியர் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும்.

"ஒரு நாவல் இலக்கியத்தன்மை பெற வேண்டுமானால் பாராட்டத்தக்க மேம்பாடுடைய மாந்தர்களைச் சித்திரிப்பதாக இருக்க வேண்டும்"[2]. படைப்பாசிரியர் படைத்துள்ள பாத்திரங்கள் பற்றியும், பாத்திரங்களின் தன்மை, வகைப்பாடு, எண்ணிக்கை, பாத்திரப்படைப்பு உத்திகள் ஆகியவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

## பாத்திரம் - விளக்கம்

பாத்திரங்கள் ஒரு புதினத்தில் இடம் பெறும் மனிதர்கள்தான். வாழ்கின்றவர்களையும் வாழ்ந்து முடித்தவர்களையும் கொண்டு படைக்கப்படுவதுதான் பாத்திரம். "இரத்தமும், சதையும், எலும்பும், தோலும் கொண்ட உண்மைப் பாத்திரங்களைப் படைப்பவரே சிறந்த நாவலாசிரியர்"[3] என்பர். எனவே பாத்திரங்கள் எதார்த்தத்தைத் தோற்றுவிக்கவேண்டும். மேலும் ஒரு பாத்திரமானது மனம், அறிவு, சிந்தனை, குணம், உணர்ச்சிகள் கொண்ட மனிதனாகச் சித்திரிக்கப்பட வேண்டும்.

இதனையே "நாவல் மகத்துவம் மனிதனைச் சித்திரிக்கும் திறத்தைப் பொறுத்திருக்கிறது"[4] எனக் கூறுகிறார் புதுமைப்பித்தன். மனிதனுக்கு இயற்கையாக உள்ள பண்புகள், உணர்ச்சிகள் அனைத்தும் பாத்திரத்தில் இடம் பெறவேண்டும்.

கதாபாத்திரங்களின் குணச்சித்திரங்கள் வாசகர் மனதில் பதிந்து நிலைத்துவிடும்போது அந்தப் படைப்பிலக்கியமும் வாசகர் உலகில் நின்று நிலைத்துவிடுகிறது. எனவே பாத்திரங்களைப் படைக்கும்போது ஆசிரியர் மிக்க கவனத்தைக் கையாள வேண்டியுள்ளது. பாத்திரப்படைப்பு என்பது ஒரு புதின ஆசிரியர் பிரசவிக்கும் நிலையினைப் போன்றது. இது நல்ல பாத்திரம், கெட்டபாத்திரம் என புதின ஆசிரியன் தன் பாத்திரங்களை வெறுத்து ஒதுக்குவதில்லை. தாயின் பரிவோடு அனைத்துப் பாத்திரங்களையும் நேசிப்பான். இக்கருத்தினை,

“என் கதைத்தலைவன் தலைவியரை அவர்கள் எவ்வளவு குறைபாடுடையவர்களாக இருந்தாலும் நான் நேசிக்கிறேன். என் இரத்தத்திலிருந்தும் உயிர் மூச்சிலிருந்தும் இதயத் துடிப்பிலிருந்தும் பிறந்தவர்கள் அவர்கள். என்னைவிட உயர்ந்தவர்கள்”[5] என்று கூறும் அகிலனின் கருத்து அரண் செய்கிறது.

பாத்திரப்படைப்பில் ஆசிரியர், “தன்னைமறந்த லயம்தன்னில் தானும் பாத்திரமாய் ஒன்றி நிற்கும் நிலையைப் பேரின்ப நிலை என்றே கூறுதல் வேண்டும்”[6] என்றும் கருத்தும் ஈண்டு சிந்திக்கத்தக்கது. இந்த நிலையை உருவாக்கினால்தான் பாத்திரப்படைப்பு சிறக்க முடியும். ஆசிரியரின் எண்ணத்தையும் கருத்தையும் வெளிப்படுத்தும் கவிகள்தான் பாத்திரங்கள். ஆசிரியர்கள் பாத்திரங்களை ஆட்டுவிக்கும்போதுதான் இந் நிகழ்வு ஏற்படும். பாத்திரங்களின் விருப்பத்திற்கு விட்டுவிட்டாலோ பாத்திரங்கள் ஆசிரியரை ஆட்டிப்படைக்க ஆரம்பித்துவிடும்.

“நான் என் பாத்திரங்களைக் கட்டுப்படுத்துவது இல்லை. நான் அவர்களுக்குக் கட்டுப்பட்டு விடுகிறேன். அவர்கள் விரும்பிய வண்ணம் என்னை அழைத்துச் செல்கின்றனர்”[7] என்னும் கருத்தும் இங்குக் குறிக்கத்தக்கது.

கோவி மணிசேகரன் பாத்திரத்தைப் பற்றிக் கூறும்போது,

“திருமாறன் என்ற பாத்திரத்தை எடுத்துக் கொண்டால் அவனுக்கு என்றொரு கோப்பு (File) போட்டுவிடுவது உண்டு. அவன் யார்? எப்படி என்பனவற்றிற்கு முதலில் அத்தியாயங்கள் நிர்ணயித்த பிறகு அடுத்துவரும் பாத்திரங்களைச் சிந்திப்பேன். பின்புதான் எடுத்துக்கொண்ட கருவுக்கு அந்தப் பாத்திரங்கள் எப்படியெல்லாம் உதவுகின்றார்கள் என்பதை நிர்ணயிப்பேன்”[8] எனக் கூறுகிறார்.

**வரலாற்றுப் புதினப் பாத்திரங்கள்**

வரலாற்றுப் புதினப் பாத்திரங்களைப் படைக்கும் ஆசிரியர்களுக்குச் சில கட்டுப்பாடுகளும் தடைகளும் உண்டு. அவர்கள் வரலாற்றுக்காலச் சமூக வாழ்க்கையிலிருந்துதான் பாத்திரங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளது. எனவேதான், வரலாற்றுக்காலப் பாத்திரங்களின் நிகழ்வுகளையும் குணங்களையும் மாற்றுவதற்கு உரிமை இல்லை. வரலாற்றுப் புதினங்கள் கதைத்தலைவன் பெரும் வீரனாகப் படைக்கப்படுவது இயல்பு. ஆனால் தோற்றுப்போன அரசர்களை வைத்துக்கூடப் புதினம் படைக்கலாம் என்பதற்கு அரு.ராமநாதனின் வீரபாண்டியன் மனைவியை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

“இறந்த காலத்து மக்களின் குணங்களையும் குறைகளையும் வரலாற்று ஆசிரியர்கள் குறித்துள்ளார்கள். அவற்றைக் கொண்டு முழுமையான வரலாற்றுப் பாத்திரத்தை நாவலாசிரியன் படைத்துக் கொள்கிறான்”[9] என்று பூவண்ணன் கூறும் கருத்தும் இங்குச் சுட்டத்தக்கது.

**பாத்திர வகைப்பாடு**

பாத்திரங்கள் ஒருநிலையான மாந்தர்கள் (Flat Characters) என்றும், முழுமையான மாந்தர்கள் (Round Characters) என்றும் இருவகைப்படுவார்கள் என இ.எம்.பாஸ்டர் கூறுவார். “ஒரே நிலையான மாந்தர்கள் நாவலில் ஆங்காங்கே தோன்றி மறைவார்கள். அவர்கள் இயல்பு எப்படி இருந்ததோ அப்படியே முடிவு வரை இருக்கும்”[10]. ஆனால் முழுமையான மாந்தர்கள் “நாவல் தோன்றுவதிலிருந்து ஏதேனும் வளர்ச்சி, ஒருவகை மாற்றம் பெறுவார்கள். இவர்தம் உள்ளம், உணர்ச்சி, கொள்கை முதலியவை வளர்ச்சியுறும்”[11]. பொதுவாக புதினத்தில் முழுமையான மாந்தர்கள் இடம் பெறுவதே சிறப்பு.

மேலும் பாத்திரங்களை முதன்மைப் பாத்திரங்கள் (Primary Characters), துணைப் பாத்திரங்கள் (Secondary Characters) என்றும் வகைப்படுத்தலாம். முதன்மைப் பாத்திரங்கள் கதைக்கு உயிர்நாடி போன்றவை. அவற்றை மேலும் தலைமைப் பாத்திரங்கள், இணைத் தலைமைப் பாத்திரங்கள், எதிர்த்தலைமைப் பாத்திரங்கள், துணைப்பாத்திரங்கள் எனவும் வகைப்படுத்திப் பார்க்கலாம்.

**தலைமைப் பாத்திரங்கள்**

“புதினத்தின் தொடக்கம் முதல் முடிவு வரை இடம் பெற்று இன்றியமையாத இடத்தினைப் பெறும் மாந்தரைத் தலைமை மாந்தர்”[12] என்று கூறுவர். இவர்கள் புதினம் முழுவதும் நின்று நிலைத்து நிற்பவர்கள். இவர்கள் இலட்சிய வாதியாக வீரம் பொருந்தியவராக, உயர்ந்த உள்ளம் படைத்தவர்களாக படைக்கப்படுவார்கள். இவர்களது பண்பு, செயல்திறம், தோற்றம் போன்றவை வாசகர் உள்ளத்தை கவரும்படி அமைந்திருக்கும். வரலாற்று புதினத்தில் படைக்கப்படும் தலைமைப் பாத்திரங்கள் காப்பியத் தலைவரைப் போன்றவர்கள். தன்னகரில்லாத் தலைவர்களாக ஆணழகனாக, சாணக்கியனாக, இராஜதந்திரியாக மிகைப்படுத்தியும் காட்டப்படுவார்கள். குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில் சரபோஜி, குறிஞ்சி, காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில் மகேந்திர பல்லவன், சிம்மவிஷ்ணு, பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் விசயகண்ட கோபாலன், சுந்தர பாண்டியன், ராஜகர்ஜனை என்ற புதினத்தில் திப்புசுல்தான், ஹைதர் அலி, வேங்கை வனம் என்ற புதினத்தில் வேங்கை மார்பன், பூங்குழலி என்ற புதினத்தில் நந்திவர்மன், சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் சேரன் செங்குட்டுவன், திருமாறன், கொல்லிப்பாவை என்ற புதினத்தில் பரிமளா, நார்முடிச் சேரல், கங்கைநாச்சியார் என்ற புதினத்தில் நாராயணத்தேவன், செம்பியன் செல்வி என்ற புதினத்தில் நாராயணத் தேவன், செம்பிய செல்வி என்ற புதினத்தில் முதலாம் குலோத்துங்கச் சக்ரவர்த்தி, கருணாகர பல்லவன், ரூப்மதி என்ற புதினத்தில் ரூப்மதி, கானல் கானத்தில், இளவெண்மதிசூடினன், சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் அசோகர், சேர சூரியன் என்ற புதினத்தில் நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவன் ஆகியோர் தலைமைப்பாத்திரங்களாக இடம் பெறுகின்றனர். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் மொத்தம் இருபத்தி இரண்டு தலைமைப் பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

**இணைத் தலைமைப் பாத்திரங்கள்**

துணைப்பாத்திரங்களை விடச் சிறப்பாகவும் தலைமைப் பாத்திரங்களின் செயல்பாடுகளில் சற்றுக் குறைந்தும் விளங்குவது இணைப்பாத்திரங்கள். இவை

தலைமைப்பாத்திரத்திற்கு இணையான செயல்பாடுடையவை என்ற கருத்து பொருத்தமுடையது.

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தின் கதைத்தலைவன் விஜயகண்ட கோபாலனைப் போலவே மாறவர்மன் சுற்தரபாண்டியனும் இணையான செயல்பாடுடையவனாக காட்டப்படுவதைச் சான்றாகச் சுட்டலாம்.

இணைத் தலைமைப் பாத்திரங்களாக குற்றாலக் குறிஞ்சியில் ஞானசுந்தரம், ராஜகாந்தி, காஞ்சிக் கதிவரன் புதினத்தில் அஜந்தா, பொன் வேய்ந்த பெருமாள் புதினத்தில் மூன்றாம் ராஜேந்திரன், ராஜகர்ஜனை என்ற புதினத்தில் ரங்கநாயகி, பசவராஜ், வேங்கைவனம் என்ற புதினத்தில் தியாகவல்லி, திருமேனி, பூங்குழலி என்ற புதினத்தில், பூங்குழலி, சேரன் குலக்கொடியில் பொற்கொடி, கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் இளவரசி கங்கை நாச்சியார் செம்பியன் செல்வியில் விக்ரமன், ரூப்மதி என்ற புதினத்தில் பாஜ்பகதூர், கானல்கானம் என்ற புதினத்தில் செந்திருவேளார், சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் புஷ்பமாலிகா, சேர சூரியன் என்ற புதினத்தில் செங்குட்டுவன், சூரிய சீலி ஆகிய மொத்தம் இருபது பாத்திரங்கள் இணைத் தலைமைப் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளன.

### எதிர்த் தலைமைப் பாத்திரங்கள்

தலைமைப் பாத்திரங்களுக்கு முரண்பட்டு செயல்படும் தன்மையால் எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் எனக் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் முழுமையான மாந்தர்களே ஆவர். இவர்களுக்கு நாவலின் முடிவில் ஒரு விளைவு கட்டப்பட்டிருக்கும். "ஒரு பொருளை தனித்து நோக்குவதிலும் மாறுபட்ட பொருளோடு வைத்து நோக்கும்போது அதன் அழகு, கவர்ச்சி, பண்பு என அனைத்திலும் அது மேம்பட்டு நிற்பதைக் காணமுடியும். வெறும் வெண்மையிலும் கருமையின் அருகே இருக்கும் வெண்மைக்குக் கவர்ச்சி அதிகம்"[13] என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

எதிர்த்தலைமைப் பாத்திரங்களாகக் குற்றாலக் குறிஞ்சியில் கலெக்டர் சாம்சன், இளைய வல்லபத் தேவ உடையார், காஞ்சிக் கதிவரன் என்ற புதினத்தில் புலிகேசி, கூனன் விஸ்வரூபன், ஜயதேவன், பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில்

குமாரக்கூத்தன், சுந்தரபாண்டியன், ராஜகர்ஜனையில் மீர்சாதிக், வேங்கைவனம் என்றபுதினத்தில் காளிங்கன், பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, சேரன் குலக் கொடியில் சோழ இளவரசன் கிள்ளி வளவன், கொல்லிப் பாவையில் நன்னன், கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் திருமலை நாயக்கர், தளபதி ராமப்பய்யன், செம்பியன் செல்வியில் கலிங்க மன்னன் அனந்தவர்மன், பாண்டியர் நால்வர், சோழ இளவரசன் ஆகியோரும், ரூப்மதி என்ற புதினத்தில் ஆதம்கான், அக்பர் கானல்கானம் என்ற புதினத்தில் நல்ல பெருமாள், சொக்கநாத வேளார், சாம்ராட் அசோகனில் சந்திர மௌலி, புலிந்தகன் மகேந்திரன் திஷ்யரஷகா, சேர சூரியன் என்ற புதினத்தில் கடம்பர்கள், நாகா ஆகியோரும் இடம் பெறுகின்றனர். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பதிமூன்று புதினங்களிலும் மொத்தம் இருபத்தைந்து பாத்திரங்கள் இவ்வகையில் இடம் பெற்றுள்ளன.

## துணைப்பாத்திரங்கள்

தலைமைப் பாத்திரங்களும், எதிர்த் தலைமைப் பாத்திரங்களும் புதினத்தின் கருவிற்கு நேரடியாகத் தொடர்புள்ளவை. துணைப்பாத்திரங்கள் தலைமைப் பாத்திரத்தைச் சார்ந்தவையாகவும் எதிர்த்தலைமைப் பாத்திரத்தைச் சார்ந்தவையாகவும் இருக்கும். இவை புதினம் முழுவதும் வருவதாகவும் இருக்கலாம். எப்போதோ ஓரிரு முறை வருவதாகவும் இருக்கலாம். புதினத்தின் சுவைக்காக நகைச்சுவைப் பாத்திரங்கள் கூட படைக்கப்படலாம். “இருக்கின்ற கண்ணொளியைச் செம்மைப்படுத்தி தூய்மையாகவும், தெளிவாகவும் காட்டுவதற்கு உதவும் கண்ணாடியைப் போலத் தலைமைப் பாத்திரங்களையோ, எதிர்த்தலைமைப் பாத்திரங்களையோ தெளிவாகக் காட்ட இந்தப் பாத்திரங்கள் துணை செய்யும்”[14] என்னும் கருத்து இங்குச் சுட்டத்தக்கது.

குற்றாலக் குறிஞ்சியில் சிவாஜி, ஆனய்யா, அபிராமிபட்டர், பெரிய வல்லபத் தேவ உடையார், இளைய நாச்சியார், ஆற்காட்டு நவாப், ஆஜம்ஜா, திருவாரூர் கமலம், ராஜா ரகுநாதத் தொண்டைமான், புதுக்கோட்டை அமைச்சர், விருபாட்சக் கவிராயர், முத்துச்சாமி தீட்சிதர், அவரின் முதல் மனைவி, இரண்டாம் மனைவி, தியாகபிரும்மம், கோபால கிருஷ்ண பாரதி, கலெக்டர் நெல்சன், கவர்னர் வாஷிங்டன், சைதாம்பாய், பாரதி, பல்லவி கோபாலய்யா, திவான் தீர்த்தகிரி, போகவதி, அகல்யா பாய் ஆகியோர்

துணைப் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர். சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், அசந்தமித்திரை, வேதிசமாதேவி, பத்மாவதி, காருவகி, சாலாவதி, மகேந்திரன், உபகுப்தர், மகாமாத்திரர்கள், பஞ்சமி, வக்ராயுதன், புருஷோத்தமன், சிரிமா, மகரிகா, தீவிரா, குணாளன், ஜலக், சங்கமித்திரை, சாருமதி, சிரிமாவின் தந்தை ஆகிய துணைப்பாத்திரங்கள் அமைகின்றன.

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில், சஞ்சீவி, சோழகங்கர், களப்பாளன், காஞ்சனை, குப்பண்ணன், அமைச்சர், சீநக்கர், சோழகுல தேவி, மலயசித்தர், நாகினி, ஸ்ரீதேவி, சம்புவராயர், சேதிராயர், காடவராயர், வீரபாண்டியர், விக்ரம பாண்டியன், தங்க நாட்டான், வானவரையர், வைதும்பராயர் ஆகியோரும், ரூப்மதி என்ற புதினத்தில் கலாவதி, அமைச்சர், பைராம்கான், கவிதை ஆசான் முகமது விக்ரம் ஆகியோரும், கானல்கானம் என்ற புதினத்தில் சொக்கநாத வேளார், பெரியநாயகி, கணக்கன் கந்த வேளான், நல்லங் கோனார், நல்லபெருமாள், தாசி வீணை செங்கமலம், சுரமாலை, சுந்தரபாண்டியர் ஆகியோரும், ராஜகர்ஜனையில் ரங்கா ஐயங்கார், யாகின்கான், சுபேதார் குருவய்யா, வேங்கடராமண ஐயர், மாரியட், ருக்கையா பானு, முர்முயின் உதீன் ரோஷாணிபேகம், குலாம் உசைன்கான், இமாம் சாகிப் பக்ஷி, லாலாமியான், புரான் உத்தீன்கான், சையது முகமது, லெட்சுமியம்மாள், திருமலை ராவ், புராந்தி பேகம், மீர் முகமது, பசராஜின்தாய் மஞ்சுளாதேவி ஆகியோரும், காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில் பழையாறை உத்தம தமிழ் பேரரையர், சங்கீரணி, செந்தலை ராஜமுத்தரையர், ருங்தராசாரியார், நிருபகேசரி, வேடராசன், சுவர்ணமுகி, பத்மநாப உடையார், குணபாலர், பீமவர்மர், சோமன், விக்ரமவர்மன், தனஞ்செயர், சுலோச்சனை, லட்சுமி, தருமசேனர், கௌதமி, நர்மதா, சம்பு, வசந்தப்பிரியர், பானுசந்திரிகா, வேலப்பன், சௌந்தர்யா, சிவதாசன் ஆகியோரும், கொல்லிப்பாவை என்ற புதினத்தில் அரிவை, அமைச்சர் பூந்துறையார், அரசி கொடியோள், அகுதை, அதியன், அபலைப் பெண், சேந்தன், புலவர் மூவர், வேண்மாள், எயினன், புலவர் காப்பியாற்றுக் காப்பியனார், மிஞலி, பிண்டன், நந்திகோசர், வக்கிரகோசர், மகாதேவ கோசர், நெடுமிடல் அஞ்சி ஆகியோரும் துணைப்பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

கங்கைநாச்சியார் என்ற புதினத்தில் சுலோச்சனா, ருத்ராபதி, தொலியம்மாள், வேலுதுரை, முத்து வீரப்ப நாயக்கன், பானுமதி, மன்னார்சாமி, ராமப்பய்யர் மனைவி, தம்பித்தேவன், நீலகண்ட தீட்சிதர், குமரன் அழகன், பட்டாணியத் தலைவன், வெங்கம நாயக்கன், அரங்கண்ண நாயக்கன், கொண்டையன், கோட்டைத்தலைவன், ராஜலெட்சுமி, சேதுபதி, கங்கை நாச்சியார், வன்னியத்தேவன், ரகுநாதநாயக்கன், கங்கம்மா, திவான் கிருஷ்ணாராவ், ஜீவாசி சீனுவாரராவ், சாமாராவ், குலாம் அலிகான், நரசிங்கராவ், நாதீம், அப்பாஜி, வசந்தி, சாத்தப்பன், அவனது மனைவி, குழந்தை சிப்பாய், கர்னல் பெய்லி, ஹெக்டர்மன்றோ, இமாம் பக்ஷி குலாம், மிர்சாகான், வில்க்ஸ், விசராம், அப்துல் ரஹ்மான், ராஜாக்கான் சையது கபார் ஆகியோர் துணைப்பாத்திரங்களாவர்.

சேரசூரியன் என்ற புதினத்தில் ஐயகேசிகன், நிவேதி, நற்சோனை, பதுமன் தேவி நல்யினியாள், உதியன் சேரலாதன், இளங்கோ, முரஞ்சியூர் முடிநாகனார், வெளியன் வேண்மான், நாகர்கோன், நாகாசாரியார், குடகுமலை, அரசன், நாகசேனாபதி, அத்தீனா, அறுகை, சோழன் மணக்கிள்ளி, நார்முடிச்சேரல், ஆடு கோட்பாட்டு சேரலாதன், சித்தரையன், கடற்கரைத் தலைவன், வாஞ்சிநாதன், வில்லவன் கோதை, செல்குழுகுட்டுவன், வராகமுனி, சாப்போ, வெள்ளைத் தீவுத்தலைவன், நன்னன், அமைச்சர், பாலசூரியன், புருஷோத்தமன், அவந்திவேந்தன், கோசாம்பிவேந்தன், மினாந்தர், குகன், ஸ்டிராட்டோ, அசந்தோ சிரியா ஆகியோர் துணைப் பாத்திரங்களாவர்.

பூங்குழலி என்ற புதினத்தில் கேசிகன், பூதிவிக்ரம கேசரி, நிரூபதுங்கவர்மன், ஆமாத்தியர் பிரம்பஸ்ரீராஜன், பேரமைச்சர் நம்பன் இறையூர் உடையர், ஆதித்த சோழன், நரசிங்கமுனையரையர், சித்தவடவர், அமைச்சர், அன்பில் கிழார், பாண்டியா தேவிகள், பராந்தகன், இளையதேவி, சிறிய நங்கை, வைரமேகன், அவனது மனைவி, வானாதிராயர், விக்ரமாதித்தன், பெண்புலவர், சீமான் சீவலப்பன், கங்க அரசன் பூதுகன், மாறம்பாவை, பிருதிவீமாணிக்கம், ஆயர்குடித்தலைவன், ஆய்ச்சியர், விஜயாலயர், யசோதை, குணதிகன், காடவன், உத்தமசீலர், ஆயி ஆகிய துணைப்பாத்திரங்கள் அமைந்துள்ளன.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில் சோழகங்கன், இராசராசன், வீரசோழன், கோவிந்த சந்திரன், பராந்தக பாண்டியன், மதுராந்தகி, காளிங்கராயர், தியாகவல்லிதேவி, திரைலோக்யமாதேவி, காடவன் தேவி, சோழகுலவல்லி, காலதேவர், கலிங்கஒற்றன், அமைச்சர் நாராயணபட்டர், இளவேணி, பல்லவராயர், அனந்தவர்மன், எங்கராயர், அனந்த பாலய்யன், சாளுக்கிய விக்ரமாதித்தன், அருண் மொழி நங்கை, தாரவர்ஷன், சேரகேரளன்ளை, ஹொய்சாளன், திரிபுவன பாண்டியன், சுமித்திரை, புலிக் கண்ணன், தாமயன், முடிகொண்டான் என இருபத்தொன்பது துணைப்பாத்திரங்கள் படைக்கப் பெற்றுள்ளன.

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் செவ்வல்லி, வில்லவன் கோதை, அமைச்சர் அழும்பில் வேலாளர், பரணர், இளங்கோ, வேண்மாள், அரிமாக் கண்ணன், எரியங்கன், வெற்றிவேற்செழியன், சங்கநாதர், மலர்குழலி, எதிரிகள் பதின்மர், வில்லவன் தேவி, அரையன்திரையன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செம்முடி நாயக்கன், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம், மதுரை சோமநாதர், சோழ அமைச்சர், நிமித்திகன், நிமித்திகர், ஆலகாலகண்டர், அமைச்சர் மாவிரதியார், வர்த்தகோசராயவல்லார், கணக்காயர், ஒற்றர் தலைவன் நீலன், நாகவல்லி, மாயா, கோவூர்கிழார், புலவர் பெருங்குன்றூர் கிழார், பாண்டியன் நெடுஞ்செழியன், பூங்கோதை, சேரன் நம்பி, அறுகையார், நலங்கிள்ளி ஆகியோர் துணைப்பாத்திரங்களாக இடம் பெறுகின்றனர்.

**பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்கள்**

வடிவேலு, சிவானந்தம், சின்சாமி, தீட்சதர், பாலாசாமி தீட்சதர், சுவாதித்திருநாள், உமார்கான், மீராகான், உசேன் கான், அமர்சிங், துளஜாமன்னர், சியாமா சாஸ்திரிகள், வள்ளலார்கோயில் அம்மணி, வீணை வெங்கடராமய்யர், தேவூர் சுப்பிரமணியய்யர், கூரைநாடு ராமசாமி, திருவழுந்தூர் பில்லவனம், நட்டுவனார் ஐயாசாமி, எஸ்வந்தராவ், காமாட்சி, சைதாம்பாய், காவேரி, உண்ணாமுலை, சிதம்பரம் சுந்தரலிங்க ஐயர், கோவிந்தராவ், வெங்கடராவ், ராமசாமி, தீட்சதர், வரதப்ப தீட்சதர், அண்ணாசாமி தீட்சதர், வீணை குப்பய்யர், முக்தாம்பாள், முத்துத்தாண்டவர், கோவிந்தராமர், வேங்கிடமகி ஆகியோர் குற்றலக்குறிஞ்சி புதினத்தில் பெயர் மட்டும் சுட்டப்பெறும் வகையில் இடம் பெற்றுள்ளனர்.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் முருக்கநாட்டு மூவரயன், தும்பிச்சி நாயக்கன், மூங்கிலனைப் பூசாலி, மருதப்ப தேவன், திருநெல்வேலி, மணவாளராஜா மூசேகான், முகமது சாயபு, படேகான் கிலிசு, செப்பிய நாட்டுத் தலைவர், மங்கலநாட்டுத் தலைவர், வீமன், கருத்த உடையான், விருப்பாட்சி நாயக்கன், காமாட்சி நாயக்கன், வெங்கநாயக்கன் திருமலாம்பாள், மூர்த்தியம்மாள் ஆகியோர் இடம்பெறுகின்றனர். கொல்லிப்பாவையில் நன்னன்சேய் நன்னன், ரூப்மதி என்ற நாவலில் ஹுமாயூன், சுஜாத்கான், குருஜியின் மனைவி ஆகியோரும், ராஜகர்ஜனை என்ற புதினத்தில் பதேஹைதர், ஆற்காட்டு நவாப், பட்டேமுகமது ஆகியோரும், செம்பியன் செல்வியில் பல்லவ வம்சப் பெயர்கள், கடாரத்து அரசன் சூடாமணி வர்மன், மாறவிசயோத்துங்கவர்மன், தஞ்சைத்தலைவர், பஞ்சநதிவாணர், மதனபாலர், விமலாதித்தன், ஜயசிம்மன், முதல் ராசேந்திரன சோழர் குலுத அரசன், முக்கோக்கிழாள், ஏசனன், ராசனன், சம்புலா ஆகியோரும் பெயர் மட்டும் சுட்டப்படும் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

சேரன் குலக் கொடி என்ற புதினத்தில் வேளாவிக் கோமான் பதுமன், பதுமன் தேவி, நெடுங்கிள்ளி, பேகன், கண்ணகி, பெருஞ்சேரல் இரும்பொறை, தானைத் தலைவர் முதுகோசநல்லார், வேழப்படைத்தலைவர், சிரமலைச் சிங்கர், குன்றத்தூர் தளபதி இளங்கோசன் ஆகியோர் பெயரளவில் இடம் பெறுகின்றனர். ஏனைய புதினங்களில் இத்தகைய பாத்திரங்கள் இடம்பெறவில்லை.

**பாத்திர எண்ணிக்கை**

புதினத்தின் வெற்றிக்கும் பாத்திர எண்ணிக்கைக்கும் தொடர்பு உண்டு என்பர். உளவியல் புதினம் என்றால் பாத்திர எண்ணிக்கை குறைவாக இருத்தல் வேண்டும். வரலாற்றுப் புதினங்களில் நிகழ்ச்சிகள் மிகுதியாக இருப்பதால் பாத்திரங்கள் மிகுதியாக இருக்க வேண்டும். எனவே, புதின ஆசிரியர் பாத்திர எண்ணிக்கையைப் புதினத்தின் வெற்றிக்குச் சாதகமாகப் படைத்தல் வேண்டும்.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட கோவி மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் பாத்திரங்களின் எண்ணிக்கை குறித்து நோக்கப்படுகிறது.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில் மொத்தம் நூற்றி மூன்று பாத்திரங்கள் அமைந்துள்ளன. பெயர் மட்டும் சுட்டப்படும் நிலையில் முப்பத்தைந்து பாத்திரங்கள் அமைந்துள்ளன. இரண்டு தலைமைப் பாத்திரங்களும், இரண்டு இணைத்தலைமைப் பாத்திரங்களும், இரண்டு எதிர்த்தலைமைப் பாத்திரங்களும் இருபத்தாறு துணைப் பாத்திரங்களும் முப்பத்தெட்டு சிறு பாத்திரங்களும் இடம் பெற்றுள்ளன.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரங்கள் இரண்டு, இணைத்தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்தலைமைப்பாத்திரம் மூன்று, துணைப்பாத்திரங்கள் முப்பத்து மூன்று, பெயர் மட்டும் சுட்டப்பட்டவை ஐந்து ஆக நாற்பத்து நான்கு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் இரண்டு, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் இரண்டு, துணைப்பாத்திரங்கள் முப்பது, பெயர் மட்டும் சுட்டப்பட்டவை ஏழுமாக மொத்தம் நாற்பத்து இரண்டு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

ராஜ கர்ஜனை என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் இரண்டு, இணைத் தலைமைப் பாத்திரம் இரண்டு, எதிர்த்தலைமைப் பாத்திரம் ஒன்று, துணைப்பாத்திரங்கள் நாற்பத்து இரண்டு என மொத்தம் நாற்பத்து ஏழு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

வேங்கைவனம் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத் தலைமைப் பாத்திரம் இரண்டு, எதிர்தலைமைப் பாத்திரம் ஒன்று, துணைப்பாத்திரங்கள் இருபத்து இரண்டு மொத்தம் இருபத்தாறு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

பூங்குழலி என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் இரண்டு, துணைப்பாத்திரங்கள் முப்பத்தெட்டு என மொத்தம் நாற்பத்து இரண்டு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் இரண்டு, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் மூன்று, துணைப்பாத்திரங்கள் நூற்று இரண்டு ஆக மொத்தம் நூற்று எட்டு இடம் பெற்றுள்ளன.

கொல்லிப் பாவை என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் இரண்டும், எதிர்த்தலைமைப் பாத்திரம் ஒன்றும், துணைப்பாத்திரங்கள் இருபதும் என இருபத்து மூன்று பாத்திரங்கள் அமைந்துள்ளன.

கங்கை நாச்சியார் என்னும் புதினத்தில் ஒரு தலைமைப் பாத்திரம், ஒரு இணைத் தலைமைப் பாத்திரம், இரண்டு எதிர்த்தலைமைப் பாத்திரம், முப்பது துணைப்பாத்திரங்கள் என முப்பத்து நான்கு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் இரண்டு, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் இரண்டு, துணைப்பாத்திரங்கள் அறுபத்தைந்து என மொத்தம் எழுபது பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

ரூப்மதி என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் இரண்டு, துணைப்பாத்திரங்கள் பதினாறு என மொத்தம் பத்தொன்பது பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன.

கானல் கானம் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, துணைப்பாத்திரங்கள் பன்னிரெண்டு ஆக மொத்தம் பதினைந்து பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

சேர சூரியன் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத் தலைமைப் பாத்திரம் ஒன்று, எதிர்த்தலைமைப் பாத்திரம் ஒன்று, துணைப்பாத்திரங்கள் நாற்பது என மொத்தம் நாற்பத்து மூன்று பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் தலைமைப் பாத்திரம் ஒன்று, இணைத்தலைமைப் பாத்திரம், எதிர்த்தலைமைப் பாத்திரம் மூன்று, துணைப்பாத்திரங்கள் நூற்று இரண்டு என மொத்தம் நூற்று ஏழு பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன. ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்களில் அமையும் பாத்திர எண்ணிக்கை குறித்த பட்டியல் பின்னிணைப்பில் (பின்னிணைப்பு எண்: ) தரப்பட்டுள்ளது.

**பாத்திரப் பெயர்**

பாத்திரத்தின் பெயர் குணத்தையும், செய்கையையும் குறிப்பிட்டு வெளியிடுவதாக அமையலாம். ஆனால் வரலாற்றுப் புதினத்தில் வரும் உண்மைப் பாத்திரங்களுக்கு அப்பெயரையே சூட்ட வேண்டும். கற்பனைப் பாத்திரங்களுக்கு வேண்டுமானால் ஆசிரியர் தான் விரும்பும் பெயரை வைக்கலாம். இருப்பினும் அவை வரலாற்றுக் காலத்திற்குப் பொருந்துவதாக அமைதல் வேண்டும். சான்றாக,

கோவி மணிசேகரனின் பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் இடம்பெறும் நாகினி, சஞ்சீவி போன்ற பாத்திரங்களைக் கூறலாம். நாகினி நாகத்தின் குணத்தையும், சஞ்சீவி உயிரைக் காப்பாற்றும் பாத்திரமாகவும் அமைந்துள்ளது. அப்பாத்திரத்தின் குணத்தையும், செய்கையும் வெளிப்படுத்துவனவாக இந்த கற்பனைப் பாத்திரங்கள் அமைந்துள்ளன.

**பாத்திர அறிமுகம்**

புதினத்தில் பாத்திரங்களை அறிமுகப்படுத்துவது வாகசரைக் கவரும் வகையில் அமைதல் வேண்டும். தலைமைப்பாத்திரங்கள், எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் போன்றவைகளை ஆசிரியர் தகுந்த சூழலில் வெளிப்படுத்த வேண்டும். தலைமைப் பாத்திரங்கள் தானே தம்மை அறிமுகப்படுத்தும் போது ஆசிரியர் வாசகரின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைத்தால்தான் புதினம் வெற்றி பெற முடியும்.

ஆசிரியர் தாமே பாத்திரங்களை நேரடியாக அறிமுகப்படுத்தலாம். பிற பாத்திரங்கள் வாயிலாகவும் அறிமுகப்படுத்தலாம். பாத்திரத்தின் புறத்தோற்றம், அங்க அடையாளங்கள், பண்பு நலன்கள் ஆகியவற்றை அறிமுகப்படுத்துவதில் ஆசிரியர் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

ஒரு புதினத்தில் பாத்திரத்தை நேரடியாக அறிமுகப்படுத்துவது ஒருவகை. பாத்திரத்தை நேரடியாக அறிமுகப்படுத்தினாலும் பாத்திரத்தின்பெயரை அப்போது சொல்லாமல் பிறகு சொல்வது இரண்டாம் வகை. ஒரு பாத்திரத்தைப் பற்றிய செய்திகளை முதலில் பிற பாத்திரங்களின் மூலம் தெரிவித்து அப்பாத்திரத்தை எப்போது சந்திப்போம் என்று படிப்போரை எதிர்பார்க்கச் செய்து பின்னே அறிமுகப்படுத்துவது மூன்றாம் வகை என்று அறிஞர் ராமலிங்கம் குறிப்பிட்டுச் செல்வது ஈண்டுச் சுட்டத்தக்கது.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட கோவி மணிசேகரனின் பதின்மூன்று வரலாற்றுப் புதினங்களில் புதினந்தோறும் பாத்திர அறிமுகம் அமைந்துள்ள நிலை இங்கு குறிக்கத்தக்கது. பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் கதைத் தலைவன் விஜய கண்ட கோபாலனை ஆசிரியர் நேரடியாகவே அறிமுகப்படுத்துகிறார்.

"வயிறார புல்மேயும் புரவிகளை நோக்கி அலட்சியப் போக்கில் இதழ்விரித்தான் விசய கண்ட கோபாலன்"[15] என அவனை அறிமுகப்படுத்துவது முதல் வகையாகும். இதே முறையிலேயே துணைப் பாத்திரங்களான சஞ்சீவி, சோழகங்கன், களப்பாளன், காஞ்சனை, குப்பண்ணன், அமைச்சர் சீநக்கர், சோழகுலதேவி, மலயசித்தர், நாகினி, ஸ்ரீதேவி ஆகிய பாத்திரங்கள் முதல்வகையான நேரடி முறையில் அறிமுகப்படுத்தப்படுகிறார்கள். இரண்டாம் வகையில் பத்மினி என்ற பாத்திரம் அறிமுகப்படுத்தப்படுகிறது.

கண்ட கோபாலன் மதுரைக்கு ஒற்றறியத்தானே செல்லும் போது மதுரையின் எல்லைப்புறப் பசுமலைக் காட்டு வழியே செல்கிறான். அப்போது,

மூச்சுத் திக்கு முக்காட ஓடிவந்த அந்தப் பெண் பார்வைக்கு அழகிலக்கியமாக இருந்தாள். வேர்த்து வெலவெலத்து ஓடிவந்து நின்ற அந்த வேல்விழி மாது, ஐய அபயம் அதோ அங்கே ஒருவர்க்குப் பெருத்த ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. பசுமலையில் மறைந்து வாழும் கபாலிகர்கள் நரபலி தாகத்தால் அந்த மனிதரைப் பிடிக்க முயல்கின்றனர். அந்த மாவீர மனிதரோ பலருடன் போராடித் தவிக்கிறார். தயவு செய்து உதவ வாருங்கள் என துடிதுடியாய்த் துடித்தாள். "அவளுடைய மென்மையான அழகு ரோஜாவாகச் சிவந்தது குபீரென்று வேர்த்ததால் அது கருகிவாடவும் செய்தது"[16] என மூன்றாம் இயலில் காட்டப்பட்டு நான்காம் இயலில் அவளது பெயர் அறிமுகப்படுத்தப்டுவது இரண்டாம் வகை.

அதைப்போலவே குமாரக் கூத்தனை மனக் கண்ணில் கற்பனை செய்து பார்த்தும், அவன் வீரத்தினை மனதில் எண்ணியும் வந்தவளுக்கு பத்மினி மூலமாக குமாரக் கூத்தன் எனச் சொல்லப்பட்டு, அந்த இயலில் அவன் காட்டப் பெறுவது மூன்றாம் வகையாகும். இம்முறையிலேயே கோப்பெஞ்சிங்கனும் அறிமுகப்படுத்தப்படுகிறார். மூன்றாம் இராசேந்திரரும் மூன்றாம் வகையிலேயே அறிமுகப்படுத்தப்படுகிறார்.

“அன்று மட்டும் கண்ட கோபாலனுடைய பேச்சை ராசேந்திர சோழர் தட்டிக் கழிக்காமலிந்திருந்தால் இந்நேரம் சடைய வர்மர் சுந்தர பாண்டியத் தேவரின் கை வலுத்திராது ……… சாபத்தின் நிழல் நன்றாகவே படர்ந்துவிட்டது. இராசேந்திரருக்குபோசாளர் சகுனம் கிடைத்தது .......... அன்று உலகம் வியந்த கங்கை கண்ட வெற்றியின் காரணமாக கங்கை கொண்ட சோழபுரத் தலைநகரை உண்டுபண்ணி சின்னமாக்கினார் மாவீரப்புகழ் மாமன்னர் முதலாம் இராசேந்திர சோழர் ................. இன்று அதே கங்கை கொண்ட சோழபுரம் அதே பெயர் கொண்ட மூன்றாம் இராசேந்திர சோழ அரசால் சின்னாபின்னமாக அழிவுபெற ஆயத்தமாகிக் கொண்டிருந்தது”[17] என அவர் பற்றிய செய்திகளுக்குப் பிறகே அவர் அறிமுகப்படுத்தப்படுகிறார். சம்புவராயர், சேதிராயர், காடவராயர், வீரபாண்டியன் விக்ரமபாண்டியன், தங்க நாட்டான், வானவராயர், வைதும்பராயர் ஆகியோர் மூன்றாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

காஞ்சிக் கதிரவன் என்ற புதினத்தில் “ஏ, சூரியனே! எனது காலத்தில் தமிழகம் பிரகாரம் பெற வேண்டும் என்று கண்களை இமைதவழ மனத்துள் தியானித்துக் கொள்கிறான். காஞ்சிக் கதிரவன் – சகலகலா விநோதன் பல்லவ இளவரசன்”[18] என்ற ஆசிரியர், சிம்ம விஷ்ணு, பழையாறை உத்தம தமிழ்ப் பேரரையர், சங்கீரனி, செந்தலை ராஜமுத்தரையர், ருத்தாச்சாரியார், விஸ்வரூபன், நிருப கேசரி, வேடராசன், சுவர்ணமுகி, பத்மநாப உடையார், புலிகேசி, ஜயதேவன், மங்களீசன், குணபாலர், பீமவர்மர், சோமன், விக்ரமவர்மன், தனஞ்செயன் சுலோச்சனை, லட்சுமி, தருமசேகர் ஆகியோர் நேரடியாக முதல்முறையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

புதினத் தொடக்கத்தில் காட்டப்படும் மாதேவிகள் இருவரும் பின்னர் யாழ் அரங்கற்றத்திற்குப் பின்பு பெயருடன் அறிமுகப்படுத்தப்படுகின்றனர். நேரடியாக அறிமுகப்படுத்தப்பட்டு, பாத்திரத்தின் பெயர் பின்னர் சொல்லப்படுவதால் இவர்கள் இரண்டாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

சக்கரவர்த்தி சிம்மவிஷ்ணு அஜந்தாவைப் பற்றி நிருப கேசரியிடம் கேட்க, “அவள் ஒரு ஜாதிக் கவிதை...... கணிகை மரபினராலும் இலக்கண சுத்தமுள்ள கவிதை என்றும் அவளை எனது சக்கரவர்த்தியை நம்புவது போல நம்புகிறேன் எனக் கூறுகிறான்”[19].

இச்செய்தியானது அஜந்தா யார் என்ற கேள்வியை எழுப்புவதும் அவளைஅறிந்து கொள்ள ஆர்வம் காட்டுவதாகவும் இருக்க பின்னரே அவள் அறிமுகப்படுத்தப்படுவதால் இது மூன்றாம் வகையைச் சார்ந்ததாக அமைந்துள்ளது. இந்த மூன்றாம் வகையிலேயே, கௌதமி, நர்மதா, சம்பு வசந்தப்பிரியர், பானு சந்திரிகா, வேலப்பன், நீலவன், விசித்திர சித்தன், ராஜன், ரத்தினம், ரட்சகன், ஸ்ரீ விஜயன் சௌந்தர்யா, சிவதாசன் ஆகியோர் அறிமுகப்படுகின்றனர்.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில் முதல்வகை அறிமுகமாக கதைத் தலைவி பரிமளா அறிமுகப்படுத்தப்படுகிறாள்.

“செக்கர் வானத்து அக்கினிச் சக்கரம் மேலைத் திசையில் கோலம் வரைந்து வையத்துக்கு வாழ்த்துக் கூறி குதூகுல விடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மூங்கில் புதர்களுக்கிடையே ஒரு புல்லாங்குழல் போல ஒற்றைக் குழலில் உணர்ச்சி பிரவாகமாய் குக்கூ என குயில் குரல் கொடுக்கிறது. இந்த அழகின் அகராதியை ரசித்தவாறு பேரழகின் நிகண்டனையை பரிமளாதேவி அழித்தெழுதா ஓவியமாய் படித்தறியா காவியமாய் ஒரு பாறைமீது நின்று கொண்டிருந்தாள்”[20] என முதல் அத்தியாயத்தில் ஆசிரியர் நேரடியாகவே பரிமளாவை அறிமுகப்படுத்துகிறார்.

மேலும் அமைச்சர் பூந்துறையார், அரசி கொடியோள், அகுதை, அதியன், அபலைப் பெண், சேந்தன் புலவர் மூவர், வேண்மாள், எயினன் ஆகியோர் முதல் வகையில் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

இரண்டாம் வகை அறிமுகமாக சேரன் நார்முடிச்சேரல் அறிமுகப்படுத்தப்படுகிறார். பரிமளா பெருந்துறை வெற்றிக்குப்பின் நார்முடிச் சேரலின் மணிமுடியைக் கேட்க நன்னன் தர மறுக்கிறான். அந்த சமயம் “பரிமளா தேவியை பதம்பார்க்க நினைத்தால் உங்கள் தலைகள் பனங்காயாக உருளும் என்று ஒரு கொடூரமான குரல் கேட்கிறது”[21]. எதிர்த்த வீரனை குத்துவாள் எறிந்தும் கொல்கிறான். அந்தக் குரலுக்குரியவனை ஆசிரியர் பாத்திரத்தின் வாயிலாகக் காட்டு மிருகாண்டி என அறிமுகப்படுத்துகிறார். இந்தக் காட்டுமிருகாண்டி பரிமளாவை நிழல்போல் தொடர்ந்து அவளைப் பாதுகாத்து வருகிறான். பரிமளாவால் சஞ்சீவி என அழைக்கப்படுகிறான்.

ஆறாம் அத்தியாயத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட இவன் புதினத்தின் போக்கில் இறுதியில்தான் நார்முடிச் சேரல் என அறிமுகப்படுத்தப்படுகிறான். பதினேழாவது அத்தியாயத்தில் நார்முடிச் சேரல் பரிமளாவைச் சந்தித்ததாகக் காட்டுகிறார். நன்னனைப் பற்றிய செய்திகள் முதல் அத்தியாயத்தில் கூறப்பட்டு வருகின்றது. கொண்கான தேசத்தையாளும் கொடுமைமிக்க நன்னன் என அவனைப் பற்றிய செய்திகள் கூறப்பட்டு, பின்பு அவன் அறிமுகப்படுத்தப்படுவது மூன்றாம் வகையில் அமைகிறது.

"பரிமளாவின் ராட்சத வீரப்பயிற்சியினைக் கண்டு அதிசயித்த அவன் மதுவை மாந்தி பரிமளாவைப் பற்றி விவரம் கேட்டுவர ஆணையிடுகிறான்"[22] என இவனது அறிமுகம் மூன்றம் வகைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

இதே வகையிலேயே புலவர் காப்பியாற்றுக் காப்பியனார், நன்னன் சேய் நன்னன், பிண்டன், நந்திகோசர், வக்கிர கோசர், மகாதேவ கோசர், நெடுமிடல் அஞ்சி ஆகியோர் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

கங்கை நாச்சியார் புதினத்தில், கதைத் தலைவன் நாராயணத் தேவன் ஆசிரியரால் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகிறான். முதலாவது அத்தியாயத்தில் "மதுரைக்குத் தெற்கே இருகாவத தொலைவில் இருட்டிவிட்டதால் ஓய்வு காணுமாறு உத்தரவு பணிக்கிறான் இளைய சேதுபதி நாராயணத்தேவன்"[23] என அறிமுகப்படுத்தப்படுகிறார். இதன்மூலம் இப்பாத்திரம் பாத்திர அறிமுக வகைகளுள் முதல்வகையில் அமைவதைக் காணமுடிகிறது.

வேலுதுரை மற்றும் குமார முத்து நாயக்கன், திருமலை நாயக்கர், பட்டத்தரசி ருத்தராபதி, இரண்டாவது பட்டத்தரசி தொலியம்மாள், தளவாய் ராமப்பய்யன் மனைவி, தம்பித்தேவன், குமரன் அழகன், பட்டாணியத்தலைவன், வெங்கமநாயக்கன், அரங்கண்ண நாயக்கன், கொண்டையன் கோட்டைத்தலைவன் என்பவர்களும் முதல் வகையில் நேரடியாக அறிமுகம் செய்யப்படுகிறார்கள். இவர்களைத் தவிர சுலோச்சனை, முருக்க நாட்டு மூவரையன், தும்பிச்சி நாயக்கன், மூங்கிலனைப் பூசலி, மருதப்ப தேவன், திருநெல்வேலி மணவாளராஜா, முசேகான், முகமது சாயுபு, படேகான் கிலிசு, செம்பிய நாட்டுத் தலைவர், மங்கல நாட்டுத்தலைவர், வீமன், கருத்த உடையான்,

விருட்பாச்சி நாயக்கன், காமாட்சி நாயக்கன், தொண்டம நாயக்கன், வெங்கம நாயக்கன், அச்சுதப்ப நாயக்கன், திருமலாம்பாள், மூர்த்தியம்மாள் கூத்தன் சேதுபதி ஆகியோர் பெயரளவில் இடம் பெறுகின்றனர்.

இளவரசி கங்கை நாச்சியாரின் தோழி முதல் அத்தியாயத்தில் அறிமுகப்படுத்தப்பட்டு, பின்புதான் மூன்றாம் அத்தியாயத்தில் ராஜலெட்சுமி என இரண்டாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகிறார்.

சேதுபதி நாராயனத் தேவனால் மலையப்பனிடமிருந்து காப்பாற்றப்பட்ட கங்கை நாச் விடிந்ததும் வேலுதுரையின் துணையுடன் அரண்மனைக்கு வருகிறாள். இரவு நடந்த நிகழ்வை திருமலை நாயக்கர் தோழிப் பெண்ணிடம் கேட்க அவள் கங்கை நாச்சியார் கூறியது போலவே கூற, “பளீர், கன்னத்தில் விழுந்த அறை, ராஜலெட்சுமி பொறி கலங்கிப் போனாள்”[24] என இரண்டாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகிறார்.

அதேபோல சிறையதிகாரி பெயரளவில் சிறையதிகாரி என்றே கூறிவந்து பிற்பாடே பெரிய தேவியார் நரசிம்ம நாயக்கரே என விளிக்கப்பட்டு அறிமுகப்படுத்தப்படுகிறார். சேதுபதி நாராயணத் தேவனை தப்புவிக்கும் திட்டத்தில் பெரிய தேவியார் ருத்தராபதி ஈடுபடுகிறார். அப்போது சிறையதிகாரியைப் பார்த்து நான் உள்ளே சென்று திரும்புகிற வரையில் காவல் கடுமையாக இருக்க வேண்டும்.

“………… நரசிம்ம நாயக்கரே! இந்த ரகசியம் உங்களுக்கு மட்டுமே தெரியும் யாருக்கும் தெரியக்கூடாது”[25] என எச்சரிக்கும் போது அவரது பெயர் சுட்டிக்காட்டப்படுகிறது.

சடையத் தேவர் புதினத்தின் ஆரம்பத்திலிருந்தே சுட்டிக்காட்டப்படுகிறார். அவரது வீரம் திறமை ஆகியவை அவ்வப்போது சுட்டிக்காட்டப்பட்டு வருகிறது. அந்தப் பாத்திரத்தை எப்போது சந்திப்போம் என்ற வாசகர்களின் அவா, பதினேழாம் அத்தியாத்திலேயே பூர்த்தியாகிறது. இது மூன்றாம் வகையைச் சார்ந்ததாக அமைகிறது.

நாராயணத் தேவன் கங்கை நாச்சியை சேது நாட்டுக்கு (சிறையெடுத்து) அழைத்து வந்து தன் தாய்க்கு அறிமுகம் செய்து வைக்கிறான்.

“சேதுபதி சடையத் தேவர் வைத்த கண் வாங்காது கவனித்து அந்த உருவம் கங்கை நாச்சியின் உருவத்தை நெஞ்சில் பதிய வைத்துக் கொண்டார்”[26] என இடத்து அவரை நேரே சந்திக்கிறோம்.

இவரைப் போலவே, கங்கை நாச்சியார் வன்னியத் தேவர் ரகுநாதன் ஆகியோரும் மூன்றம் வகைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளனர்.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில்,

“கலகலப்பாக விழித்துக்கொண்ட பாடலிபுத்திரத்தின் இனிமை நிறைந்த தோற்றத்தை வழக்கம்போல் அரண்மனையின் உப்ரிகையல் நின்றவண்ணம் கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தார் தேவனாமப்பிரியரான மகதமகா சக்ரவர்த்தி அசோகவர்த்தனன்”[27] என்று முதல் அத்தியாயத்தில் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகிறார்.

இந்தப் பாத்திரத்தைப் போலவே அசந்தமித்திரை, வேதிசமாதேவி, பத்மாவதி, காருவகி, சாலாவதி, மகேந்திரன், உபகுப்தர், மகாமாத்திரர்கள், பஞ்சமி ஆகிய பாத்திரங்கள் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகின்றன. இது முதல் வகையைச் சார்ந்தது.

“நமது பிரதேசிகர்களின் தலைவரான அமிர்த்சாகரர்”[28] பிரேதிகர் என பல இடங்களிலும் அறிமுகமான இப்பாத்திரம் இருபதாவது அத்தியாயத்தில் அமிர்தசாகரர் என அறிமுகப்படுத்தப்படுவது இரண்டாம் வகையாகும்.

இவரைப் போலவே வஜ்ராயுதன், புருஷோத்தமர் ஆகியோரும் இரண்டாம் வகையிலேயே அறிமுகப்படுத்தப்படுகின்றனர். முதல் அத்தியாயத்தில் “சந்திர மௌலியை எப்படியெல்லாம் உருவாக்கிப் பார்க்க வேண்டும் என அசோக வர்த்தனர் கற்பனை செய்தார். அதற்காக அவர்பட்ட பாடுகள் எத்தனை; பாதுகாத்த தோரனைகள் எத்தனை! ஆனால் இன்று அத்தனையும் பொடிபடச் செய்துவிட்டானே, போக்கற்று, புனிதமற்று புழுதியில் நெளியும் புழுவாகவல்லவோ போய்விட்டான். அவனை நடத்துவது எப்படி, திருத்துவது எப்படி புரியவில்லையே”[29] என புலம்புகிறார் அசோகர்.

எத்தனையோ காரணங்கள் அடுக்கடுக்காக இருக்கின்றனவே, கொலைப்பட்டியலை வரிசைப்படுத்தட்டுமா; இல்லை மகதமாந்தர்களுக்கு அவன் புரிந்த கொடுமைகளின் பட்டியல் பற்றிப் பேசட்டுமா என நொந்து கொள்ளகிறாள் அவனைப் பெற்ற தாய் அசந்தமித்திரை.

வளர்ப்புத்தாயான வேதிசமாதேவி அவன்மீது உயிரையே வைத்திருக்கிறாள். "புத்திமதிகள் கூறும்போது பொறுமையாக கேட்கின்றானேயொழிய அரண்மனையைத் தாண்டியதும் அவற்றை இதயத்தினின்று எடுத்து வெளியே எறிந்துவிடுகிறான். ஆயினும் அவனை என்னால் திருத்த முடியும் என்ற நம்பிக்கை பரிபூரணமாக இருக்கிறது"[30] என வேதிசமாதேவி கூறுகிறார். இப்படி ஒவ்வொருவர் மூலமாகவும் சந்திரமௌலியைப் பற்றி செய்திகளை அறிந்து அவன் எப்போது வருவான் என்ற எதிர்பார்ப்பை உருவாக்கிய பாத்திரம் இதுவாகும்.

"திரிஷ்யாவின் மாளிகையில் வெள்ளை நாகம் புகுந்தபோது கொடிய நாகம்தான் உள்ளே மனித உருவில் நுழைந்து கொண்டிருந்தது. அந்த நாகத்தை அப்போதைக்கு ஒரு நாகமே வரவேற்றது. வா சந்திர மௌலி நல்ல சமயத்தில் வந்தாய் அரண்மனையில் நாகம் புகுந்துவிட்டது"[31] என மூன்றாவது வகையில் அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர்.

இந்த வகையில் திரிஷ்யரஷகா, புஷ்பமாலிகா, புலிந்தகன், சிரிமா, மகரிகா, தீவிரா, குணாளன், ஜலக், சங்கமித்திரை, சாருமதி, சிரிமாவின் தந்தை ஆகியோர் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

"ரூப்மதி என்ற புதினத்தில் தன் மகள் ரூப்மதி நாடோடிக் கவிஞனை காதலிப்பதாக அறிந்த செயல் ராஜபுத்திர அரசர் தாகேரின் சினத்தை கிளறி சீற்றம் கொள்ளச் செய்துவிட்டு"[32] என்று முதலாம் அத்தியாயத்தில் நேரடியாக இப்பாத்திரம் அறிமுகம் செய்யப்படுகிறது.

இவர் தவிர தோழிப்பெண் கலாவதி, அமைச்சர், ஆதம்கான், பைராம்கான், கவிதை ஆசான், முகம்மது, விக்ரம் ஆகியோர் முதல் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

ஹிமாயூன் சுஜாத்கான் குருஜியின் மனைவி ஆகியோர் பெயரளவில் குறிக்கப்படுகின்றனர்.

இரண்டாம் வகை அறிமுகத்தில் நாடோடிக் கவிஞன் அறிமுகப்படுத்தப்படுகிறான். வாசகர்களிடையே நாடோடிக் கவிஞன் என அறிமுகப்படுத்தப்பட்ட அந்தப் பாத்திரம் ரூப்மதியின் வாயால்,

“மாளவத்தின் ஒரு பகுதியான மாண்டுவை நல்ல நகராகக் கொண்டு ஆட்சிபுரியும் வீரமாப் புருஷர் பாஸ்பகதூர்”[33] என அறிமுகப்படுத்தப்படுகிறது. மூன்றாம் வகையில் ரூப்மதி என்ற கதைத் தலைவிப் பாத்திரம் அறிமுகப்படுத்தப்படுகிறது.

சாரங்கபுரி அரசர் தாகேர் அமைச்சர் வாயிலாக ரூப்மதியின் அழகு, இசைஞானம் ஆகியவையும் அவரது காதலைப்பற்றியும் அறிந்த வாசகருக்கு 8-வது பக்கத்தில் “அந்தப்புரத்தில் தனது அறையில் அமர்ந்து தம்பூர் மீட்டி இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தாள் பேரழுகு காப்பியமான ரூப்மதி”[34] என மூன்றாம் வகையில் ஆசிரியர் இப்பாத்திரத்தை அறிமுகப்படுத்துகிறார்.

இந்தப்பாத்திரத்தைப் போலவே அக்பர் என்ற வரலாற்றுப் பாத்திரமும் மூன்றாம் வகை அறமுகமாக புதினத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.

கானல் கானத்தில் “மா . . . என்று இனிதாக அழைத்த அந்தக் கன்றை இன்றைக்கெல்லாம் பார்க்கலாம் போல் தெரிந்தது; இளவெண்மதி சூடிணனுக்கு”[35] என முதல் அத்தியாயத்தில் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுவது முதலாவது வகை அறிமுகமாக அமைகிறது.

மேலும் சொக்கநாத வேளார், அவரது மனைவி பெரிய நாயகி, கணக்கன் கந்தவேளான், நல்லங் கோனார் ஆகியோர் முதலாவது வகையில் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

இரண்டாம் வகையில் இளவெண்மதி சூடினனுடைய காதலி சுரமாலையின் தந்தை தனவந்தர் என குறிக்கப்பட்டு வந்த செந்திருவேளார் இரண்டாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

“அத்தனவந்தர் எக்காரணம் பற்றி உதவி செய்யமுன் வந்தாரோ யாருக்கும் தெரியாது. தான் விரும்பிய எதிர்காலத்தை அவர் உதவிய பொருளைக் கொண்டுதான் உருவாக்க முயன்றான். இளவெண்மதி சூடினான்”[36] என தனவந்தர் எனக் குறிக்கப்பட்ட அந்தப் பாத்திரமானது இரண்டாம் வகை அறிமுகமாக உணர்த்தப்படுகிறது.

மூன்றாம் வகையில் நல்லபெருமாள், தாசி வீணை செங்கமலம், சுரமாலை, சுந்தரபாண்டியர் ஆகிய பாத்திரங்கள் அறிமுகப்படுத்தப்படுகின்றன. “அப்போதுதான் உள்ளே மாமா மக. . மக … என மத்திமத்தில் நின்று சுரவிந்நியாசத்தை செய்து காட்டிக் கொண்டு இருந்தாள் இசையரசி வீணை செங்கமலம்”[37] என அறிமுகப்படுத்தப்படுகிறார் இளவெண்மதியின் வளர்ப்புத்தாயான பெரிய நாயகியும் சொக்கநாத வேளாருக்கும் நடந்த உரையாடலை நல்ல பெருமாள் ஒற்றுக்கேட்கிறான்.

சின்னஞ்சிறு வயது முதலே நல்லபெருமாள் வளர்க்க வேண்டிய முறையில் வாழ்வைப் புரிந்து கொள்ள வேண்டிய முறையில் வளர்க்கப்பட்டவனன்று எனப் பல இடங்களில் அவனைப்பற்றிய செய்திகள் கூறப்பட்டபின் இளவெண்மதி சூடினனுடைய பிறப்பு பற்றிய செய்தியை, அவன் வளர்ப்பு மகன் என்பதை அறிந்து கொள்வதாகக் காட்டப்படுகிறான்.

“வேங்கைவனம் என்னும் புதினத்தில், வேங்கை வனத்துப் பளிங்கு மாளிகையின் வாசற்படிக்கட்டுகளில் எளிமையாக அமர்ந்து திருமேனி என்னும் தித்திக்கும் காப்பியத்தை தனது வாசனை நெஞ்சில் வாசித்துக் கொண்டிருக்கின்றான். கானப்பேரெயில் குறுநிலத்தை ஆண்டுவரும் காவலன் வேங்கை மார்பன்”[38] என நேரடியாக முதலாம் அத்தியாயத்தில் முதல் வகை அறிமுகமாக இந்தப் பாத்திரம் அறிமுகப்படுத்தப்படுகிறது.

தியாகவல்லி, ஒற்றன் பசுபதி, ஏனாதிகாளிங்கன், பாண்டிய மன்ர் உக்கிரமப் பெருவழுதி, அமைச்சர் தும்பூர் சாத்தனார், உருத்திரசன்மர், சேனாதிபதி அழகன் நம்பி, பாண்டிமாதேவி, தென்னவன் வேளான், அமைச்சர் குறுமலைக் கிழார், ஐயூர் மூலங்கிழார், ராஜசிங்கன், மாங்குடி மருதனார் ஆகியோர் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

இரண்டாம் வகையில் எந்தப் பாத்திரமும் அறிமுகப்படுத்தப்படவில்லை.

மூன்றாம் வகையில் திருமேனி என்ற கதைத் தலைவிப்பாத்திரம் அறிமுகப்படுத்தப்படுகிறது. திருமேனி புகழை அழகை, அறிவைக் கேள்விப்பட்டுக் காதல் வயப்பட்ட வேங்கைமார்பன் அவளைக் காணச் செல்கிறான்.

"அழகுக்காவியம், நீரில் தனது கால்களை உசுப்பி உசுப்பி அலசிக் கொண்டிருக்க என்னும் பகுதி அவளைப் பற்றிய அறிமுகமாகிறது"[39].

வைகைக் கறையில் முதலையிடமிருந்து மந்திரிகுமாரி என்று கூறிய திருமேனியைக் காப்பாற்றுகிறான். அவன்தான் திருமேனி என்று அறியாமல் அவனும் பொய்யுரைக்க விதி சதி சொல்கிறது. பாண்டிய நாடே அவனை மருமகனாக ஏற்றுக்கொள்ள தயார் நிலையில் இருந்த போது ஒருவருக்கொருவர் பொய்யுரைத்த காரணத்தால் வெறுப்புற்றுக் கோபமுற்று திருமேனியை வாசகர்களுக்கு மூன்றாவது அத்தியாயத்தில் வேங்கை மார்பனோடு பேசுவதாக அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர். ஆயினும் வைகைக் கரையில் மந்திரி குமாரி என அறிமுகப்படுத்தப்படுகிறது இந்தப் பாத்திரம்.

ராஜகர்ஜனையில் "குடிமகனாய்ப் பிறந்து, முடிமகனாய்ச் சிறந்து வெள்ளைக் கும்பினயார்க்கு இடிமகனாய் தேசியக் கொடி மகனாய்த் திகழ்ந்து வரும் தென்னகத்து மாவீரச்சுல்தான் மைசூர்புலி ஹைதர்அலி தமது இனிதான தொழுகையை முடித்துக் கொண்டு எழுந்து நின்று வானத்தை அண்ணாந்து கவனிக்கிறார் என முதலாம் அத்தியாயத்தில் நேரடியாக ஆசிரியரால் அறிமுகப்படுத்தப்படுகிறார்"[40]. இது முதலாம் வகை அறிமுகமாக அமைந்துள்ளது.

மேலும் பகுருன்னிசா, பௌஜ்தார், முகமது அலி, திவான் மீர் சாதிக், திவான் பூரணய்யா, ஒற்றர் தலைவர் சாமா ஐயங்கார், தபால் அதிகாரி ரங்க ஐயங்கார், யாசின்கான், சுபேதார் குருவய்யா, வேங்கட ரமண அய்யர், மாரியட், ருக்கையாபானு, மீர்முயின் உதீன், ரோஷணிபேகம், குலாம் உசைன்கான், இமாம் சாகிப் பக்ஷி, லாலாமியான், புரான் உதீன்கான், சையது முகமது லட்சுமியம்மாள், திருமலைராவ், சுல்தானா பேகம் சஹிப் புராந்திபேகம், மீர்முகமது, ஃபதேஹைதர், மஞ்சுளாதேவி

கங்கம்மா, திவான் கிருஷ்ணாராவ், ஜிவாசி சீனிவாசராவ், சாமாராவ், குலாம் அலிகான், பட்டேமுகமது, நரசிங்கராவ், நாதீம், அப்பாஜி, வசந்தி, சாத்தப்பன், அவனது மனைவி, குழந்தை சிப்பாய், கர்னல், பெய்லி, ஹெக்டர் மன்றோ, இமாம் பக்ஷிகுலாம், மீர்சாகான், கர்னல் ப்ளெட்சர், ஆற்காட்டு நவாப், அப்துல் கரீம், அயாஸ்காவான் சர் அயர்குட், கர்னல் வில்க்ஸ், சிவராம், அப்துல் ரஹ்மான் போன்ற பாத்திரங்கள் நேரடியாகவே அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

இரண்டாம் வகை அறிமுகம் புதினத்தில் இடம் பெறவில்லை.

மூன்றாம் வகை அறிமுகமாக திப்பு சுல்தான் அறிமுகப்படுத்தப்படுகிறார். ஹைதர் மகன் திப்புவிற்கு இளவரசுப்பட்டம் கட்டியநாளின் மாலையில் பேரம்பாக்கம் போருக்கு ஆயத்தமாகிப் புறப்பட இருக்கிறார். அந்த சமயம் திப்புவைக் காணவில்லை என்ற கோபம், அரங்கன் கோவில் மணியோசை கேட்ட மாத்திரத்தில் அவன் ரங்கநாயகியைச் சந்திக்கப் போயிருப்பான் என்றும் நினைக்கின்றனர். ஹைதர் அவரின் புரவியில் ஏறும்போது எங்கிருந்தோ வந்த குண்டு அவரை உரசிக்கொண்டே செல்கிறது. அந்த சமயம் நான்கு புரவிகள் குற்றவாளியைப் பிடிக்க ஓடுகின்றன. “அதில் திப்பு பசவாராஜ், ராஜாக்கான், சையது கபார் ஆகியோர்கள் செல்கின்றனர்”[41] என மூன்றாம் வகையாக அறிமுகம் செய்யப்படுகிறது.

ரங்க நாயகியும் அப்துல் கரீமும் இவ்வகையிலேயே அறிமுகம் செய்யப்படுகின்றனர்.

சேரசூரியன் என்ற புதினத்தில், “கூபகத் தீவு அரசகுமாரி சூரிய சீலி வருகை தந்து அந்த நள்ளிரவில் அனைத்தையும் பார்வையிட்டது போல பாவனை செய்து பெருங்கலமொன்றில் புகுந்து தனது தோழியுடன் ஏதோ ஆலோசனை நடத்துகிறாள் கவனம்”[42] என நேரடியாக ஆசிரியர் அறிமுகப்படுத்துகிறார். இது முதல் வகை அறிமுகமாகும்.

இதனைப் போலவே ஜயகேசிகன், நிவேதி, நற்சோனை, பதுமன் தேவி, நல்லினியாள், உதியன் சேரலாதன், செங்குட்டுவன், இளங்கோ, முரஞ்சியூர் முடிநாகனார், வெளியன் வேண்மான், நாகர்கோன், நாகாசாரியார், குடகுமலை அரசன்,

நாக சேனாபதி, அத்தீனா, அறுகை, சோழன் மணக்கிள்ளி, நார்முடிச்சேரல், ஆடு கோட்பாட்டு சேரலாதன், சித்தரையன், கடற்கரைத் தலைவன், வஞ்சிநாதன், வில்லவன் கோதை, செல்குழு குட்டுவன், (குட்டுவன் சேரல்) வராகமுனி, சாப்போ, சேனாபதி வெள்ளைத் தீவுத் தலைவன், நன்னன், அமைச்சர், பாலசூரியன், புருஷோத்தமன், அவந்தி வேந்தன், கோசாம்பி வேந்தன், மினாந்தர், குகன், ஸ்டிராட்டோ, அசந்தோகிரியா ஆகிய பாத்திரங்கள் முதல்வகை அறிமுகமாக இடம் பெற்றுள்ளனர்.

இரண்டாம் வகை பாத்திர அறிமுகத்தில் திரிலோசனைக் கடம்பன் என்ற பாத்திரம் அறிமுகப் படுத்தப்படுகிறது. "திரிலோசனைக் கடம்பன் என்ற கொள்ளைத் தலைவன் கனவில் கூட அனைவருக்கும் அச்சுறுத்தும் பாத்திரம். புதினம் முழுவதும் நம்மிடையே திரிலோசடைக்கடம்பன் பயணித்து வருகிறான். அநத திரிலோசனைக் கடம்பன் யார் என்பது யாருக்கும் தெரியாது. அவனைக் கண்டவரில்லை. பெயரோ அச்சுறுத்தும் மந்திரமாகச் செயல்படுகிறது"[43].

நாகா என்ற நாகர்குலப்பெண் தானே திரிலோசனைக்கடம்பனாக உருமாறி அனைவரையும் ஏமாற்றி வருகிறாள். ஒவ்வொரு பெண்ணும் திரிலோசனைக் கடம்பன் கொடுமையை அவரவர் மனப்பாங்கில் கற்பனை செய்த வண்ணம் அஞ்சி நடுங்கினர்.

நெடுஞ்சேரலாதன் திரிலோசனைக் கடம்பனை அழிக்கவே கடற்போருக்குப் புறப்பட்டான். கடற்போர்த்தலைவனாக செங்குட்டுவன் செல்ல, சேரலாதன் இமயவரம்பிற்குச் செல்ல முடிவு கட்டினான்.

நாகாவின் மாமாவான வராகமுகிதான் திரிலோசனைக் கடம்பன் என தன்னிடம் சிறைப்பட்ட நாகாவிடம் சேரலாதன் கூற அவள் மறுக்கிறாள். சேரமான் மேல்தளம் சென்று திரிலோசனைக் கடம்பனை அனுப்புகிறான். நாகாவோ அவனுடன் போராடி அவன் திரிலோசனைக் கடம்பன் அல்ல பொய்யன் என வாதாடுகிறாள்.

தன் கூந்தலில் வைத்திருந்த விஷ நாகத்தை அவிழ்த்து விடுகிறாள். அதை திரிலோசனைக் கடம்பன் வெட்ட அதனைத் தடுக்கப்போய் திரிலோசனைக் கடம்பனது முகத்திரை கிழிகிறது. நாகா நடுங்குகிறாள்.

வெள்ளைத் தீவை வெற்றிக்கண்ட செங்குட்டுவன் கைதிகளை திரிலோசனைக் கடம்பனை, “அடேய் . . . . . . . உனது மரண தண்டனையை எனது வாளே நிறைவேற்றட்டும் என்று சீறிப்பாய நாகா அவன் காலைபற்றி தடுக்கிறாள். நாகாவை எட்டி உதைத்த செங்குட்வனை, பெண்ணை அவமதித்ததாக சேரர் சரித்திரத்தில் நிகழ்ச்சிகள் இல்லை”[44] என மண்டபமே அதிரக் கர்ஜித்தான் திரிலோசனைக் கடம்பன் முகத்திரையை விலக்க நெடுஞ்சேரலாதனைக் காண்கின்றனர்;

பூங்குழலி என்ற புதினத்தில் கதைத் தலைவன் நந்திவர்மபல்லவர் நேரடியாக ஆசிரியரால் அறிமுகப்படுத்தப்படுகிறார்.

“தமிழ் என்றாலே தம்மையே தாரைவார்க்கும் தார்வேந்தர், நெஞ்சங்கள் குடைசாயக் குருக்கோட்டை நகரை குருஷேத்திரமாக்கிய கோமகனார் தினவெடுத்த பாண்டியரைத் தொள்ளாற்றில் புறம் கண்டு வெற்றியின் தினவெடுத்த வீரசிங்கம் நந்திக்கொடிக்கே நன் மகுடம் சூட்டி நாற்றிசைக்கும் புகழ் சொன்ன நந்திவர்ம பல்லவ மாமன்னர் மாமல்லபுரம் நோக்கிப் பயணமாகும் மர்மம் புரியாது பலர் விதிர்த்தனர் சிலர் வியந்தனர்”[45] என ஆசிரியர் நேரடியாக அறிமுகப்படுத்துவது முதலாவது வகை அறிமுகமாகும்.

மேலும் கேசிகன், கொடும்பாளூர் பூதிவிக்ரம கேசரி, நிருபதுங்க வர்மன், ஆமாத்தியர் பிரம்மஸ்ரீராஜன், பேரமைச்சர் நம்பன் இறையூர் உடையார், ஆதித்தசோழன் நரசிங்க முனையரையர் திருக்கோவிலூர் அரசர் சித்தவடவர், அமைச்சர் அன்பில்கிழார், பாண்டிமா தேவிகள், பராந்தகன், இளையதேவி, சிறியநங்கை, வைரமோகன், அவனது மனைவி, வானாதிராயர், விக்ரமாதித்தன், பெண்பால் புலவர், சீமாற சீல்லபன், கங்கநாட்டு அரசன் பூதுகன், மாறம்பாவை, பிருதிவீமாணிக்கம், ஆயர்குடித் தலைவன், ஆய்சியர், யசோதை, குணதிகன், காடவன், உத்தமசீலர், ஆயீ ஆகியோர் நேரடியாக அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

“பூங்குழலி நீ சொல்வது எனக்கு ஒன்றுமே புரியவில்லையம்மா! ஏதோ ஊமை என்று எண்ணியிருந்தவரிடம் நீ பேசத் தொடங்கவே, வறிஞுனுக்குப் புதையல் கிடைத்த மகிழ்ச்சியுற்றேன். இப்போது நீ பேசாமலேயே இருந்திருக்கலாமே என்று

தோன்றுகிறது"[46] என விஜயாலயர் கூறும் போது சித்தபிரம்மை வந்தவள் போல நடித்து, தான் பூங்குழலியின் சகோதரி கோமதி என அனைவரையும் நம்பவைக்கிறாள். நந்திவர்மனிடம் ஒப்படைத்த பிறகும் கூட அவனிடமே நடிக்கும் பாத்திரமாக காட்டப்படுகிறாள். பூங்குழலி என்ற உண்மையான பாத்திரம் அவளின் தங்கையாக நடித்து நம்பவைப்பது ஆசிரியரின் மற்ற புதினங்கள் சிலவற்றில் இருப்பது போலவே அமைந்துள்ளது.

குற்றாலக் குறிஞ்சியில் முதல்வகை பாத்திர அறிமுகமாக சரபோஜி மன்னர் அறிமுகப்படுத்தப்படுகிறார். "அரண்மனை மேல் மட்டத்தில் நின்று சரபோஜி மன்னர் ஆதித்த இருதய மந்திரத்தை ஜபிக்கிறார்"[47] என ஆசிரியர் நேரடியாக தலைமைப்பாத்திரத்தை அறிமுகப்படுத்துகிறார்.

மேலும் சர்க்கேல் ராமோஜி, கோட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், கோமதி, சேனாதிபதி கிருஷ்ணாஜி கேசவ், ஜான், ராஜகாந்தி, வடிவேலு, சிவானந்தம், திருநெல்வேலி பாளையக்காரர், திருநெல்வேலி திவான், விருபாட்சக்கவிராயர், குற்றாலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, புவனா, சின்னச்சாமி தீட்சதர், பாலாசாமி தீட்சிதர், திருக்கடையூர் பாரதி வள்ளலார் கோயில் அம்மணி, திருவாரூர் கமலம், வீணை வெங்கடராமய்யர், தேவூர் சுப்பிரமணியன், கூரைநாடு ராமசாமி, திருவழுந்தூர் பில்லவனம், நட்டுவனார் ஐயாசாமி, சுப்பலெட்சுமி அம்மாள், அன்னபூரணி, தீட்சதரின் முதல் மனைவி, இரண்டாம் மனைவி, திருச்சி பாளைக்காரர், முத்துசாமி தீட்சதர், சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள், ஞானசுந்தரம், கற்பகம், பொன்னையாபிள்ளை, சின்னையாபிள்ளை, தியாகபிரும்மம், ராஜரகுநாத தொண்டைமான், புதுக்கோட்டை அமைச்சர், திருமழபாடி பிரபு ராஜாராமன், ஆனய்யா, உதவி கலெக்டர் சாம்சன், கோபாலகிருஷ்ணபாரதி, மேருசுவாமிகள், சுவாதித்திருநாள், ஜான் . . . . . பைப் சுவாஷ், எஸ்வந்தராவ், ராமச்சந்திரராவ், காமாட்சிபாய், சைதாம்பாபாய், நாதசுரவித்வான் ராமலிங்கம் பிள்ளை, தவிர் சக்ரவர்த்தி வலங்கைமான் சுந்தரம்பிள்ளை, உடையார் பாளைய ஜமீன்தார், அபிராமி, சிவசங்கர ஐயர், அருணாச்சலம் செட்டியார், சுந்தரி உமார்கான், மீராகான், உசேன்கான், காவேரி, உண்ணாமுலை, வல்லப உடையத்தேவர், (கௌரிவல்லபன்) இளைய வல்லபத்தேவ உடையார், ஆற்காட்டு

நவாப், ஆஜம்ஜா, திவான் தீர்த்தகிரி, அபிராமிபட்டர், கொலைகாரர்களில் ஒருவன், அமர்சிங், துளஜாமன்னர், ஸ்வார்ட் துரை, பிடில் வித்வான் துரைசாமிபிள்ளை, பொன் தீட்சதர், சிதம்பரம் சுந்தரலிங்க ஐயர், பாரதி முத்தோஜி கோவிந்தராவ், சின்ன அண்ணா வேங்கடராவ், ராமசாமிய்யா தீட்சத, வரதப்ப தீட்சதர், சுப்பராய சாஸ்திரிகள், அண்ணாசாமி சாஸ்த்ரி, வீணை குப்பய்யர், ஞானம் கிருஷ்ணய்யன், தஞ்சை நரேந்திரன், கடம் சிதம்பர ஐயர், கிஞ்சிரா ராதாகிருஷ்ணய்யர், பிடில் வெங்கடாசலமய்யர், முகர்சிங் மோகனதாசர், போகவதி, வக்கீல் கோபாலராயர் ஆகிய பாத்திரங்கள் நேரடியாக ஆசிரியரால் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

முக்தாம்பாள், முத்துத் தாண்டவர், கோவிந்தராமர், வேங்கடமகி போன்றவை பெயரளவில் சுட்டப்பட்டுள்ளன. இரண்டாம் வகை அறிமுகத்தில் எந்தப்பாத்திரமும் இடம் பெறவில்லை.

மூன்றாம் வகை அறிமுகத்தில் சில பாத்திரங்கள் இடம் பெறுகின்றன.

“சம்பளம் தருபவர் சரபோஜி! எப்படியும் குறிஞ்சி இந்த அரண்மனைக்கு விஜயம் செய்தாக வேண்டும்”[40] என முதல் அத்தியாயத்தில் கூறப்பட்ட குறிஞ்சி கும்பகோண சங்கரமடத்தில் அறிமுகமாகிறாள்.

பல்லவி கோபாலய்யா, இளவரசன் சிவாஜி, கலெக்டர் நெல்சன், கவர்னர் வாஷிங்டன் ஆகியோர் மூன்றாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

“வேழப்படைக்குப் பின்னே பொன்னால் வேயப்பட்ட அழகிய அரசத்தேரொன்று பதினாறு யவனக் குதிரைகளால் பூட்டப்பட்டு வெற்றிப்பவனி வந்து கொண்டிருந்தது. அந்தத் தேரின் நடுவே அமர்ந்திருப்பவர்கள் எல்லார் கண்களையும் இமைக்காமல் பார்க்கச் செய்கின்றனரே! அவர்களின் அரச வீறு கொண்ட தோற்றம் தான் என்னே! படர்ந்த முகத்தில் விளையாடும் வீரர்களையே வானமன்றோ கண்ணாடியாக வந்து நின்று உலகிற்கு எடுத்துக்காட்ட வேண்டுமா? இருபெரும் வீர இளைஞர்களை யார் என்று நினைக்கிறீர்கள். தானைத்தலைவன் கருணாகரனும், இளவரசன் விக்ரம சோழனும்தான்”[49] என ஆசிரியர் நேரடியாக அவர்களிருவரையும் அறிமுகப்படுத்துகிறார்.

“எல்லோரும் தம்மைக் கவனமுடனும் வியப்புடனும் நோக்கி ஏதோ தங்களுக்குள் பேசிக் கொள்கின்றனர் என்பதை உணர்ந்து புன்னகைத்தார் அந்தப் புதிய தேரோட்டி – செம்பியன் குலச் செம்மல் – திரிபுவனச் சக்ரவர்த்தி – அறிஞர் தம்பிரான் அபயன் முலாம் குலோத்துங்க சோழமாத்தேவர்”[50] என இந்தப் பாத்திரத்தையும் நேரடியாக அறிமுகப்படுத்துகிறார்.

மேலும் சோழகங்கர், இராசராசன், வீரசோழன், கோவிந்த சந்திரன், பராந்தக பாண்டியன், மதுராந்தகி, காளிங்கராயர், தியாகவல்லி தேவி, திரைலோக்கிய மாதேவி, காடவன் தேவி, சோழகுலவல்லி காலதேவர், கலிங்க ஒற்றன், அமைச்சர் நாராயண பட்டர், இளவேணி, பல்லவராயர், அனந்தவர்மன், எங்கராயர், அனந்தபாலய்யன், சாளுக்கிய விக்ரமாதித்தன் அருண்மொழி நங்கை, தாரவர்ஷன், சேரகேரளன், ஹொய்சாளன், திரிபுவனலபாண்டியன், கோவிந்தசந்திரன், சுமித்திரை போன்ற பாத்திரங்கள் நேரடியாக ஆசிரியரால் முதல் வகையில் அறிமுகப்படுத்தபட்டுள்ளனர்.

மேலும் பல்லவ வம்சப் பெயர்கள், கடராத்து அரசன் சூடாமணிவர்மன், மாறவிசயோத்துங்கவர்மன், தஞ்சைத் தலைவர் பஞ்சநதிவாணர், மதனபாலர், விமலாதித்தன், ஜயசிம்மன் முதலாம் இராசேந்திர சோழர், குலுத அரசன், முக்கோக்கிழாள் ஏசனன், ராசனன், சம்புலா ஆகியவர்கள் பெயரளவில் குறிக்கப்படுகின்றனர்.

வேறு சில புதினங்களில் இடம் பெற்றதுபோல் மாறுவேடம் தாங்கிய சக்கரயுத்தன் என்ற பெயருடன் அறிமுகப்படுத்தப்படும் ஒரு பாத்திரம் இடம் பெறுகிறது. இது மன்னர் குலோத்துங்கரே ஆகும். இதனை சேர சூரியனின் திரிலோசனக் கடம்பன் பாத்திரத்துடன் ஒப்பிடலாம்.

அரசர்கள் அக்காலத்தில் புனைவடிவம் தாங்கி உண்மையை அறிந்தார்கள் என்பதைப் பல புதினங்களின் மூலம் முடிகிறது.

இரண்டாம் அத்தியாயத்தில் நடந்த ஊர்வலத்தின்போது அரண்மனை மேம்மாடமத்தில் தோழிகளுடன் நின்று காட்சி தந்த அம்மங்கையை ஆசிரியர் பதினான்காம் அத்தியாயத்தில் அறிமுகப்படுத்துகிறார்.

“வளையோசை கேட்ட மாத்திரத்தில் கருணாகரனைச் சூழ்ந்திருந்த மருத்துவர்கள் நிமிர்ந்து நோக்கினர். அப்போது எதிர் அறையின் வாசலில் அழகிய பொற்பதுமை போல் நின்றிருந்த இளவரசி அம்மங்கை வாயில் விரல்வைத்து சைகை காட்டினாள் என அறிமுகப்படுத்துகிறார்”[51]. இது மூன்றாம் வகை அறிமுகமாகும்.

இந்தப் பாத்திரத்தைப் போலவே பராக்கிரமபாண்டியன் புலிக்கண்ணன், தமயன், முடிகொண்டான் போன்றவர்கள் மூன்றாம் வகையில் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

சேரன்குலக்கொடியில் வாஞ்சிமாநகருக்கு அருள்மாரி பொழிபவள் அந்தக் கொற்றவை தெய்வம் சிறிதான கோயில் அதன் சிறப்போ பெரிது! பெரிது.

“பல்லக்கின் திரைச்சீலையை விலக்கிவிட்டாள் முன்கூட்டி இறங்கிய தோழிப்பெண் செவ்வல்லி விலக்கிவிட்ட வண்ணத்திரைச்சீலைக் குள்ளிருந் துலக்கிவிட்ட சொர்ண பதுமைபோல் வெளிப்பட்டாள் சேரன் குலக்கொடி செல்வ இளவரசி பொற்கொடி”[52] என ஆசிரியர் கதைத் தலைவியை நேரடியாக அறிமுகப்படுத்துகிறார்.

கதைத் தலைவி பொற்கொடி, அவளது தோழி செவ்வல்லி இவர்களைத் தவிர வில்லவன் கோதை, செங்குட்டுவன், அமைச்சர் அழும்பில் வேளார், பரணர், இளங்கோ வேண்மாள், அரிமாக்கண்ணன், வேளாவிக் கோமான் பதுமன், பதுமன் தேவி எரியங்கன், நெடுங்கிள்ளி பேகன் கண்ணகி வெற்றிவேற் செழியன், சங்கநாதர், மலர் குழலி, எதிரிகள் பதின்மர், வில்லவன் தேவி, அரையன் திரையன், ஆடுகோட்பாட்டு சேரலாதன், செம்முடி நாயக்கன், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம், மதுரை சோமநாதர், சோழ அமைச்சர், நிதித்தகன், நிமித்தகர் ஆலகாலகண்டர், அமைச்சர் மாவிரதியார், வர்த கோசராய ல்லார், கணக்காயர் ஒற்றர் தலைவர் நீலன், நாகவல்லி மாயா, கோவூர்கிழார் புலவர் பெருங்குன்றூர் கிழார், பெருஞ்சேரல் இரும்பொறை பெருதானைத் தலைவர் முதுகோச நல்லார் வேழப்படைத்தலைவர் சிரமலைச் சிங்கர், குன்றத்தூர் தளபதி இளங்கோசன் ஆகியோர் நேரடியாகவும் பெயரளவிலும் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

இரண்டாம் வகை அறிமுகம் புதினத்தின் தொடக்கம் முதல் இருளப்பன், உலகப்பன் என்று இடம்பெறும் இந்தப் பாத்திரமானது இருபத்தேழாவது அத்தியாயத்தில்

“உலகப்பனாகிய இருளப்பனை பிடிக்கவும் இல்லை நம்பவும் முடியவில்லை”[53]யென்று பழையார் கூறுகிறார். இப்படி வாசகரிடையே உலவி வந்த இருளப்பன் முப்பத்தி ஐந்தாவது அத்தியாயத்தில் தன்னை அவனே வெளிப்படுத்திக் கொள்வதாக அமைந்துள்ளது. இருளப்பன் தலையில் போட்டிருந்த போலிக் கேசத்தை அகற்றி முகத்திலிருந்த மீசையைப்பிய்த்தான். பிறகு சொன்னான் இப்போதும் நான் யாரென்று தெரிகிறதா? தெரியாவிட்டால் கேள். கிள்ளிவளவன் சோழனின் இளவல் என அறிமுகப்படுத்தவது இரண்டாம் வகை அறிமுகமாக இடம் பெற்றுள்ளது.

மாறுவேடத்தில் வரும் மோகூர் அரசன் சேனாதிபதியின் நண்பன் எனக் கூறிக் கொள்வதும் இந்தவகையில் இடம் பெறுகிறது.

“மோகூராரே நீங்கள் வந்த சமயம் நான் போருக்கு கிளம்பும் சமயமாகிவிட்டது. இது ஒரு நல்ல சகுனமாகவே படுகிறது. உங்களின் வருகை நல்வருகையாக அமையட்டும்”[54] என மூன்றாம் வகையில் அறிமுகம் அமைகிறது.

**பாத்திர வளர்ச்சி**

பாத்திரங்கள் அறிமுகப்படுத்தும் நிலையிலிருந்து பல நிலைகளில் மாற்றம் பெற்றுக் கதை நிகழ்ச்சி வழியே வளர்ச்சியும் பெறுகிறது. அவ்வித வளர்ச்சி இருந்தால் தான் பாத்திரங்களின் செயல்பாடுகள் சிறக்கமுடியும். பாத்திர வளர்ச்சியின் சிறப்புத்தன்மையின் காரணமாகக் கதையில் கட்டுக்கோப்பும் விறுவிறுப்பும் மிகுதியாக இருக்கும். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம் பெறும் பாத்திர வளர்ச்சி இங்குக் குறிக்கத்தக்கது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில் இணைத்தலைமைப் பாத்திரமாகச் செயல்படும் விக்ரமனின் செயல்பாடுகள், அருண்மொழியின் குணநலன்கள் மாறுபடுதல் ஆகியவற்றைச் சான்றாகச் சுட்டலாம்.

கருணாகர பல்லவனைக் கண்டாலே வெறுக்கும் விக்ரமன், பின்னாளில் உண்மையுணர்ந்து அவருடன் தோளுக்குத் தோள் நின்று போரிட்டு அவரது தந்தை மனத்தைக் குளிரவைப்பதும், தாயின் சத்தியத்தை நிறைவேற்றுவதும் அவனுடைய குணநலன்கள் மாறுபடுவதைக் காட்டுகிறது.

அதைப்போல அருண்மொழி கருணாகர பல்லவனைக் காதலித்து குலோத்துங்கனின் அரசதந்திரத்துக்குப் பலியாகி அவனை மணக்கிறாள். கருணாகர பல்லவனைப் பழிவாங்கிட வேண்டுமென்ற நோக்கத்துடனே செயல்படுகிறாள். முரண்பாடுடைய இவளுடைய செயல் கதையின் திருப்பங்களுக்குக் காரணமாகிறது. இந்த மாற்றம் அவளின் இயல்பான குண நலன்களிலிருந்து முரண்படுவதுபோல் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் இளவரசன் சந்திரமௌலி அனைத்துத் தீயபழக்கங்களின் இருப்பிடம். அவனது நண்பன் புலிந்தகன், சிற்றப்பன் மகேந்திரன் ஆகிய இருவரும் இளவரசனின் குணத்தையே பிரதிபலிப்பவர்கள். இம்மூவரும் சேர்ந்து கொலை, கற்பழிப்பு ஆகியவற்றில் ஈடுபட்டு வருகின்றனர். இவருடைய வளர்ப்புத் தாயான வேதிசமாதேவியால் அமர்த்தப்பட்ட ஆசிரியை புஷ்பமாலிகா அவனைத் திருத்துகிறாள். பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவது போல மாறி வருகிறான் சந்திரமௌலி. அந்த சமயம் சிரிமாவின் காதலன் பழிவாங்கும் எண்ணத்துடன் இளவரசனைக் கொல்ல வருகிறான். இன்று புத்த பூர்ணிமா என்பதால் மறச்செயலில் ஈடுபட மறுத்து இன்று போய் நாளைவா எனப் புலிந்தகனை அனுப்புகிறான். முடிவில் புஷ்பமாலிகாவைப் புலிந்தகன் கொன்றுவிட அதனால் வெகுண்ட இளவரசன் மீண்டும் பழைய நிலைக்குச் சென்று அவனை மிருக வெறியோடு கொல்கிறான். சக்கரவர்த்தியின் ஆணைப்படி அவன் கொல்லப்படுகிறான். தடுக்கவந்த தாயும் மார்பில் வேல்தாங்கி மகனோடு இறக்கிறாள். இந்தப்பாத்திரம் கீழான நிலையிலிருந்து உயர்ந்து உச்சத்தை அடைந்து மீண்டும் இறங்கிக் கீழ் நிலையை அடைவதாகப் படைக்கப்பட்டுள்ளது.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில், புலிகேசியின் தம்பி விஸ்வரூபன் மகேந்திரனை அழிப்பதற்கென்றே அவனுடைய நட்பையும் அன்பையும் பெற்று உடனிருந்து கொல்லும் வியாதியாக இருந்துவருகிறான். விஸ்வரூபனால் உருவாக்கப்பட்ட போலி மகேந்திரனான ஜயதேவன் தன்னை உண்மையானவன் என நிரூபிக்க லாட்போரில் ஆனமட்டும் முயற்சிக்கிறான். போரில் மகேந்திரனால் உயிர்ப்பிச்சை அளிக்கப்பட்ட அவன், மகேந்திரன் எதிர்பாராதபோது அவனைக் கொல்ல வாளை வீசுகிறான். கண்ணிமைக்கும் நேரத்தில் எங்கிருந்தோவந்த குறுவாள்கள் அவன் உயிரைக் குடிக்கின்றன.

அவனைக் கொன்றவன் விஸ்வரூபன். மகேந்திரனின் உண்மையான நட்பை உணர்ந்த அவன், என்னை எவ்வளவுக்கு நம்பி அன்புடன் நட்பு பாராட்டினாய்? அதற்கு நான் செய்த துரோகம் பெரியது. அதற்கான பிராயிச்சித்தமே இது என்று கூறுவதிலிருநது அவனுடைய குணநலன்கள் கீழான நிலையிலிருந்து உயர்நிலைக்குச் செல்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

ஜெயதேவனோ சாதாரண நிலையிலிருந்து பல்லவ சாம்ராஜ்யத்தையே கைப்பற்றும் பேராசை உடையவனாக மாறுகிறான். காதலி கௌதமியை மறந்து அஜந்தாவை அனுபவித்து சங்கீரணியையும் அடையத் திட்டமிட்டு உண்மையான மகேந்திரனைக் கொல்ல முயற்சிக்கிறான். இந்தப்பாத்திரம் சாதாரண நலையிலிருநது தீங்கு செய்யும் உச்சத்துக்குச் செல்வது அவன் குணநலன்கள் மாறுபடுவது கதையின் போக்கிற்கு வலுவூட்டுவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் குமாரகூத்தன் என்னும் பாத்திரம் பாண்டியர் நெடுஞ்செழியன் வளர்ப்பு மகனைப் போன்றவன்; சிறந்த போர்த்தளபதி; வெள்ளைமனம் கொண்டவன். பசுமலைக்காட்டில் கபாலிகர்களிடமிருந்து தன் உயிரைக் காப்பாற்றிய கண்ட கோபாலனைத் (சண்டமாருதன்) தன் மேலான நண்பனாக மதிக்கிறான். பத்மினி என்ற அவளது காதலி கண்ட கோபாலனுடன் சென்றுவிடவே மனம் வேதனைப்படுகிறான். நண்பனே கவர்ந்து சென்றுவிட்டதாகக் கோபம் கொள்கிறான்.

நெல்லூர்ப் போரிலே கண்டகோபாலனை எதிர்த்துப் போரிடுகிறான். பத்மினியின் துரோகத்தை அறிந்து அவளைக் கொல்லச் செல்கிறான். தடுக்கச் சென்ற கண்டகோபாலனது வாள் கூத்தனைச் சாய்க்கிறது. இறக்கும் தறுவாயில் நண்பனுக்கு அளித்த சத்தியத்துக்காக அவனாகவே மாறி தன்படையை தானே அழித்து தன் நன்றிக்கடனைத் தீர்க்கிறான் கண்டகோபாலன். நண்பனுக்கு துரோகம் இழைத்துவிட்டோமோ என்று அஞ்சிய கோபாலனும், நண்பனைத் தவறாக நினைத்து விட்டோமே என்ற கூத்தனும் இயல்பான குணத்திலிருந்து மாறி மாறி நட்பு, அன்பு, கோபம், துரோகம் என்ற குணங்களுக்கு அடிமையாவதை புதினத்தின் போக்கில் அறிய வியலுகிறது.

குற்றாலக்குறிஞ்சியில், இராஜகாந்தி என்ற கொள்ளையர் தலைவன் குறிஞ்சியின் இசையில் மயங்கித் தீய செயல்களை விடுத்து நல்ல மனிதனாக மாறுகிறான். குறிஞ்சியைத் தன் மகளாகப் பாவித்து அவளுன் இறுதியில் இறப்பதாக இந்தப் பாத்திரம் அமைக்கப்பட்டுள்ளது.

சேரசூரியன் என்ற புதினத்தில் ஜெயதேவன், நிவேதி என்ற பாத்திரங்கள் சூரிய சீலியின் தளபதி, தோழியாக இருந்தவர்கள் அவளுக்குத் துரோகம் செய்ய தாமே நாட்டை ஆளத் தொடங்குவது அவர்களின் இயல்பான தன்மையிலிருந்து மாறுபட்டதாக அமைந்துள்ளது. நாகா என்ற பாத்திரம் திரிலோசனக்கடம்பன் எனக் கருதப்பட்டு வந்தாலும் முடிவில் நெடுஞ்சேரலாதனிடம் பணிந்து நடப்பதாக காட்டப்படுகிறது. கொள்ளையரின் புத்தி இருப்பினும் அவளின் அரசபக்தி பாராட்டுதற்குரியதாக அமைகிறது. அவளுக்கே உரிய தீய எண்ணங்களிலிருந்து அவள் மாறுபடுவது குறிப்பிடத்தக்கது. நாகா என்ற பெயருடைய அவள் நாகங்களுடனேயே பழகிவரும் நாகர் குலத்துப் பெண்; அவள் கூந்தலிலிருந்து வரும் நாகத்தை, நெடுஞ்சேரலாதன் கொல்லும்போது துடிதுடிப்பது இனப்பற்றுள்ள அவளது குணத்தைக் காட்டுகிறது. கொடிய மனம் உள்ள அவள் முடிவில் அரச பக்தியுள்ளவளாக மாறுவது பாத்திரத்தின் வளர்ச்சியைக் குறிப்பிடுகிறது.

கொல்லிப்பாவை என்னும் புதினத்தில், பிண்டன் என்ற பாத்திரமானது பரிமளாவுக்கு எதிரான பாத்திரமாகப் படைக்கப்பட்டுப் பின் அவளது அன்பால், உதவியால் அவளின் தாசனாக காட்டப்படுகிறான். இந்தப் பாத்திரமானது இயல்பான நிலையிலிருந்து உயர்ந்து பரிமளாவை மகள் போல் பாவித்து அவளின் உதவிக்கரமாக மாறுவது குறிப்பிடத்தக்கது. வேங்கை மனம் என்ற புதினத்தில் திருமேனி முதலில் திருமாறனை விரும்பியும், பின் வெறுத்தும் முடிவில் அவனை விரும்பியும் அவனோடு ஒன்றாக இறப்பதும் மாறுபட்ட குணங்களாக அமைகின்றன. எஞ்சிய புதினங்களில் இத்தன்மை அமையவில்லை. பாத்திர வளர்ச்சியைப் போன்றே பாத்திர முடிவும் இங்குச் சுட்டத்தக்கது.

**பாத்திர முடிவு**

பொதுவாக அறிமுகப்படுத்தப்பட்ட பாத்திரங்கள் அனைத்துக்கும் முடிவு சுட்டப்படுதல் வேண்டும். தலைமைப் பாத்திரங்கள், எதிர்த் தலைமைப் பாத்திரங்கள் ஆகியவைகளுக்கு சுட்டப்பட்ட முடிவுகள் பொருந்துவதாக இருக்க வேண்டும். வரலாற்றுப் புதினத்தில் வரலாற்றுக் காலத்தில் பாத்திரத்திற்கு உள்ள முடிவைத்தான் கொடுக்க முடியும்.

மேலும் புதினத்தின் முடிவினை, தலைப்பினைக் கூறிமுடித்தல், ஆசிரியரின் கருத்துடன் முடித்தல், வருணையுடன் முடித்தல், திடுமெனமுடித்தல், பாத்திரக் கூற்றுடன் முடித்தல், விற்பூட்டு முறையில் முடித்தல் என ஆறுவகைகளாகப் பகுக்கலாம்.

**தலைப்பினைக் கூறி முடித்தல்**

சேரசூரியன் என்ற புதினத்தில் இளவரசுப்பட்டம் சூட்டப்பட்ட செங்குட்டுவனை, ராஜமாமதா, “கண்களில் நீர் வழிய ஆனந்த நீர் அருவியாகக் கொண்ட பெருவீரனாய் திகழ்ந்து பெரு பெருவாழ்வு பெருவாயாக என வாழ்த்துகிறாள்; தலைநகரமே வாழ்த்தியது . . . . . வாழ்த்துக் குரல் கேட்டு வானமே மருண்டது. வானத்தே வலம் வந்த பெருஞ்சூரியன் வாழ்த்தினான்.

செங்குட்டுவனே! நீயும் இன்னொரு சேர சூரியனாய் ஒளி மிகுந்து வாழ்க! வளர்க! வெல்க!”[55] என்று வாழ்த்துவதைத் தலைப்பினைக் கூறி முடித்தலுக்குச் சான்றாகச் சுட்டலாம்.

**ஆசிரியர் கருத்துடன் முடியும் புதினங்கள்**

ராஜகர்ஜனையில் “பின்னாளில் விரிந்து ஒரு மாமாங்க காலத்துக்கு செல்லவிருக்கிற மாவீரதிலகம் திப்பு சுல்தானுடைய வீரமும் சோகமும் நிறைந்த சரித்திரத்துக்கு இந்த கோயில் மணி ஒரு சேகரம் போல், ஒரு மகுடம் போல் ஒலித்தது. எண்திசையிலும் புகழ் மணம் பரப்பப் போகிறது என்று அரங்கனின் கோவில் மணியோசை ஒலியை, ரங்கநாயகியின் மன ஒலியாகத் திப்புவின் வருங்காலத்தை நாதமயமாக்க முடிவு செய்தாள் என முடிக்கப்படுகிறது.

குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில் குறிஞ்சி இறந்ததும் ராஜகாந்தியும் அவர் காலடியிலேயே உயிர் விடுகிறான். அப்போது அந்த தம்பூர் எழுப்பிய ஒலியைக் கேட்டு மக்கள் குரல் ஒலிக்கின்றன. இக்காட்சி ஆசிரியரின் கருத்துப்படி,

"அவளும் அந்ததம்பூர் . . . . . . . அது எழுப்பிய இனிய நாதம் எண் திசைகளிலும் இனிதாய் நிறைந்து புகழ் பரப்பியதை யாரோ மறுப்பர்? மறப்பர்? இன்னொரு தமிழ்க் குறிஞ்சி எப்போது பிறந்து மக்கள் இதயங்களில் பாடப் போகிறாள்"[56] என முடிகிறது.

சேரன் குலக்கொடியில், போர்க்களத்தில் உயிர்போகும் நிலையில் திருமாறன் பொற்கொடியின் சிறப்பின் இலக்கணத்தை இளங்கோ மூலம் கேட்டு உயிர்விடுகிறான்.

"சேரன் குலக்கொடியே நீ வாழ்க என்று மனத்துக்குள்ளே வாழ்த்திக் கொண்டார் அகிலத்தின் ஞானம்பாலான தமிழையிருந்திய தவப்புதல்வர் இளங்கோவடிகளார் அவருடைய காவிய இதயத்துடன் கற்பின் இதயம் இணைந்தது. அந்த இலக்கிய இணைப்பு. இலக்கணச் சந்திப்பு தமிழர் நெஞ்சில் அழியா ஓவியமாய், கண்ணகி காவியமாய் நிறைந்துவிட்டது போலும் வாழி என் பொற்கொடி! வாழி நீ சேரன் குலக்கொடி"[57] என ஆசிரியர் கருத்துடன் முடிந்தாலும் புதினத்தின் தலைப்புடனும் முடிகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், "மகதப் பேரரசே பௌத்தலயமாகிவிட்டது. பௌத்தத்தின் தலைவராக அசோகவர்த்தன் மகாசக்கரவர்த்தியே அமர்ந்துவிட்டார். அவருடைய இருகண்களில் பெரிய தேவியாரும் புஷ்பமாலிகையும் அமர்ந்து இமைகளைத் திறந்துவிட்டனர். இதயத்தைப் பீடமாக்கிக் கொண்டு புத்தபகவான் அமர்ந்து பௌத்த தர்மங்களை போதிக்கத் தொடங்கிவிட்டார். அன்று இறக்கிய மகத மகுடத்தைப் பின்னர் அவர் புனைந்து கொள்ளவே இல்லை. அவருடைய திருப்பணிகள் புத்த பகவான் பொற்பாதக் கமலங்களை அலங்கரிக்கத் தொடங்கின"[58] என்று முடிக்கப்பட்டுள்ளது.

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில், இளவரசி கங்கை நாச்சியார் சேதுபதியைக் கைது செய்து அழைத்துவரும் போது அரண்மனையை அடைவதற்கு முன் விஷம் அருந்தித் தன் உயிரை விட்டு விடுகிறாள். ராமப்ப நாயக்கனும் திருமலை நாயக்கரும்

சேதுபதியைக் கைது செய்துவிட்டோம் என்ற எண்ணத்தில் கங்கை நாச்சியைப் பற்றி நினைத்துக்கூட பார்க்கவில்லை. வளர்ப்புத்தாயான ருத்ராபதி "என்மகள் எங்கே எனப்புலம்பும்போது"[59] தேரில் விஷம் அருந்தித் தன் வாழ்வை முடித்துக் கொண்ட அவள் உண்மையாக சேது நாட்டு மருமகளாகி அந்நாட்டின் மானத்தைக் காத்துவிட்டாள் என முடிகிறது.

வேங்கைவனம் என்ற புதினத்தில், திருமாறனும் திருமேனியும் ஒன்றாக உயிர்விட கானப் பேரெயில் கோட்டை அழிகிறது. பாண்டியர் உக்கரப்பெருவழுதி தன் மகனை மீட்க வந்து அவள் சிலையை மீட்டுச் செல்கிறார். "தியாகவல்லியும் வேங்கைகளுமே அங்கிருக்க, வேங்கைகள் அவர்களின் தலைவன் தலைவியின் நினைப்பில் எண்ணிப் பெரிதாக உறுமிக் குரல் கொடுத்து கூப்பிடும் . . . . . . தொலைதூரத்தில் செல்பவர்களின் காதுகளில் இந்த அழைப்புக் குரல்கேட்கும்; அவர்கள் அந்த வேங்கை வனக் கதையை எண்ணி இரு சொட்டுக் கண்ணீர் உகுப்பர். அந்தக் கண்ணீர் பூக்கள்தாம் புதைந்து கிடக்கும் வேங்கை வனக் காதல் கவிதைக்கு காணிக்கையாக நீண்ட நாட்கள் வரை மணந்து வந்தன. அந்தக்கதை இப்போது மீண்டும் மணக்கத் தொடங்கியது"[60] என ஆசிரியர் கூற்றுடன் முடிகிறது.

**வருணனையுடன் முடித்தல்**

பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தின் முடிவு, வருணனையைக் கொண்டு முடிவதாக அமைந்துள்ளது. "தன்னை தெய்வ மகளாக்கிக் கொண்டவளாய் இடுப்பில் குடத்தைச் சுமந்து கொண்டு குளக்கரை நோக்கிச் சென்றாள் அரங்கனை மூன்றாம் காதலனாகக் கொண்ட பத்மினி,

வைகறைப் பெருமாள் வானக் கூரைக்குப் பொன் வேய்ந்து கொண்டிருந்தான்.

"வாழ்க பொன் வேய்ந்த மகிபதி!
வாழ்க செந்தமிழ் மாலை தரித்தவன்!
வாழ்க மண்டலம் யானையும் கொண்டவன்!
வாழ்க சுந்தர மன்னவன் தென்னனே!"[61]

என்று வருணனையுடன் முடிவதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில்,

“கௌந்தியான அஜந்தா அருகமாய் முறுவலிக்கிறாள். ரதம் புறப்படுகிறது.
நீலவான் மஞ்சத்தில் நித்திலங்கள் கண்சிமிட்ட
ஞாலமாம் பேரழகி கதிரவனின் காதலி
நிலாவழகி கோலமாப் பேரழகை
ஒரு தியாகத்தின் சந்நிதானத்தில் நின்று
துறவு பூண்ட மலர்களின் ராஜதேவதை
மகேந்திரச் சித்திரம் அஜந்தாவைக்
கண்குளிர மகிழ்ந்து மனம் குளிர்ந்து வாழ்த்துகிறாள்”[62]

என வருணனையுடன் முடிகிறது.

கொல்லிப்பாவை என்ற புதினத்தில், ரதியன்ன பரிமளாவின் கண்களில் நீர்த்திவளைகள் தான் அனைத்து வெற்றியையும் பெற்ற பின்பும் தன் காதலன் நார் முடிச் சாலை அடைய சேரன் தேவி கூறிய தவத்தை மேற்கொள்கிறாள். அரியணையில் பங்கு கேட்பதைவிட மனைவியாக இருப்பதைவிட, காதல் தவம் இயற்றுவதே மேல் என்ற முடிவுக்கு வருகிறாள்.

“அடி பரிமளா! பெண்மையின் பல்கலைக்கழகமே! உன் பாசாங்கும் பவித்திரமானதே! இதயம் கண்ட ரணத்தைக் கால மருத்துவன் ஆற்ற எத்தனை நாள் பிடிக்கும்! உனது சபதம் எப்படி மகோன்னதமாக நிறைவேறியதோ, காதல் ராணிக்கனவும் விரைவில் மகிமை நிறைந்த நனவாகும்! என் இனிய வாழ்த்துக்கள்.

நீடுதுயில் நீங்கிப்பாவைந்தப் பெருநிலவு வானில் நின்று பிரகாசமாய் வாழ்த்துகிறது. நெஞ்சு நிறைகிறது. நியாயம் நிறைகிறது. அதன் நிவேதன் நிறைகிறது”[63] என வருணனையுடன் முடிகிறது.

பூங்குழலி என்ற புதினத்தில், “தமிழுக்கு உயர் துறந்த தார் வேந்தனுக்கு ஈமக்கிரியைகள் செய்யலாமா? அது தமிழுக்கும் செய்தது போலாகுமே காஞ்சி மக்கள் பலரும் கண்ணீரை அஞ்சலியாக்கிக் கரம் கூப்பி வழி நெடுக வணங்குகிறார்கள்.

திரண்ட மேகங்களிலிருந்து தூரல்கள் விழுகின்றன.

ஆ வானம்தான் அழுகிறதோ? அன்று ஆனந்த

கண்ணீரால் வாழ்த்துதான் கூறுகிறதோ?

ஓ! நந்தி கலம்பலகத்தால் மாண்ட கதை நாடறியும்"[64]

என வருணணையுடன் முடிகிறது.

**தொகுப்புரை**

1. பாத்திரம் குறித்த விளக்கம் ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.
2. வரலாற்றுப் பாத்திரங்கள் எத்தன்மையதாக அமைய வேண்டும் என்பது ஆய்வில் விளக்கப்பெற்றுள்ளது.
3. தலைமைப்பாத்திரங்கள் இருபத்திரண்டு, இணைத்தலைமைப் பாத்திரங்கள் பதினெட்டு, எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் இருபத்தைந்து, துணைப்பாத்திரங்கள் நானூற்று எழுபத்தேழு, பெயர் மட்டும் சுட்டப்பட்ட பாத்திரங்கள் தொண்ணூற்று நான்கு என ஆய்வுப் புதினங்களின் வழியே பகுத்துக் காட்டப்பெற்றுள்ளன.
4. பாத்திரங்கள் சிறப்பதற்கான சில மூலக்கூறுகள் வகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன.
5. பாத்திரத்தின் வகை, எண்ணிக்கை, அறிமுகம், பெயர், வளர்ச்சி, முடிவு ஆகியவை பற்றி ஆராயப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. மறைமலை அடிகள், இலக்கியக் கொள்கைகள், ப.70.
2. கலா. கே.தாக்கர், கல்கியும் முன்ஷியும், ப.279.
3. மா. ராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.32.
4. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப.68.
5. கோ.வெ.கீதா, தமிழ் நாவல்கள், ப.137.
6. மா. ராமலிங்கம், நாவல் இலக்கியம், பக்.71-72.
7. அ. தட்சிணாமூர்த்தி, இலக்கியத்திறனாய்வியல், ப.390.
8. பாலசுப்பிரமணியன், நாவல் கலையியல், ப.123.
9. பூவண்ணன், கல்கியின் வரலாற்று நாவல்கள், ப.146.
10. மேலது., ப.147.
11. மேலது., ப.147.
12. கலா. கே.தாக்கர், கல்கியும் முன்ஷியும், ப.301.
13. மேலது., ப.293.
14. கா.மீனாட்சி சுந்தரனார், சிலம்பில் துணைப்பாத்திரங்கள், ப.7.
15. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.2.
16. மேலது., பக்.20, 21.
17. மேலது., பக்.10-11.
18. மேலது., ப. 10.
19. கோவி. மணிசேகரன், காஞ்சிக் கதிரவன், ப.16.
20. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.5.
21. மேலது., ப.15.
22. மேலது., ப.8.
23. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.9.

24. மேலது., ப.42.

25. மேலது., ப.85.

26. மேலது., ப.162.

27. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், பக்.9-10.

28. மேலது., ப.31.

29. மேலது., ப.10.

30. மேலது., ப.20.

31. மேலது., ப.27.

32. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.5.

33. மேலது., ப.29.

34. மேலது., ப.8.

35. கோவி. மணிசேகரன், கானல் கானம், ப.93.

36. மேலது., ப.109.

37. மேலது., ப.148.

39. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.9.

39. மேலது., பக்.22, 23.

40. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.9.

41. மேலது., ப.16.

42. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.3.

43. மேலது., ப.258.

44. மேலது., ப.262.

45. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப.12.

46. மேலது., ப.206.

47. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.2.

48. மேலது., ப.5.

49. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.13.

50. மேலது., ப.13.

51. மேலது., ப.74.

52. கோவி. மணிசேகரன், சேரன் குலக்கொடி, ப.13.

53. மேலது., ப.163.

54. மேலது., ப.32.

55. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.258.

56. குற்றால குறிஞ்சி, ப.364.

57. கோவி. மணிசேகரன், சேரன் குலக்கொடி, ப.504.

58. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.326.

59. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப. 201.

60. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.275.

61. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.288.

62. கோவி. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.336.

63. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப. 239.

64. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப. 368.

## இயல் - 4

# கோவி. மணிசேகரனின் புதினங்களில் வரலாற்றுச் செய்திகள்

### முன்னுரை

இன்றைய நிகழ்வு நாளைய வரலாறு. இது ஒரு நாட்டிற்கு மட்டுமல்ல; உலகத்திற்கே மிக முக்கியமான ஒன்று. அறிவியல் எவ்வளவு முக்யத்துவம் வாய்ந்ததோ அவ்வளவு முக்யத்துவம் வாய்ந்தது வரலாறு. வரலாறு என்பது பண்பாடு, கலாச்சாரம், சமயம், பொருளாதாரம், மொழி, அறிவியல், மருத்துவம், ஆன்மீகம், புள்ளியியல், அரசியல், தொல்பொருள் ஆகிய யாவற்றையும் உள்ளடக்கியது. ஒவ்வொரு பிரிவையும் எடுத்துக் கொண்டால் அதற்கொரு வரலாறு இருக்கும். மன்னர்கள் வாழ்க்கை, மாமேதைகளின் வாழ்க்கை, மகான்களின் வாழ்க்கை ஆகிய அனைத்துமே வரலாறு என்ற சொல்லில் அடங்கும். வரல் – ஆறு என ஆற்றைப் போன்ற போக்குடையது.

“உண்மையின் உபாசனையும் அறிவின் உபாசனையும் இணைந்ததே வரலாற்றின் தர்மம்”[1] என அறிஞர்கள் கூறுகின்றனர்.

“வரலாறு என்பது இறந்த காலத்து உண்மைகளை நிறுவி விடுதல் சம்பந்தமான இடையறா தேடல்கள் ஆகும். இந்த தேடுதல் மனித குலத்தின் மேம்பாட்டிற்கு உதவும்”[2].

“தமிழர்களுடைய உச்சக்கட்ட ஆதிக்கம் சோழர் காலத்திலேயே உச்சம் பெற்றது என்பது சான்றாதாரங்களுடன் நிறுவப்பட்டுள்ள வரலாறு ஆகும்”[3].

இது மனித இனத்தின் அடையாளச் சுவடாகும். நிலையற்ற உலக வாழ்க்கையில் காலத்தை வென்று நிற்கும் மனித முயற்சிகள் வரலாற்றுச் சுவடாகின்றன எனச் சொல்லப்படுகிறது.

“வரலாற்று நூல் ஒன்றை செம்மையாகத் தொகுப்பதென்பது கூர்மலை ஏற்றமே! சறுக்க சந்தர்பங்கள் சகஜம்”[4] என்பது அறிய வேண்டிய ஒன்றாகும்.

"சென்ற காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகியவற்றின் இடையேயுள்ள தொடர்ச்சியை நன்கு உணர்ந்தாலே அன்றி வரலாற்றை தெரிந்து கொள்வது முடியாத காரியம்"[5]

என்று கைலாசபதி கூறுகிறார். வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகளை அடிப்படையாக வைத்தே நாவல் புனையப்படுகிறது. இதற்கு ஆதாரமாகக் கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள், மெய்க்கீர்த்திகள், பட்டயங்கள், கோவில்கள், அயல்நாட்டார் குறிப்புகள், நாணயங்கள் ஆகியவை உள்ளன.

"ஆராய்ச்சியாளனுக்கு கல்வெட்டு பதிவேடுகளிலிருந்து கிடைக்கும் எலும்புகளைப் போன்ற நகல்கள் மீன் கூடையில் கிடைக்கும் மீன் போன்றவை. மீன்களை வீட்டுக்கு வாங்கிக் கொண்டு போகும் சரித்திர ஆசிரியரும் அவற்றை எந்த முறையில் வேண்டுமானாலும் சமைத்துப் பரிமாறலாம்"[6] என்ற கருத்து குறிப்பிடத்தக்கது.

கோவி மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் வெளிப்படும் வரலாற்றுச் செய்திகளைக் கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள், பட்டயங்கள், மெய்க்கீர்த்திகள் போன்ற சான்றாதாரங்களைக் கொண்டு நோக்கப்படுகிறது.

**வரலாற்றுச் செய்திகள்**

காஞ்சிக் கதிரவன் என்ற வரலாற்றுப் புதினத்தில் காணக் கிடைக்கும் வரலாற்றுச் செய்திகள் குறிப்பிடத்தக்கன. சிம்மவிஷ்ணு பல்லவச் சக்கரவர்த்தி ஆட்சியை ஏற்றுக் கொண்டபோது பல்லவ சாம்ராஜ்யம் வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே புதுக்கோட்டை வரை பரவியிருந்தது. "புதுக்கோட்டை வரையில் உள்ள சோழநாட்டைச் சிம்மவிஷ்ணுவேவென்று அடிமைப்படுத்தினவர்"[7] ஆவன்.

மாமல்லபுரத்தில் உள்ள ஆதிவராகர் கோயிலில் வைணவனான சிம்ப விஷ்ணுவின் உருவச்சிலை உள்ளது. "முதலில் சமணனாகவும் பிறகு சைவனாகவும் மாறிய மகேந்திரவர்மன் சிலை அங்கு இருப்பது எண்ணத்தக்கது. இளவரசனாக

இருந்தபோது தன் தந்தையுடன் வைணவ கோயிலுக்கு போதல் மரபாக இருந்திருக்கலாம். அவன் பட்டமேற்றபிறகு சமணனாக மாறி இருக்கலாம்”[8].

கதையின் போக்கில் அஜந்தாவின் மீது கொண்ட ஈடுபாடு, தரும சேனரிடம் கொண்ட பக்தி அவன் சமணனாக மாறி இருக்கலாம் என்பதை உணர்த்துகிறது.

“மகேந்திரன், மகேந்திரவர்மன், மகேந்திர விக்ரமன், மகேந்திர போத்தரசன், பகாப்பிடுகு, லலிதாங்குரன், குணபரன், மத்தவிலாசன், அவனிபாஜனன், சத்ய சந்தன், புருஷோத்தமன், சத்ருமல்லன், சங்கீரண ஜாதி, சித்திரக்காரப்புலி, சேத்தகாரி, விசித்திரசித்தன், அலுப்தகாமன், கலகப்பிரியன், அபிமுகன், மகா மேகன், நரேந்திரன் யின பிணக்கு, என்பவை”[9], “தர்மபாலகா, சத்யசந்தன், குணபரன், மத்தவிலாசன், விராசன், அககுணா, சங்கீரண ஜாதி, புருஷோத்தமன் ஆகிய விருதுகள் திருச்சி மலைக்கோட்டையில் உள்ளது”[10]. இவை மகேந்திர பல்லவர் விருதுகள் என்று அவன் சிறப்புகளைப் பறைசாற்றும் வண்ணம் பொறிக்கப்பட்டுள்ளது.

இவை தவிர “சிவிபுந்து நிலவிலோனயம்பு வேந்துல வித்து, பசரம்பு, சிலம்பு, மலாயு, கருந்தாம்பு, நயம்பு”[11] முதலியவை இவனுடைய தெலுங்குப் பெயர்கள் ஆகும்.

வல்லம் கல்வெட்டுக் கூறும் வரலாற்றுச் செய்தி,

> “பகாப்பிடுகு வலிதாங்குரன் சத்ருமல்லன் குணபரன் மயேந்திரப் போத்தரசன் அடியான் ..... வயந்தப்பிரிய அரசர் மகன் கந்த சேனன் செய்வித்த .... எனக்கூறுவதிலிருநது மகேந்திர பல்லவனின் சிறப்புப் பெயர்களை அறியலாம்”[12] என்பதாகும்.

“மகேந்திரவாடியில் கிடைத்த கல்வெட்டின்படி அரசன் குணபரன் எனப்பட்டுள்ளான்”[13]. இதைப் பல்லவர் வரலாறு என்னும் நூலில் கல்வெட்டுகள் என்னும் தலைப்பின் கீழ் இராசமாணிக்கனார் குறிப்பிட்டுச் சொல்கிறார். இந்தப் பெருமாள் கோயில் மகேந்திர விஷ்ணு கிரகம் ஆகும்.

தளவானூரில் “மகேந்திரனுடைய கோயில் சத்ருமல்லேஸ்வர ஆலயம்”[14] எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து அவனுடைய சிறப்புப் பெயரில் ஒன்றான சத்ருமல்லன் என்ற வரலாற்று மெய்மை அறியப்படுகிறது.

“மாமல்லபுரத்தில் உள்ள ஆதிவராகர் கோயிலில் வடப்புறப்பாறையில் ஸ்ரீ சிம்ம விஷ்ணு போதாதிராஜன் என்று பல்லவ கிரந்த மொழியில் எழுதப்பட்டுள்ளது.

அதன் அடிப்பகுதியில் ஓர் ஆணுருவம் உட்கார்ந்த நிலையில் உள்ளது. அந்த உருவத்தின் மீது உயர்ந்த மகுடமும் மார்பிலும் கழுத்திலும் பல அணிகளும் அணிந்துள்ளன. அவ்உருவத்தின் இருபுறங்களிலும் முடியணிந்த பெண்மணிகளின் உருவங்கள் நின்ற நிலையில் காணப்படுகின்றன. இவ்உருவங்கள் சிம்ம விஷ்ணுவையும் அவருடைய மனைவிகளையும் குறிப்பதாகும்.

இவ்உருவங்களுக்கு எதிரில் மகேந்திர போதாதிராசன் என எழுதப்பட்டு உள்ளது. அந்தச் சிற்பமானது மகேந்திரபல்லவனைக் குறிப்பதாகும்”[15]. சமயக் குரவரில் ஒருவரான திருஞானசம்பந்தப் பெருமான் பாடிய பாடலில் மகேந்திரவர்மன் கட்டிய கோயிலைப் பற்றிய வரலாற்றுச் செய்தி காணப்படுகிறது.

“நித்திலத் தொகைபல நிரைதருமலரெனச்
சித்திரப் புணரி சேர்ந்திடத் திகழ்ந்திருந்தவன்
மைத்திகழ் கண்டன் நன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே”[16]

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

“மகேந்திரவர்மன் கற்றளிகள் தவிரக் கட்டுக்கோயில்களையும் அமைத்தான்”[17] என துப்ராய் அவர்கள் எழுதிய மகேந்திரவர்மனின் காஞ்சிக் கல்வெட்டுக்கள் என்னும் நூலில் காணலாம்.

“மகேந்திரவர்மனுக்கு மத்தவிலாசன் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இதனை மத்தவிலாசப் பிரஹசனம் என்னும் நூலின் வாயிலாக அறியலாம். இந்த வரலாற்றுச்

செய்தியைத் திருச்சிராப்பள்ளி குகைக் கோயிலிலும் பல்லாவரக் குகைக் கோயிலிலும் மத்தவிலாசன்”[18] என்னும் பெயர் காணப்படுவதிலிருந்து அறியலாம்.

மாமண்டூர் குகைக் கோயிலில் உள்ள இவன் காலத்து சாசனத்தில் மத்தவிலாஸாதிபதம் என்று எழுதப்பட்டிருக்கிறது. இதனால் இவன் மத்தவிலாசப் பிரஹசனம் என்னும் நூலை இயற்றினான் என்பது உறுதியாகிறது.

மகேந்திரவர்மனுக்குச் சேத்தகாரி என்ற பெயர்வரக் காரணம் வல்லம் குகைக்கோயில் கல்வெட்டால் அறியலாம். குணபரன் என்ற பெயரும் குறிக்கப்பட்டுள்ளது.

“வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை நகரின்கட்கண்ணுதற்குப்
பாடலிபுத்திரத்தில் அமன் பள்ளியொடு பாழிகளும் கூட
இடித்துக் கொணர்ந்து குணதரவீச்சரம் எடுத்தான்”[19]

என பெரியபுராணம் கூறுகிறது. பெரியபுராணம் கூறும் குணதரன் என்ற பெயரும் வல்லத்துச் சாசனம் கூறும் குணபரன் என்னும் பெயரும் ஒரே அரசனைத்தான் குறிக்கின்றன என திரு.வி.வேங்கையா குறிப்பிடுகிறார்.

“குணபரன், பல்லவன் என்ற முதலாம் மகேந்திரவர்மன் முதலில் சமணனாக இருந்தான் என்பதற்குச் சித்தன்னவாயில் சிற்பங்களும் ஓவியங்களும் திருச்சிமலையில் சமணர் உபதேசித்த குகை ஒன்றில் உள்ள கல்வெட்டுகளும் தக்க சான்றாகும்”[20].

திருச்சி குகைக் கோயிலில் உள்ள வடமொழி சுலோகமே அவன் சைவனானமைக்குத் தக்க சான்று. குடுமியான்மலைக் கல்வெட்டில் சித்தம் நமசிவாய எனத் தொடங்கியிருப்பது சான்றாக அமைகிறது.

குடுமியான்மலைக் கல்வெட்டின் மூலம் இவனுடைய இசைப்புலமை வெளிப்படுகிறது.

> “இசைமாணவர் நன்மைக்காகப் பண்களை வகுத்துத் தந்த ருத்ராசாரியார் என்பவர் மாணவனான அவன் கட்டளைப்படி வெட்டப்பட்டது”[21].

இங்கு புதினத்தில் ருத்ராசாரியார் மகேந்திரவர்மனின் குரு என காட்டப்பட்டு கதையின் போக்கில் அவருக்கும் முக்யத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. பரிவாதினி யாழ் அரங்கேற்றத்தின் மூலம் குடுமியான்மலைக் கல்வெட்டு பற்றிய வரலாற்றுச் செய்தியின் சாரம் தெரிய வருகிறது. இதுபோன்ற கல்வெட்டுச் சாசனம் ஆகியவற்றின் மூலம் மகேந்திரவர்மன் இசைமேதை என்ற வரலாற்று மெய்மை உணரப்படுகிறது.

“மகேந்திரவர்மன் இளவரசனாக இருந்தபோது ஆந்திர நாட்டிலே தங்கியிருந்தான். தெலுங்கு நாட்டிலே குண்டூர் மாவட்டத்திலே சேஜர்லா என்னும் இடத்தில் உள்ள கபோதேசுவரன் கோயில் சாசனம் ஒன்று மகேந்திரவர்மன் அக் கோயிலில் திருப்பணி செய்ததைக் கூறுகின்றபடியால் இளவரசனாக இருந்தபோது இவன் தெலுங்கு நாட்டில் இருந்தான் என்பது நன்கு தெரிகிறது”[22].

கதையின் போக்கிலும் அவன் சிறுவயதில் இளமையில் சங்கீரணிக்காகப் புலிகேசியுடன் போரிட்டமையும், விக்ரமவர்மன் அவன் நண்பனாக இருந்தமையும் சொல்லப்படுகிறது.

கி.பி.610-ம் ஆண்டு இரண்டாம் புலிகேசி பல்லவ சாம்ராஜ்யத்தின் மீது படை எடுத்தான் என்பது வரலாற்றுச் செய்தி. கதையின் போக்கில் புலிகேசி மகேந்திரவர்மன் ஆகியோரது பகை காட்டப்பட்டுள்ளது. சாளுக்கியத்துக்கும் பல்லவத்துக்கும் இடையே உள்ள பகைமை விளக்கப்பட்டுள்ளது. புலிகேசியின் தம்பி குப்ஜ விஷ்ணுவர்த்தனன் விஸ்வரூபன் என்ற பெயரில் மகேந்திரனது நண்பனாக காட்டப்படுகிறான். காஞ்சியின் ரகசியங்களை அறிய அவன் ராஜதந்திரத்துடன் அரண்மனையில் மகேந்திரனின் நண்பனாக நடித்து அவனை வாதாபிக்கு கடத்துகிறான். வரலாற்றுச் செய்தியை சாளுக்கிய-பல்லவ, பகைமையைக் கற்பனையுடன் மெருகிட்டு ஆசிரியர் புதினத்தில் காட்டியுள்ளார்.

மகேந்திரவர்மனைச் சங்கீரணஜாதி எனக் கூறுகின்றனர். இதற்கு அறிஞர் சிலர் "கலப்புப் பிறவியுடையவன் என்கின்றனர். தந்தை பல்லவர் என்றும் தாய் தமிழ்ப்பெண்"[23] என்றும் கூறுகின்றனர். P.T.சீனிவாச ஐயங்கார் கூறும் கருத்து தவறு எனச் சொல்லப்படுகிறது. சங்கீரணம் என்பது தாள வகைகளைப் புதியதாகக் கண்டுபிடித்தவன் என்னும் கருத்து ஏற்புடையதே.

குண்டூர் மாவட்டத்தில் உள்ள சிராலா என்னும் ஊரில் உள்ள கபோதீஸ்வரம் கோயிலில் உள்ள கல்வெட்டின்படி ஆந்திரப்பிரதேசத்தில் நெல்லூர், குண்டூர் மாவட்டங்களும் பல்லவ மன்னனுடைய ஆட்சியில் இருந்தன என்றும் அறியலாம்.

இக்கல்வெட்டில்

> "வேகவதி ஆற்றின் கரையில் உள்ள காஞ்சிமா நகரிலிருந்து கொண்டு குணபரன் அவனிபாஜனன் என்ற விருதுப் பெயர்களுடைய மகேந்திர விக்கிரம மகாராசன் ஆட்சி புரிந்தான்"[24]

எனக் கூறப்பட்டுள்ளது. "மகேந்திரவர்மன் சிறந்த புலமையுடையவன், இசைக்கலை வல்லாரிடம் (ருத்ராசாரியர்) முறைப்படி பாடம் கேட்டவன், சிற்ப, ஓவிய நடனக்கலையில் பேரார்வம் கொண்டவன். போரிற் சிறந்தவன் ...... தந்தைபால் மிக்க மதிப்புடையவன், தன்நாட்டு பலசமயங்களை ஆராய்ந்து அறிந்தவன், கலாவிநோதன் எச்சமயத்தில் இருப்பினும் அச்சமயத்தைப் பற்றி பழுதற உணர்ந்தவன்"[22].

மேற்குறித்த ஒவ்வொரு சிறப்பும் வரலாற்று செய்தியும் புதினத்தில் விளக்கப்படுகிறது.

தருமசேனர் ஆகிய அப்பர் என்ற திருநாவுக்கரசர் பாடியபாடலில்,

"கண்ணுதலோன் நன்னுமிடம் அன்னல்வாயில்"[26] என்று குறிப்பிடப்பட்டுள்ள அதுவே அண்ணவாயில், அன்னவாசல் என்றும் அச்சிறிய குன்று சித்தன்னவாயில் என்றும் அழைக்கப்படுகிறது. கொடும்பாளூர் இளவரசன் நிருபகேசரியுடனும்

அஜந்தாவுடனும் சென்று தங்கியிருந்து ஓவியங்கள் தீட்டியதாக புதினத்தில் சொல்லப்பட்டுள்ளது. அஜந்தா குகை ஓவியங்களைப் போலவே சித்தன்னவாசல் ஓவியங்கள் இருப்பது மகேந்திரவர்மன் அஜந்தா சென்று வந்தபிறகு அதைப்போலவே வரைந்ததாக எண்ண இடமளிக்கிறது.

சிம்மவிஷ்ணுவின் மகனான மகேந்திரவர்மனைப் பற்றி நிறைய வரலாற்று உண்மைகள் காணக்கிடைக்கின்றன. இவனது வீரம், புகழ், பண்பு, கலையார்வம் ஆகியவைப்பற்றிய செப்பேடுகளும் காணக்கிடைக்கின்றன.

சிம்மவிஷ்ணுவின் மகன் மகேந்திரன் தந்தையைப் போல வெற்றிவீரன் ஆவான். கலைகளை வளர்த்தவன் குடைவரைக் கோயில்கள் முதன் முதலில் தொண்டை நாட்டில் எடுப்பித்தவன்”[27] எனக் கல்வெட்டுகள் பல கூறுகின்றன.

பரமேஸ்வரன் வெளியிட்ட செப்பேடுகளும் இவன் மரபினர் வெளியிட்ட செப்பேடுகளும் இவனுடைய பேராற்றல் வீரம் ஆகியவை பற்றிக் கூறுகின்றன.

சிம்மவிஷ்ணு சோழநாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்த மாவீரன் என்பதை,

> “மாலையாகவும், நெல் மற்றும் கரும்பு வயல்கள் ஆகியவற்றை
> ஆடையாகவும் கமுகத்தோட்டம், வாழைத் தோட்டம் ஆகியவற்றை
> ஒட்டியாணம்போலக் கொண்டது போன்ற சோழநாட்டைக்
> கைப்பற்றினான்”[28]

என பல்லவர்காலச் செப்பேடுகள் கூறுகின்றன.

“வடமொழியில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றில் பரிவாதினி என்ற சொல் பல்லவ கிரந்த எழுத்தில் காணப்பட்டுள்ளது. இந்த வார்த்தையானது பரிவாதினிதா பரிவாதினி ஏழு நரம்புகளை உடைய ஒரு யாழ் என்று குறிக்கப்பட்டுள்ளது. புதுக்கோட்டை (சீமை) சமஸ்தானக் கல்வெட்டுகள் குணசேகரன் என்றும் குணபரா, குணதரா என்றும் மகேந்திரவர்மனைக் குறிக்கிறது. இவை ருத்ராச்சாரியரின்

சிஷ்யனான மகேந்திரவர்மன் உண்டாக்கிய எட்டுக்கும் ஏழுக்கும் உரியவை"[29] என்பது குறிப்பிடத்தக்கது.

குடுமியான்மலைக்கு அருகிலே திருமெய்யம் (புதுக்கோட்டையிலிருந்து 20 கி.மீ) என்னும் ஊரிலுள்ள மலைக்கோயிலின் அருகில் பல்லவர் காலத்து எழுத்தினால் எழுதப்பட்ட இசைக்கலை சாசனம் ஒன்று இருந்தது. பிற்காலத்துப் பாண்டியன் ஒருவன் இந்த சாசனத்தை அழித்துப்போட்டு அந்த இடத்தில் தன் சாசனம் ஒன்றை எழுதிவிட்டான். ஆனாலும் அழிக்கப்படாத சில எழுத்துக்கள் இன்றும் காணப்படுகின்றன.

"பரிவாதினிதா
கற்கப் படுவது காண்
ஞ் சொல்லிப் புகிற்பருக்கும் நிமி
முக்கன் நிருவத்துக்கும் உரித்து
குணசேனப் பிராமணஞ் செய்த வித்யா பரிவாதிரி கற்"[30]

மேற்கூறிய கல்வெட்டுச் செய்தி குணபரன் என்ற மகேந்திரவர்மன் செய்த பரிவாதினியாழ்பற்றி அறிந்து கொள்ள உதவியாக உள்ளது.

மகேந்திரவாடியில் உள்ள கல்வெட்டு,

"மஹிததமம் ஸதாமுப மஹேந்த்ர தடாகமித
ஸ்திரமுரு காரிதம் குணபரணே விதார்யஸிலாப்
ஜனநயனா பிரம குணதாமி மஹேந்த் ரபுரே
மஹதி மஹேந்திர விஷ்ணு கிரஹா நாம முராரிக்ருஹ"[31].

இதன் பொருளாவது மகேந்திரபுரத்தில் மகேந்திரதடாகக் கரையின்மேல் உலகத்தாரால் புகழ்ந்துரைக்கப்பட்டதும் மக்கள் கண்டு களிக்கும்படி அழகுக்கு உறைவிடமானதுமான முராரி (திருமால்) கிருஹத்தை மகேந்திர விஷ்ணுகிரகம் என்னும் பெயரினால் குணபரன் என்றும் அரசன் செய்வித்தான் என்பதிலிருந்து சமணனாகவும்

சைவனாகவும் இருந்த மகேந்திரவர்மன் விஷ்ணுவுக்கும் கோயில் எடுத்தமை அவன் சமயப் பொறையுள்ளவன் என்பதைத் தெளிவாக்குகிறது.

அவனது சிறப்புப் பெயர்கள் ஒவ்வொன்றையும் அறிந்து கொள்ளும் வகையில் வரலாற்றுச் சின்னங்கள் காணக்கிடைக்கின்றன. "தனது போர் வீரர்களால் பகைவரை அடக்கிய நரேந்திரனாகிய சத்ருமல்லன் என்னும் அரசனாலே இந்த மலையின் மேலே சத்ரு மல்லேஸ்வராலயம் என்றும் கோயில் அமைக்கப்பட்டது"[32] என்ற செய்தி சத்ருமல்லன் என்ற விருதுப்பெயரை மெய்ப்பிக்கிறது.

"சிம்மவிஷ்ணுவின் அவைப்புலவர் வடமொழி வல்லுனரான தாமோதரர் எனப் பெயர் கொண்ட பாரவி"[33] என்னும் செய்தி கதையின் போக்கில் எடுத்தாளப்பட்டுள்ளது. தண்டி என்னும் புலவர் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. சிம்மவிஷ்ணு பல்லவரின் தம்பி பீமவர்மர். இவரும் ஒரு வரலாற்றுப் பாத்திரம். இவர் மகேந்திரவர்மனின் பரிவாதினியாழ் அரங்கேற்றத்திற்காக வந்திருந்தார் என்ற செய்தி கதையின் போக்கில் சொல்லப்படுகிறது.

மகேந்திரவர்மனின் நண்பர்கள் வேடராசன், வேலப்பன், வல்லம் சிற்றரசர் வசந்தப்ரியர் தளவானூர் பிரம்மங்கலவன் செல்வன் சிவதாசன் ஆகியோர்பற்றி தளவானூர் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

"ஒரு காலத்தில் சோழர்கள் பலவீனப்பட்டிருந்தபோது களப்பிரர் என்ற கொடிய வம்சத்தினர், காளத்தி மலைப்பகுதியிலிருந்து வந்து தாக்கிக் குடியேறி சோழரை விரட்டி அரியணையை ஆக்ரமித்தனர். அப்படியே பாண்டியரையும் வீழ்த்தி மதுரையைக் கபளீகரம் செய்தனர்"[34]. இதுவே தமிழகத்தின் இருண்ட காலம் என்ற வரலாற்றுச் செய்தி இப்புதினத்தில் சொல்லப்படுகிறது.

விசித்திர சித்தன் என்னும் பெயர் பேய்க்கணவாய்த் தலைவனை அழித்தமையினால் இப்பெயர் பெற்றான் என புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. சித்திரக்காரப்புலி என்பதற்கும் சித்தன்னவாயில் நிகழ்வுகள் காரணமாக அமைந்துள்ளன. சித்தனவாயிலில் நிருப கேசரியுடன் சென்ற மகேந்திரவர்மனும்

அஜந்தாவும் தங்குகின்றனர். அந்த மலைக்குகைக் கோயிலில் அஜந்தாவை மாதிரியாக வைத்துத் சித்திரங்கள் வரைந்துள்ளான் என்பது புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. இந்த உண்மையான வரலாற்றுச் செய்தியை புதுக்கோட்டையில் காணப்படும் கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

"சித்தன்னவாயில் குகைக்கோயிலில் 7-ம் நூற்றாண்டில் பல்லவ அரசன் மகேந்திரன் சமணராக இருந்தபோது வெட்டுவித்தான் என்ற கல்வெட்டுக் காணப்படுகிறது.

இந்த மலைக்குகைக் கோயிலின் அமைப்பு மகேந்திரவர்மனின் மற்ற புகழ்பெற்ற மலைக்கோயிலைப் போன்றுள்ளது"[35] என கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

சித்திரக்காரப்புலி என்ற பட்டப் பெயருடைய "மகேந்திரனது ஓவியங்கள் அஜந்தா ஓவியங்களுக்கு முன்னோடியானவை"[36] எனக் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன.

அங்கு வரையப்பட்டுள்ள ஆண், பெண் ஓவியங்கள் மகேந்திரனையும் அவனது மனைவியையும் குறிப்பதாகச் சொல்லப்படுகின்றன.

மகேந்திரவர்மன் அனைத்துக் கலைகளிலும் வல்லவன் என்பதை அங்கு காணப்படும் ஒவியங்கள் பறைசாற்றுகின்றன. அங்கு வரையப்பட்டுள்ள நடன மாதுவின் ஓவியமானது பரதத்தின் தலைவனான இறைவன் நடராஜனின் கைகள் எப்படியிருக்குமோ அப்படியுள்ளது.

செம்பியன் செல்வி என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுச் செய்திகள் கல்வெட்டு, இலக்கியங்கள், மெய்க்கீர்த்திகள், பட்டயங்கள் கொண்டு அறிய முடிகிறது.

"சுங்கம் தவிர்த்து இருள்நீக்கு உலகாண்ட
சிறீ குலோத்துங்க சோழ தேவர்"[37]

என கதைத்தலைவன் முதலாம் குலோத்துங்கனைப்பற்றிக் கல்வெட்டு சாசனம் கூறுகிறது. குலோத்துங்கச் சோழன் இருவழிகளில் இராசராச சோழனின் கொள்ளுப்பேரன். இவனுடைய தந்தை ராஜராஜ நரேந்திரன் ராஜராஜ சோழன் மகள்

குந்தவிக்கும் சாளுக்கிய விமலாதித்தனுக்கும் பிறந்தவன். ராஜேந்திர சோழன் மகள் அம்மங்கைக்கும் இராசராச நரேந்திரனுக்கும் பிறந்தவனே முதலாம் குலோத்துங்கன். இவனுக்கு இவனது பாட்டன் பெயரே இராசேந்திரன் எனச் சூட்டப்பட்டிருந்தது. இவன் இளவரசுப்பட்டம் எய்தியபோது விஷ்ணுவர்த்தனன் என்ற பெயர் சூட்டப்பட்டான்.

"பிறந்தது முதலே கங்கை கொண்ட சோழபுரத்தில் பாட்டன் வீட்டில் தமிழ் பேசி வளர்ந்தவன். இவன் பிறப்பதற்கு சில நாட்கள் முன்பு கி.பி.1044-ல் இராஜேந்திரன் இறைவன் திருமலரடி சேர்ந்திருந்தான். தோற்றத்தில் அவ்வேந்தனைப் போலவே காணப்பட்டமையால் பாட்டன் பெயரான இராசேந்திரன் என்ற பெயரையே இவனுக்கு இளமையில் இட்டனர்"[38].

"அவனிபார்க்கும் புரத்தனாம் அடையாளம்
அவயத்தின் அடைய நோக்கி"[39]

எனக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

"இவனுக்கு அபயன், சுபதரன், சுயதுங்கன், விருதராசபயங்கரன், கரிகாலன், இராசநாராயணன், உலகுய்யவந்தான், திருநீற்றுச் சோழன், மனுருலதீபன், உபயகுலோத்தமன், அகலிங்கன், சுங்கம் தவிர்த்த சோழன், பராந்தகன், விக்ரமசோழன், குலசேகரபாண்டிய குலாந்தகன் என்ற பெயர்கள் வழங்கப்பட்டிருந்தன"[40].

இவனுடைய மனைவி பட்டத்தரசி மதுராந்தகி இரண்டாம் ராசேந்திர சோழனின் மகள்.

"சிவனிடத்து மையெனத் தீன சிந்தாமணி
முழுதுடையாள்"[41]

எனக் கல்வெட்டு கூறுகிறது. இவளுடைய மறைவிற்குப் பிறகு தியாகவல்லி என்பவள் பட்டரத்தரசியாயினள். "திருமாலகத்துப் பிரியாதென்றும் திருமகள் திகழ்ந்தெனத் தியாகவல்லி" என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. சென்னி ஆனையுடன் ஆணையை நடத்துமுரிமைத் தியாகவல்லி நிறைச்செல்வி எனக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

மற்றொரு மனைவி ஏழிசைவல்லபி கங்கை வீற்றிருந்தென மங்கையர் திலகம். . . ஏழிசைவல்லபி ஏழுலுகமுடையாள் என கல்வெட்டுகள் கூறுகின்றன. ஏழு பாருலகொடேழிசையும் கூறுகிறது. திருவிடைமருதூரில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில், நம்பிராட்டியார் சீராமன் அருள்மொழி நங்கையாகிய ஏழுலகமுடையார்"[42] என இவளையே குறிக்கிறது.

ஏழிசைவல்லபியான அருள்மொழி அம்மையார் தன் கணவனது இசைநூலைப் பயின்ற சிறந்தபுலமையுடையவளாக ஏழிசையும் வளர்த்து வந்தாள். மதுராந்தகி, தியாகவல்லி, ஏழிசைவல்லபி தவிர கம்பமாதேவி, காடவன் மாதேவி, சோழகுலவல்லி, திரைலோக்ய மாதேவி ஆகிய மனைவியரும் இருந்தனர்.

இச்செய்திகள் புதினத்திலும் குறிக்கப்படுகின்றன. மண்ணுமங்கல விழாவில் அனந்தவர்மன் திரைப் பொருளாக அனுப்பப்பட்டவள் என தன்னைக் கூறி விழாவில் யாழ்வாசித்துப்பாட அப்புலமைகண்டு அதியசித்த குலோத்துங்கனிடம் அவனே அவளது குரு, அவனது இசை நூலைப்பயின்றே தான் புலமை பெற்றிருப்பதாக கூறும் நிகழ்வு இந்த வரலாற்றுச் செய்தியை எடுத்தியம்புகிறது.

“குலோத்துங்கச் சோழனுக்கு இராசராச சோழகங்கன், இராசராச மும்முடிச் சோழன், வீரசோழன், விக்ரம சோழன் என்ற நான்கு புதல்வர்களும், சுத்தமல்லி, அம்மங்கை என இருபுதல்வியரும் இருந்தனர்"[43]. இராசகேசரி குலோத்துங்கசோழன் சோழமன்னர்களிடையே அதிக மெய்க்கீர்த்திகளை உடையவன்.

சோழநாட்டில் “அதிராசேந்திரன் நோயுற்று இறந்தபின் அவனுக்கு மகப்பேறின்மையாலும் சோழ மரபில் வேறு தக்க அரசகுமாரன் எவருமின்மையாலும், . . . . . சோழநாடு அரசனின்றி குழப்பத்தில் ஆழ்ந்தது" என ராசேந்திரன் மெய்கீர்த்தி கூறுகிறது. கங்கை கொண்ட சோழரின் மகள் வயிற்றுப் பேரன் என்னும் உரிமையடிப்படையில் குலோத்துங்கன் அரசன் ஆனான்"[44].

புதினத்தில் சக்கரக்கோட்டப் போரில் ....... கண்டமை வயிராகரத்தை எரியூட்டியது, தாராவர்ஷனை தாள் பணியச் செய்தது, சாளுக்கிய மரபில் வந்த ஆறாம்

விக்ரமாதித்தனைத் துங்கபத்திரைக்கு அப்பால் துரத்தியது, ஈழத்து விசயபாகுவை நட்புரிமை கொண்டு சிங்கள இளவரசனை மருமகனாக்கிக் கொண்டது. கடாரத்து அரசன் சீர்விஜயனை வென்றது, காந்தளூர் சாலையில் சேரனை கதிகலங்கச் செய்து வெற்றிகண்டது பாண்டியர் ஐவரை அடக்கியது, தென்கலிங்கவீமனை தன் மகன் விக்ரம சோழனைக் கொண்டு முறியடித்தது, வடகலிங்கமன்னன் அனந்தவர்மனை போரிட்டு அடக்கியது ஆகிய வரலாற்றுச் செய்திகள் கூறப்படுகின்றன. அதற்கான ஆதாரங்கள் கல்வெட்டுகள் மூலமாகவும், மெய்கீர்த்தியின் மூலமாகவும், இலக்கியத்தின் மூலமாகவும் (கலிங்கத்துப்பரணி) அறியமுடிகிறது.

“வஞ்சனை கடந்து வயிராகரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாராவரசனைத்
திக்குதிகழத் திறை கொண்டருளி”[45]

என்ற பாடல் வரிகளும்,

“விளங்கு சயமகளை யிலிங்கோப் பருவத்துச்
சக்ரக் கோட்டத்து விக்ரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து மதவரையீட்டம்
வயிராகரத்து கரத்து வாரியயிர் முனைக்
கொந்தளவரசர் தந்தளமிரிய
வாளுரை கழித்துத் தோள்வலிகாட்டி”[46]

என்ற வரிகளின் மூலமும் குலோத்துங்கன் தாரவர்ஷனைத் தோற்கடித்தமை புலனாகின்றது.

“தண்ட நாயகர் காக்கம் நவிலையிற்
கொண்ட வாயிரங் குஞ்சரமல்லோ”[47]

என்ற வரிகளும், துங்கபத்திரைக் கரையில் நடைபெற்ற போரில் விக்ரமாதித்தனையும் அவன் தம்பி ஜயசிங்கனும் தோற்றோடும்படிச் செய்தான்.

"துங்கபத்திரைச் செங்கலித்திடைச்

சோழ சேகரன் வாளெறிந்த போர்

வெங்கதக் களிற்றின் வடத்தினால்

வெறியடங்கவே மிசை கவித்தும்"[48]

என்ற கலிங்கத்துப்பரணி வரிகள் விக்ரமாதித்தனை குலோத்துங்கன் வென்றதைக் கூறுகின்றன.

கி.பி.1076-ம் ஆண்டு "சாளுக்கிய மன்னனாகிய ஆறாம் விக்ரமாதித்தனுடன் போர் கோலார் ஜில்லாவில் உள்ள நங்கலி என்னுமிடத்தில் குலோத்துங்கன் வெற்றி பெற்றதோடு விக்ரமாதித்தனைத் துங்கபத்திரை ஆற்றுக்கப்பால் துரத்திச் சென்று . . . . . . . . மேலைச்சாளுக்கிய களிறுகளைக் கைப்பற்றிக் கொண்டான் என இவன் மெய்க்கீர்த்தி கூறுகிறது"[49]. மேலும் மணலூரும் நங்கலியும் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. திருவனந்தபுரத்தைச் சார்ந்த காந்தளூர் சாலையிலும் குமரிமுனைக்கு வடக்கே பத்துமைலிலுள்ள கோட்டாறு என்னும் ஊரிலும் குலோத்துங்கனுக்கும், சேர மன்னனுக்கும் போர் நடைபெற்றது. காந்தளூர்ச் சாலையில் உள்ள சேர மன்னரது கப்பற்படையினை இருமுறை அழித்துப் பெருமை எய்தினான் குலோத்துங்கன்"[50]. இச்செய்தியானது சதாசிவப் பண்டாரத்தாரின் சோழர் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

"வடகடல் தென்கடல் படர்வது போலத்

தன் பெருஞ் சேனையை யேவிப்பஞ்சவர்

ஐவரும் பொருத போர்களத் தஞ்சி

வெரிநளித் தோடி அரணெனப்புக்க

காடறுத்துடைத்து நாடடிப்படுத்து"[51]

என முதற்குலோத்துங்கன் மெய்கீர்த்தியினாலும்,

"விட்டதண்டெழ மீனவர் ஐவருங்

கெட்ட கேட்டினைக் கேட்டிலைபோலுநீ"[52]

என்ற கலிங்கத்துப்பரணி வரிகளும் புதினத்தில் கூறப்பட்ட வரலாற்றுச் செய்திகளின் ஆதாரமாக விளங்குகின்றன.

“பரக்குமோத கடாரமழித்தான்” என்ற கலிங்கத்துப்பரணி வரிகள் கடாரம் சென்று வெற்றி பெற்றான் என்பதையும் தன்தந்தையிடம் அடைக்கலமாக வந்த கடாரத்தரசனுக்கு அதை அளித்தான் என்பதையும் தெளிவாக்குகின்றன. இதனை சோழநாட்டிற்கும் கடாரத்துக்கும் உள்ள நட்புறவை கி.பி.1088-ம் ஆண்டு சுமத்தராதீவில் வரையப்பட்டுள்ள “திசையாயிரத்து ஐந்நூற்றவர் என்னும் தமிழ் வணிக கல்வெட்டு ஒன்று உறுதிப்படுகின்றது”[53]. குலோத்துங்கன் தனக்குச் செய்த பேருதவியை நினைவு கூர்தற்குரியதாக இவன் பேரால் இராசேந்திர சோழப் பெரும்பள்ளி என்னும் புத்த விகாரத்தைச் சோழகுல வல்லிப்பட்டினமாகிய நாகப்பட்டினத்தில் கடாரத்தரசன் புதிதாக அமைந்திருத்தல் வேண்டும் என சதாசிவப்பண்டாரத்தார் கூறுகிறார். நாகப்பட்டினத்திற்கு சோழகுலவல்லிப்பட்டிணம் என்னும் மற்றொரு பெயரும் உண்டு என்பது லெய்டன் சிறு செப்பேடுகளால் அறியப்படுகின்றது.

தென்கலிங்க வீமனைக் குலோத்துங்கனின் கடைசி மகனான விக்ரசோழன் வேங்கியின் பிரதிநிதியாக இருந்த காலத்து போரிட்டு தோற்றோடச் செய்தான். இச்செய்தியானது குலோத்துங்கனின் 26-ம் ஆண்டு கல்வெட்டும் 42-ம் ஆண்டு கல்வெட்டும் குறிப்பிட்டுள்ளன.

“தெலுங்க வீமன் விலங்கன் மிசையேறவும்
கலிங்கபூமியை கனவெரி பருகவும்
ஐம்படைப்பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினிதிருந்து
வடதிசை யடிப்படுத்தருளி”[54]

என விக்ரமசோழன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது. காஞ்சி அரண்மனையில் குலோத்துங்கன் வீற்றிருந்தபோது அவன் ஆதிக்கத்துக்கு உட்பட்ட அனைத்து அரசர்களும் திறைப் பொருள் செலுத்தினர். வட கலிங்க மன்னன் அனந்தவர்மன் மட்டும் திரை செலுத்தினானில்லை. இதனால் கோபமுற்ற குலோத்துங்கன் தனது படைத்தளபதி கருணாகரப் பல்லவனை கலிங்கம் நோக்கி அனுப்பி அனந்தவர்மனை

போரிலே வென்று அவனை சிறைப்பிடித்து வருகிறான். இந்த சரித்திர நிகழ்வே புதினத்தின் கதைக் கருவாகும். கி.பி.1112-ல் இப்போர் நிகழ்ந்துள்ளது. “சென்னை பொருட்காட்சியிலுள்ள உத்தமசோழ செப்பேடுகளில் காணப்படும் கச்சிப்பேட்டுக் கோயிலினுள்ளால் தெற்கில் சித்திர மண்டபத்தெழுந்தருளியிருக்க என்ற வரிகள் உணர்த்துகின்றன. திருச்சிராப்பள்ளி ஜில்லா சீனிவாச நல்லூரில் இவனது ஆட்சியின் 42-ம் ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றும் தஞ்சாவூர் ஜில்லா ஆலங்குடியில் இவனது ஆட்சியின் 45-ம் ஆண்டுக் கல்வெட்டும் இப்போர் நிகழ்வைக் கூறுகின்றன. வடகலிங்கத்துக்கு நேரிற்சென்று இப்போரை நடத்தி பெரு வெற்றியுடன் திரும்பியவன் இவனுடைய படைத்தலைவர்களுள் முதல்வனாகிய “கருணாகரத் தொண்டைமான் என்பவனே”[55] எனக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது. “அனந்தவர்மனின் அமைச்சன் எங்கராயன் என்பவன் சோழப் படையைப் பற்றிக்கூறி திரைப் பொருள் செலுத்துவதே நலம் என்று கூறியும் கேளாத அனந்தவர்மன் கருணாகரனிடம் தோல்வியடைந்தான்”[56].

கருணாகர பல்லவனோடு பஞ்சநதிவாணன், காளிங்கராயன், முடிகொண்டான் ஆகிய முக்கிய படைத்தளபதிகளும் கலிங்கப் போருக்குச் சென்றனர்.

“அனந்தவர்மன் திரைகட்டாத காரணத்தால் பல்லவர் கோன் கருணாகரத் தொண்டைமானைப் படை எடுத்துச் செல்ல ஆணையிட்டான் அவனும் அவ்வாறே செய்து சோழநாட்டிற்கு கொண்டுவந்தான்”[57].

கருணாகரப்பல்லவன் பல்லவர் குலத்தில் தோன்றியவன்; இவனுடைய தந்தை சீரிளங்கோ என்பான். இவனது இயற்பெயர் திருவரங்கன் என்பது. சோழகங்கன் அனந்தவர்மனை வென்று குலோத்துங்கனுக்கு வாகைமாலை சூடிய இவனை

“வண்டையர் அரசன் அரசர்கள் நாதன் மந்திரி உலகு புகழ் கருணாகரன்,
கலிங்கப்பரணி நம் காவலனைச் சூட்டிய தோன்றல்”[58]

எனவும் ஜயங்கொண்டார் தம் கலிங்கத்துப் பரணியில் கூறியுள்ளார். மேலும் இவனை வண்டைமன், வண்டை நகரரசன், வண்டையர்க்கரசு, வண்டையர்கோன் எனவும்

ஜயங்கொண்டார் புகழ்ந்துரைக்கிறார். தொண்டைமான் என்ற பட்டம் இவனுக்கு குலோத்துங்கனால் அளிக்கப்பட்டது. இவனைக் கதைத்தலைவனாக புதினத்தில் காட்டப்பட்டிருக்கும் இவன் பெருவீரனாகத் திகழ்ந்தான். தொண்டை மண்டலத்தை ஆண்டு குலோத்துங்கனது மகள் அம்மங்கையும் மணந்தான் எனவும் வரலாறு கூறுகிறது.

> "ஸ்வஸ்திக ஸ்ரீகோ இராச கேசரிவன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு நாற்பத்து மூன்று ஜயங்கொண்ட சோழ மண்டலத்துக் குலோத்துங்க சோழ வளநாட்டுத் திருநறையூர் நாட்டு வண்டாழஞ் சேரியுடையான் வேளான கருணாகரனாரன தொண்டைமானார் தேவியார் அழகிய மணவாளனி மண்டையாழ்வார் வைத்த நந்தா விளக்கு"[59]

என்ற கல்வெட்டுச் செய்தி கருணாகரனைப் பற்றியும் அவனது மனைவியைப் பற்றியும் கூறுகிறது. இவன் விக்ரம சோழன் ஆட்சியிலும் உயர்நிலையில் இருந்தான்.

> "அரும்பாக்கிழான் மணவிற் கூத்தனான காலிங்கராயன் என்பானும் புதினத்தில் மிக முக்கிய இடத்தைப் பெற்றுள்ள பாத்திரமாகும். இவன் தொண்டை மண்டலத்திலுள்ள மணலில் என்ற ஊரினன்.
> அரும்பாக்கிழான் பொன்னம்பலக் கூத்தன், நரலோகவீரன் என்னும் சிறப்புப் பெயர்களை உடையவன். குலோத்துங்கன் வேணாடு, மலைநாடு, பாண்டியநாடு, வடநாடு முதலியவற்றோடு நிகழ்த்திய போர்களில் படைத்தலைமை வகித்து வெற்றியுற்று அதனால் அரசனுக்கு என்றும் நிலைபேனுடைய புகழை உண்டுபண்ணியவன். இவனது போர்வன்மையையும், பெருமையையும் நன்குணர்ந்த குலோத்துங்கன் இவனுக்குக் காளிங்கராயன் என்ற பட்டமளித்தான். இவன் விக்ரம சோழன் ஆட்சியிலும் உயர்நிலையில் இருந்தான்"[60].

"முடிகொண்டான் என்ற புதினத்தில் காட்டப்படும் கஞ்சாறன் பஞ்சநதி கொண்டானான வத்தராயின் என்பான் சோழநாட்டில் உள்ள கஞ்சாறன் என்னும்

ஊரினன். பஞ்சநதிவாணன் என்பவனின் புதல்வன். தந்தை மகன் இருவருமே குலோத்துங்கன் ஆட்சியில் சிறந்த படைத்தலைவர்களாக பணியாற்றியுள்ளனர்"[61]. வத்தராயன் என்பது குலோத்துங்கனால் கொடுக்கப்பட்ட பட்டம்.

"இவன் பங்களூர் ஜில்லா நிலமங்கலாத் தாலுகாவில் உள்ள மண்ணையில் குலோத்துங்கனுடைய பகைவர்களாகிய மேலைச் சாளுக்கியர்களைப் போரில் வென்று வாகை சூடியவன்".

"புயல்மேவு பொறிற்றஞ்சை முதற்பஞ்சநதிவானன்

புதல்வன் பூண்ட

வயமேவு களியானை முடிகொண்டான்"[62]

என்ற வரிகளினால் இவனைப்பற்றி அறியமுடிகிறது. கலிங்க வேந்தனாகிய அனந்தவர்ம சோடகங்கன் என்பான் தான் அளித்த செப்பேடுகளில்தான் இராசேந்திர சோழன் மகளாகிய இராஜசுந்தரியின் மகன் என கி.பி.1081, 1135-ம் ஆண்டுகளில் கல்வெட்டுகளில் குறித்திருப்பது, புதினத்திலும் "குலோத்துங்கன் மகளாகிய இராசசுந்தரியை காண கால தேவர் சென்று வந்தமை குறிக்கப்பட்டுள்ளது. கங்க நாட்டான் குலோத்துங்க சோழரின் மகளான இராஜசுந்தரியை மணந்திருந்ததால் காலதேவருக்கு அங்கு எல்லா மரியாதைகளுடன் தங்கியிருக்க முடிந்தது"[63] எனக் காட்டப்பட்டிருக்கும் வரிகள் வரலாற்றுச் செய்தியினைக் கூறுகிறது. கங்க மன்னன் கூறியுள்ள இராசேந்திரன் இவன் அல்ல என்ற கருத்து கூறப்படுகிறது. இளவயதில் பாட்டன் பெயரையே கொண்டிருந்த இராசேந்திரசோழன் என்று (குலோத்துங்கள்) குறிக்கப்பட்டிருந்தமையே இதற்கு காரணமாகும். "அனந்தவர்மனுடைய தாய் இராச சுந்தரி என்பாள் நம் குலோத்துங்கன் மகள் அல்லள்"[64] என்பதும் செப்பேடுகள் உணர்த்தும் உண்மையாகும் என சதாசிவப் பண்டாரத்தார் தம் சோழர் வரலாற்றில் குறித்துள்ளார். குலோத்துங்கனும் வீரராசேந்திரனும் இராசகேசரி பட்டம் புனைந்து அரசாண்டவர்கள். இவர்கள் இருவருக்கும் இடையே பரகேசரி பட்டம் புனைந்த கொண்ட அரசன் ஒருவன் இருந்திருக்க வேண்டும்.

“குலோத்துங்கனுக்கு இளமையில் இராசேந்திரன் என்றும் பட்டம் வழங்கியமைப்பற்றி டாக்டர் பிளீட் என்பார் இராஜசுந்தரியின் தந்தை குலோத்துங்க சோழன் என்று முதலில் கூறினார்”[65]. அதனையே ஆராய்ச்சியாளர் பலரும் கூறி வருவாராயினர்.

“சில கல்வெட்டுகளில் அனந்தவர்மன் வீரராஜேந்திர சோழ கங்கன் என்ற பெயருடன் குறிக்கப்பட்டிருந்தது அவன் வீரராஜேந்திரனின் பெயரன் என்பதை வலியுறுத்துதல் காண்க”[66].

எனவே புதினத்தில் கூறப்படும் இராஜசுந்தரி சோழன் குலோத்துங்கனின் மகள் அல்ல. சுத்தமல்லி தேவியாரும், அம்மங்கையுமே அவனது புதல்விகள் எனத் துணியலாம்.

கோவிந்த சந்திரன் என்றும் கன்னோசி அரசன் குலோத்துங்கனின் உற்ற நண்பனாவான். இது புதினத்திலும் காட்டப்படுகின்றது. “கி.பி.1111–ல் குலோத்துங்கனது 41–ம் ஆண்டு கன்னோசி மன்னனது வடமொழிக் கல்வெட்டு ஒன்று கங்கை கொண்ட சோழபுரத்தில் உள்ளது”[67]. “உத்திரப்பிரதேசத்தில் உள்ள லெட்சுமணபுர பொருட்காட்சியில் உள்ள கன்னோசி மன்னர் கோவிந்த சந்திரதேவன் செப்பேடுகளில் முதலில் உள்ள வடமொழிச் சுலோகங்களே கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிற் சுவரிலும் காணப்படுகின்றன”[68].

அவர்கள் சூரிய தேவனுக்குத் தனிக்கோயில் அமைத்து வழிபட்டது போலவே “குலோத்துங்கனும் தனிக்கோயில் எடுப்பித்து அதற்கு குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம் என்று பெயரிட்டு நாள் வழிபாட்டுக்கு நிவந்தங்களும் வழங்கியுள்ளான்”[69]. இதிலிருந்து கன்னோசி அரசன் கோவிந்த சந்திரனும், குலோத்துங்கனும் நண்பர்கள் என்பது புலனாகும் செய்தியாகும். அமைச்சர் நாராயணபட்டர் என்பார் “கி.பி. 1097–ல் குலோத்துங்க சோழ சரிதை என்ற நூல் ஒன்றை இயற்றி, புதுச்சேரியைச் சார்ந்த திரிபுவனி என்னும் ஊரில் இறையிலி நிலம் பரிசாகப் பெற்றவர். கவிருமுத சந்திர பண்டிதர் என்பது இவரது சிறப்புப் பெயர். நாராயண பட்டர்

என்ற அமைச்சரும் சந்திரபண்டிதரும் ஒருவராக இருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து"[70]. கருணாகரது போர்ப்பயிற்சித் திறமையைப் பற்றிக் கூறும்போது "கருணாகரா நாராயணபட்டர் கேள்விப்படுவராரேயானால் உண்மையில் நேரில் பார்க்காமல் நம்பமாட்டார். என்னுடைய தந்தை இராசராச நரேந்தர் காலத்தில் அமைச்சுப் பதவியில் அமர்ந்த அவருக்கு இப்போது ஏறக்குறைய எண்பத்திரண்டு வயதாகிறது. இந்த வயதில் அவருடைய அனுபவம் சொல்லற்கரியது. போர்முறையின் நன்மை தீமையை நன்கு அலசுவதற்காகவே அவர் மகாபாரதத்தைத் தெலுங்கில் மொழிபெயர்த்தார். அந்த ஞானம் உண்மையிலேயே இந்த சாதனையைக் கண்டு அதிசயிக்கும்"[71] எனப் புதினத்தில் இவர் பற்றிய வரலாற்றுச் செய்தி வெளிப்படுகிறது.

## பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுச் செய்திகள்

கல்வெட்டுச் சாசனங்கள், மெய்கீர்த்தி, வரலாற்று நூல்களில் கூறப்பட்டுள்ள வரலாற்று நிகழ்வுகள், இலக்கியச் சான்றுகள் ஆகியவற்றைக் கொண்டு அறியமுடிகிறது.

புதினத்தின் கதைக்களம் முதலாம் ஜடாவர்ம சுந்தரபாண்டியனுக்கும் மூன்றாம் இராஜேந்திர சோழனுக்கும் இடையே நடந்த போர்கள், இணைக்கதைத் தலைவன் விஜயகண்ட கோபாலன் பற்றிய சரித்திர நிகழ்வுகள் காட்டப்பட்டுள்ளன. தெலுங்கு சோடவம்சம், போசாளர்கள், காடவர், சம்புவரையர் சேதிராயர் அவர்களைப் பற்றிய சரித்திர நிகழ்வுகள் ஆகியவை வெளிப்படுத்தும் வரலாற்றுச் செய்திகள் புதினத்தில் காட்டப்படுகின்றன.

காலம் காலமாகத் தெலுங்குச் சோடர்கள் சோழர்களிடம் மாறாத நட்புரிமை கொண்டவர்கள்.

"அரிமாவை ஒத்த வீரனான கண்ட கோபாலன் .... .... வெறி நிறைந்த கண்களுடன் புலிக்கொடிகை நோக்கினான். அந்தக் கொடி பாரம்பரியமாக வந்த சோழருடைய கொடியே ஆனாலும் கொஞ்சம் மாறுதல் கண்டிருந்தது.

பெரியதாய் பொறித்த புலிச்சின்னத்திற்கு கீழே சிறியதாகவராகச் சின்னம் காணப்பட்டது. அது சாளுக்கிய ரத்தக் கலப்பை கோடிட்டுக் காட்டிய சின்னமாகும்”[72].

இதிலிருந்து சோழ சாளுக்கியக் கலப்பானது பெறப்படுகிறது. முதலாம் ராசராசன் தன் மகள் குந்தவியை சாளுக்கிய விமலாதித்தனுக்கு மணம் செய்து கொடுத்தான். அவர்கள் இருவருக்கும் மகனான வீர நரேந்திரனுக்கு முதலாம் இராஜேந்திரன் தன் மகள் அம்மங்காதேவியை மணமுடித்துக் கொடுத்தார். அவர்கள் இருவருக்கும் பிறந்த மகனே முதலாம் குலோத்துங்கன். இதுபோல சாளுக்கியக் கலப்பு வரலாற்றுச் செய்தி புதினத்தின் மூலம் அறியப்படுகிறது.

இவ்வாறு விஜயகண்ட கோபாலன் நினைத்துப்பார்ப்பது புதினத்தில் காட்டப்படுகிறது. “காஞ்சியும் நெல்லுமாக காலம் கழித்த எனக்கு இத்தனிமை புதிதல்ல”[73] எனக் கண்டகோபாலன் கூறுவது அவன் சோழர்களின் நலத்தில் அக்கறை உள்ளவன் என்பதைக் காட்டுகிறது.

“ஒரு காலத்தில் ஓகோ என்று ஆட்சிபுரிந்த மாவீரன் முதலாம் திக்கன் என்ற விஜயகண்ட கோபாலன் என்ற இணைக்கதைத் தலைமைப்பாத்திரம் வடக்கே நெல்லூர் முதல் தெற்கே செங்கற்பட்டு வரை எல்லையாகக் கொண்ட தெலுங்குச் சோழமன்னன். இந்த தெலுங்குச் சோடர்கள் நீண்ட காலமாகவே சோழர்க்கு அடங்கியும் நன்றிப் பெருக்குடையவராகவும் இருந்துவந்தனர். கரிகாலச் சோழர் காலத்தில் கடப்பை, கர்நூல், நெல்லூர், சித்தூர் ஆகிய இடங்களில் குடியேறிய இம்மரபு ரேணாண்டு சோழ மரபு என்றும் தெலுங்கு சோடமரபு என்றும் வழங்கி வரலாயிற்று”[74]. அம்மரபில் வந்தவன்தான் கண்ட கோபாலன்.

இவன் “தசகுமார சரிதம் எழுதிய சேதனார் போன்றோரின் புலமைநாக்களில் இடம்பெற்றவன். சம்புவராயர், சேதிராயர், காடவராயர்களை வென்று வாகைசூடிய சமராபரனன்”[75]. இவர் கோப்பெருஞ்சிங்கனையும் ஒடுக்கி உயர்வு கண்டவன்.

திக்கன்பதி என்ற கண்ட கோபாலன் சோழர்களின் நண்பன் என்பதற்கும் ஹொப்பசாளர்களின் பகைவன் என்பதற்கும் இலக்கியச் சான்றுகள் உள்ளன.

"திக்கண்ணா என்றும் புலவர் தான் எழுதிய நிர்வசநோத்தரா என்ற நூலுக்கு முன்னுரையில் எழுதிய செய்யுளில் தன்னை ஆதரித்த வள்ளலான மன்ம சித்தனின் தந்தையான திக்கனுடைய சாதனைகளைப் பற்றி விரிவாகவும் நடுநிலமையிலும் எழுதிய பல விவரங்களையும் தந்திருக்கிறார்"[76]. திக்கன் காடவராயர், சேதிராயர், சம்புவராயர் ஆகியவர்களை அடக்கி தன் மேலாண்மையின் கீழ் இருக்கச் செய்தான் என்ற உண்மை புதினத்தின் கதைப்போக்கிலும் கூறப்பட்டுள்ளது.

மேற்கூறியவர்கள் சோழ அரசன் மூன்றாம் இராசேந்திரனின் மந்திராலோசனைக் கூட்டத்தில் கண்ட கோபாலனுக்கு கொடுக்கும் மரியாதையையும் பயத்தையும் இதனை எடுத்துக்காட்டுவதாக புதினத்தில் அமைந்துள்ளது.

இவனது சமஸ்கிருத மெய்கீர்த்தி,

"வீரகண்ட கோபால விபினதாவதகன
காஞ்சிபுர வராதீஸ்வர கணபதி
ஹரினா சாந்தூ நெல்லுரயுர
வீரசித வீராபிஷேக"[77] – என்று கூறுவதை கல்வெட்டுக்களின் மூலமும் அறியலாம்.

மேலும் புதினத்தின் கதைப்போக்கிலும் சோழ ஸ்தாபனாச்சாரியன் என்ற பட்டத்தை வீர சோமேஸ்வரன், திக்கன் இருவரும் கொண்டனர் என்ற வரலாற்றுச் செய்தி காணப்படுகிறது.

திக்கன்பதியைப் பொறுத்தவரை இப்பட்டத்திற்கு அவனே உரியவன் என்பதை திக்கண்ணா அவரது செய்யுளில் கூறுகிறார்.

“சம்புராஜாதி பிரஸஸ்தாரி மண்டலிகமு ஜெர்ச்சியேவட காஞ்சிபுரமு சேதிமண்டலமு காசி கஜேசி காடவப்பதி நீய்ய கொலுபடே பலச்சமுனக்கு”[78]

தசகுமார சரிதம் என்னும் நூலில்

சேதனா, “திக்கன் பாண்டியர்களிடமிருந்து கப்பம் வசூலித்ததைச் சொல்லுகிறார்”[79]. இதன்மூலம் பாண்டியருன் சோழன் போர் செய்தபோது அவனுக்கு கண்ட கோபாலன் உதவி செய்திருப்பான் என்ற வரலாற்று உண்மையை அறியமுடிகிறது.

தில்லையில் இருந்த கோவிந்தராசப் பெருமாள் மூர்த்தத்தை இரண்டாம் குலோத்துங்கன் கடலில் கிடத்த இராமானுஜர் அதைப்பெற்று திருப்பதியில் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்ற செய்தி புதினத்தில் கதையின் போக்கில் கூறப்பட்டுள்ளது.

“திருப்பதியில் பிரதிஷ்டை செய்யப்பெற்றிருக்கும் தில்லை திருமால் மூர்த்தத்தை பாண்டியனுடைய வேண்டுதலுக்கு இணங்கி அளித்துவிடட்டுமா? .... அப்புறம் இந்தப் போரைத் தூண்ட எந்தவித காரணமும் ஏற்படாது”[80] எனப் புதினத்தில் கூறப்பட்ட காரணம் இராமானுஜர் திருப்பதியில் பிரதிஷ்டை செய்த திருமால் மூர்த்தத்தைப் பற்றிய வரலாற்றுச் செய்தியைக் கூறுகிறது. “கிருமி கண்ட சோழனான அந்த இரண்டாம் குலோத்துங்கன் மட்டும் கோவிந்தராசப் பெருமாள் சிலையை தில்லை மண்ணிலிருந்து அகற்றாமலிருந்தால் இந்த தெய்வ சாபம் தொடர்ந்திராதல்லவா?”[81]

சோழநாட்டு பிரச்சனைக்கே மூலமாக நிற்பது அந்த கோவிந்தராசப் பெருமாளுடைய மூர்த்தம் தானே என்ற செய்தியானது இந்தப்போருக்கான (ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் மூன்றாம் ராஜேந்திரன் மீது தொடுத்த போர்) காரணங்களில் இதுவும் ஒரு காரணமாக அமைந்தது என படைப்பாசிரியர் கோடிட்டுக் காட்டுகிறார்.

“சிற்றம்பலத்தின் முன்னர் இடமின்றிய நிலையில் அமைக்கப்பட்டிருந்த தில்லை கோவிந்தராசரை அப்புறப்படுத்தினால் திருமுற்றம் அமையுமென்ற திருப்பணி செய்யும்

வேட்கையினால் இரண்டாம் குலோத்துங்கன் திருமால் உருவத்தை எடுத்து கடலில் கிடத்தும்படி செய்து முற்றத்தை விரிவு செய்தான். இதனால் கிருமிகண்ட சோழன் எனப்பட்டான்"[82] என்றும் கருத்தும் பொருத்தமாகவே உள்ளது.

இந்த இரண்டாம் குலோத்துங்கன், "சிதம்பரத்தில் முடிசூட்டிக் கொண்டதோடு திருச்சிற்றம்பலத்துக்கு பொன் வேய்ந்துள்ளான். வைணவ ஆசாரியரான இராமானுஜரை கொடுமையாக நடத்தியவன் இவன்"[83] என சிலர் கூறும் கருத்துக்கள் வைணவத்தை மிகைப்படுத்திக் கூறும் கருத்துக்களே. சோழ வம்சம் முழுவதுமே மதச்சகிப்புத் தன்மையுடைய அரசர்களே ஆட்சி செய்தனர். அவ்வாறு வைணவ விரோதியாக இருப்பின் மற்ற கோயில்களையும் இவன் அழித்திருக்கக் கூடும் என்று நுணுகி ஆராயவேண்டிய நிலையுள்ளது.

கடலில் கிடத்திய கோவிந்தராசப் பெருமானை இராமானுஜர் பெற்று திருப்பதியில் பிரதிஷ்டை செய்ததாகப் புதினத்தில் சொல்லப்படுகிறது.

"இது காகதீய மரபுக்கு உட்பட்டது என்றும் அந்த மரபு திருமால் மூர்த்தத்தை பிரதிஷ்டை செய்த இராமானுஜருடைய சிஷ்ய மரபுக்கு கட்டுப்பட்டது"[84] என்று கண்ட கோபாலன் பாண்டியனுக்கு மறுமொழி அனுப்புகிறான்.

"சிலை தேவை என்றதால் ஓர் உடன்பாட்டின் கீழ் சோழ சாம்ராஜ்யத்துக்கு விடுதலை அளிக்க கோரியிருக்கிறேன்"[85] என கண்ட கோபாலன் கூறியதிலிருந்து மூன்றாம் ராஜராஜன் காலத்தில் சோழநாடு அழிக்கப்பட்டமை, இரண்டாம் குலோத்துங்கன் காலத்து தில்லை நிகழ்வு, இளவரசன் மூன்றம் இராசேந்திரன் பல வெற்றிகள் பெற்று திரும்பவும் தன் தந்தை இராஜராஜனுக்கு பட்டம் சூட்டியதும் ஆகிய வரலாற்றுச் செய்திகள் புதினத்தில் கதையின் போக்கில் கூறப்பட்டுள்ளன.

மேலும் மூன்றாம் ராஜேந்திரனைப்பற்றிய செய்திகள் புதினத்தில் காட்டப்படுகின்றன.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்போன் சோழநாட்டை எப்படியெல்லாம் அழித்து தீக்கிரையாக்கினான். அந்தப் பகைமையைத் தீர்த்து வஞ்சம் போக்கினார் நமது ராசேந்திரர். சமஸ்தஜகதேகவீரராகப் புகழ்பெற்ற நமது சோழ அரசர் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் பாண்டிய நாட்டை ஆண்ட இரண்டாம் சடையவர்மன் குலசேகரனையும், இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனையும் வென்று "இருவர் பாண்டியர் முடித்தலை கொண்டருளிய மகாராசாதிராசா நரபதி"[86] என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார்.

இந்த வரலாற்றுச் செய்தியானது புதினத்தில் கூறப்பட்டுள்ளது.

இச்செய்திகளிலிருந்து மூன்றாம் ராசேந்திரர் அறிவும் ஆற்றலும், அனுபவமும் மிக்க சிறந்த வீரர் என்பதை பண்டைய ஆதாரங்களிலிருந்து அறியலாம்.

"இராசேந்திரன் இளவரசுப்பட்டம் பெற்ற பின்பு மிகுந்த சாதனைகளைப் படைத்துள்ளான். இருவர் பாண்டியர் முடித்தலை கொண்டருளிய என்ற வாசகம் சோழ மன்னனுக்கு அவன் அளித்த இரண்டாவது முடி பாண்டியனுடைய முடியே என்பது நீலகண்ட சாஸ்திரிகளின் கூற்று"[87]. இவனுடைய மெய்க்கீர்த்தி வடமொழியில் அமைந்துள்ளது. இவன் அந்தணர்களைப் போற்றியவன் வீரமும் ஆற்றலும் ஒருங்கே பெற்ற வீரன். இவன் தனது தந்தையாகிய மூன்றாம் ராஜராஜனுக்கு பாண்டியர்கள் இழைத்த கொடுமைகளை நினைவில் கொண்டு பாண்டிய நாட்டில் பல அழிவுகளைச் செய்தான்.

அத்தகைய வீரன் நட்பு நாடுகளின் சூழ்ச்சியால் தனிமைப்படுத்தப்பட்டான். எனினும் விஜயகண்ட கோபாலனின் நன்றியணர்வோடு கூடிய நட்பு சம்புவரையர், வானாதிரையர் போன்றோர்கள் அவனுக்குப் படை உதவி செய்யும் அளவுக்கு மாற்றியிருந்தது.

உடனிருந்தே கொல்லும் வியாதியைப் போன்ற போசாளன் வீர சோமேஸ்வரன் பாண்டியர் பக்கம் சேர்ந்து சோழனைப் பழிவாங்கினான். அவனுடைய இந்த துரோகத்துக்கு கண்ணனூர் போரில் பாண்டியனாலேயே கொல்லப்பட்ட வரலாற்றுச் செய்தியும் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

கோப்பெருஞ்சிங்கன் என்ற பல்லவ அரசின் வழிவந்த சேந்தமங்கல அரசன் இப்போரில் கொல்லப்பட்டான். இவனும் சோழனுக்கு உதவினானில்லை.

"பாரதப் போரில் அரவான் முதல் பலியானான்
பாரதம் இனிதாக முடிந்ததாம். இதோ கோப்
பெருஞ்சிங்கன் வீரப்புகழ் முதற்பலி . . . . .
பாண்டியனுக்கு வெற்றியே"[88]

கோப்பெருஞ்சிங்கனைப் பற்றிய வரலாற்றுண்மைகள் புதினத்தில் காட்டப்பட்டுள்ள செய்திகளுக்கு ஆதாரமாக விளங்குகின்றது. இவ்வரசன் கி.பி.1229 முதல் 1278 வரை தென்னாற்காடு மாவட்டம் சேந்தமங்கலத்தை தலைநகராகக் கொண்டு அரசாண்டவன்.... தெற்கே தஞ்சை மாவட்டம் முதல் வடக்கே கோதாவரி வரை இவனுடைய கல்வெட்டுகள் கிடைக்கின்றன.

"சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கு பலகாரணங்கள் இருப்பினும் கோப்பெருஞ்சிங்கனும் ஒரு முக்கியமான காரணமாகக் கருதலாம்"[89] என அறிஞர்கள் கூறுகின்றனர். கி.பி.1231-ல் தெள்ளாறு என்னுமிடத்தில் சோழப் பேரரசன் மூன்றாம் இராசராசனை சேந்தமங்கலத்தில் சிறையிட்டான். ஹொய்சாள மன்னன் வீரநரசிம்மன் விரைந்து வந்து சோழமன்னனை சிறைமீட்டான். கோப்பெருஞ்சிங்கனையும் சோழருக்கு அடங்கி கப்பம் கட்டச் செய்தான். ஆனால் திரும்பவும் ஹொய்சாளருடன் போரிட்டு கரம்பலருர் என்ற இடத்தில் வென்றான். இவனை ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் வென்று சிற்றரசனாக்கினான்.

இவன் 'கவிசார்வ பௌமன்' முதலிய ஆரவாரமான பட்டங்களை புனைந்து கொண்டான்.

"சிதம்பரம் கோயிலின் தெற்கு கோபுரத்தை எழுப்பிய பெருமை இவனையே சாரும். . . . . இவன் சோழர், பாண்டியர், ஹொய்சாளர் ஆகிய அனைவரையும் வென்றதாக விருதுகள் புனைந்துள்ளான்"[90].

"திருவக்கரை திருபுவனை, வில்லியனூர் கோயில்களில் இவன் காலத்து கல்வெட்டுகள் கிடைக்கின்றன. திருவந்திபுறம் கல்வெட்டின்படி மூன்றாம் இராஜராஜனை தாக்கி சிறைப்பிடித்தபிறகு அவனை விடுதலை செய்த காடவ சிற்றரசன் புகழ்பெற்ற கண்ட கோபாலன்"[91] என நீலகண்ட சாஸ்த்திரியார் கூறுகிறார்.

"சேந்தமங்கலத்தில் சோழச் சக்கரவர்த்தியை சிறைவைத்ததோடு விஷ்ணு கோயில்கள் உட்பட்ட எல்லாக் கோயில்களையும் கொள்ளையடிக்கும்படி ஏற்பாடு செய்தான்..... என்பது வரலாற்றுச் செய்தியாகும்.

"ஹொய்சாள அரசன் நரசிம்மன் தன் தலைநகரான துவார சமுத்திலிருந்து புறப்பட்டதாயும் 'சோழமண்டல பிரதிஷ்ட ஆச்சார்யன்' என்ற பெயர் தனக்கு ஏற்படும் வரை போர் முழக்கம் செய்தான் என விருத்தாசலம் கல்வெட்டு கூறுகிறது"[92].

இவன் கோப்பெருஞ்சிங்கனை அடக்கியதோடு பாண்டியனிடம் கப்பம் வசூலித்தான் என சத்யகர்ணமிதம் கூறுகிறது என நீலகண்ட சாஸ்திரியின் சோழர் வரலாற்றின் மூலம் அறியமுடிகிறது.

புதினத்தில் உதயமார்த்தாண்ட ரவி என்ற சேரமன்னனை குமாரக் கூத்தன் மாவலிராயன் என்ற பாண்டியத் தளபதி தோற்கடித்தான் எனக் கூறப்படுகிறது.

உதய மார்த்தாண்ட ரவியைப் பாண்டியன் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் வென்றான் என்பது வரலாற்று உண்மையாகும். மன்னனின் தளபதி வென்றது மன்னனையே சாரும்.

ஜடாவர்ம சுந்தரபாண்டியன் கி.பி.1251-ல் பட்டமேற்றான். கி.பி.1264-ல் கண்ணனூருக்கு அருகே ஒரு போரில் ஹொய்சாள வீர சோமேஸ்வரனை போரில் தோற்கடித்துக் கொன்றான். . . . . . தெலுங்குச் சோடர் பகுதிகளையும் படை எடுத்து நெல்லூரில் வீராபிஷேகம் செய்து கொண்டான் என்பது சோழர் வரலாற்றின் மூலம் அறிய முடிகிறது.

“இவனுடைய சாதனைகள் சிறப்பானவை. இவன் சேர, தெலுங்கு சோடர்கள், காகதியர், காடவர், ஹொய்சாளர்கள், இலங்கை அரசர்கள், மூன்றாம் ராஜேந்திரன் ஆகியோரை தோற்கடித்தான். சிதம்பரம் கோயிலில் துலாபாரதானம் செய்து பொன்வேய்ந்தான். ஸ்ரீரங்கம் கோயிலுக்கும் பொன் வேய்ந்தான். எனவே பொன் வேய்ந்த மகிபதி என்றும் ஹேமசந்திரன் என்றும் அழைக்கப்பட்டான்”[93].

இவ்வாதாரங்கள் புதினத்திலும் எடுத்தாளப்பட்டுள்ளன. தில்லையம்பதிக்கு பொன் வேய்ந்தது மட்டுமல்ல தில்லைக் கோயிலின் மேற்கு கோபுரம் இவனாலேயே கட்டப்பட்டது. புதினத்தில் கதையின் போக்கில் விசயகண்ட கோபாலன் கேட்டுக் கொண்டதற்கிணங்க ஸ்ரீரங்கம் கோயிலுக்கும் பொன் வேய்ந்தான் எனக் காட்டப்பட்டுள்ளது.

“மன்னவரே இந்தப் போல் வெற்றியடைந்தால் திருவரங்கத்துப் பெருமானுக்கு பொன் வேய்வதாகப் பிரார்த்திக் கொண்டேன். ஆகவே என்னுடைய பிரார்த்தனையை செய்து முடிப்பீர்களா? என சுந்தரபாண்டியனை இறக்கும் தருவாயில் கேட்கிறான். எல்லாம் தலையான பெருமாள் என்ற இணையற்ற விருதைப் பெற்ற சடையவர்மன் சுந்தரபாண்டியர் …… திருவரங்கத்துக்கும் பொன்வேய்ந்து பெருமாளின் அருளைப் பெற்றார். கண்ட கோபாலன் வாக்கை நிறைவேற்றியாகிவிட்டது”[94].

“வாக்கியல் செந்தமிழ்ச் சுந்தரபாண்டியன் வாளமரில்
வீக்கிய வன்கழற் கண்ட கோபாலனை விண்ணுலகிற்

போக்கிய பின்பலன் தம்பியர் போற்றப்புரந்தரசில்

ஆக்கிய வார்த்தை பதினாலுலகமுமாகியதே”[95]

என்ற பாடலின் மூலம் இந்த வரலாற்று உண்மையை அறியலாம்.

சுந்தரபாண்டியன் வீரத்தை மதிக்கும் மாவீரன் இயல்பாகவே நல்ல உள்ளம் கொண்டவன். மனசாட்சிக்கு கட்டுப்பட்டவனாக இருந்தும் ராஜ (தர்மத்தின்) தந்திரப்படி யுத்த தர்மத்தை மேற்கொண்டவன் என புதினத்தில் காட்டப்படுகிறான். இவன் சிவபக்தன், விஷ்ணுபக்தனும்கூட,

“இவன் சிவபக்தன், விஷ்ணு பக்தனும் கூட. இவனுடைய சொந்த வாழ்க்கை புடம்போட்ட பொன் போன்ற தூயது. இவனுடைய திருப்பதி கல்வெட்டில் மற்றவர்களை சகோதரர்களாகவும், அவர்களின் மனைவியரை சகோதரிகளாகவும் பாவிக்கும் பண்புள்ளவன். எந்த அரசனும் இதுபோன்றதொரு கருத்துடன் செயல்பட்டவர் இல்லை. எனவே இரண்டாவது ராமன் என்று புகழப்பட்டான்”[96].

திருவெண்காட்டு கல்வெட்டு சாசனத்தின்படி எல்லாம் தலையாய பெருமாள், எல்லாம் தலையானார், எல்லார்க்கும் நாயனார் என்று பொறிக்கப்பட்டுள்ளது. எம்மண்டலமும் கொண்டருளியவன் எனப் போற்றப்படும் இவன் ஏகபத்தினி விரதனும் என குறிப்பிடப்படுகிறான்.

புதினத்தில் சுந்தரபாண்டியனின் குணநலன்கள் பிரதிபலிப்பது வரலாற்று உண்மைக்கு ஒத்தேயுள்ளது. துலாபார தானம் பற்றி புதினத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

“நிறுத்தப்பெற்ற துலாக் கோலின் ஒரு தட்டில் போய் அமரவேண்டி இருக்கையை விட்டு எழுந்தார் பாண்டிய மாமன்னர். மக்கள் உள்ளமெல்லாம் மகிழ்ச்சியால் களியாட்டம் போட்டன. படிப்படியாக முறையே துலாபார தாளங்கள் வழங்கப்பட்டன. தானம் பெற்ற அனைவரும் நிதானம் பெற்று மாமன்னரை வாழ்த்தினர்”[97].

"சினவரிக்கிம்புரி வெண்பிறைக் கோட்டிகல்வெங்கருங்கட்
சினமதவெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லைமன்றில்
வனசத் திருவுடன் செஞ்சொல் திருவை மணந்ததொக்கும்
கனகத் துலையுடன் முத்துத்துலைவல் கலந்ததுவே"[98]

என்ற பாடல் இதனை உணர்த்துகிறது.

"துலாபாரம் செய்யும் அரசன் புதிதாக மண்டபம் ஒன்றை அமைத்து அதன் நடுவே துலாக் கோலை ஒன்றை நிறுத்தி அத்துலாக்கோலை அலங்கரித்து வேதியர்களைக் கொண்டு வேள்வியாசிரியரின் முன்னர் ஆகுதி முதலிய கிரியைகள் செய்து பின்னா; துலாக்கோலை வணங்கி ஒரு தட்டில் அமர்ந்து கொள்வான் அவன் எடைக்குச் சரியாக மற்றொரு தட்டில் பொன்னை நிரப்புவார்கள். பின்னர் அப்பொன்னில் பாதியை வேள்வியாவிரியனுக்கும் மிகுதியை வேதியருக்கும் அரசன் தானமாகக் கொடுப்பான். இவ்வாறு செய்தவன் மிக்க புகழுடன் ஆயுளையும் பெற்று திருமாலின் பதம் பெறுவான்"[99] எனச் சொல்லப்பட்டுள்ளது. கர்நாடக மன்னன் சோமனை விண்ணுலகிற்கு அனுப்பினான் எனக் கல்வெட்டு கூறுகிறது.

கண்ணனூர் குப்பத்துப் போரில் சோமன் என்பான் புறத்தே நண்பன் போலிருந்து உட்பகைகொண்டிருந்தான் என்றும், சுந்தரபாண்டியர் அவனைக் கொன்று சினம் தணிந்தான் என்றும் இவன் மெய்க்கீர்த்தி உரைக்கிறது.

"நடப்பது போலுட்பகையாய் நின்ற சோமனைக்
கொன்று சினந்தணிந்தருளி"[100]

"பல்லவமன்னன் கோப்பெருஞ்சிங்கன் அனுப்பிய திரைப்பொருளை ஏற்றுக் கொள்ளாமல் அவனது தலைநகராகிய சேந்தமங்கலம் சென்று அதனை முற்றுகையிட்டு கைப்பற்றியதோடு அவனுடைய யானை குதிரைகளையும் பிற செல்வங்களையும் கவர்ந்து கொண்டான். பின்பு அவற்றை அவனுக்கே அளித்து குறுநில

மன்னனாக்கினான் என வரலாறு கூறுகிறது"[101]. சேந்தமங்கலம் என்பது தென்னாற்காடு ஜில்லாவில் திரு நாவலூர்க்கருகில் உள்ளது.

"மகா ராஜாதிராச ஸ்ரீபரமேஸ்வரன்
எம்மண்டலமும் கொண்டருளியவன்
எல்லாந் தலையான பெருமாள்"[102]

"வாக்கியல் செந்தமிழ்ச் சுந்தரபாண்டியன்
வானமரில் வீக்கியவன் கழற் கண்ட கோபாலனை
விண்ணுலகிற் போக்கிய பின்பவன் தம்பியர்போற்றப்
புரந்தரசில் ஆக்கிய வார்த்தை பதினாலுலகமாகிதே"[103]

என்ற வரிகளின் மூலம் சுந்தரபாண்டியன் கண்ட கோபாலனை வென்ற செய்தி அறியப்படுகிறது.

"தில்லையிலும் திருவரங்கத்திலுமுள்ள திருக்கோயில்களைப் பொன்வேய்ந்தமைப்பற்றி இவன் கோயில் பொன் வேய்ந்த பெருமாள்"[104] என வழங்கப்பட்டான், துலாபாரதானம் செய்தான். இச் செய்திகள் புதினத்திலும் கூறப்பட்டுள்ளன.

கோயில் பொன் வேய்ந்த பெருமாள் என்னும் பெயருடன் திருவரங்கப் பெருமாள் கோயிலிலும் பிற இடங்களிலும் படிமங்கள் அமைப்பித்து அவற்றிற்க்கு திங்கள்தோறும் தன் பிறந்தநாளாகிய மூலத்தன்று திருவிழாக்கள் நடத்திவர ஏற்பாடு செய்தான்.

"தான் பிறந்த சித்திரைத் திங்கள் மூலநாளில்
திருவானைக்கா திருக்கோயிலில் சேரனை வென்றான்
திருநாள் என்றும் திருவிழாலொன்று ஆண்டு
தோறும் நிகழ்த்துவதற்கு முட்டைபாடி,

வீர தொங்கபுரம், பாதன்குடி ஆகிய மூன்று

ஊர்களை நிவந்தமாக அளித்துள்ளான்”[105]

எனக் கல்வெட்டு கூறுகிறது.

கண்ட கோபாலனை வென்று காஞ்சியைக் கைப்பற்றியதால் “காஞ்சிபுரவராதிசுவரன் காஞ்சிபுரங்கொண்டான்”[106] என்ற பெயரைப் பெற்றான்.

**திப்புசுல்தான் பற்றிய வரலாற்றுச் செய்திகள்**

திப்பு சுல்தான் இந்திய சுதந்திரத்தின் சின்னம் எனப் போற்றப்படுகிறவர். ஆஜ்மீரின் ஆத்மஞானி வலிமுகமதுவின் மகன் அலிமுகமது குல்பர்காவைச் சேர்ந்த இவர் கோலாரில் குடியேறுகிறார். இவருக்கு நான்கு மகன்கள். இதில் நான்காவது மகன் பதேமுகமது. இவருடைய மகன் சயாஸ்கான். அவருடைய மகனே பஃதேஹைதர் அலிகான்பகதூர் என்னும் ஹைதர் அலி.

(வலிமுகமது – அலிமுகமது – பதே முகமது – சயாஸ்கான் – ஹைதர் அலி – திப்பு சுல்தான்)

“ஹைதரின் மனைவி பஃருண்ணிசாவின் முதல் மகன் திப்பு சுல்தான். ஆற்காட்டு திப்பு மஸ்தானின் அருளால் பிறந்தவன். ஆகவே அந்த மகானின் பெயரே அவனுக்கு இடப்பட்டது. அவரது தந்தை இட்ட பெயர் பதேமுகமது என்பதாகும்”[107].

திப்புவின் பெயரானது தீப்சாகிப், தீபுசாகிப், திப்புசாகிப் என வந்திருக்கலாம் என குறிக்கப்படுகிறது. “பெங்களூருக்கு அருகில் உள்ள தேவனஹள்ளி என்னும் கிராமத்தில் பிறந்தார். அவர் பிறக்கும்போது இடியும் மின்னலும் காற்றும் பலமாக இருந்தன. அதைப்போலவே அவர் வெள்ளையருடன் போரிட்டு மாண்டபோது அந்த இயற்கை அப்படியே பிரதிபலித்தது. திப்புவின் உடலானது நீர் வாயிலுக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டது”[108].

இவ்வாறு அவருடைய பிறப்பு இறப்பு பெரிய ஆராய்ச்சியாளர்களால் எழுதப்பட்டுள்ளது. தென்னகத்தின் உண்மையான தேசிய இயக்கம் முஸ்லீம் பெருவீரரான ஹைதர் அலிகான் தொடங்கியது. மேலை நாட்டாரின் ஆதிக்கத்தை எதிர்த்து நின்றவர்கள் பேரரசர் ஹைதர் அலியும் அவரது மகன் திப்பு சுல்தானும் மட்டுமே எனப் பன்மொழிப்புலவர் கா.அப்பாதுரை கூறுகிறார்.

திப்புவின் இயல்பான பண்புகள் சுதந்திரவேட்கை, நட்புப்பாராட்டுதல், கண்ணியம், வீரம், கலையார்வம் போன்றவை புதினத்தின் போக்கில் எடுத்துக் கூறப்பட்டுள்ளமை பல வரலாற்று மெய்மைகளை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டமை புலனாகிறது.

“நல்ல இஸ்லாமியரான அவர் மதுவிலும் மங்கையிலும் மூழ்கிப் போகாத நல்ல மன்னராக வாழ்ந்தார். வருமான இழப்புகளைப் பற்றி கவலைப்டாது பூரண மதுவிலக்கை ஏற்படுத்திய ஓர் உன்னதமான மன்னர்”[109] என காந்தியடிகள் கூறும் மெய்மைக் கருத்து புதினத்தின் போக்கில் கூறப்பட்டுள்ளது. அவர் செய்த சீர்திருத்தங்களில் மதுவிலக்கும் ஒன்று. “மலபார் பெண்கள் மேலாடை அணியாமல் இருந்த பழக்கத்தைக் கண்டித்து கட்டாயம் மேலாடை அணியவேண்டும் என்ற சட்டத்தை விதித்தார்”[110]. திப்புசுல்தான் இந்துக்களையும் இஸ்லாமியர்களையும் தன் இரு கண்களாகப் பாவித்தார். இதற்கான வரலாற்றுச் சான்றும் உள்ளது.

கதையின் போக்கிலும் கூறப்பட்டுள்ளது.

> “மதங்களிடையே நல்லுறவு என்பது குர்ஆனின் அடிப்படை. குர்ஆன் பிற மதத்தவர்களின் விக்ரகங்களை அவமதிப்பதைத் தடுக்கிறது. அல்லாவைத் தவிர மற்ற தெய்வங்களை வழிபடுபவர்களை அவமரியாதை செய்தால் அது அல்லாவை அவமதிப்பதற்கு ஒப்பாகும். அல்லா விரும்பி இருந்தால் உலக மக்கள் அனைவரையும் ஒரே மதமாகப் படைத்திருக்கலாம்”[111]

என்ற திப்புவின் பிரகடனத்திலிருந்து அறியலாம்.

திப்புவை இந்துக்களும் விரும்பினர். அவரது உன்னதமான குணம் இந்துக்களை நேசிக்கும் பண்புக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

> "நரசிம்ம சுவாமி கோயில் பிரகாரத்தின் மேல் தளத்தில் புராண நிகழ்ச்சிகளை சித்தரிக்கும் படங்களுக்கு இடையில் திப்புவின் படமும் அழகிய வண்ணத்தில் காட்சி அளிக்கிறது"[112].

புதினத்தின் போக்கிலும் இந்துக்களை நேசிப்பது தெரியவருகிறது. அவருடைய உயிர் நண்பன் பசவராஜ் மூலமாகவே திப்புவின் இருகண்கள் இந்துக்களும் இஸ்லாமியர்களும் என்று சொல்வதிலிருந்து புலனாகிறது.

1763-ம் ஆண்டு ஹைதர் அலி பேடனூர் மீதுத படை எடுத்துச் சென்றார். அதை ஆட்சி செய்துவந்த அரசியை கைது செய்து தமது ஆளுகைக்கு உட்படுத்தி அங்கு தன்னுடைய நேரடி ஆட்சிமுறையைக் கொண்டுவந்தார்.

அக்கோட்டையை அயாஸ்கன் வசம் ஒப்புவித்து பராமரிப்பு செய்துவந்தார். அந்த பேடனூர் சிறையில்தான் ரங்கநாயகியும், பசவராஜும் சிறைவைக்கப்பட்டனர். அந்த பேடனூருக்கு ஹைதர்நகர் எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

"பேடனூர் நகரை ஹைதர் நகர் என்று பெயர் மாற்றினார். அங்கு துறைமுகப்பட்டினம், வெடிமருந்துச்சாலை, அரண்மனை ஆகியவற்றைக் கட்டினார்"[113] ஹைதர் அலி என்று வரலாறு கூறுகிறது.

மேலக்கோட்டை நாராயணப் பெருமாள் கோவிலானது யதிராஜர் என்றழைக்கப்பட்ட ஸ்ரீராமானுஜரால் கட்டப்பட்டது. மண்ணிலே புதையுண்டிருந்த பெருமாள் யதிராஜர் கனவில் கூறி அதை எடுத்துக்காட்டை அழித்து அரசன் உதவியுடன் அக்கோயிலைக் கட்டினார்.

> "திரு நாராயணனுக்கு ப்ரம்மோத்ஸவம் செய்யவிரும்பிய யதிராஜர் உத்சவமூர்த்தி இல்லை என வருத்தப்பட்டபோதுதான் அந்தப் பெருமாள்

அவரது கனவில் ராமப்ரியன் என்றும் என்னுடைய உத்ஸவ மூர்த்தி டில்லி ராஜாவின் அரண்மனையில் இப்போது இருக்கிறார். அங்கு சென்று அவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவாயாக"[114]

எனக்கூற அவரும், டெல்லி செல்கிறார்.

"இந்த அரசரின் மகளாலே பிரியமாக ஆராதிக்கப்பட்டமையால் அவளுடைய பள்ளியறையலே நான் வாழ்கிறேன் அங்கு வந்து அழைத்துச் செல்லும் என்று சொன்னதற்கேற்ப டெல்லி பாதுஷாவிடம் அவரைத் தந்துவிடும்படிக் கேட்க தாங்களே அழைத்துச் செல்லும்" என பாதுஷா கூறுகிறார். "செல்லப்பிள்ளை வாராய்"[115]

என்றழைக்க, யதிராஜரோடு பெருமாள் புறப்பட்டு வந்துவிட்டார். பெருமானைப் பிரிய முடியாத பேகம் நாச்சியாரும் அவருடனே புறப்பட பல்லக்கில் ராமப்பிரியரோடு பயணமாகிறாள். துணைக்கு வந்த தன் சகோதரனையும் அழைத்துச் செல்கிறாள்.

யாதவகிரி செல்லும் வழியிலேயே துலுக்கநாச்சியார் எம்பெருமானோடு சடக்கென ஐக்கியமாகிவிட்டார். பல்லக்கில் செல்லப்பிள்ளை மட்டுமே காணப்பட்டார். நாச்சியாரைக் காணவில்லை. டெல்லி ராஜகுமாரனும் யதிராஜரோடு நாராயணபுரம் சென்று எம்பெருமானின் பக்தனானான் என்பது வரலாறு.

"பெருமாளோடு ஐக்கியமான டெல்லி ராஜகுமாரியை அர்ச்சை உருவில் எழுந்தருளச் செய்து அப்பெருமானுடைய திருவடித் தாமரைகளின் இடையில் சாஸ்திர விதிப்படி பிரதிஷ்டை செய்தார்"[116]. டெல்லி ராஜாவும் மாப்பிள்ளைக்காக நிறைய செல்வங்களை அனுப்பிவைத்தார் எனக் கூறப்படுகிறது.

மேலக்கோட்டையைப் பற்றிய வரலாற்றுச் செய்தி புதினத்தில் ரங்கநாயகி மூலமாக திப்பு சுல்தானுக்குச் சொல்லப்படுகிறது. ரங்கநாயகி திப்புசுல்தானைக் காதலித்து, பேகம் நாச்சியாராக ஆவதற்கு முன்னரே ஒரு இலட்சியப் பெண் எம் பெருமானிடம் காதல் கொண்டு ஐக்கியமானது கதையின் போக்கில் சொல்லப்படுகிறது. புதினத்தில் கூறப்பட்டுள்ள கிளைக்கதை மேலக்கோட்டை கோயில் பற்றியது.

மேலக்கோட்டை செல்வ நரசிம்மர் கோயிலானது தென்னகத்தில் உள்ள நான்கு முக்கிய விஷ்ணுத்தலங்களில் ஒன்று. ஆந்திரப்பிரதேசத்தில் உள்ள திருமலை (திருப்பதி) தமிழ்நாட்டில் உள்ள ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம் கர்நாடகாவில் உள்ள மேலக்கோட்டை ஆகிய நான்கும் முக்கிய புண்ணிய ஸ்தலங்கள். இக்கோயில் சோழர்கள் மற்றும் விஜயநகர மன்னர்கள் பாணியைக் கொண்டுள்ளது. நாராயணபுரம் என்றும் யதுகிரி என்றும் அழைக்கப்படுகிறது.

இந்த கோயிலைப்பற்றிய வரலாற்றுச் செய்தியானது,

“இந்தக் கோயிலில் உள்ள உற்சவ மூர்த்தியானது செல்லப்பிள்ளை, சம்பத்குமாரர், செல்வராயர், ராமப்பிரியர் என்று அழைக்கப்படுகிறது. இதனை டெல்லி சுல்தானிடமிருந்து ராமானுஜர் மீட்டு வந்தார். வரும்போது சுல்தான் மகள் பேகம் நாச்சியார் வரதநந்தினியும் உற்சவருடன் வந்து அவருடனே ஐக்கியமாகிவிட்டாள். அவளுடைய சிலையும் உற்சவரின் பாதத்திலேயே வைத்து வணங்கப்பட்டு வருகிறது. இந்து முஸ்லீம் இருவராலேயும் வணங்கப்பட்டு வருகிறது”[117].

இந்தச் செய்தியானது புதினத்தில் காட்டப்படுகிறது.

**திப்புவின் ஆட்சியில் எந்திரப்புலி பற்றிய குறிப்பு**

பிரான்ஸ் மன்னராட்சியை எதிர்த்து ஜாகோபியன்கள் போராட்டம் நடத்தியபோது புரட்சியாளர்களுக்கு ஆதரவுக்கரம் நீட்டினார் திப்புசுல்தான். ஜாகோவியன்கள் புரட்சி வெற்றிபெற்றது. வெற்றியைக் கொண்டாடும் விதமாக மன்னராட்சியை நினைவுபடுத்தும் சின்னங்கள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. இந்தக் கொண்டாட்டத்தில் திப்பு நேரடியாக பங்குபெற்றது பலருக்கு அதிர்ச்சி அளித்தது.

“இந்த விழாவில்தான் ஜாகோவியன்கள் திப்பு சுல்தானுக்கு குடிமகன் திப்பு என்னும் பட்டத்தை அளித்தனர். ஆங்கிலச் சிப்பாயைக் கடித்துக் குதறும் இயந்திரப் புலி உருவத்தையும் புரட்சியாளர்கள் பரிசாக அளித்தனர்”[118].

புலியின் தோள்பட்டையில் ஒரு விசை. திருகினால் புலி ஆவேகமாக உறுமிக் கொண்டே கீழே விழுந்துகிடக்கும் சிப்பாயைக் கடித்துக் குதறும். புலியின் உறுமலையும் சிப்பாயின் கதறலையும் ஒலிவடிவில் கேட்கலாம்.

திப்புவை மனிதவடிவில் உள்ள அல்லது புலிவடிவில் உள்ள மனிதன் என்றும் கூறுவர்.

**திப்புவின் போர்த்திறன்**

அமெரிக்கரும் வியக்கும் திப்புவின் போர்த்திறன் தலைசிறந்தது. "ராக்கெட் நுட்ப ஆய்வுக்கூடமான வாலோபாஸுக்கு சென்றேன். நாசாவின் வரவேற்புக் கூடத்தில் ராக்கெட் தாக்குதல் நடக்கும் ஒரு போர்க்களத்தின் மிகப்பெரிய ஓவியம். அதில் காணப்பட்டவர்கள் வெள்ளையர்கள் அல்ல. ஆசிய உருவமைப்பு கொண்டவர்கள். அது பிரிட்டிஷாரை எதிர்த்து 200 ஆண்டுகளுக்கு முன் சீரங்கப்பட்டிணத்தில் திப்பு நடத்திய விடுதலைப்போர்க்காட்சி என்பது வியப்பை மேலும் அதிகரித்தது என முன்னாள் குடியரசுத் தலைவர் விஞ்ஞானி APJ.அப்துல்கலாம் தன்னுடைய சுயசரிதையில் எழுதியிருக்கிறார்"[119].

கர்னர்பெய்லி போன்ற கவர்னர்களுடனும், ஆற்காட்டு நவாபுடனும் போர் செய்து வெற்றிக்கொடிய நாட்டிய தகவல்கள் புதினத்தில் கூறப்பட்டுள்ளன. இது வரலாற்றுச் செய்தி முதல் கர்நாடகப் போர் இரண்டாம் கர்நாடகப் போர் பற்றிய குறிப்புகள் புதினத்தின் மூலம் அறியப்படும் வரலாற்றுச் செய்திகள் ஆகும்.

புதினத்தில் ஸ்ரீரங்கப்பட்டிணத்திலிருந்து கேரள மன்னர் கொடுக்கும் தொல்லையை அடக்கச் சென்றபோது அவரது தம்பி கரீம் மீர்சாதிக்குடன் சேர்ந்து கொண்டு தாமே சுல்தானாக வேண்டுமென்று உள்நாட்டுக் கலகம் செய்கிறான்.

அப்துல் கரீம் இவ்வாறு துரோகச் சிந்தையுடன் தந்தையார் இறந்துபட்ட செய்தியைக் கேட்டதும் ஆட்சியைப் பிடிக்க கலகம் விளைவித்தான் என ஹாசன் திப்புவின் வரலாறு என்ற புத்தகத்தில் எழுதியுள்ளார். பேடனூர் சிறையிலிருந்து

தப்பிவந்த பசவராஜ் ரங்கநாயகியை ஸ்ரீரங்கநாதர் கோயிலில் விட்டு கரீமை எதிர்த்து கலகத்தை அடக்குகிறான் எனக் கூறப்பட்டுள்ளது. அந்த சமயம் திப்புவும் வந்துவிடுகிறார்.

திப்புசாகிப் ஸ்ரீரங்கப்பட்டணம் திரும்பும்போது தம்பி கரீம் தானைத் தலைவர்களுடன் அண்ணன் வருகைக்காக காத்து நின்றார்.

“திப்புசாகிபு படையுடன் வருவதைக் கண்ட கரீம் ஓடிச்சென்று மண்டியிட்டு சலாம் செயதார். உடனே திப்பு தம்பி கரீமை கட்டித்தழுவிக்கொண்டார்”[120] என சுஜாவுதீன் சர்க்கார் தமது நூலில் கூறியுள்ளார்.

புதினத்தில் கூறப்பட்டுள்ள செய்தி எப்போதுமே திப்புவை எதிரியாக பொறாமைக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் கரீம் அண்ணனைக் கண்டு அடிபணிந்தது பயத்திலா சூழ்ச்சியான எண்ணத்திலா என்பது புரியாத நிலையில் இருக்கிறது. ஹைதர் அலி, திப்புசுல்தான் இருவரின் தலைநகரான ஸ்ரீரங்கப்பட்டணத்தைப் பற்றிய ஒரு வரலாற்றுக்குறிப்பு “அகலிகையின் கணவர் கௌதம முனிவர் காவிரிக்கரையில் பர்ணசாலை அமைத்துத் தங்கியுள்ளார். காவிரியில் வந்த வெள்ளமானது குடிலை அடித்துச் சென்றுவிடுமோ எனப் பரந்தாமனை அழைக்க அவரும் காவிரியின் குறுக்கே படுத்துக்கொள்ள இருபிரிவாக காவிரி பிரிந்து சென்று மற்றொரு இடத்தில் ஒன்றாகக் கூடுகிறது. அதுவே ஸ்ரீரங்கப்பட்டணம். இதற்கு கௌதம சேத்திரம் என்ற பெயரும் உண்டு எனச் சொல்லப்படுகிறது. இன்றும் ஸ்ரீரங்கப்பட்டணத்தின் அமைப்பு இவ்விதமே உள்ளது. தமிழ்நாட்டில் உள்ள ஸ்ரீரங்கமும் காவிரியால் சூழப்பட்டுள்ளது போல, கர்நாடக மாநிலத்தில் உள்ள இந்த ஸ்ரீரங்கப்பட்டணமும் காவிரியால் சூழப்பட்டுள்ளது”[122].

ஹைதர் போர் செய்யும் வீரத்தினைப்பற்றி அவரைக்கண்டால் எதிரிகளுக்கு குறிப்பாக ஆங்கிலேயர்களுக்கு சிம்ம சொப்பனம்.

அதனைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறியலாம்.

"பொங்கிய கடலுமோங்கிப் பூதலம் நடுங்கவந்தச்
செங்கமாக் கணவாய்க்குள்ளே சீறியே பாய்ந்ததாலோ
சிங்கமாம் ஹைதரண்ணல் சினந்ததாலெழுந்த சேனை
அங்குதான் பாய்ந்ததாலோ அந்நிலையென்கமாதோ"[123]

என்பதிலிருந்து ஹைதரின் வீரம் புலப்படுகிறது.

**இரண்டாம் மைசூர் போர்**

கர்னல்மெய்லி, கர்ணல் ப்ளெட்சர் இருவருடனும் திப்புவும் ஹைதரும் போரிடுகின்றனர். போரில் கும்பெனியார் தோல்வி அடைந்தனர். கர்னல் பெய்லி கைது செய்யப்பட்டான். ஹைதர் அலியின் முன் கைது செய்தவர்களை கொண்டு வந்து நிறுத்தினான் திப்பு. அவர்களை மிகவும் மனிதத்தன்மையோடு நோக்கிய ஹைதர் அலி,

"இவர்கள் அனைவருக்கும் வயிறு நிறைய சாப்பாடு போட்டு துணிகளை வழங்கிச் செலவுக்கு ஆளுக்கொரு இமாமி கொடுத்து ஸ்ரீரங்கப்பட்டணத்துச் சிறைச்சாலைக்கும், தக்கோலத்து சிறைச்சாலைக்கும் அனுப்பிவையுங்கள். இவர்களை மனிதத் தன்மையுடன் நடத்த யாரும் தவறக்கூடாது கவனம்"[124] எனக் கூறுவதிலிருந்து அவரின் பெருந்தன்மை புலனாகிறது.

அத்தகைய இரக்க சின்தையுள்ளவர், ரங்கநாயகி, பசவராஜ் ஆகியோரிடம் வெறுப்புக்காட்டுவதற்கு காரணம், அரண்மனையில் உள்ள சிலரும் பெரிய பேகமும் அவர்கள் இருவரைப்பற்றியும் தவறாகக் கடிதங்கள் எழுதி அனுப்பியதே ஆகும். இருப்பினும் அவர்கள் இருவரையும் பேடனூர் சிறையில் நல்லபடியாகக் கவனிக்க வேண்டுமென மறைமுகமாகக் கட்டளை இட்டது அவருடைய நல்லமனதைக் காட்டுகிறது. இறக்கும் தருவாயில் அவர்களிருவருக்கும் தீங்கு இழைத்ததை நினைத்து வருந்தி அல்லாவிடம் மன்னிப்புக் கேட்கிறார். பூரணய்யாவிடம் திப்பு வந்தபிறகு அவர்கள் இருவரையும் பத்திரமாக ஒப்படைக்கும்படியும் கேட்டுக் கொள்கிறார்.

**சேரசூரியன் புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

சேரசூரியன் என்ற புதினத்தில் வெளிப்படும் வரலாற்றுச் செய்திகளை இலக்கியங்கள் அகம், புறம் பதிற்றுப்பத்து ஆகியவற்றின் மூலம் அறியமுடிகிறது. கதைத்தலைவனான இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்,

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மாள் நல்லின ஈன்ற மகன்"[125]

ஆவான். இவனைப் பற்றிப் பாடிய 2-ம் பத்தில் குமட்டூர் கண்ணார் பாடிய பாடலின் மூலம் நெடுஞ்சேரலாதனின் தாய் தந்தையரை அறியமுடிகிறது. உதியன சேரலாதனுக்கும் நல்லினிக்கும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், பல்யானை செல்குழுகுட்டுவன என்ற இருமக்கள். இமயவரம்னின் மனைவியர் மணக்கிள்ளி மகள் நற்சோனையும், பதுமன் வேளாவிக் கோமான் மகள் பதுமன் தேவியும் ஆவர். நற்சோனையின் மக்ன் செங்குட்டுவனும் இளங்கோவும், பதுமன தேவியின மக்கள் களங்காய் கண்ணி நார்முடிச் சேரனும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர்.

நெடுஞ்சேரலாதன் மாந்தையின் தலைவன்

"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்று முதிக் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் . . . . . .
வலம்படு முரசிற் சேரலாதன் . . . . . . இமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொதித்து"[126]

என்பதன் மூலம் இமயத்தை வரம்பாகக் கொண்டமையும் புதினத்தில் தன் தாய்க்காக கங்கை நீர் கொண்டுவரச் சென்றபோது நடந்த நிகழ்வுகளும் வரலாற்று மெய்மைகளாகும். கதையின் போக்கில் இமயவரம்பனைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வீரத்தில் சிறந்து விளங்கியவன். இவன் கடற் கொள்ளையரான கடம்பரை அடக்கி வெற்றி பெற்றவன். இவரது கீர்த்திகளை பதிற்றுப்பத்தின்மூலம் அறியலாம்.

“வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீரோட்டிக் கடம்பறுத்து”[127]

என்ற அகநானூற்றுப் பாட்டின் மூலம் அவன் கடம்பரை கடற்போரில் வென்றதும், அவர்களது காவல் மரமாகிய கடம்பனை வெட்டி வீழ்த்தி அக்கடம்பனால் முரசு செய்து முழக்கினான் என்பதும் தெரிய வருகிறது.

“அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
குருடை முழுமுதல் தடித்த பேர் இசை
கடுஞ்சின விறல்வேள களிறு வளர்ந்தாங்கு
பலர் மொசிந்து ஓம்பிய திரள் பூங்கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்,
வென்று எறிமுழங்கு பணை செய்த வெல்போர்
நார் அரி நறவின், அரமார்பின்
போர் அடு தானைச் சேரலாத
வலன் உயர் மருப்பின் பழி தீர்யானைப்
பொலன் அணி எருத்த மேல் கொண்டு பொலிந்தநின்
பலர் புகழ் செல்வம் இனிது கண்டிருமே
ஆரியர் துவன்றிய பேர் இசை இமயம்
தென் அம் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறம் தபக் கடந்தே”[128].

குமரக்கடவுள் சூரபதுமன் மரமாகிவிடவே அதனை வெட்டி வீழ்த்தியது போல நெடுஞ்சேரலாதனது செயலை ஒப்பிட்டு குமட்டூர்க் கண்ணனார் பாடியுள்ளார்.

கடற்கொள்ளையரான கடம்பர்களை வென்றமையும் புதினத்தில் வெளிப்படும் வரலாற்றுச் செய்தியாகும்.

“திறமை வாய்ந்த கப்பற்படையினைக் கொண்டு கடம்பர் வாழ்ந்து வந்த மேலத் தீவிற்குச் சென்று அவர்களைக் கடுமையாகத் தாக்கி வென்றான். அவர்கள் காவல் மரமாகிய கடம்பினை வேரொடு வெட்டி வீழ்த்தினான். பின்பு அம்மரத்தினைக் கொண்டு வெற்றி முரசு செய்து வீர முழக்கம் செய்து கொண்டு தம் நாட்டிற்குத் திரும்பி வந்தான்”[129] என்ற நிகழ்வை அடிப்படையாகக் கொண்டு இமயவரம் செல்வதாகப் புதினத்தின் கரு அமைக்கப்பட்டுள்ளது. கடம்பர் போரும், இமயவரமும் ஆகிய முக்கியமான வரலாற்றுச் செய்திகள் புதினத்தில் காட்டப்படுகின்றன.

“கோமுகியில் உற்பத்தியாகும் கங்கைநீரை இங்கு கொண்டு வந்தாலே எனது அறுபது நிறை கொள்ளும் என்றும், எனது பூமியில் சித்திரைப் பௌர்ணமியில் குமரி முனையில் நின்று முழுநிலவின் உதயத்தையும் சூரியன் மறைவதையும் ஒருசேர பார்க்க வேண்டும். . . . . . அந்த எனது பூமியில் கிழக்கு கடல் நீரையும் மேற்குக் கடன் நீரையும் ஒரே சமயத்தில் கொண்டுவந்து திருமுழுக்காடி குமரியில் நின்று சூரிய சந்திரரை தரிசிச்க வேண்டும்”[130] என தாய் கேட்ட வரத்தினை நிறைவேற்ற முதலில் தென்பாண்டி நாட்டை வசப்படுத்தி தன் ஆளுகையில் கொண்டு வருகிறான். பின்பு இமயவரத்தை நோக்கிச் செல்கையில் கடம்பர்களை வென்று அடக்குகிறான் என்பது புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

இமயவரம்பனின் வீரம்பற்றி அவரது அவைக் களப்புலவர், குமட்டூர் கண்ணன், தமது “அரிமான் வழங்குஞ்சாரற் பிறமான் தோடு கொளின நீரை நெஞ்சதிர்ந்தாங்கு முரசு முழங்கு நெடு நகராசுதுயிலியாது மாதிரம் பணிக்கு மரம் வீங்குபல் புகழ்”[131] இமயவரம்பனின் முன் நாற்புறமுள்ள மாற்றரசர்கள் சிங்கம் வாழும் காட்டில் பிற விலங்குகள் நெஞ்சு நடுங்கி ஒடுங்கி உறைவதுபோல் கண்ணுறக்கமின்றி வாழ்வதாக உவமைநலனோடு உரைக்கின்றார் புலவர் குமட்டூர் கண்ணனார்.

மாந்தையின் தலைவனான நெடுஞ்சேரலாதன் போரிலே வெற்றி பெற்ற செல்வத்தை வீரர்களுக்கும் தானைத் தலைவர்களுக்கும் பாணர், கூத்தர் முதலிய பரிசிலர்க்கும் வாரி வழங்கினான்.

"நன்னகர் மாந்தை முற்றத்து ஒதென்னனார்
பணி நிறை தந்த பாடுகாளன்கலம்
பொன் செய் பாவை வயிர மோடாம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ
அன்றவன் நிலத்தினைத் துறந்த நிதியம்"[132]

என மாமூலனார் பாடிய பாடலில் இருந்து அறியலாம். இவனது மகன் செங்குட்டுவன் இளமையிலேயே வீரமிக்கவன். புதினத்தில் கடம்பர்களை அழிக்க தந்தை நெடுஞ்சேரலாதனின் ஆணைப்படி தலைமை ஏற்றுச் சென்று வெள்ளைத் தீவை கைப்பற்றி கடம்பமரத்தை அழித்தான் எனக் காட்டப்பட்டுள்ளது. மகனது வெற்றியும் தந்தையையே சாரும். திரிலோசனக் கடம்பன் என மாற்றுரு கொண்டு தன் மகனது வெற்றிக்கு காரணமாக இருந்தான் நெடுஞ்சேரலாதன். தந்தையின் காலத்திற்குப் பிறகு மற்றுமொருமுறை கடம்பர்களை அழித்தான் குட்டுவன் என்பது வரலாற்றுச் செய்தியாகும்.

"செங்குட்டுவன் மேல் கடலில் உள்ள பல தீவுகளில் இருந்த கடம்பரைப் படைகொண்டு சென்று அடக்கினான்"[133]. பதிற்றுப்பத்தில் (ஐந்தாம்பத்தில்) பரணர் பாடியுள்ளதிலிருந்து இந்த வரலாற்றுச் செய்தி அறியப்படுகிறது.

புதினத்தில் இமயவரத்தின்போது எதிர்த்த ஆரியர்களையும் அத்தினாவின் காதலன் நாட்டைக் கவர்ந்த யவணர்களோடும் போர் புரிந்த வரலாற்றுச் செய்திக்கு கீழ்க்கண்ட பாடலே ஆதாரமாக உள்ளது.

"பேரிசைமரபின் ஆரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவணர்ப் பிணித்து

நெய்தலைப் பெய்து கையிற் கொளீஇ

அருவிலை நன்கலம் வயிராமாடு கொண்டு

பெருவிரல் மூதூர்த் தந்து பிறர்குதவி. . . . ."[134]

"வன்சொல் யவனர்களை சிறைசெய்து அவர்கள் கைகளைப் பின்புறமாகக் கட்டி தலையில் எண்ணெயை ஊத்தி அவமானப்படுத்தினான். அணிகலமும் வயிரங்களும் பெற்ற பிறகு அவர்களை விடுதலை செய்தான். பைசாண்டியம் என்ற கிரேக்கக் குடியிருப்பு மேலைக் கடற்கரையில் தொண்டிக்கும் நறவுக்கும் வடக்கே இருந்ததாக பெரி புளூஸ் நூல் கூறுவதால் நெடுஞ்சேரலாதனால் அவமானப்படுத்தப்பட்டயவனர் இக்குடியிருப்பைச் சேர்ந்தவராக இருக்கலாம் என சிவராசபிள்ளை கருதுகிறார்"[135].

யவனர்களை அடக்கியது இமயவரத்தின் போது நடந்ததாகவும் அத்தினாவின் காதலனைக் கண்டதும் புதினத்தில் காட்டப்படுகிறது.

"இமய (வரத்திறகு) யாத்திரைக்குப் பரிவராங்களுடன் நெடுஞ்சேரலாதன சென்று கொண்டிருந்தபோது அன் வருகையை தவறாகப் புரிந்துகொண்டு தடுத்து நிறுத்த முயன்ற சில வடநாட்டு குறுநிலத் தலைவர்களை நெடுஞ்சேரலாதன் தாக்கியிருக்கலாம்"[136]

இந்த நிகழ்வும் புதினத்தில் காட்டப்படுகிறது.

"அமைவரல் அருவி இமயம் வில்பொறித்து" என்ற பதிற்றுப்பத்து வரிகள் நெடுஞ்சேரலாதன் இமயத்தில் வில் பொறித்ததை காட்டுகின்றது. சேரர்களின் எதிரிகளாகிய கடம்பர்கள் கடற் கொள்ளையர்கள். அவர்கள் கொள்ளைத் தொழிலுக்குரிய மூலதனம் கடற்கரையில் இல்லை. கடலகத்தே ஒரு தீவில் இருந்தது. அவர்களது (காவல்மரம்) தாய்க் கடம்பமரம் இருந்த இடமும் அதுவே. இத்தீவை கிரேக்கர் லெயூகே வெள்ளைத் தீவு என்றழைத்தனர். அது தற்போது மங்களூரை அடுத்துள்ள தூவக்கல் என்ற தீவு என வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். லெயூகே, தூவக்கல் என்பது வெள்ளைத்தீவு என்றே பொருள்படுகின்றது"[137].

நெடுஞ்சேரலாதன் கடம்பெறிந்த செய்தியானது சிலப்பதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளது.

“போந்தைக் கண்ணி நின் ஊங்கனோர் மருங்கில்
கடற்கடம்பு எறிந்த காவலனாயினும்
விடற்சிலை பொறித்த விறலோனாயினும்
வன் சொல் யவனர் வலிநாடு ஆண்டு
பொன்படு நெடுவரை புருந்தோனாயினும்”[138]

என்ற வரிகளில் கடம்பெறிந்த செய்தியே முதலாவதாகக் கூறப்பட்டுள்ளது. இமயமலையில் விற்கொடி பொறித்தது, யவனர் நாடு ஒன்றை வென்று திறைகொண்டு ஆண்டது, கடம்பர் நாட்டகத்தேயுள்ளே பொன்விளையும் குடகுமலை புகுந்தது ஆகிய இமயவரம்பனின் மற்றைய செயல்களும் குறிக்கப்பட்டுள்ளது. இமயவரம்பனும் அவனது தம்பியும் சேர்ந்து கடற் கொள்ளையரை ஒழித்து வெற்றிகண்டனர். பதிற்றுப்பத்தில் இச்செய்தியானது கூறப்பட்டுள்ளது.

“நனி இரும்பரம்பின் மாக்கடல் முன்னி அணங்குடை அவுண ஏமம் புணர்க்கும் சூருடை முழு முதல் தடிந்த பேர் இசை கடுஞ்சினவிறல் வேள்களிறு ஊர்த்தாங்கு”[139] என்ற பதிற்றுப்பத்து வரிகளும்

“பார் முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்கச்
சூர் முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ் இணர்
மாமுதல் தடிந்த மனுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்”[140]

என்ற திருமுருகாற்றுப்படை வரிகளும் புதினத்தின் கருவான இமயவரத்தையும் கடம்பரை அழித்தையும் மெய்ப்பிக்கும் செய்தியாகக் காட்டப்படுகின்றது.

கடம்பர்களையும் ஆரியர்களையும், யவன அரசர்களையும் இமயவரம்பன் வென்று அடக்கி அவர்களிடமிருந்து பெற்ற பொருள்களையும் அணிகலன்களையும், செல்வத்தையும் தன்னுடைய வட சேரநாட்டுத் தலைநகரான மாந்தை என்னும் ஊருக்குக் கொண்டு போய் வீரர்களுக்கும் புலவர்களுக்கும், கூத்தர்களுக்கும் பாணர்களுக்கும் வழங்கியது போக மீதியை நிலத்தில் புதைத்து வைத்து நிலம் தின்ன விடுத்தான் என அகநானூற்றில் மாமூலனார் கூறுகிறார்.

"வலம்படு முரசின் சேரலாதன் முந்நீர் ஒட்டி
. . . . . . . . அன்றவன் நிலம் தின்ன துறந்த நிதிய"[141]

நெடுஞ்சேரலாதன் வரலாற்றாசிரியர்களின் கனவுகளையும் இலக்கிய ஆராய்ச்சியாளார் மதிப்பீடுகளையும் தாண்டிய பழமையுடையவன். இமயத்தில் புலி பொறித்த சோழன் கரிகாலனைவிட முற்பட்டவன் என்பது குறிப்பிடத்தக்கது.

இப்புதினத்தில் பழந்தமிழ் மக்களான நாகர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்தி கூறப்பட்டுள்ளது. "இந்த வம்சமானது அசல் தமிழ் வம்சம் குமரிக்கண்டத்திலிருந்து வந்தவர்கள். ஆதி மனித இயக்கம் கோயில்களில் அறச்சிந்தையுடன் வழிபாடு நடத்த தமிழினம் பிரித்துத்தந்த தனி இனம். இந்த இனம்தான் அறங்காக்க வேண்டும். அரசு காக்க வேண்டும். இந்த நாக இனத்துக்குரிய மொழிதான் நாகரி. மேற்கு மலைத் தொடர்ச்சியின் அபூர்வங்களில் நாக நாடும் ஒன்று. அதன் தலைநகர் நாகரூர்"[142].

நெடுஞ்சேரலாதனது அமைச்சர் முடிநாகராயர் நாகநாட்டை தாயமகமாகக் கொண்டவர். புதினத்தில் நாகர்களின் வழிபாடு பழக்க வழக்கங்கள், பண்பாடு ஆகியவை கதையை ஒட்டி எடுத்தாளப்பட்டுள்ளது. அத்தீனாவின் கதையில், கங்கைக்கரையின் மீது அலெக்ஸாண்டருக்குப் பின் படை எடுத்து வந்தவர்களுள் அத்தீனாவின் தந்தையும் ஒருவர் எனக் காட்டப்பட்டுள்ளது. அத்தீனாவின் காதலன் ஹெலன் பற்றிய செய்தியானது கிரேக்க வரலாற்றைக் கூறும் செய்தியாகப் புதினத்தில் அமைந்துள்ளது.

"ஹெலன் என்பது ஆண் தமிழில் பொதுவில் யவணர் என்றால் கிரேக்க எகிப்திய ரோமானியர்களைக் குறிக்கும் . . . . . . . . கிரேக்ர்களுக்கு ஆதியில் ஹெலன் என்பது பெயர். அக்கிரமங்கள் அதிகரிக்கவே கடவுள் பிரளயத்தை உண்டுபண்ணி உலகை அழித்துவிட்டார். உயிர்தப்பிய ட்யூக்கேலியான் பிர்ரா இவர்களது குழந்தை ஹெல்லன் ..... இவன் வழிவந்தவர்களே ஹெல்லனீயர்கள். நாடு ஹெல்லன் என்பதாகும். கிரேக்ர்களையும் கிரேக்க நாட்டையும் குறிப்பதாகவே இந்த சொல் கையாளப்பட்டுவந்துள்ளது"[143]

என்ற வரலாற்றுச் செய்தியானது அத்தீனாவினால் நெடுஞ்சேரலாதனுக்குக் கூறப்படுகிறது. கண்ணனார் நெடுஞ்சேரலானது வீரத்தால் கவரப்பட்டார். சேரலாதனோ அவரது தமிழ்ப்புலமையால் கவரப்பட்டான். இருவரும் ஒருவரையொருவர் விட்டுப்பிரியா நல்ல நண்பர்களாக வாழ்ந்தனர்.

இந்த வரலாற்று உண்மையும் புதினத்தில் கதையின் போக்கில் கூறப்பட்டுள்ளது. சேரலாதன் இமயவரத்திற்கு புறப்படும் முன் போர்க் கோலம் தாங்கி வருகையில் குமட்டூர் கண்ணனார் அத்தீனாவுடன் வருகிறார். அவருக்குரிய மரியாதை செய்து தன் மகன் செட்குட்டுவனை கடம்பர் போருக்கு அனுப்பிவிட்டு அவருடன் தங்கி அளவளாவுகிறான். அத்தீனாவுக்கு சேரலாதனின் சிறப்பு, வீரம், பண்பு ஆகியவற்றை கூறியதோடு தமிழறிவையும் கற்றுத்தந்த பெருமகனாராகக் காட்டப்படுகிறார்.

"குமட்டூர் என்பது ஓய்மா நாட்டைச் சார்ந்தது. ஓய்மா நாடென்பது தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள திண்டிவனம் தாலுகாவையும் செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ள மதுராந்தகம் தாலுகாவின் தென்பகுதியையும் தன்னகத்தே கொண்டது"[144].

இமயவரம் முடித்து வந்த வெற்றிவிழாவில் அவன்மீது "எழுமுடி கெழீஇய" பொன்மாலை கிடந்து பேரழகு செய்தது. அக்காட்சி முருகப்பெருமான் அரக்கர்

தலைவனாகிய சூரவன்மனைக் கடலிடை வென்று விழா செய்த நிகழ்ச்சியை நினைவூட்டியது என்ற வரலாற்றுச் செய்தியும் புதினத்தில் காட்டப்படுகின்றது.

**சேரன்குலக்கொடி புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

சேரன்குலக்கொடி என்ற புதினத்தில் காட்டப்பட்ட வரலாற்றுச் செய்திகளை பதிற்றுப்பத்து, அகம், புறம் ஆகியவற்றின் மூலம் அறியமுடிகிறது.

இமயவரம்பரன் நெடுஞ்சேரலாதனுக்கு மணக்கிள்ளி மகள் நற்சோனைக்கும் பிறந்தவர்கள் செங்குட்டுவனும், இளங்கோவும் ஆவர். சேரன் குலக்கொடி என்ற புதினத்தின் கதைத் தலைவனான செங்குட்டுவன், மேல்கடலில் உள்ள பல தீவுகளில் இருந்த கடம்பரைப் படை கொண்டு சென்று அடக்கினான்.

“கோடு நரல் பௌவம் கலங்க வேலிட்டு உடைநீரைப் பரப்பில் படுகடலோட்டிய வேல் புகழ்க்குட்டுவன்”[145] என பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தில் பரணர் பாடியுள்ளார்.

“மட்டவிம் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொரு முரண் பெறா அது விலங்கு சினம் சிறந்து
செருச் செய முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய”[146]

நீர்மான் எஃகம் என அகநானூற்றுப் பாடலும் இவனது வீரத்தை விளக்குகிறது.

சிலப்பதிகாரத்திலும், “கொடும் போர் கடந்து நெடுங்கடலோட்டி என்னும் பொங்கிரும் பரப்பில் கடல் பிறக்கோட்டி”[17] என்றும் இளங்கோவடிகள் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

செங்குட்டுவனைக் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன் என்றும், கடலோட்டிய வேல்புகழ்குட்டுவன் என்றும் பாராட்டியுள்ளனர்.

புதினத்தில் இடம்பெறும் கடம்பரை அழித்தமை மோகூர்ப் போர், சோழனுடன் போர், வடவர் போர் ஆகியவை வரலாற்றுச் செய்திகளாகும்.

செங்குட்டுவன் பற்றி பரணர் பாடியவையே ஐந்தாம் பத்தாகும்.

> “செங்குட்டுவன் பரணர்க்கு உம்பர் காட்டின் வருவாயினை வழங்கினான். பின்னர் அவர்பால் தன் அருமை மகன் குட்டுவன் சேரலை ஒப்படைத்து அவனை அறிவுத் துறையில் வல்ல பெரியோனாக்குமாறு வேண்டிக் கேட்டுக் கொண்டான்”[148]

என்ற வரலாற்றுச் செய்தியானது புதினத்திலும் காட்டப்படுகின்றது. தமிழுக்காகத் தம்பியையும், தன் மகனையும் ஈந்த வள்ளலாகக் காட்டப்படுகின்றான். பரணர்க்குப் பரிசில் பல அளித்ததோடு தன் மகனையும் தமிழுக்காகத் தாரை வார்த்த தனிப்பெரும் வள்ளலாவான். இவனது பெற்றோர் இவனை பெருந்தவம் புரிந்து பெற்றனர் என்பதை

> “ஆனேறு ஊர்ந்தோன் அருளிற்தோன்றி மாநிலம் விளக்கிய மன்னவன்”[149]

என்கிறது சிலப்பதிகாரம். இதனால் மாற்றாந்தாய் மக்களான நார்முடிச்சேரரும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதலும் மகிழ்வுடன் ஆட்சிப்பொறுப்பை ஏற்க வழி வகுக்கப்பட்டது. செங்குட்டுவனுக்கு முன்பே நார்முடிச் சேரல் பொறுப்பேற்றான். செங்குட்டுவனுக்குப் பிறகு ஆடுகோட்பாட்டு சேரலாதனே ஆட்சிப் பொறுப்பை ஏற்றான் என்பது வரலாற்று உண்மையாகும்.

மோகூர்ப் போர் புதினத்தில் கதையின் போக்கில் சுட்டப்படுகிறது. அதற்கான காரணம் கற்பனை நயமுடையது. ஆனால் இப்போர் நடந்தமை வரலாற்று உண்மையாகும். மோகூரின் அரசன் பழையருக்கும் செங்குட்டுவனின் நண்பன் அறுகைக்கும் ஏதோ ஒரு காரணம் பற்றி பகைமை இருந்துள்ளது. புதினத்தில் இது காட்டப்படுகின்றது. இதற்கான காரணம் சுவைபடக் கூறப்பட்ட கற்பனை. ஆனால் வரலாற்றுச் செய்தியானது உண்மையானதாகும். அறுகையின் நாட்டைச் சூறையாடிய

> “பழையரின் நாட்டின்மீது செங்குட்டுவன் படை எடுத்துச் சென்று அவனைத் தோற்கடித்து அந்நாட்டை அழித்து காவற் மரமாகிய

வேம்பினை வேரறுத்து முரசு செய்து, பழையர் மனைவியர்தம் மயிரைத் திரித்துப் பெற்ற கயிற்றால் கட்டி யானையைக் கொண்டு இழுத்து வருமாறு செய்தான்”[150].

புதினத்தில் பழையரின் மகன் திருமாறன் என்றும் அவனே அறுகையின் நாட்டை மலர்க்குழலிக்காக அழித்தான் எனவும், செங்குட்டுவன் தனது வளர்ப்புமகள் பொற்கொடியின் கணவனான திருமாறனை அவன் நாட்டை அறுகைக்காக அழித்தான் எனவும் கற்பனை நயத்துடன் கூறப்பட்டுள்ளது. செய்தி உண்மையானது. புதினத்துக்காக கற்பனை நயத்துடன் கூறப்பட்டுள்ளது.

இதனை,

“நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை
சேணன் ஆயினும் கேள் என மொழிந்து
புலம் பெயர்த்து ஒளித்த காளையாயாப் பூசற்கு
அரண்கள் தாவுறீ இ அணங்கு நிகழ்ந்தென்ன
மோகூர் மன்னன் முரசம் கொண்டு நெடு
மொழிப்பணித்து அவன் வேம்பு முதல் தடிந்து
முரசு செய முரச்சி, களிறுபல பூட்டி
ஒடுகை உயிர்த் தோய்........”[151]

என்ற பரணரின் பாடல் மூலம் அறியலாம்.

**சோழனுடன் போர்**

பூம்புகார்ச் சோழனையும் அவனுடன் சேர்ந்த ஒன்பது சிற்றரசர்களையும் நேரிவாயில் என்றவிடத்து எதிர்த்து போரிட்டு ஒரு நாட் பொழுதிலேயே வெற்றி கண்டான். இதுவும் வரலாற்றுச் செய்தியாகும்.

"வெந்திறல்

ஆராச் செருவின் சோழற் குடிக்கு உரியோர்

ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத்து இறுத்து

நிலைச்செருவின் ஆற்றலை அறுத்து"[152]

என்ற பாடல் மூலம் மேற்குறிப்பிட்ட செய்தியினை உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

சோழன்கிள்ளி சேரனது தலைநகரிலேயே மாற்றுருவுடன் இருந்து திருமேனியின் தங்கை மலர் குழலியின் உதவியால் சதித்திட்டம் தீட்டி வருவதாக புதினத்தில் கூறப்பட்டுள்ளது. அறுகையின் நாடிழப்புக்கும், மோகூர் அழியவும் கிள்ளியே காரணமாக புதினத்தில் காட்டப்படுகின்றது.

செங்குட்டுவனை விடுத்து இளங்கோவே பட்டம் ஆள்வான் என ஒரு நிமித்திகன் கூற அதனால் வெகுண்ட தம்பி இளங்கோ அப்போதே துறவறம் பூண்டு குடவாயிற் கோட்டம் சென்று வாழ்ந்து வரலானார் என சிலப்பதிகாரம் கூறுகிறது.

புதினத்திலும் இந்த வரலாற்றுச் செய்தி கையாளப்பட்டுள்ளது. அரசுரிமைபெற்ற செங்குட்டுவன் மகாவீரன். புதினத்தின்படி சேரசூரியன் இளவயதிலேயே தந்தையின் இமயவரத்தின்போது கடம்பரை வென்றவன். திரும்பவும் பின்னாளில் கடம்பரை வெல்கிறான். இவனது மனைவி வேண்மாள். இவர்களுக்கு குட்டுவன் சேரல் என்ற மகன். பரணரிடம் கல்வி பயின்று வந்தான்.

தமயன் நார்முடிச்சேரல் ஆட்சி செய்யும்போது குட்டுவன் குடநாட்டுப் பதியை ஆட்சி செய்து வந்தான். நார்முடிச்சேரலுக்குப் பிறகு சேரநாடு முழுமையும் ஆட்சி செய்து வந்தான்.

**வடவர் போர்**

"கங்கைப் பேரியாற்றுக் கடும்புனல் நீத்தம்

எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்

ஆரியமன்னர் ஈரைந்நூற்றுவர்க்கு

ஒரு நீயாகிய செருவெங்கோலம்

கண்விழித்துக் கணடது கடுங்கண் கூற்றம்"[153]

என சிலம்பு கூறுகிறது. இளவயதில் ஆரியமன்னர் ஆயிரவரை எதிர்த்து போராடி வெற்றி பெற்றது குறிப்பிடத்தக்கது.

"குரங்கு உளைப் புரவிக் குட்டுவன் மாந்தை"[154] என அகநானூறு கூறுவதிலிருந்தும்,

"கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்

வேந்து அடு மயக்கத்து முரசு அதிர்ந்தன்ன

ஓங்கல் புணரி பாய்ந்து ஆடு மகளிர் . . . . .

கடல் கெழு மாந்தை"[155]

என்ற குறுந்தொகை வரிகளும் மாந்தை குட்டுவனுக்கு உரிமையானது எனக் கூறுகின்றது.

பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து ஒரு பரத்தையோடு வாழ்ந்து வந்தான் என்ற செய்தி புறநானூற்றுப் பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. இந்த வரலாற்றுச் செய்தியும் புதினத்தில் கூறப்பட்டுள்ளது. பேகனையும் கண்ணகியையும் சேர்த்துவைக்க பரணர் சென்றிருப்பதாகப் புதினத்தில் கூறப்பட்டுள்ளது.

**கொல்லிப்பாவை புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

கொல்லிப்பாவை என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுச் செய்திகளை பதிற்றுப்பத்து, அகம், புறம், குறுந்தொகை போன்ற இலக்கியங்களை வைத்தே அறியமுடிகிறது. கடைச் சங்க காலத்தை ஒட்டி இந்த புதினம் எழுதப்பட்டுள்ளதால் கல்வெட்டு, செப்பேடு போன்ற ஆதாரங்கள் இல்லை.

கொல்லிப்பாவையின் கதைக்களம் துளு நாட்டைக் கொண்டது. சங்க காலத்தில் துளுநாடு என்றும், கொங்கணநாடு என்றும் பெயர் பெற்றிருந்த நாடு இக்காலத்திய

தென்கன்னட நாடாகும். வடகன்னடநாடு தற்போது மும்பையாகும். தென்கன்னட நாடு சென்னையுடன் இணைக்கப்பட்டிருந்தது. தற்போது இந்த துளுநாடு மைசூருடன் இணைக்கப்பட்டுள்ளது.

“பாரதநாட்டை அரசாண்ட அசோகச் சக்கரவர்த்தி தம்முடைய சாசனத்தில் கூறுகிற சத்திய புத்திரநாடு என்பது துளுநாடே”[156].

துளு என்றால் போரிடுதல், எதிர்த்தல் என்பது பொருள். பழங்கன்னட மொழியில் துளு என்றசொல்லுக்கு இப்பெயர் உள்ளதால் துளுநாடு வீரர்கள் நிறைந்த நாடு எனப் பொருள் கொள்ளலாம். சோழர் சாசனங்கள் இதனை குடமலைநாடு என்று கூறுகின்றது. தற்போது இந்த நாடு குடகுநாடு என்று அழைக்கப்படுகிறது. குடமலைப் பிறந்த தன் பெருங்காவிரி என மலைபடுகடாம் கூறுகிறது.

இந்நாட்டை ஆண்ட மன்னர்கள் நன்னன் பரம்பரையினர். புதினத்தில் காட்டப்படும் கோசர்களின் ஊர் கடற்கரை அருகில் உள்ள செல்லூருக்கு அருகே இருந்தது. கதைத்தலைவன் களங்காய்கண்ணி நார்முடிச் சேரல் நெடுஞ்சேரலாதனுக்கும் வேளாவிக்கோமான் மகன் பதுமன் தேவிக்கும் பிறந்தவன். இவனது இளவல் ஆடுகோட்பாட்டு சேரலாதன். நார்முடிச் சேரல் செங்குட்டுவனுக்கு மூத்தவன். ஆடுகோட்பாட்டு சேரலாதன் சேங்குட்டுவனுக்கு இளையவன். நார்முடிச் சேரல் ஆட்சி செய்த போதே குட்டுவன் குடமலைப் பகுதியை ஆண்டு வந்தான்.

இவன் கடம்பின் பெருவாயில் நன்னனை அழித்தமையே புதினத்தின் கருவாகும். இவன் நடத்திய போர்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள் புதினத்தில் இடம் பெற்றுள்ளன.

இவனைப் பற்றிய பாடல்களை காப்பியாற்றுக் காப்பியனார் நான்காம் பத்தில் பாடியுள்ளார்.

> “பாடிப்பெற்ற பரிசிலாவது நாற்பது லட்சம் பொன், தான் ஆள்வதில்
> பாகம் கொடுத்து அவரைப் பெருமைப்படுத்தினான்”[157].

நன்னனின் சேனைத் தலைவன் மிஞலி என்பவனின் ஊர் பாரம் ஆகும். “பாரத்துத் தலைவன் ஆரநன்னன்”[158] என அகநானூறு கூறுகிறது. பூந்தோள் யாப்பின் மிஞலிக்கு பாரம் என அகம் கூறுகிறது.

பாழி என்னும் ஊரிலேதான் நன்னனுடைய செல்வங்கள் வைக்கப்பட்டிருந்தன. பாழிக்கோட்டையில் தான் நார்முடிச்சேரலின் மணிமுடியை பதுக்கி வைத்திருந்தான் நன்னன் எனப் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

“சூழி யானை கடர்ப்பூண் நன்னன்
பாழி யாங்கண் கடியுடைவியன்நகர்”[159]

என அகநானூறு கூறுகிறது.

“அணங்குடை வரைப்பிற் பாழியாங்கண்
வோர் முது மாக்கள் வியன் நகர்க்கரந்த
அருங்கலவெறுக்கை”[160]

என்ற அகப்பாடல் மூலம் பாழிநகர்க் கோட்டையில் நன்ன அரசர் பெருநிதியைச் சேர்ந்து வைத்திருந்தான் என்பதை அறியலாம். இந்நாட்டின் துறைமுகப்பட்டிணம் நறவு. இது இலக்கியத்தில் துவ்வா நறவு எனச் சொல்லப்படுகிறது. நறவு என்பது கள். எனவே இது உண்ணப்படாத நறவு என துவ்வா நறவு எனக் குறிக்கப்பட்டது.

கடம்பின் பெருவாயிலில் நடந்த போரில் களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் நன்னனை வென்றான் இதுவும் புதினத்தில் காட்டப்படுகிறது.

“உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச்செறுவின் ஆற்றலையறுத்தவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து”[161]

என்ற பதிற்றுப்பத்து வரிகள் புதினத்தில் காட்டப்படும் வரலாற்றுச் செய்தியாகும்.

வாகைப் பெருந்துரைப் பிண்டனை நன்னன் தோற்கடித்தது புதினத்தில் காட்டப்படுகிறது. இப்போரில் பசும்பூண் பாண்டியனின் சேனைத்தலைவன் அதியமான் என்பவன் போர் செய்து இறந்தான்.

"கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடுபட்ட ஒன்றே"[162]

என்ற வரலாற்றுச் செய்தியை குறுந்தொகை வரிகள் காட்டுகின்றன. இந்நிகழ்வும் புதினத்தில் காட்டப்படுகின்றது.

இந்த வாகைப்பறந்தலையில் களங்காய் கண்ணி நார்முடிச் சேரல் நன்னனுடன் போர் செய்தமை புதினத்தில் காட்டப்படுகிறது. இவ்வரலாற்றுச் செய்திக்கான ஆதாரம் அகநானூற்றுப் பாடல்வரிகள்.

"குடா அது
இரும்பொன் வாகைப் பெருந்துரைச் செருவிற்
பொலம்பூண் நன்னன் பொருது களத்தொழிய
வலம்படு கொற்ற ந்தந்த வாய்வாட்
கலிங்காய்கண்ணி நார் முடிச்சேரல்"[163]

கதைக்களத்தின் முக்கிய பாத்திரமான "நன்னன் பெருவீரன் பிண்டன் என்னும் வலிமைமிக்க சிற்றரசனுடன் போர் செய்து அவனை வென்றான்"[164] இந்நிகழ்வும் அகநானூற்றுப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. நன்னனை வென்ற நார்முடிச் சேரலின் புகழ் எங்கும் பரவ அதுகேட்டு பொறாத அஞ்சி அவன் மீது படையெடுத்துச் சென்றான் சேரலாதனின் யானைப்படைமுன் அஞ்சியின்படை பஞ்சுபோல் பறந்தோடியது.

"நார்முடிச்சேரல் நெடுயிடல் அஞ்சியின்
மிடல் கெடுமாறு பொருது அவன் நாட்டில்

புகுந்து அவன் வளம் செறிந்த வயல்கள்

அனைத்தையும் தன் யானைப் படையால் அழித்தான்”[165]

புதினத்தில் நெடுயிடல் அஞ்சி நன்னனோடு சேர்ந்து போர் புரிந்ததாக காட்டப்பட்டுள்ளது. நன்னனும் அஞ்சியும் சேரலாதனால் தோற்கடிக்கப்பட்டனர் என்பது வரலாற்று மெய்மையாகும்.

“மணிமுடியை இழந்த சேரமான் அந்த மணிமுடியை மீண்டும் கவரும்வரை வேறு புதிய மணிமுடியணியேன் என்று களங்காய் கண்ணிகளைப் பனைநார் முடிசெய்து கோத்து அணிந்துகொண்டு களங்காய் கண்ணி நார்முடிச் சேரல் என்று தன்னை பறைசாற்றிக் கொண்டான்”[166] என புதினத்தில் வரலாற்றுச் செய்தி கூறப்படுகிறது. அதன் காரணமாய் சேரல் நன்னனோடு போர்புரிந்து வெற்றியும் பெற்றான்.

“கொல்லிமலை என்பது அபூர்வ மூலிகைகளைக் கொண்டு நாமக்கல் பகுதியில் விளங்கும் ஒரு மலை. சஞ்சீவி பருவதம் அங்கே தேவர்களும் முனிவர்களும் வாசம் செய்ய இதனைக் கேள்விப்பட்ட அசுரர்கள் வருகை தந்து தொல்லை கொடுத்தனர். தேவர்களும் முனிவர்களும் விசுவகர்மாவை வேண்ட அவர் ஓர் அழகிய பதுமையைக் கல்லால் செய்து அதற்கு பலவித சக்திகளை அளிக்கிறார். அந்தப்பதுமை சமயத்தில் மோகினி வடிவம் தாங்கி கண்டோரை காமவேட்கை கொள்ளச் செய்து சிரித்து சிரித்து மயக்கிக் கொல்லும். எனவே இதற்குப் பெயர் கொல்லிப்பாவை ஆதாரம் நற்றிணைப் பாடல்கள்”[167].

அழகே உருவான பரிமளாவை நன்னன் தவறாக எண்ணி அவளை அடைய நினைக்க அமைச்சர் பூந்துறையர் கோசர்குலத் தலைவியான அவள் கொல்லிப்பாவை எனச் சுட்டிக்காட்டுகிறார்.

“அடுபோர் மிஞலி செருவேல் கடைஇ முருகுறா; முனபொடு பொருது கலிஞ்சிவப்ப ஆஅய் எயினன் வீழ்ந்தென.....”[168] என்னும் பகுதியைச சான்றாகச் சுட்டலாம்.

புதினத்தின் போக்கில் கோசர்குலத்தலைவி பரிமளா நார்முடிச் சேரலின் மணிமுடிக்காவும் தன் தங்கையைக் கொன்ற நன்னனைப் பழிவாங்கும் பொருட்டும் நன்னனுடன் போர் தொடுக்றாள். கோசர்படை, சேரமான்படை அவர்களுக்கு உதவிசெய்யவந்த ஆஅய் எயினன், அகுதை, அதியன் என பலரும் களம் காண்கின்றனர். போர்களத்திலே எயினன் மாண்டான். “மாவீரச் சேனாபதி எயினன் வீழ்ந்தான் சதியால் அவனை வளைத்து அவனது புரவியைக் குறிபார்த்து முதலில் வீழச்செய்து அதன்மீதிருந்த எயினன் தரையில் வீழ்ந்த மறுகனம் மிஞலியின் வாள் எயினன் மார்பில் நுழைந்துவிட்டது”[169]. சேரமான் கலங்கிப் போனான் வலக்கரம் போயிற்றே என, நண்பனின் வீரமரணம் குறித்து கலங்குகிறான். இந்த அகநானூற்றுப்பாடல் செய்தியானது புதினத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.

பெருந்துரைப் போர் என்பது வரலாற்றில் பொன்னெழுத்துக்கள் என குறிக்கப்படுகின்றன.

“மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போர்கிய
ஒன்று மொழிக் கோசர்போல, என்ற
பரணரின் பாடல் மூலம் அப்பெண் கோசர் குலப்பெண்”[170]

என்பது அறியப்படுகிறது.

“கடும்பரிக் குதிரை ஆய் எயினன்
நெடுந்தேர் மிஞலியொடு பொழுது களம்பட்டென”[171]

என்ற வரலாற்றுச் செய்தியும் புதினத்தில் காட்டப்படுகிறது.

சேரசேனாதிபதி எயினன் அபிமன்யுவைப் போல் வியூகம் அமைத்து கொண்கான வீரர்களைக் குலைநடுங்க விரட்டித் தலைகளை பந்தாடுகிறான் . . . . . . நன்னனின் தளபதி அவனை செல்ல முடியாமல் இறுதியில் சதியால் எயினனைக் கொன்றான்.

"மண்ணிய சென்ற ஒன்றுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொரு அவள் இறை
பொன் செய்பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண் கொலை புரிந்த நன்னன் . . . . . . . "[172]

இந்த பாடலின் கருவை ஆதாரமாக வைத்துப் புதினம் எழுதப்பட்டுள்ளது.

"அரசே கெஞ்சிக் கேட்கிறேன் மகள்மீது கொண்ட பாசத்தால் மன்றடுகிறேன். இது அறியாமல் செய்த பிழை. அதற்காக அவள் பிழை பொறுக்க, அவள் உருவத்துக்கு, அவள் எடைக்குப் பொன்னாலான பதுமைப்பாவை செய்து பிராயச்சித்தமாக தருகிறேன். எண்பத்து ஓர் யானைகளை அபராதமாக அளிக்கிறேன். அருள்கூர்ந்து விடுதலை செய்ய வேண்டுகிறேன்"[173] என அரிவையின் தந்தை கோசர் கோமான் வச்சிரகோசர் நன்னனிடம் மன்றாடுவதாக புதினத்தில் கூறப்பட்டுள்ளது.

நன்னன் காவல் மரமான மாமரத்து அபூர்வ காயை நன்னன் மட்டுமே உண்ண வேண்டும். தவறி யாரேனும் பறித்தோ அல்லது அதுவே தவறிக் கீழே விழுந்துவிட்டால் உண்பார்களேயானால் மரணதண்டனை. இது நாடறிந்த ஒன்று எனப் புதினத்தில் கூறப்படுகிறது.

"பொன் அம் கண்ணி பொலந்தேர் நன்னன்
சுடர் வீ வாகைக் கடி முதல் தடித்த
தார் மிகு மைந்தின் நார்முடிச் சேரல்"[174]

என்ற வரிகள் வாகை மரத்தை நார்முடிச் சேரல் தடிந்து அதன் அடிமரத்தை நன்னனுடைய அந்தப்புர மகளிர் கூந்தலைக் களைந்து கயிறாகத் திரித்துக்கட்டி யானைகளைக் கொண்டு இழுத்துச் சென்றான். அதனால் முரசுகள் பல செய்து புகழ்பட வாழ்ந்தான் எனக் கூறப்பட்டுள்ளது.

“நறுமா நன்னன் கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழி கோசர் போல
உன் கண் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே”[175]

என்ற குறுந்தொகை வரிகளை புதினத்தில்

“பரிமளா தேவியின் ஆணையை சிற்றரசன் அகுதை
யானைகளைக் கொண்டு மாமரத்தை வீழ்த்தி
நிறைவேற்றுகிறான். மக்கள் அசுர வேகத்தில் மரத்தைப்
பிளந்து துண்டு துண்டாக்கிச் சுமந்து செல்கிறான்”[176]

எனக் குறித்திருப்பது வரலாற்று மெய்மையாகும். வெற்றி பெற்ற நார்முடிச் சேரல், ஆசானே இந்த அவையின் முதலமைச்சர் நீங்கள் என்பார் பாடிய காப்பியத்துக்கு நான் அளிக்கும் எளிய பரிசு இந்த நாற்பது நூறாயிரம் பொற்கிழி எனக் கூறுவதும் வரலாற்றுச் செய்தியாகும். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பூழிநாட்டின்மேல் படையெடுத்துச் சென்று அதைத்தன் நாட்டோடு சேர்த்துக் கொண்டான். நன்னனைப் பெருவாயில் போர்க்களத்தில் வென்று அவன் வாகை மரத்தை வெட்டினான்; போர்கள் பல செய்தான். வறுமையால் தளர்ந்த குடிமக்களைத் திருத்திச் செழுமையுறச் செய்தான். அவன் மேல் காப்பியாற்றுக் காப்பியனார் பத்துப்பாடல்கள் பாடினார். பாடிப் பெற்ற பரிசிலாவது நாற்பது இலட்சம் பொன் ஒன்றாகக் கொடுத்து தான் ஆள்வதில் பாகம் கொடுத்தான்.

“ஆராத்திருவின் சேரலாதற்கு
வேண் ஆவிக் கோமான்
பதுமன் தேவி ஈன்றமகன் முனை

பனிப்பப் பிறந்து பல்புகழ் வளர்த்து
ஊழின் ஆகிய உயர் பெருஞ்சிறப்பின்
பூழிநாட்டை படை எடுத்துத்தழீஇ
உருள் பூங்கடம்பின் பெருவாயில் தன்னை
நிலைச் செருவின் ஆற்றலை அறுத்து அவன்
பொன்படு வாகை முழு முதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்ப
செருப்பல செய்து செங்களம் வேட்டு
துலிங்குகுடி திருந்திய வலம்படு வென்றிக்
கலிங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக்
காப்பியாற்றுக் காப்பியனார் பாடினார் பத்துப்பாட்டு”[177]

பாடிப்பெற்ற பரிசில்; நாற்பது நூறாயிரம் பொன் ஒருங்கு கொடுத்துத்தான் ஆள்விற் பாகம் கொடுத்தான் அக்கோ.

களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந்தான் என்பதிலிருந்து புதினத்தில் காட்டப்படும் வரலாற்றுச் செய்தியை உணர முடிகிறது.

இந்தக் கதையின் கருவை,

“இரும்பொன் வாகைப் பெருந்துரைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொழுது களத்துஒழிய
வலம்படு கொற்றம் தந்நத வாய்வாள்
களங்காய் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடு தந்தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலென் யானே”[178]

என அகநானூற்றுப்பாடல் மூலமும் அறியலாம்.

தந்தை நெடுஞ்சேரலாதனைப் போலவே இயல்பான நல்ல குணங்கள் அமையப் பெற்றவன் கதைத்தலைவன் நார்முடிச்சேரல். பெண் கொலை புரிந்த நன்னனை கோசர்குலம் அழித்ததும் பூழிநாட்டை நார்முடிச்சேரல் வெற்றிகட்டதுமான இருவரலாற்றுச் செய்திகளையும் கொல்லிப்பாவை என்ற இந்த புதினம் கருப்பொருளாக கொண்டுள்ளது.

**சாம்ராட் அசோகன் புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில், காணப்படும் வரலாற்றுச் செய்திகளை கல்வெட்டுக்களின் மூலமும் அயல்நாட்டு அறிஞர்களின் குறிப்புக்ளின் மூலமும் அறிய வாய்ப்புள்ளது. மேலும் அசோகர் பற்றிய செய்திகளைத் தீபவம்சம், மகாவம்சம் போன்ற இலங்கை இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

“செலூகஸ் நிகடாரின் தூதுவரான மெகஸ்தனிஸ் கூற்றுப்படி பேரரசில் அரசனே எல்லா அதிகாரங்களையும் பெற்றவனாக இருந்தான்”[179].

இமயமலையின் வடக்கில் தொடங்கி தெற்கே கர்நாடகம் வரையிலும் வங்காளத்திலிருந்து மேற்கே ஆப்கானிஸ்தானம் வரையிலும் மௌரியப் பேரரசு பரவியிருந்தது. . . . . .

ஜைன பாரம்பரியப்படி சந்திரகுப்த மௌரியர் கர்நாடகத்தில் சிரவன பௌகோலாவில் இயற்கை எய்தியதாக கருதப்படுகிறது. இதனை கி.மு.150-ம் ஆண்டு கல்வெட்டு கூறுகிறது.

கி.பி.272-ல் பிந்துசாரருக்குப் பிறகு அசோகர் பட்டமேற்றார். கி.பி.7-ம் நூற்றாண்டில் யுவான்சுவாங் குறிப்பின்படி ஆந்திரப்பிரதேசம் சென்னையில் காஞ்சி ஆகியவை அசோகரின் ஆட்சியில் இருந்தமை தெரியவருகிறது.

> “குஜரா மற்றும் மாஸ்கியில் கண்டெடுக்கப்பட்ட குறும்பாறைக்
> கல்வெட்டுகள் மட்டுமே பேரரசன் அசோகன் பெயரிலேயே
> குறிக்கப்பட்டுள்ளன. மற்ற எல்லாக் கல்வெட்டுக்களிலும்

தேவனாமபிரியா, பிரியதர்சிராஜா எனக் குறிப்பிடப்பட்டுள்ளது”[180].

அவருடைய இயற்பெயர் அசோக வர்த்தனர் என்றே பாரம்பரியச் செய்திகள் தெரிவிக்கின்றன. கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ள பேரரசின் நகரங்கள் உஜ்ஜயினி, தட்சசீலம், சுவர்ணகிரி, தோசாலி, கௌசாம்பி, சமாபா, இசாலா ஆகியவை உஜ்ஜயினி தட்சசீலம் ஆகிய நகரங்கள் புதினத்திலும் காட்டப்பட்டுள்ளன.

மேலும் அசோகப் பேரரசில் யவனர்கள், கம்போஜர், போஜர், ராஷ்டிரகர்கள், ஆந்திரர்கள், புலிந்தகர், நாபகர், நாபபங்கி போன்ற மக்கள் வாழ்ந்து வந்தனர்.

“குறும்பாறைக் கல்வெட்டு III-ன்படி, தம்பபதத்தைப் பற்றிய குறிப்புகளை அறிய முடிகிறது.

> “தம்மம் என்ற சொல் புத்தரின் கொள்கைகள் என்ற பெயரிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளன. மற்ற ஆவணங்களில் தர்மம் என்ற சொல் அசோகனின் நீதி போதனைகளைக் குறிக்கின்றன. . . . . . புத்தர் அருளிய பொதுக்கட்டளைகள் திகனிகாய என்ற அறநூலில் உள்ளது”[181].

இந்த தம்மபதம் என்ற சொல்லாட்சியும் அதன் கருத்துக்களும் புஷ்பமாலிகை சந்திரமௌலிக்குக் கூறுவதாகப் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

புத்தபாரம்பரியத்தின்படி சண்டா அசோகன் அல்லது அசோகன் என்று அழைக்கப்பட்டான். அவன் தனது 99 சகோதரர்களைக் கொன்றுவிட்டு ஆட்சிக் கட்டிலில் ஏறியதால் இவ்வாறு பெயர் பெற்றான் எனச் சொல்லப்படுகிறது. புதினத்திலும் அசோகன் இளமைப்பருவத்தில் கொடுமையானவன் எனக் கூறப்பட்டுள்ளது.

அசோகரது இரண்டாவது கல்வெட்டின்படி,

> “தந்தை தாய் இருவரையும் வணங்கி அவர்களின் அறிவுரையை குழந்தைகள் பின்பற்ற வேண்டும் என்பதே அரசின் விருப்பம். உயிரினங்களிடம் அன்பு பாராட்ட வேண்டியது அவசியம். . . . எந்த

விலங்கையும் கொல்வது குற்றம். ஆசிரியர்களிடம் மாணவர்கள் மிகப் பணிவுடன் நடந்துகொள்ள வேண்டும். வீடு தேடிவரும் விருந்தாளிகளை உபசரிக்காமல் இருப்பது மிகப் பெரியதவறு.... என கூறப்பட்டுள்ளது"[182].

புதினத்திலும் அசோகரின் மனப்போக்கு இவ்விதமே காட்டப்பட்டுள்ளது. மௌரியர்கள் சிவ வழிபாடு செய்பவர்கள். இது புதினத்திலும் காட்டப்பட்டுள்ளது. அசோகர் பட்டத்திற்கு வந்தபோது சராசரி இந்து ராஜாவாகத்தான் இருந்தார். கலிங்கப் போருக்குப் பிறகே அவர் மனம்மாறி பௌத்த மதத்தில் சேர்ந்தார். இதனைப் புதினத்தின் போக்கிலேயே அறியமுடிகிறது.

இதனை சிங்கள வரலாற்று நூலாசிரியர்கள் "அசோகருக்கு மனமாற்றம் ஏற்படுவதற்கு முன்பு கொலைவெறிபிடித்த கொடுங்கோல் அரசராக இருந்தார்"[183] என அதீத ஆர்வத்துடன் ஒரு கற்பனைக் கதையை வரலாற்றுக்குள் புகுத்தியிருக்கிறார்கள் என்பது அறிஞர்களின் கருத்து.

அசோகரின் 13-ம் கல்வெட்டின்படி அசோகன் ஆட்சியில் 9-வது ஆட்சியாண்டில்தான் கலிங்கப்போரில் ஈடுபட்டான். . . . .

> "கலிங்கப் போருக்குப்பின் அகிம்சையை போதிப்பவனாகவும் கருணையுடையவனாகவும் சமூக சீர்திருத்தவாதியாகவும் மாறினான். . . . . பொழுது போக்காக வேட்டையாடுவதை அசோகன் கைவிட்டான் எனக் கூறுகிறது"[184].

"அறுபது மனைவிகளை மணந்த பாட்டனார் பிந்துசாரரோ தொண்ணூற்றெட்டு சகோதரர்களைக் கொன்ற தந்தையார் சக்ரவர்த்தி அசோகரோ பிறவியில் . . . . . . பெண்லோலர்களாகவும், கொலைப் பித்தர்களாகவும் வாழ்ந்து வந்தனர். பிந்துசாரர் திருந்தினாரோ இல்லையோ அசோகர் திருந்திக் கொண்டு வந்தார்"[185] எனப் புதினத்தில் கூறப்படுகிறது. காரணம் அவருடைய மனைவியான வேதிசமகாதேவியும், காருவகியும் அவரின் இயல்பான குணத்தை மாற்றப் பாடுபட்டனர்.

“சிறு பிராயத்திலும் சரி, அரியணையேறிய வயதிலும் சரி அசோக வர்த்தனர் மிக மூர்க்கமானவராகவே காணப்பட்டார். கொடுமை வாய்ந்தவராகவும் கொடுங்கோலராகவும் அன்பற்ற அரக்கரைப் போன்ற வாழ்க்கையை மேற்கொண்டும் தானே அரசு புரிய தலைப்பட்டார்”[186] என யுவான் சுவாங் தனது குறிப்பில் கூறியுள்ளார். காப்பிய கதையின்படி “அசோகர் தனது ஆன்மீக குருவான உபகுப்தர் என்பவரின் வழிகாட்டுதலின்படி புனிதப்பயணம் மேற்கொண்டார்”[187] எனக் கூறப்படுகிறது.

“அசோகரை மதம் மாற்றம் செய்தது அவரது குருவான உபகுப்தர். இவர் அசோகர் காலத்தில் உண்மையில் வாழ்ந்த வரலாற்றுப் பாத்திரம். கண்காளிதிலா என்ற மதுராவில் உள்ள புத்த விகாரத்தில் அவரது பெயர் காணப்படுகிறது. உபகுப்தரின் நினைவுச் சின்னங்கள் இந்து மாகாணத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன. இவர் நறுமணப்பொருள்களை விற்பனை செய்த குப்தர் என்பவரின் புதல்வர் என வரலாறு கூறுகிறது”[188].

“எந்த சாணக்கியரால் நந்த வம்சத்தை ஒழித்து சந்திரகுப்த சகாப்தம் தொடங்கியதோ அந்த சாணக்கியரால் மௌரிய சாம்ராஜ்யமே பொடிந்து போக விழுந்தது. தான் உண்டுபண்ணிய சாம்ராஜ்யத்தை தாமே அழிக்கவும் துணிந்தார் மகாராஜ தந்திரியான சாணக்கியர். காரணம் சந்திரகுப்தரின் மதமாற்றம்தான். சமணமதத்தைத் தழுவி பத்ரபாகு என்பாரை ஆசானாகக் கொண்டார்”[189] என்ற சரித்திர உண்மை புதினத்தல் கூறப்பட்டுள்ளது.

குறும்பாறைக் கல்வெட்டு III “அசோகனின் இரண்டாம் மனைவி காருவகி (தீவிராவின் அன்னை) செய்த தானதர்மங்களை ஆவணங்களில் குறித்து வைக்க வேண்டுமென அசோகன் கட்டளையிட்டதாக கூறுகிறது”[190].

முக்கியமாக தான் கடைப்பிடிக்காத எதையுமே பின்பற்றச் சொல்லி அசோகன் யாரையும் வற்புறுத்தவில்லை என்பது வரலாற்று மெய்மையாகும். “கடவுளை வணங்கி புண்ணியம் தேடிக்கொள்ள வேண்டும் என்பதில்லை. தினமும் ஒரு ஆத்மாவை

நிறைவுபடுத்துவுமேயானால் அந்த ஆத்மாவை உள்ளடக்கிய உடலே கோயிலாக காட்சி தருகிறது"[191] என்ற கருத்தை பின்பற்றியவராக பின்னாளில் அசோகர் காட்சி அளித்தார்.

அசோகரைப் பற்றி பாகியான் தனது குறிப்பில்,

அசோகர் மிகவும் கொடுங்கோலராக இருந்தார். மற்றவர்களை கடுமையாகத் தண்டிப்பார். பழிபாவத்துக்கு அஞ்சாதவர். தன் மனம் போன போக்கில் மக்களை சித்ரவதை செய்து வந்தார். அவர் சிம்மாசனம் ஏறியதும் இக்குணங்களுடனே காணப்பட்டார் எனக் குறிப்பிடுகிறார்.

இதனை புதினத்தில் மகேந்திரனை கண்டிக்கும் அசோகன் நிலை உணர்த்துகிறது. "நீ எனது தம்பியானாலும் தண்டனையை ஏற்றுத்தான் தீரவேண்டியிருக்கிறது. எனவே நீ நரக சிறைச் சுவரின் மத்தியில் ஏழு நாட்கள் இருட்டறைத் தண்டனையேற்று முடிவில் சிரச்சேதம் செய்ய ஆணையிடுகிறேன்"[192] என்ற வரிகள் அவர் கோடுங்கோலர் என்பதை உணர்த்துவதாக அமைவது மட்டுமல்ல அவரின் நியாயமான மனதை காட்டுவதாக அமைகிறது. தம்பியே தவறு செய்தாலும் அவன் சட்டத்திற்கு உட்பட்டவன் என்பதை கடைப்பிடிக்கும் அவரது மனதைக் காட்டுவதாக அமைகின்றது.

இந்தச் செய்தியானது சட்டத்தை மதியாததால் மகேந்திரன் ஏழு நாட்கள் சிறைக்கூடத்தில் இருந்தான் என்பது வரலாறு. இதனை யுவான் சுவாங் தனது குறிப்பில் எழுதி வைத்துள்ளார். "உங்கள் முப்பாட்டனார் சந்திரகுப்தருக்கு முன்னம் ஆண்ட நந்தர்கள் கொடியவர்கள். காரணம் நாவித ரத்தம் நந்தனுடைய தாய் ஒரு நாவிதன் பால் ஆசைப்பட்டதன் களங்கம் அது. எனவே மரபு அரச அமைதியை இழந்துவிட்டது. உங்கள் பாட்டனாரும் உரிய ஒழுங்கான அரச குருதியில் வந்தவர் அல்லர் என்றும் மகா மேதையான சாணக்கியருடைய சேர்க்கையால் சிறந்து விளங்கத் தலைப்பட்டார். . . . . . சந்திரகுப்தர் . . . . . . குருவுக்கே துரோகியானார். சிவபக்தரான சாணக்கியரைப் பகைத்துச் சமணரானார். பத்திரபாகு என்ற சமயாச்சாரியனைத் துணைக் கொண்டார்"[193] என

புஷ்ப மாலிகை கூறுவதாகப் புதினத்தில் மேற்கூறிய வரலாற்றுச் செய்திகள் காட்டப்பட்டுள்ளன.

இச்செய்திகளை கி.பி.150-ம் ஆண்டில் வெட்டப்பட்ட ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. “ஜைன பாரம்பரியத்தின்படி சந்திரகுப்த மௌரியர் கர்நாடகத்தில் சிரவண பௌகோளாவில் இயற்கை எய்தியதாகக் கூறப்படுகிறது”[194].

அசோகருக்குத் தாய்வழியில் ஒன்றுவிட்ட இளைய சகோதரர் இருந்தார். அவர் மிக ஆடம்பரமாகவும், தேவையற்ற செலவுகள் செய்பவராகவும், கொடுமையாக நடந்து கொள்பவராகவும் இருந்தார். அவரைப்பற்றி அமைச்சர்கள் புகார் கூற மகேந்திரன் என்ற அவரை அழைத்து,

“நான் உன்னைத் தண்டிப்பதால் எனது முன்னோர்கள் என்னை வெறுப்பார்கள் என அஞ்சுகிறேன். அதே சமயம் உன்னுடைய அத்துமீறல்களை அப்படியே விட்டுவிட்டால் என்னுடைய மக்கள் என்னை இழிவாகக் கருதுவார்கள் என்றும் அஞ்சுகிறேன் எனக்கூற இளவரசன் தலைகுனிந்து தன்னுடைய தவறை ஒப்புக் கொண்டான். . . . . . . ஏழு நாட்கள் அவன் இருட்டறைச் சிறையில் இருந்தான். அந்நாட்கள முடிந்ததும் அவன் ஒரு முனிவரின் நிலைக்கு உயர்ந்துவிட்டான்..... தான் எதிர்பார்த்ததற்கு மாறாக அவன் அதிகப்படியான முக்கியத்துவம் பெற்றுவிட்டான் என அரசர் அவனை அழைக்கிறார். அவனோ உலக வாழ்க்கையை வெறுத்து தனிமையில் வாழ விரும்புவதாகக்கூற அவனுக்கு ஜெனி பூதங்களைக் கொண்டு ஆஸ்ரமம் அமைத்துக் கொடுத்தார்”[195] என அசோகரின் வரலாற்றில் குறிப்பிடப்படுகிறது.

புதினத்திலும் மகேந்திரன் புஷ்பமாலிகையின் நற்செய்கையால் குற்றத்தினின்று காப்பாற்றப்பட்டு இறுதியில் பௌத்த துறவியாக மாறுகிறான் என காட்டப்பட்டுள்ளது.

“இந்த மகேந்திரர் இலங்கைக்குச் செல்லும் முன் காவிரிக்கரையில் ஒரு மடாலயம் கட்டினார் எனவும், இலங்கைக்கு காற்றில் பறந்து சென்றார் எனவும் நம்பப்படுகிறது”[196]. கி.பி.7-ம் நூற்றாண்டில் தட்சசீலத்தில் ஒரு ஸ்தூபம்

கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அசோகர் தனது மகன் குணாளனின் கண்கள் பறிக்கப்பட்ட இடத்தைச் சுட்டிக்காட்டவே இந்த ஸ்தூபத்தைக் கட்டினார் என்று கூறப்படுகிறது.

“குணாளன் அசந்தமித்திரையின் மகன். இவன் கவர்ச்சியான கண்களையுடையவன். திஷ்யரக்ட்சிதா தனது மூத்தாளின் மகன் மீது மையல் கொண்டாள். நற்குணங்கள் நிரம்பிய குணாளன் தன்னுடைய மாற்றாந்தாயின் செயலால் அச்சமடைந்தான். வெறுப்பையும் மதிப்பற்ற அழகையும் கொண்டிருந்த அந்த மாற்றாந்தாய் தன்னுடைய தணியாத காதலை ஆழமான வெறுப்பாக மாற்றிக் கொண்டாள். அவளுடைய சதியாலேயே குணாளன் கண்கள் பிடுங்கப்பட்டன”[197].

திஷ்யரக்ட்சிதாவின் இந்த செயல் புதினத்திலும் காட்டப்பட்டுள்ளது.

வேதிசமாதேவி பற்றிய குறிப்பானது கீழ்கண்டவாறு வரலாற்றில் காணப்படுகிறது.

“அசோகர் உஜ்ஜயினி நகரில் அவந்திநாட்டின் வைஸ்ராயாக இருந்தபோது சேத்தி ஜாதியைச் சேர்ந்த தேவி என்ற பெண்ணுடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. அப்பெண் வேதசகிரி என்ற இடத்தில் (பில்சா அருகில் உள்ள பெஸ் நகர்) தங்கியிருந்தாள். அவள் அசோகருடன் உஜ்ஜயினி வந்துவிட்டாள். அவளுக்கும் அசோகருக்கும் பிறந்த மக்களே மகேந்திரனும், சங்கமித்திரையும். மகேந்திரன பிறந்தது புத்தர் மறைந்த 204 ஆண்டுகளுக்குப் பிறகு என தீபவம்சம் கூறுகிறது. . . . . . அசோகரின் சகோதரி மகனான அக்கின பிரம்மனுக்கும் சங்கமித்திரைக்கும் திருமணம் நடந்தது. அவர்களது குழந்தை சுமனா என்பவனாகும். தேவி வேதிசகிரியிலேயே தங்க குழந்தைகள் அசோகருடன் தலைநகருக்கு சென்றுவிட்டார்கள்”[198].

வேதிசமாதேவியும் காருவகியும் ஒருவரே என்ற வரலாற்று மயக்கமும் உண்டு. புதினத்தில் தம்மபதம் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. மிக முக்கியமான ஒன்றாக இது காட்டப்பட்டுள்ளது.

"நம்மாலேயே தீமை செய்யப்பட்டது, நாமே நமது வலியைத் தாங்கிக் கொள்கிறோம். நாமே தீமையிலிருந்து விலக வேண்டும். நாம் நம்மாலேயே புனிதமடைகிறோம். நம்மைத்தவிர வேறுயாரும் நம்மைக் காப்பாற்றுவதில்லை. ஒருவராலும் இதைச் செய்யமுடியாது. செய்யவும் மாட்டார்கள். நம்முடைய பாதையில் நாமே நடக்க வேண்டும் புத்தர்கள் மட்டுமே வழிகாட்டுவார்கள்"[199]

என்ற தம்மபதம் கூறும் கருத்துக்களைப் படித்து சந்திரமௌலி மனம் மாறித் திருந்துகிறான். புஷ்பமாலிகையின் அன்பான அறக்கல்வியும் காரணமாக அமைவதாகப் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

அசோகர் தமது பதின்மூன்றாம் பாறைக் கல்வெட்டில் "தான் கலிங்கத்தை வென்றதையும், கலிங்கப் போரில் இறந்தோரையும், காயம் உற்றோரையும், அடிமைப்பட்டோரையும் கண்டு மனம் வருந்தி பௌத்த தர்மத்தை மேற்கொண்டதையும் கூறுகிறார்"[200].

தர்மத்தின் மூலம் பெறும் வெற்றி எதுவோ அதுவே சிறந்த வெற்றியாக அசோகர் கருதினார். இதுவும் புதினத்தில் காட்டப்படுகின்றது.

ரூப்மதி என்ற குறுநாவலில் என்னென்ன வரலாற்று செய்திகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதும் குறிக்கத்தக்கது.

இந்த புதினம் ரூப்மதி, கானல்கானம் என்ற இரு குறுநாவல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

முதல் புதினமான ரூப்மதியின் கதைக்களம் அக்பர். பட்டம் ஏற்றபோது நடந்தது. மாளவம், மாண்டுக்கோட்டை ஆகிய பகுதிகளை அடிப்படையாக் கொண்டு எழுதப்பட்டது. அக்பர் பாதுஷா புதினத்தில் சில இடத்திலும், கதைத்திருப்பத்துக்கும் காரணமாக வருகிறார். மாண்டுக் கோட்டை அரசன் பாஜ்பகதூரும் அரசி ரூப்மதியுமே கதைத்தலைவன் தலைவியாவர்.

கதைத்தலைவனும் தலைவியும் காதலர்கள். பாஜ்பகதூர் நாடோடியாக வந்து இசையரசி ரூப்மதியைக் காதலித்து மணந்து கொள்ளுகிறான்.

> "பைராம்கான் பதவியைவிட்டு விலகியபின் முதன் முதலாகக் கைப்பற்றப்பட்ட மாநிலம் மாளவம் ஆகும். அதன் ஆட்சியாளர் பாஜ்பகதூர் இசைக்கலை, நடனம் முதலான நுண்கலைகளில் ஆர்வம் கொண்டவராக விளங்கினார். அவரிடம் கண்ட குறைபாடு ஆட்சியில் பற்றுக்கொண்டு நிர்வாகத்தை சரிவர நடத்தாமையே ஆகும். எனவே ராணி ரூப்மதி தன் கணவர் பொருட்டு தாமே அரசாட்சியை நடத்திவந்தார்"[201] என்பது வரலாறு.

"அக்பர் தனது பேரரசை விரிவாக்க முற்பட்டபோது மதுவிலும் இசையிலும் பெரு விருப்புடையவனாயிருந்த பாஜ்பகதூர் என்பவன் ஆண்டுவந்த மால்வாவை வெற்றி கொள்ள விரும்பினார். மாகம் அனகாவின் மகன் ஆதம்கானை இந்த படை எடுப்பதற்குத் தலைமை ஏற்றுச் செல்லும்படி செய்திருந்தார்"[202]. புதினத்தில் அக்பர் ரூப்மதியின் தெய்வீக இசையைக் கேள்விப்பட்டு அவளை மணக்க விரும்புகிறார். அவரைவிட வயதிலே பெரியவளான ரூப்மதியை மணக்கத் தடை விதிக்கப்படுகிறது. அவளது அழகையும் இசையையும் காணவேண்டும், கேட்க வேண்டும் என்ற விருப்புடன் வந்த அவரைக் காணவே மறுத்துவிட்டாள் ரூப்மதி.

> "மாளவத்தின் தலைநகரான சாரங்பூரின் மீது படை எடுத்தார் அக்பர். இந்தப்படையானது ஆதம்கானின் தலைமையில் சென்றது. . . . . . . பாஜ்பகதூரின் மனைவியுடன் அவர்தம் சொத்துக்களும் ஆதம்கான் வசம் சிக்கின. ஆதம்கான் ரூப்மதியை சொந்தமாக்கிக் கொள்ள முயன்றபோது இராணி ரூப்மதி நஞ்சருந்தி மரணத்தை தழுவி தன் கற்பைக் காத்துக்கொண்டாள்"[203].

இதனை ஆசிரியர் புதினத்தில் கூறியுள்ள விதம் “எந்த நருமதையில் காதல் காவியம் எழுதத் தொடங்கினாளோ அதே நருமதை நீரில் துன்பியல் காவியத்தை முடித்துக் கொண்டாள் என்பதாகும்”[204]. ரூப்மதியின் முடிவுபற்றி சரித்திரம் வேறு மாதிரியாகக் கூறினாலும் ஆசிரியர் ரூப்மதியின் ராஜபுத்திர ரத்தத்திற்கு கற்புக்கு கூறிய முடிவு சரியானது என்ற விளக்கம் ஆசிரியராலேயே புதினத்தில் கூறப்பட்டுள்ளது.

பாஜ்பகதூரின் விருப்பத்திற்குரிய மனைவியான ரூப்மதி என்பவள் அவளது அழகாலும், கவர்ச்சியாலும் மிகச் சிறந்தவளாக இருந்தாள். இவர்களுடைய காதல் பல கவிதைகளிலும் பல இந்திய ஓவியங்களின் கருப்பொருளாகவும் போற்றப்பட்டு இருக்கிறது.

> “நில ஒளியில் குன்றுகளில் குதிரையின் மீது அவர்கள் பயணிப்பதையும் குன்றுகளை ஒட்டிய நீரோடைகளில் அவர்கள் அமர்ந்து இருப்பதையும் நாம் ஓவியங்களில் காணமுடிகிறது”[205].

“போரில் பாஜ்பகதூர் தோற்கடிக்கப்பட்டான். வெற்றி பெற்ற படைகள் அரண்மனைக்குள் நுழையும் போதே அவள் கத்தியால் குத்தப்பட்டாள். ஆனால் அவள் இறக்கவில்லை. ஆதம்கான் ரூப்மதியை தேட ஆள் அனுப்பினான். ஆனால் அவள் நஞ்சினை அருந்தி இறந்துவிட்டாள் என்பதும் ஆராய்ச்சியாளர்களால் கூறப்படுகிறது”[206].

“உல்லாச விரும்பியான பாஜ்பகதூர் கவிதைகள் எழுதுவதில் வல்லவர். இசையில் கை தேர்ந்தவர். காதல் கானங்களை பாடிக் கொண்டிருப்பதே அவருடைய வேலை. அக்பர் படைஎடுத்து வந்தபோது ஆதம்கான் தலைமையில் மாண்டுக் கோட்டை அழிந்தது. பாஜ்பகதூர் காட்டுக்குள் ஓடிவிட்டான் என வரலாறு கூறுகிறது”[207].

அந்தப்புரப் பெண்களின் மத்தியில் அகப்பட்ட ரூப்மதி வாளால் படுகாயமுற்று ஆதம்கானின் முன்னால் தலைதொங்கிய நிலையில் நிறுத்தப்படுகிறாள். ஆனால் ரூப்மதியோ கடும் விஷத்தை வரும் வழியிலேயே விழுங்கி தன் வாழ்வை முடித்துக்

கொண்டிருந்தாள் என வரலாற்றில் கூறப்பட்டுள்ள செய்தி அவளது கற்பின் மேன்மையைக் கருதி நர்மதையில் விழுந்து ஆத்மதியாகம் செய்ததாக முடிக்கப்பட்டுள்ளது.

மாண்டுக் கோட்டையானது இடிபட்டும் பொடிபட்டும் போய்விட்டாலும் காதல் சின்னமாகவே விளங்கி வருகிறது. அக்காலத்திய கட்டட வல்லுனர்களின் அறிவு ஆச்சர்யப்படக்கூடியதாக அமைந்துள்ளது. நர்மதையை மலை உச்சிக்கு கொண்டுவந்த நிகழ்வு குறிக்கத்தக்கது.

பூங்குழலி என்ற புதினத்தின் மூலமாக அறியும் வரலாற்றுச் செய்திகளை கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள், மெய்கீர்த்திகள் மூலமாக அறியமுடிகிறது. கதைத்தலைவன் மூன்றாம் நந்திவர்மன் தமிழுக்கு தன் உயிரைக் கொடுத்தவன். சிறந்த சிவபக்தன்.

மூன்றாம் நந்திவர்மனைப் பற்றிய செய்திகள் அனைத்தும் நந்திக்கலம்பகம் மூலமாக அறியலாம்.

“சிவனை முழுதும் மறவாத சிந்தையன்”[208]

என நந்திக்கலம்பகம் கூறுகின்றது.

சிவனது திரு அடையாளம் நெத்தியிற்கொண்ட நந்திவர்மன் கைகளை குவித்து எனக்கு பின் வரும் அரசர்கள் இந்த திருப்பணியை பாதுகாப்பாராக என புதினத்தில் காட்டப்பட்ட இவ்வரிகள் அவன் சிவனை மறவாத சிந்தையன் என்பதை உணர்த்துகிறது.

“அறம் பெருகும் தனிச் செங்கோல் மாயன்”[209] என்றும் அவனது பெருமை போற்றப்படுகிறது. நந்தி நூல் வரம்பு முழுதுங்கண்டான், நூற்கடற் புலவன், நந்தி வறியோர் சொன்ன பொருள் நல்குலன் நண் செங்கோல் நந்தி, பகை இன்றி பார்க்கும் பல்லவர் கோன் ஒழியா வண்கைத் தன்னருள் நந்தி கடல் சூழ்ந்த உலகுகலாம் காக்கின்ற பெருமான் என நந்திக் கலம்பகம், “காடவற்கோன் கழச்சிங்கன் அடிபார்க்கும் அடியேன்

என சுந்தரரும் திருத்தொண்டர் தொகையில் கூறியுள்ளார்”[210]. நாடு அறநெறியில் செல்ல நன்னெறி வளர்த்தான் எனச் சேக்கிழாரும், பைந்தமிழை ஆய்கின்ற கோன் . . . . தமிழ்நந்தி எனவும் அவன் புகழ் பேசப்படுகிறது.

வேலூர் பாளையபட்டயமானது நந்திவர்மன் ஆட்சியில் வசந்தகாலம் சிறப்பளித்தது போல முன்னர் சிறப்பளித்ததில்லை. நல்லியல்புகள் பொருந்திய பல்பெருமக்கள் பிறந்திருந்தனர். பெண்மக்கள் சிறந்த கற்புடையவராக இருந்தனர். வள்ளல்கள் பலர் இருந்தனர், சான்றோர் அடக்கமாக இருந்தனர், குடிகள் அரசனைச் சார்ந்து நின்றனர் என அவன் ஆட்சி சிறப்புப் பற்றி கூறப்படுகிறது.

நந்திவர்மனுக்கு இரு மனைவியர். முதல் மனைவி ராட்டிரகூட அரசன் அமோக வர்ஷ நிருபதுங்கனின் மகளான சங்கா.

> “இவள் இலக்குமியின் அவதாரம் . . . . ஈன்ற தாயைப் போல குடிகளைப் பாதுகாத்தாள். அரசனது நற்பெயரே பிறப்பெடுத்து வந்தது போலும். இவள் சிறந்த நட்ப அறிவுடையவள் எல்லாக் கலைகளிலும் வல்லவள் என பாகூர்பட்டயம் கூறுகிறது”[211].

இரண்டாம் மனைவி,

> “அடிகள் கண்டன் மாறம்பாவையார். தெள்ளாற்றில் தோற்றோடிய சீமாறன் மகள். எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் உயிருடன் இருந்தவள். இவள் சிறந்த சிவபக்தியுடையவள். பல கோயில் திருப்பணிகள் செய்துள்ளாள்”[212].

மூன்றாம் நந்திவர்மன் காலத்தவரே கோட்புலிநாயனார். இவர் நந்திவர்மனின் சேனாதிபதியாவார்.

> “பெரிய புரான ஆராய்ச்சியல் கழற்சிங்கர் என்று குறிப்பிடப்படும் பல்லவ அரசன், கழலை அணிந்ததாலும் பகைவர்க்கு சிங்கம் போன்றவனும் என்பவர்”[213]

மூன்றாம் நந்திவர்மன் என்ற வரலாற்று மயக்கமும் உண்டு. மூன்றாம் நந்திவர்மன புதினத்தின் கதைத்தலைவன் அமோக வர்ஷன் மீது படைஎடுத்துச் சென்று வெற்றி பெற்றான். வடக்கே வாகை சூடி வென்ற இவன் சேர சோழ பாண்டியரைத் தெள்ளாற்றுப் போரில் முறியடித்தான். பிறகு அவர்களைத் துரத்திச் சென்று கடம்பூர், வெறியலூர், வெள்ளாறு, பழையறு என்ற இடங்களில் தோற்கடித்தான் என்ற செய்தி புதினத்தில் பல இடங்களில் பாடல் மூலமாக விளக்கப்பட்டுள்ளது.

"செம்பியர், சேரர், தென்னர் எதிர்வந்து மாயச் செருவென்ற"[214] என்பது நந்திக் கலம்பகத்தின் மூலம் அறியப்படுகின்றது.

புதினத்தில் இடம்பெறுவது அரிசிலாற்றங்கரைப் போர். நந்திவர்மனது இறுதிக்காலப் போராகும். "பொன்னேறி வட்டத்து திருக்காட்டுப்பள்ளி கல்வெட்டுகள் மூன்றாம் நந்திவர்மனைப் பற்றிய போர்முறைகளைக் கூறுகின்றன"[215]. குடமூக்கில் கண்ட தோல்வி நந்திவர்மன் கலந்து கொள்ளாத காரணத்தால் ஏற்பட்ட தோல்வி. அதே பாண்டியரை அரிசிலாற்றங்கரையில் வென்றது இழந்த மானத்தை திருப்பிப் பெற்ற போராகும். இப்போர் நிகழ்வு புதினத்தில் காட்டப்படுகிறது.

வேலூர்பாளையச் செப்பேடுகள், சின்னமனூர்ச் செப்பேடுகள், நார்த்தாமலைக் கல்வெட்டுகள், திருமங்கையாழ்வார், சுந்தரமூர்த்தி நாயனார், சேக்கிழார் ஆகியோர் திருவாக்கு மூலமாகவும் நந்தியின் புகழை சிறப்பை அறியமுடியும்.

நந்திக்கலம்பகத்தின் காரணமாவது நந்தியை கொல்வதற்காகப் பாடப்பட்ட நூல். அறம் வைத்துப்பாடி நந்தியைக் கொன்றனர். "தம்பியர் எண்ணமெல்லாம் பழுதாக"[216] என்ற வரிகள் நந்தியின் தம்பிமார் அவரைக் கொல்ல முயற்சித்ததை கூறுகிறது.

மாற்றாந்தாய்க்கு பிறந்த தம்பிகளில் ஒருவனே இக்கலம்பகத்தை இயற்றியவன். யாரோ ஒரு பெண் பாடியதைக் கேட்ட நந்தி அவள் மூலம் யாத்தவனையும் அறிகிறான். தம்பியைக் காப்பியம் முழுவதையும் பாடப்பணிக்க தம்பி சில நிபந்தனைகளைச் சொல்கிறான். அதாவது

> “ஒவ்வொரு பாடலுக்கும் பச்சைப்பந்தல் அமைக்க வேண்டும் என்றும் கடைசிப்பாடலைப் பாடுகிறபோது இடுகாட்டில் பந்தல் அமைத்து ஈம விறகுகள் அடுக்கி அதில் பிணச்சடங்குகள் யாவும் செய்து மன்னர் பிணம் போல் படுத்துக்கொண்டு பாடலைச் செவிசாய்க்கவேண்டும் என்பதாகும். . . . . தொண்ணூற்று ஒன்பது பாடல்பாட பச்சைப் பந்தல்கள் எரிந்து போயினவாம். நூறாவது பாடலான வானுறுமதியை அடைந்ததுன் வதனம் என்ற பாடலைப்பாட இடுகாட்டில் ஈமவிறகுகள் மீது படுத்திருந்த நந்திவர்ம பல்லவரும் எரிந்து சாம்பலானாராம்”[217].

பிற்காலத்தில் ஒரு பல்லவன் தமிழ் மீது காதல் கொள்ள ஒரு காப்பியம் எழுந்தது. ஆனால் பொறாமைப்பட்ட சிலரால் பொய்யான இக்கதை புனைந்துரைக்கப்பட்டது என்றாலும் ஆசிரியர் அதற்கேற்ப நந்தி கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும் என்பதற்கேற்ப ஆசிரியரும் நந்தி தமிழுக்காக உயிர்விடுவதை புதினத்தில் காவிய நயத்துடன் படைத்துள்ளார்.

> “விடையுடன் மங்கல விசயமும் நடப்ப பெருந்தனிக்குடை நிழல் அரசு வீற்றிருக்க அருளுக என சிவபெருமானை பரவுவதும், வாழி நந்தி தண்ணீழல் வெண்குடை ஊழி நிற்கவே”[218]

என வாழ்த்துவதும் நந்திக்கலம்பகத்தில் இருக்க, “இக்கலம்பகமுடையார் பகையின்றிப் பார்க்கும் பல்லவர் கோன் என்பதும் மண்ணெல்லாம் முய்ய மழை போல் வழங்குகரத் தண்ணுலாமாலைத் தமிழ் நந்தி எனக்கூறுவதும் பாடியவர் நந்திவர்மன் பால் பகைமையுடையவர் அல்ல”[219] எனக் காட்டுவதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

அதற்கேற்ப கலம்பகத்தை பாடியவர் பெண் என உருவகப்படுத்தியது மட்டுமல்லாமல் கலம்பகத்தில் காணப்படும் உணர்வுகள் பெண்ணினுடையது என கூறி இப்புதினத்தை படைத்துள்ளார்.

நந்திக்கலம்பகத்தை நிருபதுங்கவர்மன் தீயிட்டுக் கொளுத்த அதில் தாமே ஆத்ம தியாகம் செய்து கொள்ளுகிறார். வரலாற்றுச் செய்தி பகுத்து ஆராயப்பட்டு கற்பனையோடு உண்மையை மெய்ப்பிக்கிறது புதினம். கதையின் முக்கியப் பாத்திரங்களில் இணைக்கதைத் தலைமைப் பாத்திரமான விஜயாலயன் பிற்கால சோழ சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த மகாபுருஷன்.

“இந்த விஜயாலயன் சோழப் பேரரசை மீண்டும் நிறுவ அடிகோலியவர். கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் தஞ்சையைக் கைப்பற்றி தன் தலைநகராக்கிக் கொண்டான் என திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுகிறது”[220].

“கன்னியாகுமரிக் கல்வெட்டு எல்லா நலங்களுடன் தஞ்சாபுரி என்னும் மாநகரை விஜயாலயச் சோழன் புதிதாக அமைத்தான்”[221] எனக் கூறுகிறது.

“செந்தலைக் கல்வெட்டானது பல ஆண்டுகளுக்கு முன்னரே தஞ்சை மாநகர் சிறப்புடன் இருந்தது. திருவாலங்காட்டுச் செப்பேட்டின்படி அதை விஜயாலயன் கைப்பற்றினான்”[222] என்பதே பொருத்தமுடையது என அறிஞர்கள் கூறுகின்றனர்.

> “தஞ்சை கொண்ட கோப்பர கேசரிவர்மருக்கு என்ற வீர சோழபுரத்து கல்வெட்டினால் விஜயாலயன் தஞ்சையைக் கைப்பற்றினர் என்பதே பொருத்தமுடையது”[223].

ஆணை மங்கலச் செப்பேடுகளும், அன்பில் செப்பேடுகளும் கன்னியாக்குமரிக் கல்வெட்டும் இவனை கடைச் சங்ககால புகழ்பெற்ற அரசர்களான பெருநற்கிள்ளி கரிகாலன், செங்கணான், நல்லடி ஆகியோரின் வழிவந்தவன் என உறுதியாகக் கூறுகின்றன.

மூவருலா, பரணி ஆகியவை உணர்த்தும் உண்மையும் இவன் கடைச் சங்ககாலத்து அரச மரபினனே என்பதாகும்.

கி.பி.எட்டாம் நூற்றாண்டில் தஞ்சையானது முத்தரையர்கள் வசம் ஆனது. இவர்கள் செந்தலை, வல்லம் ஆகிய பகுதிகளை ஆண்டுவந்தனர். இந்தக் குறுநில மன்னர்கள் பெரும்பிடுகு, மகாப்பிடுகு, விடேல்விடுகு, பகாப்பிடுகு என்ற பல்லவ அரசர்களுக்குரிய பட்டங்களைப் பெற்றவர்கள். பல்லவர்க்கு கப்பம் கட்டுபவர்கள்.

புதினத்திலும் தஞ்சையை ஆண்டுவந்த சாத்தன் பழியிலி பல்லவருக்கு எதிராக சதிசெய்யும் பாண்டிய இளவரசனுடன் கைகோர்த்தவராக காட்டப்படுகிறார். பல்லவர்க்கு அரிசிலாற்றங்கரைப் போரில் வெற்றி தேடிதந்த விஜயாலயர் மார்பில் தொண்ணூற்று ஆறு விழுப்புண்கள் பெற்றவர். இது புதினத்திலும் காட்டப்படும் வரலாற்றுச் செய்தியாகும்.

“மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப் பாதத் தளைவிட்ட
பார்திவனும் – மீதெல்லாம் என் கொண்ட தொண்ணூற்றின்
மேலுமிகுமூன்று புண் கொண்ட வெற்றிப் புரவலனும் – கண்கொண்ட
கோதிலாத் தேறல் குனிக்குந் திருமற்றங் காதலாற் பொன்வேய்ந்த
காவலனும்”[224]

என விக்ரம சோழன் உலா கூறுகின்றதிலிருந்து அறியலாம்.

குலோத்துங்கச் சோழன் உலாவிலும், “பகுத்துப் பொறையனைப் பொய்கைக்கு பண்டு கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன் அடுத்தடுத்துச் சீறும் செருவிற்றிரு மார்பு தொண்ணூறும் ஆறும் படுதழும்பின் ஆரத்தோன் – வேறு பிரமவரக்கன் அகலம் பிளந்து பரமாதிருத்தில்லை பார்த்தோன்”[225] என விஜயாலயன் தொண்ணூற்றாறு விழுப்புண்கள் பெற்றவன் எனக் கூறுகின்றது.

“நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு வில்லவன் காற்றனைய விட்டகோன் – புல்லார் தொழும்புடைய வர்க்கத்து தொண்ணூறு மாறு தழும்புடைய சண்டபிரசண்டன் எழும்பகல் ஈழமெழுநூற்றுக் காதமுந் சென்றெறிந்து வேழந் திறை கொண்டு மீண்ட கோன்”[226] என இராசராச சோழன் உலாவும் இதனைக் கூறுகிறது.

"புண்ணூறு தன்திருமேனியிற் பூணாகத்

தொண்ணூறு மாறுந் சும்ந்தோறும்"[227]

என சங்கர சோழன் உலாவும் இந்தச் செய்தியைக் கூறுகிறது.

செந்தலை மன்னன் மல்லன் அளந்தன், திருக்கோவலூர் மன்னர் சித்தவடங்கன், வல்லம் வானாதிராயர் விக்ரமாதித்தன். திருமுனைப்பாடி நரசிங்க முனையரையர் ஆகியோரும் விஜயாலருக்கத் துணையாக பல்லவப் படையில் கலந்து வெற்றிதேடித் தந்தவர்கள்.

"நிசும்ப சூதனிக் கோயில் விஜயாலயனால் கட்டப்பட்டது. அவன் வழிபடும் குலதெய்வம் அதுவே. தற்போது மேலக்கோட்டை வாயிலில் உள்ள கோடியம்மன் கோயிலே அது"[228] என அறிஞர்கள் கூறுகின்றனர். நிருபதுங்கனின் வாகூர்ச்செப்பேடு பல்லவரோடு பாண்டியரை எதிர்த்த மன்னன் விஜயாலயன் என்றே கூறுகிறது.

நந்திக்கலம்பகத்தின் கதையும், வரலாற்றுப் போர்களும் புதினத்தின் கருவாக அமைந்துள்ளன. தமிழ் விரும்பியான நந்திவர்மனுக்கு தமிழ்மேல் வெறுப்புக்கொண்ட அக்களநிம்மதி என்ற அவள் தாயும் மனைவி சங்காவும் அவ்வாறே புதினத்தில் காட்டப்படுகிறார்கள்.

மாறம்பாவையைப் புதினத்தில் நந்தி தன்னோடு உடன்கட்டை ஏறக்கூடாது என ஆணையிட்டதும் ஒரு வரலாற்று உண்மையின் அடியொற்றியதே. மாறம்பாவை எழுபத்தைந்து ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருப்பதாக வரலாறு கூறுகிறது.

**கங்கை நாச்சியார் புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் காணக்கிடைக்கும் வரலாற்றுச் செய்திகளைச் செப்பேடுகள் மூலமாகவும் வரலாற்று நூல்கள் மூலமாகவும் அறிய முடிகிறது.

சடைக்கத் தேவன் கிழவன் சேதுபதியின் முன்னோர் ஆவான். சடைக்கத் தேவனுக்கு நான்கு புதல்வர்கள். அதில் மூத்தவன் கூத்தன் சேதுபதி. இவனுக்கு மக்கட் பேரின்மையால் சடைக்கன் II தளவாய் சேதுபதி அடுத்த வாரிசாக ஆனான். இவன் கூத்தன் சேதுபதியின் உடன் பிறந்தான் என்ற கருத்தும் நிலவுகிறது. இவனுக்கும் மக்கட் பேரின்மையால் தன் சகோதரி கங்கை நாச்சியாரின் மகன் இரகுநாதத் தேவனைத் தத்து எடுத்துக் கொள்கிறான். இது புதினத்தின் வாயிலாகவும் தெரிகிறது. இரகுநாதத் தேவனின் தம்பியான நாராயணத்தேவன் புதினத்தின் கதைத்தலைவன். இரகுநாதத் தேவனும் புதினத்தில் சில முக்கிய இடங்களில் காட்டப்படுகிறான். புதினத்தில் அவர்களது வீரமும் பண்பும் விளங்குமாறு அமைக்கப்பட்டுள்ளது.

> "மண்ணும் தமிழ்ப்பெயர் வாடாது
> மாரியிற் பாரின் முத்தும்
> பொன்னும் சொரியும் ரகுநாதன்"[229]

என ரகுநாதத் தேவன்பற்றி ஒருதுறைக் கோவையில் கூறப்பட்டுள்ளது.

"சடைக்கத் தேவன் உடையான் சேதுபதியின் மகளான கங்கை (அ) கண்காணும் நாச்சியாரின் மைந்தர்கள் நாராயணத்தேவனும் இரகுநாத சேதுபதியும்"[230] ஆவார்கள்.

புதினத்தில் கங்கைநாச்சி நாராயணத் தேவனுடன் சென்றதும் மதுரை அரண்மனையில் குழப்பம் ஏற்படுகிறது. சிறைவைக்கப்பட்ட நாராயணத் தேவனும் அவன் நண்பனும் தப்பிச் சென்றது மட்டுமல்லாமல் திரும்ப வந்து கங்கை நாச்சியை அழைத்துச் சென்ற நிகழ்வு சேது நாட்டின்மீது திருமலை நாயக்கர் படை எடுக்கத் தூண்டுகிறது.

இதற்கிடையே தம்பித்தேவன் தானே வாரிசு என்று உரிமை கொண்டாடியதால் அவனுக்காக மதுரை அரசு போர் முரசு கொட்டுகிறது. தம்பித்தேவன் என்பான் கூத்தன் சேதுபதியின் காமக்கிழத்தியின் மகன்.

“சடைக்கத் தேவனுக்கு காமக்கிழத்தியின் மூலம் பிறந்தவன் தம்பித்தேவன். சேதுபதிக்குப் பின் தான் அரசனாகலாம் என்று எண்ணிய தம்பித் தேவனுக்கு சேதுபதியின் அறிவிப்பு ஆத்திரமடையச் செய்தது. இவனுக்கு பெத்தன்ன நாயக்கன் என்ற பெயருமுண்டு”[231].

இயற்கையாக வீரமும் முன் கோபமும் கொண்ட தளவாய் இராமப்பய்யன் நாராயணத் தேவனை மட்டுமல்ல சேதுநாட்டையே பழிவாங்கி தம்பித் தேவனுக்கு அரசை கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் திருமலை நாயக்கர் எவ்வளவு கூறியும் கேளாமல் போர்தொடுத்துச் செல்கிறான். இது புதினத்தில் காட்டப்படும் நிகழ்வு. வரலாற்று உண்மையும் இதுவே. தம்பித்தேவனுக்காக திருமலை நாயக்கர் உதவி செய்து அவனை ஆட்சி பீடத்தில் ஏற்றித் திரும்ப மக்களின் வெறுப்பினால் இரகுநாதத் தேவனுக்கு முடிசூட்டியது வரலாற்று உண்மை. இராமப்பய்யன் என்ற அமைச்சரின் கொடூரமான செயல்கள் புதினத்திலும் கூறப்பட்டுள்ளன.

திருமலை நாயக்கர் விரும்பாத போதும் சேதுநாட்டின் மீது படை எடுத்துச் சென்று கொடுமைகள் பல புரிந்து சடைக்கத் தேவனை கைது செய்து வருகிறான். நாயக்கரின் மகள் கங்கை நாச்சியும் விஷமருந்தி உயர்விடுகிறாள் என புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. மறவர்படையைச் சாதாரணமாக நினைத்த தன் தளபதியை திருமலை மன்னன் எச்சரித்து அனுப்புகிறான்.

“வேண்டாமடா ராமா, வீரியங்கள் பேசாதே; பண்டு முன்னாள் தம் சேனை பாருலரு நானறிய குழல்வாய்க்ரையகொள்ளக கொடுத்தோமேயின்றி பகைத்தால் எதிர்த்த மன்னர்தான் கைப்பால் சேதுக்கரைதனிலே சென்றவர் மீண்டதில்லை. வாளுக்கிரையிட மறவன் வலுக்காரன் துப்பாக்கி மெத்த உண்டாத் தோலா மறவனுக்குத் தன்னரசு நாடுதனிக் கோட்டையாளுவானாம் மதுரைப்படை என்றால் மதியான் மறவனும்தான் என்றஇராமப்பய்யன் அம்மானையில் கூறப்பட்டுள்ள

செய்தி தன்னரசு, தன்னாடு, தனிக்கோட்டை என குறிப்பிட்ட செய்திகள் அவன் கப்பம் கட்ட மறுத்து சுதந்திர நாடாக பிரகடனப்படுத்தியதை தெரிவிக்கிறது"[232].

புதினத்திலும் கப்பம்கட்ட மறுத்தது மட்டுமல்லாமல் இரு நாடுகளுக்கும் சுமுகமான உறவு ஏற்படவே கங்கை நாச்சியைப் பெண் கேட்டுச் செல்வது என்ற நிகழ்வு காட்டப்படுகின்றது.

"மறவன் உயிருக்கு அஞ்சான். கேவலம் இந்த இரண்டு உயிர்களைப் பறிக்கலாம். மறவர் தேசம் திரண்டு வருமானால் மதுரையில் கோயில் மட்டும்தான் மிஞ்சும்"[233]

என்று புதினத்தில் இடம்பெறும் வரிகள் மறவர்களது வீரத்தையும் அவர்களது தாய்நாட்டுப்பற்றையும் விளக்குவதாக அமைகிறது.

இப்போரில் துப்பாக்கிகள் பயன்படுத்தியதும் தெரியவருகிறது. புதினத்தில் போர் வருணனையில் இச் செய்திகள் இடம் பெறுகிறது.

"கொண்டையன் கோட்டைத் தலைவரும்
செப்பிநாட்டுத் தலைவரும்
மங்கல நாட்டுத் தலைவரும் வந்து கலந்து
கொண்டனர்"[234]

என்ற புதினத்தில் காட்டப்படும் செய்தியானது வரலாற்றுச் செய்தியாகும்.

புதுக்கோட்டை, போகனூர் கோட்டை, இளையன்குடி கோட்டை, அரியணிபுரக்கோட்டை, அந்திப்புத்தக் கோட்டை ஆகியவை போரில் இடம்பெற் இடங்கள்.

"புதுக்குடி, அரியாண்டிபுரம், இளையான்குடி, அத்தியூத்து, போகலூர், முகவை, . . . . . . . கோட்டைகள் அழிந்தன. போர் இராமேஸ்வரத்துக்கு மாறியது. பாம்பன் பாலம்

அமைக்கப்பட்டது பாம்பன்கோட்டை பிடிபட்டவுன், போர் ராமேசுரக்கடலிலும் நடந்தது”[235].

திருமலைநாயக்கருக்கு போர்த்துக்கீசியரும், மறவருக்கு டச்சுக்காரர்களும் உதவினர். விருப்பாச்சி நாயக்கன், காமாட்சி நாயக்கன், தொண்டம நாயக்கன், செங்கமல நாயக்கன் போகலூர் போரில் வீர சொர்க்கம் அடைந்தனர்.

திருமலை நாயக்கரின் முழுப்பெயரானது திருமலை சவுரி நாயுடு அயிலுனுகாரு என்பதாகும். திருமலை நாயக்கர் யானையிலிருந்து குதிரைமீதும் குதிரையிலிருந்து யானை மீதும் பாய்ந்து ஏறக்கூடியவர். “நெடிய உருவம், பருத்த உடல், சரிந்த தொந்தி, திரண்ட தோள்கள், எடுப்பான மூக்கு, அடர்த்தியான முறுக்கு மீசை உடைய உருவத்தவராக விளங்கினார்”[236]. “ராமப்பய்யன் பிறப்பில் பிராமணனேபொழிய நடப்பில் அரக்கன் என்பர்”[237]. போரில் சூது பல நிகழ்த்தியே மறவரை அழித்தான். ராமப்பய்யன் புத்தராட்சதன்.

“சடையக்கத்தேவர் சிறியதாய் இருந்த ராமேஸ்வரம் கோயிலை பெரியதாக விஸ்தரித்து புனருத்தாரணம் செய்த பெருமைக்கு ஆளானர்”[238]. மறவர்கள் பயன்படுத்தும் ஆயுதங்களில் முக்கியமானது வளைதடி என்ற ஆயுதம். மறவர்க்கே உரிய வளைதடி என வரலாற்றில் குறிக்கப்படுகிறது.

சேதுநாட்டார்க்கு ஆஞ்சநேயர் கொடி உரித்தானது. சடையக்கத் தேவரின் (மைத்துனரான) தங்கையின் கணவர் வன்னியத் தேவன் பெரும் வீரன். இவரே முக்கியமான போர்களில் எல்லாம் பங்கெடுத்து வெற்றிதேடித் தந்தவர். இவருடைய மகனே இரகுநாதசேதுபதி. சடையக்கத்தேவர் சுவீகாரம் எடுத்துக்கொண்ட மகனாவார்.

இவர் சடையக்கத் தேவருக்குப் பிறகு அரியணையேறினார். திருமலை மன்னருக்கு உரவியாக மைசூர்காரர்களை அடக்கி அவரால் திருமலை சேதுபதி என்ற பட்டத்தையும் பெற்றார் என வரலாறு கூறுகிறது. இரகுநாத சேதுபதி மைசூர் மன்னனுடன் செய்த போரே மூக்கறுப்புப்போர்.

“திருமலை நாயக்கர் சேதுபதிக்கு பல சலுகைகள் அளித்தார். நவராத்திரி விழா கொண்டாட உரிமை வழங்கினார். ராமேஸ்வர திருப்பணிகள் புரிந்ததால் அவருக்கு சேதுகாவலன் என்ற பட்டத்தை அளித்தார்”[239] என வரலாறு கூறுகிறது.

**வேங்கைவனம் புதினத்தில் வரலாற்றுச் செய்திகள்**

வேங்கைவனம் என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுச் செய்திகளை இலக்கியங்கள் மூலமாக மட்டுமே அறிந்து கொள்ள முடிகிறது. கற்பனை நயம் ததும்பும் இந்த நாவல் வரலாற்று ஆதாரங்களைக் கொண்டு பின்னப்பட்டிருக்கிறது. கானப்பேரெயில் என்பது இன்றைய காளையார் கோயிலாகும் வரலாற்றுப் பாத்திரங்களாக கானப்பேரெயில் மன்னன் வேங்கை மார்பன், பாண்டிய மன்னர் உக்கிரப்பெருவழுதி, புலவர் மாங்குடி மருதனார் மட்டுமே புதினத்தில் இடம் பெறுகின்றனர்.

பாண்டியன் உக்கிரப்பெருவழுதி கானப்பேரெயிலை அழித்தமையும் அந்த பலம் வாய்ந்த கோட்டையை இழந்த வேங்கை மார்பன் துன்பப்பட்டதையும் புறநானூறு விளக்குகிறது. “கானப்பேரெயில் பற்றியும் அதனை வேங்கை மார்பன் ஆண்டது பற்றியும், காவற்காடு, காவல் சிற்றூர்கள், ஆழ்ந்த அகழி, உயர்ந்த மதில் . . . . . . ஆகியவற்றை பறிகொடுத்துவிட்டு வேங்கைமார்பன் ஓலமிட்டு வருந்தியது”[240] பற்றியும் சங்கப்பாடல்களில் தெளிவான செய்திகள் உள்ளன. பாண்டியர் உக்கிரப் பெருவழுதிக்கு இந்த வெற்றி இவரது வரலாற்றில் சிறப்புடையதாக விளங்கவே “இவர் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி”[241] என சிறப்பித்துக் கூறப்பட்டார் என புறநானூற்றுப் பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

வேங்கைமார்பனது கோட்டை பற்றிய செய்திகளைப் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம். “பாதாளத்தையே எட்டிப்பார்க்கிற ஆழம் நிறைந்த அகழி, அதற்கடுத்து வானத்தை முட்டி நிற்கும் பேரெயில்கள் (பெருமதில்கள்) அவற்றின் சூட்டுக்களான கொத்தளங்கள் நட்சத்திரங்களை உவமைகூறும் அளவுக்கு உயர்ந்தனவாயிற்றே. ஒளியே நுழைய முடியாத அளவுக்கு கோட்டையைச் சுற்றிலும்

அடர்ந்த காவற்காடுகள் அந்தப் பெரிய அரணில் சின்ன சின்ன அரண்கள், மதில்களில் பல்வேறுபட்ட ஆயுதப் பொதிகள்”[242] என புறநானூற்றுப் பாடலில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

கதைக்களம் மூன்றாம் சங்ககாலம் என்பதால் தொல்காப்பியம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. “சொல்லதிகார வினையியலில், உயர்தினை பன்மைக்குறியனவாக, அம், ஆம், எம், ஏம், கும், டும், தும், நும் என்றும் கிளவியும் எட்டு விகுதிகளையும் இறுதியாக உடைய வினைச் சொற்கள் உயர்திணை பன்மை உணர்த்தும் தன்மைச் சொற்கள்”[243] என கூறப்பட்டுள்ளது.

“இதனை அம், ஆம், எம், ஏம் என்றும் கிளவியும்

. . . . . . . . . . . . . . .

. . . . . . . . .

பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே என”[244]

தொல்காப்பிய நூற்பா விளக்குகிறது.

பொருளியலில் காதல் அவத்தைகள் ஆறுபற்றிய விளக்கம் புதினத்தில் திருமேனி கூறுவதாக எடுத்தாளப்பட்டுள்ள தொல்காப்பிய கருத்துக்கள் ஆகும்.

“முதலாவது அவத்தை,

| | | |
|---|---|---|
| புகுமுகம் புரிதல் | – | ஒருவரையொருவர் எதிர்பட்டமுதற்காட்சி |
| பொறிநுதல் வியர்த்தல் | – | வியர்வை அரும்பிய நெற்றி |
| நகு நய மறத்தல் | – | விருப்பம் வெளியே தெரியாதபடி மறைத்தல் |
| சிதைவு பிறக்கின்மை | – | புறத்தார்க்கு புலனாகாதவாறு நெஞ்சினை நிறுத்த முயலுதல்”[245] |

மதுரைக் காஞ்சி யாத்த மாங்குடி மருதனாரே பாண்டியனின் அவைப்புலவர். உக்கிரப்பெருவழுதி தலையாலங்கானத்து செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனுக்கு மகனாவார் என்று கருதப்படுகிறது. இவர்கள் வாழ்ந்த காலம் கடைச் சங்க காலமாகும்.

“இவன் சங்கப் புலவர்களோடு ஒப்பப்பாடும் ஆற்றலுடை பெரும் புலவனாக விளங்கியமை ஈண்டு உணரத்தக்கது. . . . . இவன் தலைமையிலேதான் கடைச்சங்கத்தில் திருக்குறள் அரங்கேற்றப்பட்டது. இவன் குறிஞ்சியையும், மருதத்தையும் புனைநது பாடுவதில் வன்மையுடையவன். இவன் பாடியதாக நற்றிணை (98) பாடலும், அக நானூற்றில் (26) ஒரு பாடலும் உள்ளன”[246] இது புதினத்திலும் காட்டப்பட்டுள்ளது.

புதினத்தில் தொல்காப்பியம் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. புதினத்தில் கதைத்தலைவி திருமேனி மாங்குடி மருதனாரின் மாணவி. உக்கிரப் பெருவழுதியின் மகள். மூன்றாம் சங்கத்திற்கு தலைவியாக விருப்பம் கொண்டவள் என்ற விடத்து அவளை புலவர்கள் சோதிக்கும்போது தொல்காப்பிய கருத்துக்கள் இடம் பெறுகின்றன.

எழுத்ததிகாரத்தில் ஓகார ஈறு. . . . . ஓகார இறுதி ஏகார இயற்றே. இது அவ்வழி ஓகார ஈற்று இடைச்சொல்லால் மான் கொள் எச்சமும் வினாவும் ஐயமும் கூறிய வல்லெழுத்து இயற்கையாகும் என எழுத்ததிகாரம் பற்றி கூறப்பட்டுள்ளது.

இரண்டாவது அவத்தை,

“கூழை விரித்தல்காதொன்று களைதல் ஊழனிதைவரல்
உடை யெர்த் தெடுத்தல்”[247]

என்பதாகும்.

கூழை விரித்தல் என்பது கூந்தல் நெகிழ்தல், காதொன்று களைதல் என்பது காதணி அவிழ்ந்து விழல், ஊழனிதைவரல் என்பது கைவளை, மோதிரம் ஆகியவை அவிழ்ந்து விழாமல் இறுக்குதல், உடைபெயர்த்தெடுத்தல் என்பது பலமுறை உடையை இறுக்க உடுத்துதல் ஆகும்.

மூன்றாவது அவத்தை,

“அல்குல்தைவரல் அணிந்தவை திருத்தல் இல்வலியுறுத்தல்
இருகையும் எடுத்தல்”[248] என்பதாகும்.

அல்குல்தைவரல் என்பது உடை நெகிழ்தலால் அற்றம் மறைத்தல் அணிந்தவை திருத்தல் என்பது இடை அணிகலன்களை நெகிழாமல் திருத்துதல், இல்வலியுறுத்தல் என்பது இல்லாத வன்மையை மிகுத்தல், இருகையும் எடுத்தல் என்பது தலைவனை முயங்கும் விருப்பத்தால் தாமே எழுதல் ஆகும்.

நான்காவது அவத்தை,

"பாராட்டுதல் மடந்தபவுரைத்ல் ஈரமில்கூற்றம் ஏற்றலர்நானல்
கொடுப்பவை கோடல் என்பதாகும்"[249].

பாராட்டுதல் என்பது தலைமகனது பெருமையை பாராட்டுதல் மடந்தபவுரைத்தல் என்பது மடமை நீங்க உரைத்தல் ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்பது புறத்தார்க்கு புலனாகுமோ என நாணுதல் கொடுப்பவை கோடல் என்பது அன்பினால் கொடுத்தகையுறைப் பொருள்களை ஏற்றுக் கொள்ளுதல் ஆகும்.

ஐந்தாவது அவத்தை,

"தெரிந்துடம்படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி உவத்தல்"[250] என்பதாகும்.

தெரிந்துடம்படுதல் என்பது செவிலிக்கும் தோழிக்கும் உடம்படுதல், திளைப்பு வினைமறுத்தல் என்பது நானம் காரணமாக மறுத்தல், கரந்திடத் தொழிதல் என்பது அவன்முன் எதிர்ப்படாது மறைந்து ஒழுகுதல், கண்டவழி உவத்தல் என்பது எதிர்பாரா நிலையில் காணல் ஆகும்.

ஆறாவது அவத்தை,

"புறஞ்செய சிதைதல் புலம்பித் தோன்றல் கலங்கி மொழிதல்
கையறவுரைத்தல்"[251] என்பதாகும்

புறஞ்செய சிதைதல் என்பது நெஞ்சழிந்து சோர்தல், புலம்பித் தோன்றல் என்பது தான் தனியாள் என புலம்புதல், கலங்கி மொழிதல் என்பது மனம் தடுமாற்றம் தோன்றச்

செய்தல், கையறவு உரைத்தல் என்பது தனது செயலற்ற தன்மையை உரைத்தலாகும் என இக்கருத்துக்கள் புதினத்தில் எடுத்தாளப்பட்டுள்ளன. கானப் பேரெயில் தலைவன் வேங்கை மார்பனும், பாணடியன் உக்கிரப் பெருவழுதியின் மகன் திருமேனியும் ஒருவரையொருவர் காணாமலே காதல் கொள்கின்றனர். விதி வசத்தால் இருவரும் சந்திக்கும்போது இன்னாரென்று அறியாமல் தம்மை மறைத்து பொய்யுரைக்கின்றனர். இதுவே கதையின் கருவாக தொடர்ந்து கானப் பேரெயிலை உச்சிரப் பெருவழுதி அழித்தமைக்குக் காரணமாகப் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

தமிழ் மகனான வேங்கை மார்பன் தமிழின் மேல் சத்தியம் வைத்து திருமேனியை மணந்தே தீருவதாக சூளுரைத்துச் செல்கிறான்.

> "நான் பண்பான பாண்டிய குலத்தில் பிறந்தவன் நீ சங்கம் வைத்துத் தமிழை வளர்க்கலாம். ஆனால் நான் என்னை வைத்தே தமிழை வளர்ப்பவன். நான் உன்னை அடையவில்லை என்றால் . . . நான் தமிழனல்ல எனது மொழி தமிழல்ல. நான் தமிழ் வீரனல்ல ஏன்? நான் தமிழனுக்கே பிறந்தவனல்ல"[252]

என சபதம் செய்து செல்லுவது தமிழ்பற்றையும், தாய்மொழி தமிழ் மீது அவன் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியையும் விளக்குவதாக அமைந்துள்ளது. கதைத்தலைவியை ஆசிரியர் தமிழாகவே போற்றுகிறார். அஃறிணைப் பாசம் அதாவது வேங்கை மார்பன் வளர்க்கும் இரண்டு வேங்கைகளைப் பற்றி அன்பு அழகாக விளக்கப்படுகிறது. எனவே வேங்கை வனம் என்ற புதினத்தின் பெயர் பொருத்தமாக அமைந்துள்ளது.

தமிழனுக்கு வீரமும் காதலும் இரண்டு கண்களைப் போன்றவை. இந்நாவல் முழுவதும் வீரமும் காதலுமே பேசப்படுகின்றன.

காளையார் கோயில் ஈசனின் தங்கத்தை எடுத்து அதில் காதலி திருமேனியின் சிலை செய்து அதற்கு மங்கல நாண் அணிவித்து மணம்புரிந்து கொண்டான் என்ற

செய்தி காலம் பல நூற்றாண்டுகளைக் கடந்து இன்னும் வானளாவ உயர்ந்து நிற்கும் காளையார் கோயிலை நம் கண்முன் காட்டுகிறது.

மேலும் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்ட ஆயுதங்களில் கல்கவணையும் ஒன்று. அதைப்பற்றிய விளக்கம் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

“நீண்ட வண்டியில் வரிசையாக பெரிய பெரிய இரும்பு அகப்பைகள் இருக்கும். ஒவ்வொரு அகப்பையிலும் கல்லுருண்டைகளை வைத்து ஸ்பிரிங் முறையிலான பகுதியைத் தட்டிவிட்டால் கீழிலிருந்து அகப்பைகள் மேலெழுந்து சாய கல்லுருண்டைகள் தொலைதூரம் வரை பாயும். இடைக்காலத்து பீரங்கியைப் போன்றது”[253] என விளக்கப்பட்டுள்ளது.

**குற்றாலக் குறிஞ்சி**

இப்புதினத்தில் கூறப்படும் வரலாற்றுக் குறிப்புகளையும், வரலாற்று மாந்தர்களைப்பற்றியும் இலக்கியங்கள், வாழ்க்கை குறிப்புகள், கல்வெட்டுக்கள் மூலம் அறிய வாய்ப்புள்ளது.

சரபோஜி மன்னரே கதைத்தலைவன். புதினத்தின் நாயகன். இணைக் கதைத் தலைவனாக ராஜகாந்தி இடம் பெறுகிறான். கதைத் தலைவி குறிஞ்சி. புதினம் முழுமையும் இசையைப் பற்றியதாகவே அமைந்துள்ளது. இசை மேதைகள் பலர் புதினத்தில் கதையின் போக்கில் இடம் பெறுகிறார்கள். சியாமா சாஸ்த்திரிகள், முத்துஸ்ஸாமி தீட்சர், தியாகராஜ சவாமிகள், சுவாதித் திருநாள், பல்லவி கோபாலய்யா, கோபாலை கிருஷ்ண பாரதி ஆகியோர் இடம் பெறுகின்றனர். அவர்களது வாழ்க்கை குறிப்புகளும் புதினத்தில் கதையின் போக்கில் இடம் பெறுகின்றது. ஒவ்வொரு அத்தியாயமும் ராகத்தின் பெயருடனேயே தொடங்குகிறது.

இசையைப் பற்றிய கருத்துக்களே புதினம் முழுமையும் இடம் பெறுகின்றன. சரபோஜி இசையார்வம் மிக்க மன்னர் மட்டுமல்ல இசை மேதையும் கூட என்பதை உணர புதினம் வழி வகுக்கிறது. சியாமா சாஸ்த்திரிகள் வாழ்ந்த காலம் இப்புதினத்தில்

குறிப்பிடும் காலமே சரபோஜி மற்றைய இசை மேதைகளில் சமகாலத்தவர்களாக புதினத்தில் காட்டப்படுகிறார்கள். அது உண்மையும் கூட. சியாமா சாஸ்த்திரிகளின் சொத்து எனச் சொல்லப்படுவது ஆனந்த பைரவிராகம். இது இவருக்கு பிடித்த ராகமாகும். இவர் 1762-ம் ஆண்டு திருவாரூரில் பிறந்துள்ளார். இயற்பெயர் வெங்கட சுப்பிரமணியன். செல்லப் பெயர் சியாமா கிருஷ்ணா என்பதாகும். இவருடைய பாடல்கள் சமஸ்கிருதம், தெலுங்கு ஆகிய மொழிகளில் பாடப் பெற்றவை. இவர் தனது பதினெட்டாவது வயதில் திருவாரூரிலிருந்து தஞ்சைக்கு வருகிறார். பங்காரு காமாட்சி பூஜை இவர்களது குடும்பத்தைச் சார்ந்தது. இவரது குரு இவரது மாமா ஆவார். இவரால் சதுர்மாஸ்யம் சங்கீதம் கற்பிக்கப்பட்டார். மேலும் இசை பற்றிய ஒரு அரிய நூற் சுவடியை அவருக்கு அளித்துச் சென்றார். மேலும் இவர் பச்சிமீரியம் ஆதிப்பய்யரிடமும் இசை பயின்றார்.

"பங்காரு காமாட்சி அம்மனின் ஆலயத்தில் சந்நிதியில் தியானம் செய்யும்போது கண்களிலிருந்து கண்ணீர் வழியும். அப்போது கீர்த்தனைகள் வெளிவரும்"[254]. அவர் புதுக்கோட்டை சென்றபோது மீனாட்சியின் மீத நவரத்தின மாலிகை கிருதிகளை பாடினர். இவருடைய சீடர்கள் சுப்பராய சாஸ்த்திரி, தரங்கம்பாடி பஞ்சநாதய்யர், அலசூர் கிருஷ்ணன் ஆகியோர் தமது அறுபத்தைந்தாவது வயதில் 1827-ம் ஆண்டு பிப்ரவரி 6-ம் தேதி இயற்கை எய்தினார்.

புதினத்தில் காட்டப்படும் மற்றொரு இசைமேதை சுவாதித் திருநாள். இவர் கேரளாவில் திருவனந்தபுரத்தில் 1813-ம் ஆண்டு ஏப்ரல் 16-ம் நாள் பிறந்தார். இவர் ஆங்கிலம், சமஸ்கிருதம், ஹிந்துஸ்தாநி, தெலுங்கு, மராத்தி, கன்னடம், தமிழ் ஆகிய பன் மொழிகளில் வல்லவர்.

தஞ்சை சகோதரர்கள் சின்னையா, பொன்னையா, சிவானந்தம் பிள்ளை, வடிவேல் ஹரிகதை விற்பனர், மேருசுவாமி முதலியோர் சுவாதித் திருநாள் மகாராஜாவின் அரண்மனையை அணி செய்தவர்கள். "இவர் பாவயாமி ரகுராமம்

என்னும் ராமாயணப்பாடலை சாவேரி ராகத்தில் இயற்றி பாடியுள்ளார். இதனையே செம்மங்குடி சீனிவாச அய்யர் ஆறு ராகங்களில் ராகமாலிகையாகப் பாடியுள்ளார்"[255].

இவரது பாடல்களில் காணப்படும் முத்திரைகள் பத்மநாபா, பங்கஜநாபா, சரஸிஜ நாபா, சரசிருஹ நாபா, கஞ்சநாபா, ஜலஜநாபா என்பவையாகும்.

**தியாகராஜ சுவாமிகள்**

இவர் புதினத்தில் கதாபாத்திரமாகவே செயல்படுகிறார். 1767-ம் ஆண்டு மே மாதம் 4-ம் நாள் பிறந்தார். இவரது தந்தை ராமப்பிரும்மம். பாட்டனார் கிரிராஜகவி. இவரது குரு சொன்டி வெங்கடராமணய்யா. இவரது குருவுக்காக பாடிய பாடலே தொரகுணா இடிவண்டி சேவர் என்ற பலகரிராக கீர்த்தனை. "ஒருநாள் இசை மேடையில் இரவு எட்டு மணியிலிருந்து பத்துமணிவரை பாட வேண்டியவர் காம்போதி ராகத்தை மறுநாள் காலை ஐந்து மணி வரை பாடினார்"[256]. இதையறிந்த சரபோஜி மன்னர் அவரை அரசவைக்கு பாட அழைக்கவே அவர் பணத்துக்காக பாட மறுத்துவிட்டார். அப்போது பாடிய பாட்டே "நிதிசால சுகமா என்ற கிருதி" ஆகும். அரசரின் ஆட்களோ அவருக்கு இன்னல்பல விளைவித்தனர். அதனால் "சரபோஜி வயிற்றுவலியால் துடித்தார். இறைவனைத்தவிர ராமபிரானைத்தவிர மானிடரை பாட மறுத்த தியாகய்யரிடம் சரபோஜி மன்னர் மன்னிப்புக் கேட்கவே அவரது வயிற்று வலி சுகமாகியது"[257] என்பது வரலாற்றுச் செய்தியாகும். ஹரிதாஸ் என்ற சுவாமிகள் அவாடம் ராம நாமத்தை 96 கோடி முறை ஜபிக்கச் சொல்ல அவ்வண்ணமே செய்த அவர் முன்பு ராமர் பட்டாபிஷேக காட்சியுடன் காட்சியளித்தார் என்பதும் குறிப்பிடத்தகுந்தது. 1847-ம் ஆண்டு அவர் இறைவனடி சேர்ந்தார்.

**முத்துசுவாமி தீட்சதர்**

புதினத்தில் இவர் கதைப்பாத்திரமாகவே செயல்படுகிறார். குறிஞ்சியின் குரு இவரே. குறிஞ்சியின் வளர்ப்புத் தந்தை அவளை இவரிடமே ஒப்படைக்கிறார் இசை பயில. தாழ்ந்த குலத்தைச் சார்ந்த குறிஞ்சியோ வீட்டு வேலைகளை செய்து கொண்டு

குரு மற்ற மாணவர்களுக்கு சொல்லிக் கொடுக்கும் இசையையும் பயிலுகிறாள். தீட்சதருக்கு இரு மனைவியர். இவர் 1776-ம் ஆண்டு மார்ச் மாதம் 29-ம் தேதி பிறந்தார். இவரது தந்தை இராமசாமி தீட்சதர். இவருக்கு மூன்று மகன்கள். முதலாமவரே முத்துசுவாமி தீட்சதர், இரண்டாமவர் பாலுசாமி, மூன்றாமவர் சின்னசாமி ஆவார். இவர் சிதம்பரநாத யோகியின் சீடனாகி காசிக்குச் சென்றார். "இவருக்கு திருத்தணி முருகன் கனவில் தோன்றி வாயில் கற்கண்டு போட்டு மறைந்தார். அன்றிலிருந்து கிருதிகள் செய்யும் வல்லமையைப் பெற்றார். இவரது முத்திரை குரகுஹா என்பதாகும்"[258].

ஒருமுறை எட்டயபுரம் செல்லும் வழியில் குடிப்பதற்கு நீர் கிடைக்காத அளவுக்கு வறட்சி. "அவ்வமயம் தீட்சதர் ஆனந்தாம்ருத வர்ஷினி ராகத்தில் பாட மழை கொட்டோ கொட்டு என்று கொட்டியது"[259]. இவரது சீடர்கள் மிருதங்கம் தம்பியப்பா, சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு, திருக்கடையுர் பாரதி ஆகியோர். புதினத்தில் ஞானசுந்தரமும் குறிஞ்சியும் தவிர உண்மையாக வாழ்ந்த சிலர் சீடர்களாகக் காட்டப்படுகின்றனர்.

இவரது மூத்த மனைவி சாதி பேதம் பார்ப்பவள். இரண்டாம் மனைவி தாழ்ந்த குலத்தைச் சார்ந்த குறிஞ்சியை தன் மகளைப் போல பாவிப்பவள். தீட்சதரும் குறிஞ்சியைத் தன் மகளாகவே பாவிப்பவர்.

அவர் வாழ்க்கையில் கஷ்டப்படுகிறார் எனக் கேள்விப்பட்டு ஞானசுந்தரத்தை இழந்த குறிஞ்சி அந்நிலையிலும் குருநாதனைக் காணச்சென்று கனகாபிஷேகம் செய்கிறாள். பாடல்களில் இவரது முத்திரை குருகுஹா என்பதாகும்.

புதினத்தில் மற்றுமொரு கதாப்பாத்திரமான கோபாலகிருஷ்ணபாரதி. இவரது தந்தை இராமசாமி பாரதி வீணை விற்பனர் ஆவார். 1810-ம் ஆண்டு இவர் பிறந்தார். இவரது குரு கோவிந்தசிவம் என்பவர். ஹந்துஸ்தானியைக் கற்றுக் கொடுத்த குரு இராமதாஸ் ஆவார். இவர் நந்தனார் சரித்திரம் என்னும் இசை நாடகத்தை எழுதினார். இவர் தியாகராஜரின் நன்மதிப்பைப் பெற்றவர். "தியாகராஜரின் சீடர்கள் ஒருமுறை

ஆபோகி ராகக் கிருதியைப் பாடிக் கொண்டிருந்தனர். இதைக்கேட்டு மகிழ்ந்த கோபால கிருஷ்ணபாரதி தியாகராஜரின் தூண்டுதலால் அதே ராகத்தில் சபாபதிக்கு வேறு தெய்வம் சமானமாகுமா? என்ற அருமையான கிருதியை இயற்றினார்"[260]. தமிழிசைக்கு ஏற்றம் கொடுத்தவர். தியாகராஜரின் பஞ்சரத்ன கீர்த்தனைகள் போலவே இயற்றியுள்ளார். "ஹரஹர சிவசங்கர (நாட்டை) சரணாகதமென்று (கௌளை), பிறவாவாவரம் தாரும் (ஆரபி) ஆடியபாதமே கதி (வராளி) மறவாமல் எப்படியும் (ஸ்ரீராகம்) ஆகியன அவர் இயற்றிய பஞ்சரத்ன கீர்த்தனைகள்"[261] ஆகும். டாக்டர் உ.வே.சாமிநாத அய்யர் கோபால கிருஷ்ணபாரதியிடம் இசை பயிலும் பேறு பெற்றவர். மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்களும் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களும் இவரது நெருங்கிய நண்பர்கள். ஒருமுறை இராமலிங்க அடிகளாரும் இவரது நந்தனார் சரித்திரம் கேட்டு இவரை மிகவும் பாராட்டினார்.

மேலும் இயற்பகை நாயனார் சரித்திரம், காரைக்கால் அம்மையார் சரித்திரம், திருநீலகண்ட நாயனார் சரித்திரம் ஆகிய இசை நாடகங்களை இயற்றியுள்ளார். ஞானசிந்து, ஞானக்கும்மி ஆகியவையும் இவரது படைப்புகள். இவரது முத்திரை கோபால கிருஷ்ணா, பாலகிருஷ்ணா என்பவையாகும். 1896-ம் ஆண்டு மகா சிவராத்திரி அன்று இறைவனடி சேர்ந்தார்.

இவரைப்போலவே அபிராமிபட்டரும் சமகாலத்தவரே. புதினத்தில் இவரும் ஒரு பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளார். குறிஞ்சி ஒருமுறை அவருக்காக தில்லையம்பதி வாசலில் பாட மழை பெய்து அதிசயிக்க வைத்தது. "அவளிடம் பட்டர் அவள் பாடியது மேகராகக் குறிஞ்சியோ"[262] எனக் கேட்க அதற்கு அவள் விளக்கம் தருவதாக புதினத்தில் காட்டப்படுகிறது. "அமிர்த வர்ஷினி ராகமே மேகராகக் குறிஞ்சி"[263] என்பது என விளக்கப்படுகிறது. அதேபோல முல்லையப்பன் மோகனராகம் என்பதும் விளக்கப்படுகின்றது.

புதினத்தில் புதுக்கோட்டை மன்னர் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்து குறிஞ்சிக்கு கனகாபிஷேகம் செய்தது இசையை மேலாகக் கொண்ட காலக்கட்டம் அது

என்பதை உணர வைக்கிறது. புதினத்தில் இடம் பெற்றுள்ள ராகங்கள் ஒவ்வொரு இயலும் ஒரு ராகத்தின் பெயரைக் கொண்டுள்ளது. அவை பூபாளம், சுத்ததன்யாசி, ராஜகாந்தி, சந்திரசேகரப்பிரியா, பைரவி, குறிஞ்சி, கோகிலானந்தி, தன்யாசி, முக்தாம்பரி, சூத்ரதாரி, ராஜாளி, போகலீலா, நாட்டைக்குறிஞ்சி, தபஸ்வின், நீலி, மேகராகக் குறிஞ்சி, மலையமாருதம், ஆரபி, ஆபோகி, நந்தினி, பாரதி, தர்பார், சல்லாபம், போகவதி தாண்டவம், அக்கினிக் கோபம், முகாரி, கமலம், மாஞ்சி, தோடி, விலாசி, குற்றாலக் குறிஞ்சி ஆகியன. இவைதவிர ஒவ்வொரு இயலிலும் புதினத்தின் போக்கில் ஜன்யராகங்களும் ஜனகராகங்கள் பல இடம் பெறுகின்றன. அவை கதையோடு ஒன்றி எடுத்துக்காட்டுக்கள் போலவும் அமைந்துள்ளன.

பெயரளவில் மட்டுமல்லாது சிறு விளக்கங்களுடனும் அமைந்துள்ள ராகங்கள் நாட்டைக் குறிஞ்சி, தன்யாசி, சுத்ததன்யாசி, கரகரபிரியா, புன்னகவராளி, வருணாபரணம்,அடானா, சங்கராபரணம், சித்தரஞ்சனி, முகாரி, மாயாமாவை கௌளை, சண்முகபிரியா, புவன காந்தாரி, ஓம்காரி, சுவர்ணாங்கி, சாமா, கல்யாணி, சூரியகாந்தி, ஸ்ரீராகம், தோடி, சூத்ரதாரி, சரசாங்கி, கீரவாணி, நாடகப்ரியா, தேவகாந்தாரி, சரசாங்கி, ஹம்சத்வனி, ஹரிகாம்போதி, ஹேமவதி, அமிர்தவர்ஷினி, அமிர்த வாகினி, மேகராகம், மேகரஞ்சனி, வருணபிரியா, நீலாம்பரி, ஆபோகி, நந்தினி, சகானா, கானடா, காம்போதி, வகுளாபரணம், கமல மநோகரி, பாரதி, ரீதி கௌளை, கனகாங்கி, காமவர்த்தினி, மாமாமளவை கௌளை, ஹிந்தோலிம், ரேவதி, மத்தியமாவதி, முகாரி, சுருட்டி, நடபைரவி, வாசஸ்பதி ஆகியவை.

தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்களுள் தலைசிறந்தவரும் கதைத்தலைவரும் ஆகிய இரண்டாம் சரபோஜி மன்னர் தாய்மொழி மராட்டியுடன் சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, உருது போன்ற மொழிகளை மட்டுமல்லாமல் மேலைநாட்டு மொழிகளான ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், கிரீக்கு, லத்தின் ஆகிய மொழிகளை அறிந்தவர். இவரை சர்வதேச பாஷா பாரங்கர் என்று சொல்வது பொருத்தமானது.

இவரது இளமையில் ரெவரண்ட் சுவாட்ஸ் பாதிரியாரிடமும் ரெவரண்ட் கெரிக் பாதிரியாரும் கல்வி பயின்றவர் ஆதலின் மேலைநாட்டு மொழிகள் கலைகள் ஆகியவற்றில் பெருவிருப்பம் உடையவர். ஆகவே எல்லாத்துறையைச் சேர்ந்த எல்லா மொழிநூல்களையும் சேகரித்தவர். சரஸ்வதி மகாலை உருவாக்கி உலகிலேயே சிறந்த நூலகம் அது என்ற போற்றுதற்குரிய பணியையும் செய்தவர். இசைமீது அதிகம் நாட்டம் கொண்டவர். மனிதருக்கு மட்டுமல்லாது விலங்குகளுக்கும் மருத்துவம் செய்ய பல நூல்களை தாய்மொழியிலும், தமிழிலும் மொழி பெயர்த்துள்ளார். இவர் இசைமீது தீராக்காதல் கொண்டவர் என்பதை புதினத்தின் வாயிலாகவும் அறியமுடிகிறது. கதைத்தலைவி குறிஞ்சியை அந்த இசை மேதையை தன்முன் பாட வைக்க வேண்டும் என்பதே அவருடைய நோக்கமாக இருந்தது.

இவர் சங்கீதம், பக்தி மார்க்கம் பற்றிய பல நூல்களை இசைத்ததோடல்லாமல் மேனாட்டு கோஷ்டி வாத்திய (Orchestra) சங்கத்துக்கு ஏற்ப தமிழ், தெலுங்கு, மராத்தி ஆகிய மொழிகளில் இசையமைத்துள்ளார். அவருடைய சங்கீத வாத்யங்கள் நம் நாட்டினாரால் மட்டுமல்லாது ஐரோப்பியர்களாலும் போற்றப்பட்டு வந்தன. “லார்ட் வாலன் ஷியா அவரது ‘Memories of Indian Travelist’ என்னும் நூலில் சரபோஜியின் சங்கீத வாத்தியங்களைப் பற்றிப் பாராட்டியுள்ளார்”[264].

திருவாங்கூர் மன்னர் சுவாதித்திருநாள் சமகாலத்தவரும் இசை மேதையுமானவரும் கூட. இவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் இசை பற்றி பரிமாறிக் கொள்வதும் உண்டு. இவரின் ஆஸ்தான இசை மேதைகள் பொன்னையா, சின்னையா ஆகியோர் திருவாங்கூர் சமஸ்தானத்திலும் சுவாதித்திருநாள் அவையையும் அலங்கரித்தனர். இச்செய்தியும் புதினத்திலும் கூறப்படுகிறது. தென்னாட்டில் ஓர் மகானாகக் கருதப்படும் ஸ்ரீதியாகராஜசுவாமி அவர்களிடம் சரபோஜி மிகுந்த அன்பும் பக்தியும் உடையவர்.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் மன்னன் சரபோஜி. பிரஜைகளின் நலனையே பெரிதும் போற்றியவர். கதையின் போக்கில் காட்டப்படும் ராஜாளிப் பறவையைப் பற்றிய செய்தி மெய்மைத் தன்மை உடையது.

“அரசரின் மனதை நன்கு அறிந்திருந்த புஜங்கராஜ் ஹரிராவ் உதயகிரி நவாபிடமிருந்து 1233 ரூபாய்க்கு வேட்டைப்பறவையாகிய ராஜாளியை விலைக்கு வாங்கி வந்தார். பாஜநாமா, யூஜநாமா என்ற பறவைகளின் பாஷையைப் பற்றிய புத்தகத்தையும் உருதுமொழியிலிருந்து மராட்டிய மொழியில் மொழி பெயர்த்தார்”[265].

கவர்னர் நெல்சன் சாம்சன் குறிஞ்சியிடம் தகாத முறையில் நடக்க முயல சரபோஜி சண்டமாருத போஜியாக மாறிவிட்டார்.

“அரண்மனையுள் சென்ற சரபோஜி மன்னர் தமது பாசத்துக்குரிய பாஜ் எனும் பயங்கர அபூர்வ ராஜாளிப் பறவையைக் கூண்டிலிருந்து விடுவித்துக் கையிலேந்திக் கொள்கிறார். முத்தமிடுகிறார். அதன் பாஷையில் ஏதோ சமிக்ஞையால் சொல்லுகிறார். அஃறிணைகளைப்பற்றி ஆராய்ந்து ஓலைச் சுவடிகளாய் குவித்த ஒப்பற்ற கலை போஜியாற்றே சரபோஜி . . . . .”[266] என்னும் வரிகள் அவர் பறவைகளின் பாஷையை அறிந்தவர் என்பதை புலப்படுத்துகிறது.

மேலும் பாஜ் எனும் அந்த ராஜாளிப்பறவை எடுத்த எடுப்பில்

“சாம்சன் முகத்தில் பாய்ந்து இரண்டு கண்களை எடுத்து வயிற்றுக்குள் விழுங்கிவிட்டது. அத்துடன் விட்டதா? கொத்தோ கொத்தென்று அவனைக் கொத்துகிறது”[267].

மேற்கூறிய செய்தி புதினத்தில் காட்டப்படுவது அவர் பறவைகளின் பாஷையையும் அறிந்த மேதை என்பதைப் புலப்படுத்துகிறது.

ஆடு மாடுகள், குதிரைகள், யானைகள் முதலியவற்றை வளர்ப்பதில் சரபோஜி மிகவும் சிரத்தை கொண்டவர். அவைகளைப் பற்றிய பல நூல்களை சேகரித்து வைத்துள்ளனர். சிறந்த ஓவியக்காரர்களைக் கொண்டு பல பறவைகளின் படங்களை அவற்றின் இயற்கையான வர்ணங்களில் எழுதுவித்தார். இவை ஊசி முனை ஓவியங்கள் மொகலாயர் கால ஓவியங்களை ஒத்தவை. இவற்றை தஞ்சை

அரண்மனையிலும், சரஸ்வதி மகால் நூல் நலையத்திலும் இன்றும் காணலாம். சரபோஜியின் முதல் ராணி யமுனாபாய் சாகேப், இரண்டாம் ராணி அகல்யாபாய் சாகேப், இளவரசன் சிவாஜியின் மனைவி தைாம் பாயிசாகேப், இரண்டாம் ராணி கமாட்சிபாயி. சிவாஜியும் கலைப்பித்தன். கதையின் போக்கில் குறிஞ்சியின் இசையை மட்டுமல்லாமல் அவனையும் அடைய வேண்டும் என்று பித்துப்பிடித்து அலைபவன்.

ஒருத்தி நாடு என்பது, ஒரு காலத்தில் சரபோஜி மன்னரின் அருமைக் காதலி முக்தாம்பாளால் புகழ் பெற்றது. தற்போது இவ்வூர் ஒரத்தநாடு என அழைக்கப்படுகிறது. சரபோஜி மக்களுக்காக எண்ணற்ற தரும சாசனங்கள் செய்துள்ளார். ஏழைகளுக்காக அவர் ஏற்படுத்திய அன்ன சத்திரங்கள் பல.

> “தஞ்சையிலிருந்து 15 மைல் தூரத்தில் உள்ள முக்தாம்பாள் புரத்தில் ஓர் சத்திரம் ஏற்படுத்தி நோயாளிகளுக்கு ஓடை தங்களும் உலுப்பையும், 6 மைல் விஸ்தீரணத்தில் இருக்கும் கர்ப்பிணி பெண்களுக்கு 9-வது மாதம் முதல் பிரசவித்து 3 மாதங்கள் வரையில் பாலும் வழங்குவதற்கு நிரந்தரமான ஏற்பாடுகளை செய்து இருந்தார்”[268]

என்ற உண்மையும் தெரிய வருகிறது.

வரலாற்றுச் செய்தியாக தேவதாசிமுறை, பொட்டுக் கட்டுதல் ஆகிய பழக்கம் சமுதாயத்தில் இருந்து வந்துள்ளது. புதினத்தில் கதையின் போக்கில் கூறப்படுகிறது. ஷேக்ஸ்பியர் ரோமியோ ஜுலியட் என்கிற காதல் நாடகக் காப்பியம் எழுதியிருக்கிறேன் என தன் மகனுக்காக குறிஞ்சியிடம் காதல் பிச்சை கேட்க வரும்போது தன்னைப்பற்றி சரபோஜி குறிப்பிடுவதாக கதையின் போக்கில் கூறப்பட்டுள்ள செய்தி வரலாற்றுச் செய்தியாகும். மன்னர் சரபோஜி பல நூல்களை மொழி பெயர்ப்புச் செய்துள்ளமை இதிலிருந்து புலப்படுகிறது.

குறிஞ்சியிடம் அடகு ஓலை குறிஞ்சிராகத்துக்கு வாங்கிக் கொண்ட சிவகங்கை ஜமீன்தார் வல்லபத் தேவரின் மகன் சரபோஜியின் காலத்தில் சிறைவைக்கப்பட்டான்.

காரணம் புரியாத நிலையில் ஆசிரியர் இங்கு அதற்கான காரணம் கற்பனைக் காட்டி கதையில் கூறுகிறார்.

மேநாட்டுக்கலைகளை நம் நாட்டுக் கலைகளுடன் இணைத்து அதன் நற்பயனை அடைத்த முதல் இந்திய மன்னர் சரபோஜி என்றே கூறலாம். தம்முடைய ஆட்சி 34 ஆண்டுகளில் கலையுலகில் அவர் சாதித்தது போற்றுதலுக்கு உரியவை. சரபோஜிக்கு பிறகு தந்தையின் வழியை சிவாஜியும் பின்பற்றி சரஸ்வதி மகாலை வளர்த்து வந்தார்.

சரபோஜி தாம் வாழ்ந்த காலத்தில் மன அமைதிபெற தியாகராஜரின் வீடு சென்று இசை கேட்பது வழக்கம். குற்றாலக் குறிஞ்சி என்ற புதினத்தில் இசையார்வமுள்ள இசைமேதையாக காட்டப்படும் சரபோஜி மன்னர் சரஸ்வதி மகால் மூலமாக இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். இந்த இசைப் புதினத்தின் கதைத்தலைவரான சரபோஜியின் கலையார்வம் இப்புதினத்தின் மூலம் மக்களுக்குப் புதிய வாய்ப்பாக அமைந்துள்ளது. கானல்கானம் என்ற புதினத்தில் , காணப்பெறும் வரலாற்றுச்செய்தி: திருக்கோவிலூர் கல்வெட்டுச் செய்தியின்படி,

“அறையணி நல்லூர் சிவன் கோயிலின் அர்த்த மண்டபத்தைக் கட்டியவன் இளவெண்மதி சூடினன். இவன் மண்டபத்தைக் கட்டி வைத்துத் தன்னுடைய தலையைத் தானே வெட்டிப் பலியாக்கிக் கொண்டான். இவன் ஒரு தாசி மகன். இக்காலத்தில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அரசு செலுத்திக் கொண்டிருந்தான்”.

இந்தப் புதினத்தில் மேற்கூறிய வரலாற்றுச் செய்தியின்படி கதைத்தலைவன் இளவெண்மதி சூடினன் மண்டபம் கட்டி ஆத்மதியாகம் செய்து கொள்வதாக காட்டப்பட்டுள்ளது. சுரமாலையின் இசை அரங்கேற்றத்திற்காக மாறவர்மன் சுந்தரபாண்டியன் வருகை தந்து அவளை தன் நாட்டின் ஆஸ்த்தான பாடகியாக அழைத்துச் செல்ல வந்திருப்பதாக புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

**தொகுப்புரை**

1. வரலாற்றுச் செய்திகள் என்ற இந்த இயலில் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம்பெற்ற வரலாற்றுச் செய்திகள் பற்றிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

2. வரலாறு என்பதன் விளக்கமும் ஆய்வாளர்களின் கருத்தும் விளக்கப்பட்டுள்ளது.

3. காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில் இடம் பெற்றுள்ள வரலாற்றுச் செய்திகள் கல்வெட்டு, இலக்கியம், வரலாற்றுச் சின்னங்கள் மூலமாக விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. இசைபற்றிய விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது.

4. சேரன் குலக்கொடி, சேரசூரியன், கொல்லிப்பாவை ஆகிய புதினங்களில் இடம் பெற்ற வரலாற்றுச் செய்திகள் பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றைக்கொண்டு மதிப்பிடப்பட்டுள்ளது.

5. செம்பியன் செல்வி என்ற புதினத்தில் வரலாற்றுச் செய்திகள் கலிங்கத்துப்பரணி மற்றும் கல்வெட்டுக்கள் ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள பாங்கும் ஆய்வில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது.

6. பொன் வேய்ந்த பெருமாள் என்ற புதினமும் சோழர் காலத்தை கதைக்களமாகக் கொண்டது. இதில் கூறப்பட்டுள்ள வரலாற்றுச் செய்திகளும் இலக்கியங்கள் மூலமாகவும், வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

7. வேங்கைவனம் என்ற புதினம் கடைச்சங்க காலத்தை கதைக்களமாகக் கொண்டது. பாண்டியன் உக்கிரப்பெருவழுதியின் தமிழ் அறிவும், கானப்பேரெயில் அழித்தமையும் இலக்கியங்கள் கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

8. சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் கூறப்பட்டுள்ள வரலாற்றுச் செய்திகள் கல்வெட்டுகள் உதவியுடன் விளக்கப்பட்டுள்ளன.

9. கங்கை நாச்சியார் என்ற புதினத்தில் திருமலை நாயக்கர் மற்றும் சேது மன்னர்களைப்பற்றிய வரலாற்றுச் செய்திகள், இலக்கியங்கள், வரலாற்றுக் குறிப்புகள் மூலமாக விளக்கப்பட்டுள்ளன.

10. ஹைதர், திப்பு ஆகியோரைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

11. ரூப்மதி அக்பர் காலத்தை கதைக்களமாகக் கொண்டது. கானல் கானத்திற்கு ஒரே ஒரு கல்வெட்டுச்செய்தி ஆதரமாக உள்ளது.

12. குற்றாலக் குறிஞ்சி என்னும் புதினம் இசைப்புதினம் வரலாற்றுக் குறிப்புகள் மூலமாகவும் வரலாற்று நூல்களைக் கொண்டும் இப்புதின வரலாற்றுச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. செல்வராசகோபால், மட்டக்களப்பு மாநிலத்தின் பண்டைய வரலாறு, ப.5.
2. மேலது., ப.5.
3. மேலது., ப.6.
4. மேலது., ப.5.
5. கைலாசபதி, நாவல் இலக்கியம், ப.220.
6. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.90.
7. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப.95.
8. மேலது., ப.97.
9. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.15.
10. Michel lockwood, Mamallapuram and Pallavas, P.13-14.
11. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.16.
12. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப.108.
13. மேலது., ப.109.
14. தமிழக அரசு, தமிழ் நாட்டு வரலாறு, ப.136.
15. மேலது., ப.136.
16. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.22.
17. Conjeevaram inscription of Mahendravarman, P.118.
18. மேலது., ப.119.
19. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.119.

20. மேலது., ப.119.

21. மேலது., ப.116.

22. மேலது., ப.12.

23. மேலது., ப.119.

24. தமிழ்நாடு அரசு, தமிழ்நாட்டு வரலாறு, பல்லவர் பாண்டியர் காலம், ப.138.

25. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.118.

26. கோ. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.260.

27. தமிழ்நாட்டுச் செப்பேடுகள், தொகுதி 1, ப.125.

28. மேலது., ப.175.

29. மயிலை.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப.115.

30. மேலது., ப.116.

31. மேலது., ப.66.

32. மேலது., ப.64.

33. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப.97.

34. கோ. மணிசேகரன், காஞ்சிக்கதிரவன், ப.153.

35. Pudukkottai Inseription, P.1008.

36. மேலது., ப.1008.

37. தமிழ்நாட்டு வரலாறு, சோழப் பெருவேந்தர்காலம், ப.194.

38. மேலது., ப.195.

39. மேலது., ப. 195.

40. தமிழ்நாட்டு வரலாறு, சோழப் பெருவேந்தர்காலம், பக்.196-196.

41. சதாசிவப் பண்டாரத்தார், பிற்கால சோழர் சரித்திரம், ப.32.

42, மேலது., ப.33.

43. தமிழ்நாட்டு வரலாறு, சோழப் பெருவேந்தர்காலம், ப.200.

44. மேலது., ப.200.

45. சதாசிவப் பண்டாரத்தார், சோழர் வரலாறு, SII Vol.III, No.65.

46. மேலது., S.I.I. Vol.III, No.72.

47. தமிழ்நாட்டு வரலாறு, சோழப் பெருவேந்தர்காலம், ப.206.

48. மேலது., ப.206.

49. சதாசிவப் பண்டாரத்தார், சோழர் வரலாறு, ப.10. SII Vol.III, No.129.

50. மேலது., ப.14.

51. மேலது., ப.52.

52. மேலது., (கலிங்கத்துப்பரணி), ப.25.

53. மேலது., ப.25.

54. மேலது., ப.52.

55. மேலது., ப.16.

56. மேலது., ப.214.

57. மேலது., ப.214.

58. மேலது., ப.37.

59. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.234. (S.I.I. Vol.IV, No.862.)

60. மேலது., ப.9.

61. சதாசிவப்பண்டாரத்தார், சோழர் வரலாறு, ப.40 (S.I.I. Vol.I, No.225.)

62. மேலது., ப.61.

63. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.7.

64. சதாசிவப்பண்டாரத்தார், சோழர் வரலாறு, ப.52.

65. மேலது., ப.60.

66. மேலது., ப.60. (E.P.India, Vol.XXIX, P.46)

67. மேலது., ப.26.

68. மேலது., ப.27.

69. மேலது., ப.27.

70. மேலது., ப.45.

71. கோவி. மணிசேகரன், செம்பியன் செல்வி, ப.319.

72. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.3.

73. மேலது., ப.5.

74. மேலது., ப.9.

75. மேலது., ப.9.

76. நீலகண்ட சாஸ்த்திரி, சோழர் வரலாறு, ப.297.

77. மேலது., ப.297. (S.I.I. Vol.IV, 433)

78. மேலது., ப.606.

79. மேலது., ப.607.

80. கோவி. மணிசேகரன், பொன் வேய்ந்த பெருமாள், ப.14.

81. மேலது., ப.6.

82. கோவிந்த ராசனார், சோழர் வரலாறு, ப.61.

83. தமிழகம், புதுவை வரலாறு, ப.78.

84. மேலது., ப.78.

85. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.115.

86. மேலது., ப.18.

87. நீலகண்ட சாஸ்த்திரி, சோழர் வரலாறு, ப.591.

88. கோவி. மணிசேகரன், பொன்வேய்ந்த பெருமாள், ப.141.

89. தமிழகம், புதுவை வரலாறு, பக்.161, 162.

90. மேலது., ப.163.

91. நீலகண்ட சாஸ்த்திரி, சோழர் வரலாறு, ப.580.

92. மேலது., ப.580.

93. Imperial Pandyas, P.50.

94. கோவி. மணிசேகரன், பொன் வேய்ந்த பெருமாள், ப.278.

95. சதாசிவப்பண்டாரத்தார், சோழர் வரலாறு, செந்தமிழ்த் தொகுதி II, ப.49.

96. Imperial Pandyas, P.50.

97. கோவி. மணிசேகரன், பொன் வேய்ந்த பெருமாள், ப.287.

98. கோவிந்தராசன், சோழர் வரலாறு, ப.86.

99. மேலது., ப.86.

100. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.184.

101. மேலது., ப.184.

102. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, செந்தமிழ்த் தொகுதி II, ப.493.

103. மேலது., ப.493.

104. மேலது., ப.493.

105. மேலது., ப.116.

106. மேலது., ப.116.

107. B. Sheik Ali, Tippusultan, P.9.

108. Mohamad Maideen, Sunset at Srirangappattinam, P.11.

109. மருதன், திப்பு சுல்தான், விடுதலைப்புலி, ப.22.

110. ஜீவானந்தம், திப்பு விடுதலைப் போரின் முன்னோடி, ப.124.

111. மேலது., பக்.123-124.

112. சுஜாவுதீன் சர்க்கார், திப்புவின் அரசியல், ப.210.

113. ஜெகதா, திப்பு சுல்தான் திகைப்பூட்டும் வரலாற்றுப்பார்வை, ப.64.

114. லதா ராமானுஜம், ராமானுஜர் வாழ்க்கை வரலாறும் பெருமைகளும், ப.133.

115. மேலது., ப.136.

116. மேலது., ப.138.

117. Sheik Ali, Tippusultan, P.125.

118. மருதன், திப்புசுல்தான் விடுதலைப்புலி, ப.101.

119. ஜீவானந்தம், திப்பு விடுதலைபோரின் முன்னோடி, ப.149.

(APJ.அப்துல் கலாம் சுயசரிதை - (Wings of fire)

120. சுஜாவுதீன் சர்க்கார், திப்புவின் அரசியல், ப.54.

121. மேலது., ப.54.

122. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப. 171.

123. சுஜாவுதீன் சர்க்கார், திப்புவின் அரசியல், ப.30.

124. கோவி. மணிசேகரன், ராஜகர்ஜனை, ப.195.

125. முத்து கிருஷ்ண நாட்டார், பதிற்றுப்பத்து, ப.10.

126. மேலது., ப.10.

127. புலியூர் தேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப.27.

128. புருஷோத்தம், சங்க காலவரலாறு, (பதிற்றுப்பத்து) பக்.126-127.

129. முத்து கிருஷ்ண நாட்டார், அகத்திணைப் புத்தகங்கள், (பதிற்றப்பத்து), ப.66.

130. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.23.

131. புருஷோத்தம், சங்ககால வரலாறு (ப.ப.) ப.128.

132. கோல பிலவேந்திரன், இலக்கியவியல் வரலாற்றுச் சிறப்பியல்புகள், ஆய்வுக் கோவை, ப.106.

133. மேலது., ப.41.

134. மேலது., (பதிற்றுப்பத்து இரண்டாம் பாடல்) ப.40.

135. மேலது., ப.142.

136. மேலது., ப.144.

137. கா. அப்பா துரையார், தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.100.

138. மேலது., ப.102.

139. புருஷோத்தம், சங்ககால காலநிலை வரலாறு, ப.126.

140. வி.என்.சாமி. புகழ்பெற்ற கடற்கோள்கள், ப. 98.

141. புருஷோத்தம், சங்ககால வரலாறு, ப.135.

142. கா. அப்பா துரையார், தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.37.

143. கோவி. மணிசேகரன், சேரசூரியன், ப.206.

144. Manual of Pudukkotta State, P.1093 (Kumattor in Eomi Oymanadu. It was anold division of Tamil Country round about the modern Town of Tindivanam)

145. புருஷோத்தம், சங்ககால வரலாறு, ப.204 (பதிற்றுப்பத்து 5-ம் பத்து)

146. மேலது., (அகம்) ப.204.

147. மேலது., (சிலம்பு) ப.204.

148. மேலது., பதிற்றப்பத்து, ப.184.

149. முத்துகிருஷ்ண நாட்டார், பதிற்றுப்பத்து, ப.61. (சிலம்பு)

150. புருஷோத்தம், சங்ககால வரலாறு, ப.183.

151. மேலது., ப.178.

152. அப்பாத்துரையார், தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.102.

153. மேலது., ப.104 (சிலம்பு 25 - 160 - 164).

154. மேலது., ப.187.

155. மேலது., ப.187.

156. மயிலை வேங்கடசாமி, கொங்கு நாடும், துளு நாளும், ப.253.

157. புருஷோத்தம், சங்ககால வரலாறு (நான்காம் பத்து) ப. 174.

158. மயிலை வேங்கடசாமி, கொங்குநாடும், துளுநாடும், ப.258.

159. மேலது., (அகம்) ப.259.

160. மேலது., ப.259.

161. மேலது., ப.263.

162. மேலது., ப.263.

163. மேலது., ப.264.

164. மேலது., ப.264.

165. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.51.

166. மேலது., ப.224.

167. மேலது., ப.229.

168. மேலது., பக்.192-193.

169. மேலது., ப.221.

170. மேலது., (குறுந்தொகை 73-4)ப.209.

171. புலியூர் தேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப.74.

172. புருஷோத்தம், சங்ககால வரலாறு, ப.292.

173. கோவி. மணிசேகரன், கொல்லிப்பாவை, ப.226.

174. அப்பாத்துரையார், தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.98 (பதிற்றுப்பத்து 14-16)

175. கொல்லிப்பாவை, ப.209.

176. மேலது., ப.209.

177. புருஷோத்தம், சங்ககால வரலாறு, பக்.173-174.

178. புலியூர் தேசிகன் தெளிவுரை, அகநானூறு (199 பாடல்) ப.189.

179. தினேஷ் சர்க்கார், அசோகரின் கல்வெட்டுக்கள், ப.14.

180. மேலது., ப.15.

181. மேலது., ப.18.

182. மேலது., பக்.182-183.

183. மதன், கி.மு. கி.பி. ப.177.

184. தினேஷ் சர்க்கார், அசோகரின் கல்வெட்டுக்கள், ப.19.

185. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.33.

186. மேலது., ப.34.

187. வின்செட் ஸ்மித், அசோகர், ப.34.

188. மேலது., ப. 34.

189. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.183.

190. தினேஷ் சர்க்கார், அசோகரின் கல்வெட்டுக்கள், ப.22.

191. கோவி. மணிசேகரன், சாம்ராட் அசோகன், ப.97.

192. மேலது., ப.260.

193. மேலது., ப.215.

194. தினேஷ் சர்க்கார், அசோகரின் கல்வெட்டுக்கள், ப.14.

195. மேலது., ப.14.

196. வின்செென்ட் ஸ்மித், அசோகர், ப.196.

197. மேலது., ப.197.

198. மேலது., ப.198.

199. மேலது., ப.29.

200. மேலது., ப.138.

201. இந்திய பாடநூல் நிறுவனம், இந்திய வரலாறு, ப.178.

202. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.43.

203. இந்திய பாடநூல் நிறுவனம், இந்திய வரலாறு, ப.179.

204. கோவி. மணிசேகரன், ரூப்மதி, ப.88.

205. லாரன்ஸ் பின்பால், (தமிழாக்கம் சரவணன்) அக்பர், ப.43.

206. மேலது., ப.43.

207. மதன், வந்தார்கள் வென்றார்கள், ப.92.

208. புலவர் முத்துப்பிள்ளை, நந்திக்கலம்பகம், ப.123.

209. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப.206.

210. மேலது., ப.208.

211. செப்பேடுகள் தொகுதி, பக். 204, 205, 206, 207.

212. மேலது., ப.208.

213. மேலது., ப.205.

214. அப்பா துரையார், தென்னாட்டுப் போரக்களங்கள், ப.176.

215. மேலது., ப.278.

216. மேலது., ப.371.

217. கோவி. மணிசேகரன், பூங்குழலி, ப.374.

218. மேலது., ப.375.

219. புலவர் முத்துப்பிள்ளை, நந்திக்கலம்பகம், ப.21.

220. சதாசிவப் பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம், ப.14.

221. மேலது., ப.15.

222. மேலது., ப.16.

223. மேலது., ப.14.

224. மேலது., ப.19.

225. மேலது., ப.19.

226. மேலது., ப.19.

227. மேலது., ப.20.

228. மேலது., ப.18.

229. மீ. மனோகரன், கிழவன் சேதுபதி, ப.45.

230. மேலது., ப.45.

231. மேலது., ப.41.

232. மேலது., ப.44.

233. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.50.

234. மேலது., ப.178.

235. மேலது., ப.184.

236. மதுரை நாயக்கர் வரலாறு, ப.141.

237. கோவி. மணிசேகரன், கங்கை நாச்சியார், ப.196.

238. மேலது., ப.133.

239. தஞ்சை நாயக்க மன்னர் வரலாறு, ப.57.

240. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.30.

241. மேலது., ப.31.

242. மயிலை வேங்கடசாமி, தொகுப்புரை, பக்.259-260.

243. வித்வான் வெள்வைாரணர், தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம், ப.165.

244. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.112.

245. மேலது., ப.111.

246. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, பக்.31-32.

247. வெள்ளைவாரணர், தமிழ் இலக்ய வரலாறு, தொல்காப்பியம், ப.165.

248. மேலது., ப.166.

249. மேலது., ப.167.

250. மேலது., ப.167.

251. மேலது., ப.168.

252. கோவி. மணிசேகரன், வேங்கைவனம், ப.46.

253. மேலது., ப.263.

254. பி.டி.செல்லதுரை, தென்னக இசையியல், ப.249.

255. மேலது., ப.257.

256. மேலது., ப.257.

257. மேலது., ப.251.

258. மேலது., ப.253.

259. மேலது., ப.254.

260. மேலது., ப.262.

261. மேலது., ப.262.

262. கோவி. மணிசேகரன், குற்றாலக் குறிஞ்சி, ப.182.

263. மேலது., ப.182.

264. சங்கீத ரத்னாவளி, ப.4.

265. மேலது., ப.20.

266. கோவி. மணிசேகரன், குற்றாலக்குறிஞ்சி, ப.108.

267. மேலது., ப.109.

268. சங்கீத ரத்னாவளி, பக்.23-24.

269. கோவி. மணிசேகரன், கானல்கானம், ப.92.

## இயல் - 5

# கோவி. மணிசேகரனின் வரலாற்றுப் புதினங்களில் பின்புலன்கள்

### முன்னுரை

கோவி. மணிசேகரனின் புதினங்களில் பின்புலன்கள் என்ற இவ்வியலில் பின்புலங்களுக்கான வரையறையும் அதன் வகைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. பின்புலன்களில் வரலாறு, அரசியல், சமயம், சமுதாயப் பின்புலங்கள், இலக்கியங்கள் மற்றும் கல்வெட்டுகள் குறிப்பிடும் பின்புலங்கள் ஆகியவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

### பின்புலம் - வரையறை:

வரலாற்றுப் புதினங்கள் படிப்பவரை ஈர்க்கும் தன்மையுடையவனவாக அமைய ஆசிரியர், பல்வேறு நுணுக்கங்களைக் கடைப்பிடித்தாலும் வரலாற்று மெய்ம்மைகள் மாறா வண்ணம் அக்காலத்திய நிகழ்வுகள் அப்படியே கண்முன் காட்டப்படுவனவாக அமைய வேண்டும். பின்புலம் என்றசொல் பின்னணி என்றும் குறிக்கப்படுகின்றது; இரண்டும் ஒரே பொருளுடையது.

சங்ககாலத்தில் "முதற்பொருள், கருப்பொருள் என அவர்கள் விளக்கியவற்றையே பின்னணி என்ற புதிய சொல்லும் தனக்குரிய பொருளாகக் கொண்டிருக்கிறது. பகைப்புலம், பின்புலம் என்ற வேறுசில சொல்லாட்சிகளும் பின்னணி என்ற பொருளிலேயே வழங்கப்படுகின்றன"[1]. மேலும்,

> "செடி கொடி விலங்கினங்கள் அது அதற்கேற்ற இயற்கை பின் புலத்தில் மட்டுமே தோன்றமுடியும், தழைக்கமுடியும். கிட்டத்தட்ட அவற்றைப் போலவே குறிப்பிட்ட அரசியல் சமுதாயப் பொருளாதாரப் பின்புலத்தில்தான் அவற்றுக்கு ஏற்ற இலக்கியம் படைக்கப்பெறுகிறது"[2]

என்று க.ப.அறவாணன் கூறும் கருத்து குறிப்பிடத்தக்கது.

மேலும் "ஒரு நாவலின் பின்னணி என்பது வெறும் இயற்கை காட்சிகள் மட்டுமன்று; சுற்றுப்புறச் சூழல் முழுவதுமாகும். நாடு, மாவட்டம், நகரம், கிராமம், வானிலை, தட்பவெப்பநிலை, பழக்க வழக்கங்கள், பொருளாதார ஏற்றத்தாழ்வு, செய்யும் தொழில், கட்டிடங்கள், உணவு, குடும்ப அமைப்பு, மதம், அரசியல், வாழ்க்கைக் கோட்பாடு, அறிவு சார்ந்த பண்பாட்டுக் கல்வி, கேளிக்கைகள், வாழ்க்கைத் தரம் எனப்பலவாகும்"[3]

என கோ.வெ.கீதா குறிப்பிடும் கருத்தும் இங்குச் சுட்டத்தக்கது.

**பின்னணி வகைகள்**

பின்னணிகள் சமுதாயப் பின்னணி என்றும் காட்சிப் பின்னணி என்றும் வகைப்படுத்தப்படுகின்றது. சமுதாயப் பின்னணியில் சமுதாயம், அரசியல், பண்பாடு ஆகியவை அடங்கும். காட்சிப்பின்னணியில் வரலாறு, இடம், காலம் ஆகியவை அடங்கும்.

"சமுதாயப் பின்னணி என்பது நாவலில் முக்கிய இடத்தைப் பெறுகின்றது. அரசியல், பொருளாதாரம், கலை, கலாச்சாரம், பண்பாடு, நாகரிகம், மதம், இனம், ஜாதிப்பாகுபாடுகள், கொள்கைகள், ஒழுகலாறுகள் அனைத்தையும் உள்ளடக்கிய ஒன்றையே மேற்கண்ட தொடரால் குறிக்கிறோம்"[4]

என மா.ராமலிங்கம் குறிப்பிட்டுச் செல்கிறார்.

பின்னணியைப்பற்றி பல அறிஞர்களும் பல விதமான கருத்துகளை கூறுகின்றனர்.

"ஒரு நாட்டின் வரலாற்றிலிருந்து அதன் பண்பாட்டையும், கலை, இலக்கிய வடிவங்களையும் பிரித்துக்கான முடிகிறது. வரலாற்று நிகழ்ச்சிகளும், சமூகப் பின்புலன்களும் கதையைப் படிப்பவர்களுக்கு

உந்து சக்திகளாகின்றன"[5] என்று அறிஞர் அ. பாண்டுரங்கன் கூறுவதும் இங்குக் குறிக்கத்தக்கது. மேலும்,

"பின்னணியை விளக்கும் போது வழக்கில் உள்ள சொல்லாட்சி இடம் பெறுகின்றது. படைப்பாளியின் சமுதாயப் பழக்க வழக்கங்களும் படிப்போரின் சமுதாயப் பழக் வழக்கங்களும் ஏறக்குறைய ஒன்றாக இருப்பதால் அவற்றை விளக்குவதற்கு நீண்ட பக்கங்கள் தேவையில்லை. சிறுசிறு உரையாடல்களே கதை நிகழ்ச்சிகளை இழுத்துக்கொண்டு ஓடமுடியும்"[6] என்று கருத்தும் இன்றியமையாததாக அமைகிறது.

"நாவலைப் பொறுத்தவரையில் பின்னணி என்ற சொல் பூகோள ரீதியான பின்னணியை அதாவது கதை நிகழும் நாடு இடம் முதலியவற்றையும் காலம், பருவம் முதலியவற்றையும் சமுதாயச் சூழ்நிலையுமே குறிக்கும்"[7] என்ற கருத்தும் ஈண்டு நோக்கற்பாலது.

பின்னணியானது மிகுந்த எச்சரிக்கையுடன் கையாள வேண்டிய ஒன்று. சங்ககால இலக்கியத்தில் அதை அடித்தளமாகக் கொண்ட புதினத்தில் ரோஜாமலர்களைப் பற்றிக் கூறுவது தவறானதாகும். ரோஜா என்பது வேற்று நாட்டிலிருந்து வந்த மலர் என்றாலும் சங்க காலத்தை அடித்தளமாகக் கொண்ட புதினத்தில் அதனைக் கையாளுவது கால வழுவாக அமைந்துவிடும்.

வரலாற்றுப் பின்னணி என்று கருத்தில் கொள்ளும்போது புதினத்தில் அரசியல், அக்கால சமுதாயம், சமயம், காலம் இவற்றை உள்ளடக்கியதாக அமைகின்றது. படைப்பாசிரியரின் புதினத்தில் அமையும் பின்னணிகள் இங்குக் குறிக்கத்தக்கன.

**வரலாற்றுப் பின்புலம்**

காஞ்சிக்கதிரவன் என்ற புதினத்தில்இடைக்காலப் பல்லவரின் வரலாறு சுட்டப்படுகிறது. இடைக்காலப் பல்லவர்களில் சிறந்த மன்னன் சிம்மவிஷ்ணு இவனது காலம் கி.பி.550-583. கதைத்தலைவன் மகேந்திரவர்மனின் தந்தை. இவனது தந்தை சிம்மவர்மன். சிம்மவிஷ்ணுவைப் பற்றி காசாக்குடி பட்டயம்,

"இவன் இளவரசனாக பாண்டிய வேந்தன் கடுங்கோனுடன் போரிட்டுள்ளதையும், களப்பிரரை வென்று ஈழம்வரை தன் ஆட்சியை விரிவுபடுத்தியுள்ளதை குறிப்பிடப்பட்டுள்ளன. பள்ளன் கோயில் சாசனம் சோழன் செங்கண்ணானை வென்றுள்ளதாகவும் சமணப் போதகர் வஜ்ர நந்திக்கு தாமல் கிராமத்தை தானமளித்துள்ளதை குறிக்கிறது. காஞ்சிக்கு அருகில் உள்ள திருப்பருத்திக் குன்றத்தில் மகாவீரருக்கு கோயில் எடுத்துள்ளதைக் குறிக்கிறது"[8].

பெரிய புராணம் கூறும் ஐயரடிகள் காடவர்கோன் என்பவன் இவனது தந்தையே என 11-ம் திருமுறை கூறுகிறது.

"மங்களேசனின் மகாகூடக் கல்வெட்டு சாளுக்கியருடன் போர் செய்துள்ளதை விவரிக்கிறது"[9]. கங்க அரசன் அவனிதனின் ஒசகட் பட்டயம் இம்மன்னனின் ஆட்சிபற்றி கூறுகின்றது. இவனது காலத்தில் கடல்மல்லை சிறந்த துறைமுகப்பட்டினமாக விளங்கியது. சிறந்த கப்பற் படையினைக் கொண்டிருந்த இவன் யானைகளைக் கப்பலில் ஏற்றிச் சென்று ஈழத்தை வென்ற முதல் மன்னன் ஆவான். புதினத்திலும் மங்களேசனைப் பற்றியும் அவனது குணநலன்கள் பற்றியும் காட்டப்படுகின்றது.

பீமவர்மன் என்ற இவனது தம்பியும் அவனது புதல்வன் புத்தவர்மனும் 583-585 வரை ஆட்சி செய்தனர். மகேந்திரவர்மன் தக்க பருவம் வரை அவனது தலைநகரான பீமபுரத்திலிருந்து காஞ்சியின் ஆட்சியை நேரடியாக கவனித்துக் கொண்டான். புத்தவர்மனைக் காஞ்சியின் அரசப் பிரதிநிதியாக நியமித்திருந்தான்.

இவர்களை அடுத்து "முதலாம் மகேந்திரவர்மன் திறமையும் பெருமையும் வாய்ந்த முதல் பல்லவ மன்னன் சகலகலா வல்லவன். காஞ்சி ஏகாம்பரரேஸ்வர் கோயிலில் ஒரு மண்டபம் கட்டித் தன் விருதுப் பெயர்களை மண்டபத்தூணில் பொறித்துள்ளான். இக்கோயில் உள்ள மற்றுமொரு கல்வெட்டு இவனை நிருப சூடாமணி எனவும்

குறிப்பிடுகின்றது. காஞ்சி ஒக்கப்பிறந்தான் குளத்தெருவில் உள்ள ஒரு தனிக்கல்லில் உள்ள கல்வெட்டு ஸ்ரீ மகேந்திரவர் மேசுவரகிருகம் என உள்ளதால் அங்கு இவனால் ஒரு மண்டபம் கட்டப்பட்டிருக்கலாம் எனக் கருத இடமுள்ளது"[10].

ஆரம்பத்தில் சமணனாக இருந்த இவன் பொன்னூர் கீரப்பாக்கம், அனந்த மங்களம் ஆகிய இடங்களில் சமணப்பள்ளிகளை எழுப்பியுள்ளான். சமயப் பொறையுடையவனாகவும் காட்டப்படுகிறான். சைவனாக மாறியபிறகு அவற்றை இடித்து சைவக்கோயிலாக மாற்றியுள்ளான். காந்திமடத்தில் கபாலிகர்கள் இருந்ததாக இவனது மத்த விலாச பிரகடனம் தெரிவிக்கிறது. தட்சிணசித்திரம், பகவத் ஜயம் நூல்களும் இயற்றியுள்ளான்.

மகேந்திரவர்மன் ஆட்சிக் காலமானது கி.பி.7-ம் நூற்றாண்டு ஆகும். அதே காலக்கட்டத்தில் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசி கி.பி.610-ல் பல்லவ சாம்ராஜ்யத்தின் மீது படைஎடுத்தான். முதலில் ஆந்திர தேசத்தைக் கைப்பற்றினான். பின்னர் பல்லவர் தலைநகரான காஞ்சியின் மீதும் படை எடுத்து வந்தான். ஆனால் புள்ளலூர் என்னுமிடத்தில் மகேந்திரவர்மன் புலிகேசியை எதிர்த்துப் போரிட்டு அவனை முறியடித்துத் துரத்திவிட்டான்.

"புள்ளலூரில் தன் பகைவரை புறங்கணடவனுமான மகேந்திரவர்மன் என்னும் அரசன் மண்ணுலகத்தை அரசாண்டான்"[10]

என காசாக்குடி பட்டயம் கூறுகிறது.

இவ்வரசனின் மகன் "முதலாம் நரசிம்மனுடைய பதிமூன்றாம் ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று வாதாபி நகரத்தில் கிடைத்திருப்பதைக் கொண்டு இவன் கி.பி.630-ம் ஆண்டு வரையில் ஆட்சிபுரிந்திருக்கலாம் என கருதப்படுகிறது"[11]. இவனுடைய அரசு வடக்கே கிருஷ்ணாநதி முதல் தெற்கே காவிரிவரை பரவியிருந்தது. குண்டூர்

மாவட்டத்தில் உள்ள சிராலா (Cheryala) என்னும் ஊரில் கபோதீஸ்வரம் கோயில் கல்வெட்டின்படி ஆந்திரப் பிரதேசத்தில் நெல்லூர், குண்டூர் மாவட்டங்களும் பல்லவ மன்னனுடைய ஆட்சியில் இருந்தன என்று அறிகிறோம். இக்கல்வெட்டில்,

> "வேகவதியாற்றின் கரையில் உள்ள காஞ்சிமா நகரிலிருந்து கொண்டு குணபரன் அவனிபாஜனன் என்ற விருப்பப் பெயர்களுடைய மகேந்திர விக்கிரம மகாராசன் ஆட்சி புரிந்தான்"[11]

எனக் கூறுவதிலிருந்து மகேந்திரபல்லவன் ஆட்சி பற்றி அறியமுடிகிறது.

சாளுக்கியர்களும், பல்லவர்களும் தீராப்பகைமை கொண்டவர்கள். ஒருவரையொருவர் அழித்துக் கொள்வதில் ஆர்வமுடன் இருந்தனர். மகேந்திரபல்லவன் சிற்பம், சித்திரம், ஓவியம், நடனம் என ஆய கலைகளை அறிந்திருந்து ஆர்வமுடன் இருந்ததால், மக்களும் அக்கலைகளில் ஆர்வமுடன் ஈடுபட்டிருந்தனர். அக்கால அரசியல் பின்னணியின் வளர்ச்சியே இன்றும் மகாபலிபுரத்தில் சிற்பக்கல்லூரி இருப்பதற்குச் சான்று. யுவராஜாவாக மேலைக்கங்கன் துர்விநீதனுடன் போரிட்டுள்ளான். காஞ்சிக்கு அருகில் உள்ள புள்ளனூரில் வாதாபி சாளுக்கியன் இரண்டாம் புலிகேசியை கி.பி.616-ல் எதிர்த்துள்ளான் மருட்டூர் செப்பேடு தெரிவிக்கிறது.

தொண்டையன் வேந்தன் என தளவானூர் தமிழகக் கல்வெட்டுச் சிறப்பிக்கிறது. இவனது இறுதி ஆட்சி ஆண்டுகளில் திருஞானசம்பந்தரும் அப்பரும் சிவத்தொண்டு புரிந்து சைவசமய மறுமலர்ச்சியை ஏற்படுத்தினர்.

இவன் மைந்தன் "முதலாம் நரசிம்மனின் வாதாபி தூண் கல்வெட்டில் கி.பி.630 வரை ஆட்சி தொடரப்பட்ட செய்தியும் சாத்தனூர் அருகில் உள்ள மல்லிகாபுர நடுகல்லில் 39 வருட ஆட்சி எனவும் குறிக்கப்பட்டுள்ளது"[11].

**இடைக்காலப் பல்லவர்களின் தலைமுறை**

| | | |
|---|---|---|
| “சிம்மவர்மன் | - | 540 - 556 |
| சிம்மவிஷ்ணு | - | 550 - 583 |
| பீமவர்மன் + புத்தலார் | - | 583 - 585 |
| I மகேந்திரவர்மர் | - | 585 - 630 |
| I நரசிம்மவர்மர் | - | 630 - 668 |
| II மகேந்திரன் | - | 668 - 672 |
| (சாளுக்கிய விக்ரமாதித்தன்) | - | 670 - 674) |
| I பரமேஸ்வரன் | - | 672 - 701 |
| II நரசிம்மவர்மர் (ஏ) ராஜசிம்மர் | - | 700 - 728 |
| II பரமேஸ்வரன் | - | 728 - 731 |
| II விக்ரமாதித்தன் | - | 731 - 736”[12] |

III மகேந்திரன் - பல்லவராஜா விடுதி பல்லவராஜா வாரிசுக்குப்பின்

மகேந்திர பல்லவன், புலிகேசி இருவரும் போரிட்டுக்கொண்டமைக்குச் சான்றுகள் பல உள்ளன.

“அழுக்கற்ற வெண்சாமரங்களையும் நூற்றுக்கணக்கான கொடிகளையும் குடைகளையும் பிடித்துக்கொண்டு புலிகேசியின் படைகள் சென்றன. இந்தப் படைகளைக் கண்டு பல்லவ அரசன் காஞ்சிக் கோட்டைக்குள் ஒளிந்துகொண்டான்”[13] என அய்ஹொளே கல்வெட்டுக் கூறுகிறது. இது ஏற்புடையதாகத் தெரியவில்லை. அதற்கு பதிலளிப்பது போல காசாக்குடி செப்பேட்டில் உள்ள 21-வது பாடல் இந்திரனைப் போன்று கீர்த்திவாய்ந்த மகேந்திரவர்மன் தன்னுடைய எதிரிகள் அனைவரையும் புள்ளனூரில் அழித்து அவர்களை வேரறுத்தான்”[14] என்ற செய்தி காணப்படுகிறது.

இதிலிருந்து சாளுக்கியர் படை எடுத்துவந்தபோது கோட்டையை அடைத்துவிட்டிருந்த மகேந்திரவர்மன் சமயம்பார்த்து எதிரிகளை புள்ளலூரில் பாய்ந்து

முறியடித்தான் என்றும் உணர வாய்ப்புள்ளது. சாளுக்கிய அய்ஹொளே செப்பேடு அவரது மன்னன் புகழைப்பாடுவதாக அமைந்துள்ளது. கோட்டைக்கதவங்கள் அடைக்கப்பட்டதும் உண்மையாக இருக்கலாம். மகேந்திரவர்மன் எதிரிகளை வென்றதும் உண்மையாக இருக்கலாம் என ஊகிக்க முடிகிறது. ரேனாண்டு சோழவம்சம் பல்லவர்களுடன் நட்புக்கொண்டிருந்தது. ரேனாண்டு அரசன் தனஞ்செயனின் மகள் புவனமுழுதுடையாளை மகேந்திரவர்மனுக்கு மணமுடித்துக் கொடுத்திருந்தாள். அவரது மகன் விக்ரமவர்மன் மகேந்திரனின் உற்ற நண்பனாவான். கொடும்பாளூர் இளவரசன் நிருபகேசரி சிறுவயது முதலே மகேந்திரனின் உயிர் நண்பனாகத் திகழ்ந்துள்ளான். எனவே புதுக்கோட்டை வரை பரவியிருந்த இவனது ராஜ்யத்தில் கொடும்பாளூர் நட்புறவுடன் இருந்தமை தெளிவாகிறது.

பல்லவப் பகைவர் மேலைச்சாளுக்கியர் கிருஷ்ணாநதி வரை ஆட்சி செய்தனர். சாளுக்கியப் படை எடுப்பில் நாட்டை இழந்த கதம்பர் சிற்றரசராக இருந்தனர். கங்கர் மைசூர்ப்பகுதியில் தலக்காட்டைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்தனர். கோதாவரி கிருஷ்ணா நதிகளுக்கிடையே கீழைச் சாளுக்கியர் ஆட்சி செய்து வந்தனர். தெற்கே பாண்டியர், சோழர், களப்பிரர் ஆகியோர் ஆட்சி செய்தனர். இவர்கள் ஒருக்கால் பாண்டியரையும் ஒருக்கால் சோழரையும் சார்ந்திருந்தனர். கடப்பா, கர்நூல் ஆகிய பகுதிகளை ரேணாண்டு சோழவம்சம் ஆட்சி செய்து வந்தது. ஆந்திர நாட்டின் சில பகுதிகளையும், குண்டூர் கோட்டம், வடக்கேயுள்ள கடற்கரைப்பகுதி ஆகிய பகுதிகளைப் பீமவர்மன் மரபினர் ஆட்சி செய்தனர்.

சிம்மவிஷ்ணுவின் தம்பியாகிய பீமவர்ம பல்லவர் ஆந்திரப் பகுதிகளை ஆட்சி செய்து வந்தார். வல்லத்தின் அரசர் வசந்தப்பிரியர் பல்லவர்களின் உற்ற நண்பராக விளங்கினார்.

மேலைச் சாளுக்கியத்தை இரண்டாம் புலிகேசியும் கங்க நாட்டை துர்விநீதனும், தெற்கே மாறவர்மன் அவனி சூளாமணியும் நாசிக் என்றழைக்கப்படும் (வேங்கிநாட்டை) அசலபுரத்தை குப்ஜ விஷ்ணுவர்த்தனும் ஆட்சி செய்து வந்தனர்.

சிம்ம விஷ்ணுவின் காலத்தில் தண்டி, பாரவி ஆகியோர் இருந்தனர். அசலபுரத்தைச் சார்ந்த பாரவி (தாமோதரன்) சிறந்த வடமொழிப்புலவர் அமைச்சர் ஆமாத்தியர் என்றழைக்கப்பட்டார். வரலாற்றுப் பின்புலங்களாக காணக்கிடைப்பன,

> "திருச்சி மலைக்கோட்டையில் உச்சிப்பிள்ளையார் கோவில் பிதுக்கத்தின் வடபுறமாக இயற்கையாக அமைந்துள்ள குகைத்தளத்தில் சமணமுனிவர்களுக்கான கற்படுக்கைகள் உள்ளன. அங்கு சில துறவிகளின் பெயர்கள் காணப்படுகின்றன. அதில் சிரா என்பதும் ஒன்று. இவரது பெயரால்தான் சிராப்பள்ளி என்று இவ்வூருக்கு பெயர் வந்தது. அங்குள்ள கல்வெட்டு ஒன்றில் தஞ்சஹரக என்று கிரிந்தலிபியல் எழுதப்பெற்றுள்ளது. இது பாறைக்கு கீழாக உள்ள லலிதாங்குர பல்லவ ஈஸ்வர கிருஹத்தில் காணப்பெறும் மகேந்திர பல்லவனின் கல்வெட்டுக்களில் உள்ள எழுத்து பொறிப்புக்களை ஒத்துள்ளது"[15].

இது மகேந்திரபல்லவன் காலத்தில் எழுதப் பெற்றிருக்கலாம் எனக் கருதுகின்றனர். இதற்கு அருகில் கம்துஹ என்ற பெயர் எழுதப் பெற்றுள்ளது. இது மகேந்திரவர்மனின் பட்டப் பெயராக இருக்கும் என்றும் அவன் சைவனாக மாறிக் கீழே உள்ள குடைவரைக் கோயிலை எடுப்பதற்கு முன் இச் சமணக் குகையைப் போற்றி இருக்க வேண்டும் எனவும் தொல்லியல் வல்லுனர்கள் கருதுகின்றனர்.

தஞ்சைஹரக என்பதும் மகேந்திரனின் பட்டப் பெயராக இருக்க வேண்டும். இது தஞ்சையை வென்றவன் என்றபொருளைக் குறிக்கிறது. மகேந்திர வர்மனின் தந்தை சோழநாட்டை வென்று அடிமைப்படுத்தியுள்ள செய்தி வேளூர் பாளையச்செப்பேட்டின் மூலம் அறியப்படுகின்றது. மகேந்திர வர்மனும் இளவரசனாக இருந்து இப்போரில் கலந்துகொண்டு தந்தைக்கு வெற்றியைத் தேடித்தந்தபடியால் தஞ்சைஹரக என்னும் பெயர் ஏற்பட்டது எனக் கருத இடமுள்ளது.

புதினத்தில் காட்டப்படும் சித்தன்னவாயில் என்றும் சித்தன்னவாசலில் சித்திரக்காரப் புலியான மகேந்திரனின் ஓவியங்கள் இன்றளவும் காட்சி தருகின்றன. மகேந்திரவர்மன் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறினான் என்பதற்கான அத்தாட்சியும் உள்ளது. இந்த சித்தன்னவாயிலானது மகேந்திரவர்மனால் ஏற்படுத்தப்பட்டது என்பதற்கான செய்திகளும் காணப்படுகின்றன.

> "அறிவர் கோயில் கல்வெட்டானது கி.பி.7-ம் நூற்றாண்டில் சமணத்திலிருந்து சைவத்துக்கு மாறிய மகேந்திர பல்லவன் ஏற்படுத்தினான் எனக் கூறுகிறது"[16].

> "இக்கோயிலின் அமைப்பு தென்னகத்தில் உள்ள மகேந்திரவர்மனின் மற்ற கோயில்களை ஒத்துள்ளது"[17].

மேலும் சித்தன்னவாசல் ஓவியங்களைப் பற்றிக் கூறும்போது,

> "7-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஏற்படுத்தப்பட்ட இந்த சித்தன்னவாசல் ஓவியங்கள் அஜந்தா ஓவியத்துக்கு முன்னோடியாகத் திகழுகின்றன"[18].

புதினத்திலும் மகேந்திரவர்மன் அஜந்தாவைக் கண்டு வந்து தன் காதலி அஜந்தாவை மாதிரியாக வைத்து ஓவியங்களைத் தீட்டியதாகக் காட்டப்படுகிறது.

மகேந்திரவர்மனுக்கு உரித்தான விருதுகள் பற்றியும் அத்தாட்சிகள் காணக்கிடக்கின்றன. அவை திருச்சிராப்பள்ளி மலைக்குகையில் காணப்படுகின்றன. மகேந்திரவர்ம பல்லவன் பற்றிப் பெரியபுராணமும் கூறுகிறது. சமணத்தினின்று சைவத்துக்கு மாறியதை இக்குறிப்பின் மூலம் அறியவியலுகிறது.

மகேந்திர பல்லவன் சைவத்துக்கு மாறியபிறகு எடுத்த குகைக்கோயில்களில் பல்லவபுரமும் ஒன்று. ஆனால் தற்போது அது முகமதியர்களின் தர்காவாகத் திகழ்ந்து வருகிறது. (பி.இ.காண்க) மகேந்திரவர்மனின் உயிர்த்தோழன் நிருபகேசரி

கொடும்பாளூர் இளவரசன். நிருபகேசரி என்பது அரசர் சிங்கம் எனப் பொருள்படும். இவன் இளமையில் பாம்புகளோடு வளர்ந்தான் என்று கொடும்பாளூர் சாசனம் கூறுகிறது. . . . . இதன் பொருள் பற்றி ஆராய்ச்சியாளர்கள் கூறும் கருத்து பாம்பு என்றாலும் நாகம் என்றாலும் ஒன்றே. தென்னிந்தியாவில் நாகம் என்னும் இனத்தவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குப் பாம்பு அல்லது நாகம் அடையாளச் சின்னம். பல்லவ அரசர்களுள் ஒருவன் நாக அரசர் மகளை மணம் செய்துகொண்டு அரசுரிமையைப் பெற்றான் என வரலாறு கூறுகிறது.

> "வேலூர்ப்பாளையத்துச் செப்புச்சாசனம் பல்லவ அரசர் வழியில் வந்த வீரகூர்ச்சன் என்பவன் நாக அரசருடைய மகளை மணம் செய்துகொண்டு நாகர் அரசுரிமையைப் பெற்றான் எனக் கூறுகிறது. நாகர் சம்மந்தம் பெற்றபடியினாலே பல்லவர்க்கு நாகர் என்னும் பெயரும் உண்டு"[19]

எனத் தெரிகிறது.

நாகருக்குரிய பாம்புக் கொடியைப் பல்லவ அரசரும் கொண்டிருந்தார்கள். காஞ்சிபுரத்து வைகுந்தப் பெருமாள் கோயிலைக் கட்டிய இரண்டாம் நந்திவர்மனான பரமேசுவர வர்மன் பாம்புக் கொடியுடையவன் என திருமங்கையாழ்வார் கூறுகிறார்.

> "தேம்பொழில் குன்றெயில் தென்னவனைத்
> திசைப்பக் செருமேல் வியந்து அன்றுசென்ற
> பாம்புடையப் பல்லவர்கோன் பணிந்த
> பரமேச்சுர விண்ணகரமதுவே"[20]

கொடும்பாளூர் அரசனான நிருபகேசரி இளமையில் பாம்புகளோடு வளர்ந்தான் என்று கூறுவதன் மூலம் அவன் பல்லவ குடும்பத்தில் வளர்ந்தான் என்பதை அறிய முடிகிறது. கொடும்பாளூர் சிற்றரசர் பல்லவரோடு நட்புறவுடன் இருந்தமையால் தன் மகன் நிருபகேசரியை பல்லவ அரண்மனையில் வளரவிட்டான்.

இதனைப் புதினத்தின் போக்கிலும் அறியமுடிகிறது. சிம்மவிஷ்ணு மகேந்திரவர்மனிடம் உன் உண்மையான நண்பன் நிருபகேசரியே என்றும், மகேந்திரனைக் கூனனிடமிருந்து காப்பாற்ற அவன் செயல்களை கண்காணிக்க நிருபகேசரிக்கு கட்டளையிடுவதிலிருந்தும் அறிய முடிகிறது. இவன் தந்தை சங்கிருது சிம்மவிஷ்ணு காலத்திலும், நிருப கேசரி மகேந்திரவர்மன் காலத்திலும் இருந்தனர் என்பதால் நிருபகேசரி இளமையில் மகேந்திரனோடு வளர்ந்தான் என்பது புலப்படும். இவன் மகன் பரமதுர்க்கமர்த்தனன் வாதபிஜித் மகேந்திரனின் மகன் மாமல்லன் நரசிம்மனோடு வாதாபி சென்று ஜெயக்கொடி நிறுவியவன். இவ்வாறு பரம்பரையாக கொடும்பாளூர் அரசர்கள் பல்லவ அரசர்களுடன் நட்புறவு கொண்டு அவர்களுக்கு உயர் நண்பர்களாக இருந்தனர்.

**கொடும்பாளூர் அரசபரம்பரை**

பாண்டியன் யானைப்படையை வென்றவன்

பிரவீரஜித்து

வரதுங்கன் (மழவரை வென்றான்)

அதிவீர அனுபமன்

சங்க கிருத்து

நிருபகேசரி (பாம்புகளோடு வளர்ந்தான்)

பரதுர்க்கமர்த்தனன் (வாதபிஜித்)

சமராபரணன் (யதுவம்சகேது)

சாளுக்கியரை அதிராசமங்கலத்தில் வென்றான்

சோழன்மகன் அறுபமையை மணந்தான்

பூதிவிக்ரமகேசரி

என்பது கொடும்பாளூர் அரசபரம்பரை குறித்த பட்டியலாகும்.

**சமுதாயப் பின்புலம்**

சமுதாயம் என்பது மக்களை உள்ளடக்கியது. மக்களே சமுதாயம். அவர்களது வாழ்க்கை முறை, கல்வி, வாணிபம், சமயம் எனப் பலவற்றை உள்ளடக்கிறது. சிம்மவிஷ்ணு மகேந்திரவர்மன் அவர்களது காலம் 6, 7-ம் நூற்றாண்டாகளாகும். அக்காலத்தில் மக்களிடையே பல சமயங்கள் பரவியிருந்தன. கபாலிகம், பைரவம், காளமுகம், பாசுபதம் ஆகிய சைவப்பிரிவுகள் நாட்டில் மலிந்திருந்தன. மக்கள் கலையார்வம் முடையவர்களாகவும் இருந்தனர். சைவம்தவிர சமணமதத்தையும் மக்கள் பின்பற்றிவாழ்ந்தனர். இவற்றிற்கான விளக்கங்களை சமயப் பின்புலத்தில் காணலாம். நரபலி கொடுக்கும் பழக்கம் இருந்தது. மந்திரம், ஏவல், பில்லிசூன்யம் வைத்தல் அக்காலத்தே இருந்திருத்தல் கூடும் எனப் புதினத்தின் மூலம் அறியமுடிகிறது.

புதினத்தில் பேய்க் கணவாயில் காணப்பட்டவர்கள் மேற்கூறிய சைவப் பிரிவினையில் யாரைப் போலவும் இல்லை. அவர்களது கிராமத்திற்கு மகேந்திரபல்லவனும் நண்பர்களும் அழைத்துச் செல்லப்படுகின்றனர். அவர்கள் நரபலி இடும் கூட்டத்தினரைப் போலக் காணப்பட்டார்கள். அவர்களது தலைவன் விசித்திரசித்தன் அவர்கள் மகேந்திரன் கூட்டத்தினரைக் கண்டதும் கூச்சலிட்டனர்.

மகேந்திரன் காயத்ரி மந்திரத்தை உச்சாடனம் செய்துகொண்டு காஞ்சி காமாட்சியை மனதில் இருத்திக் கொள்கிறான். மேலும் “அமாவாசை இருட்டுமல்லாது, அன்றைக்குத் தொடங்கும் செயல் அற்புதத்தை விளைவிக்கும் என்பது நம்பிக்கை”[21] என்ற பழக்கம் அன்றிலிருந்து இன்றுவரை தொடர்ந்து வருகிறது. அக்காலத்தில் உயிர்ப்பலியிடுதல் வழக்கத்தில் இருந்துவந்தது. புதினத்தில் பேய்க்கணவாயில் விசித்திரசித்தன் அவ்வழியே வருவோரை காளிக்குப் பலியிடுதலை ஆசிரியர் காட்டுகிறார்.

> “கபாலிகர், பாசுபதர் முதலிய சைவ சமயபிரிவினர் பைரவருக்கும், காளிக்கும் செந்நீரையும், மதுவையும் படைத்தல் வழக்கம். இவ்விரு

கடவுளர்க்கும் உயிர்களை பலியிட்டு வந்தனர்”[22].

இவ்விதமே அந்நாளைய சமுதாயம் இருந்தமைக்கு எண்ணற்ற சான்றுகள் உள்ளன. இங்கு காயத்ரி மந்திரம் பேய்பிசாசுகளை விரட்டவும் அன்னை காமாட்சியிடம் உள்ள பக்தி அவர்களைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கையும் புலப்படுகிறது.

அக்காலத்திய அளவை முறைகளான இலவம், காட்டம் என்பவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

> “அடி காமாட்சி நீ காஞ்சியிலிருந்து ஒரு கணத்தில் உலகை வலம் வருபவள். இங்கே வருவதற்கு ஓர் இலவம் அல்லது காட்டம் போதுமே”[23]

என்ற வரிகள் அக்காலத்திய அளவை முறைகளைக் குறிக்கிறது. இலவம் என்பது கணத்தைக் காட்டிலும் குறைந்த கால அளவுடையது.

அக்காலத்தில் நேரத்தை அறிவதற்கு நாழிகை காட்டும் குறுநீர்க்கன்னல் பயன்படுத்தப்பட்டு வந்தது. மணல் கடிகாரம் போன்று நீரினால் நேரத்தை அறியப் பயன்படுத்தப்படும் அக்காலத்திய அப்பழக்க வழக்கத்தை ஆசிரியர் அப்படியே நம்மை அழைத்துச் சென்று காட்டுகிறார்.

> “நாழிகை காட்டும் குறநீர்க்கன்னல் புலர்ந்து பத்து நாழிகைக்கு மேல் ஆகிவிட்டன”[24]

என்பதைக் காட்டுகிறது. இது புதினத்தின் போக்கில் இயல்பான முறையில் கூறப்பட்டுள்ளது.

மேலும் “மைபோட்டுப்பார்ப்பது கறுப்பு தெய்வங்களை வசியப்படுத்தி தீமைகளைச் செய்யும் அபிசாரவாதிகளும் நிறைந்திருந்தனர்”[25] என்பதும் சுட்டப்பெறுகிறது.

**சமயப்பின்னணி**

அப்பர் என்றழைக்கப்பட்ட திருநாவுக்கரசர் அவரது இளமையில் தருமசேனர் என்ற பெயருடன் சமணமதத்தலைவராக இருந்தார். கதையின் போக்கின்படி மகேந்திரவர்மனை அவர் சந்திப்பதான நிகழ்வு சொல்லப்பட்டுள்ளது. ஒரு காலக்கட்டத்தில் மகேந்திரனும் சமணமதத்தைத் தழுவியவனாகவும் பின்னர் சைவத்துக்கு மாறியதாகவும் வரலாறு கூறுகிறது.

கண்ணுதலோன் நன்னுமிடம் அண்ணல் வாயில் என்று அப்பர் பாடிய சித்தன்னவாயில் சமணர்கள் இருப்பிடமாக இருந்தது. அங்குள்ள ஓவியங்கள் அஜந்தாவைப் பிரதிபலிப்பதால் இது தென்னாட்டு அஜந்தா எனவும் வழங்கப்படுகிறது. ஓவியத்தில் வரையப்பட்டுள்ள மனிதர்கள் சமணத் துறவியாகவும் தாமரை மலரைக்கொய்து கொண்டிருப்பது போலவும் அங்குள்ள அரச ஓவியங்கள் மகேந்திரனை குறிப்பது போலவும் உள்ளது. மன்னர் சமணத்தைத் தழுவி இருந்தபோது சமணத்துக்குத் தொண்டாற்றியுள்ளார். அவர் சைவத்துக்கு மாறியதும் அம்மதத்திற்குத் தொண்டு செய்துள்ளார் என்பதற்கான ஆதாரங்களைப் பார்க்கும்போது அக்காலகட்டத்தின் நிலையை உணரமுடிகிறது.

“பூழியர் தமிழ் நாட்டுள்ள பொருவில் சீர்பதிகள் எல்லாம்
பாழியும் அருகர் மேவு பள்ளிகள் பலவும் ஆகிச்
சூழிருட் டுழுக்கள் போல தொடை மயிற்பீலியோடு
மூழிநீர் கையிற் பற்றி சமணரேயாகிமொய்ப்ப”[26]

என்ற திருஞான சம்பந்தரது பாடல் சமணர்கள் அக்காலத்தில் இருந்தமைபற்றிக் கூறுகின்றன. அவர்களது தோற்றமானது

“பறிமயிறத் தலையும் பாயும் பீலியும் தடுக்கும் மேனிச் செறியுமுக்
குடையுமாகித் திரிபவர் எங்கும் ஆகி அறியுமச் சமயநூலின் அளவினில்
அடங்கிச் சைவ நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமயில் நிகழும்

காலை”[27]

என்ற பாடலின் மூலம் சமணர்களின் தோற்றத்தை அறிய முடிகிறது.

அக்காலகட்டத்தில் இன்னின்ன சமயங்கள் இருந்தன என்பதை “சைவம் விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் கபாலிகள் தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே”[28] என்ற வரிகள் மூலம் அறியலாம்.

மகேந்திரவர்மன் எழுதிய மத்தவிலாசன பிரகசனம் நூலின் மூலம் திருவேகம்பத்தில் கபாலிகர் பாசுபதர் இருந்த செய்தி தெரியவருகிறது.

“மேதினிமேல் சமண்கையர் சாக்கியர்தம் பொய்மிருந்தே
ஆதியருமறை வழக்கம் அருகியரன் அடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றப் பெறாதொழியக்கண்டு
ஏதமில் சீர் சிவபாத இருதயர் தாம் இடருழந்தார்”[29]

என்ற பாடலின் மூலம் ஞானசம்பந்தரின் தந்தை சிவபாத இருதயர் மகேந்திரவர்மன் காலத்தில் இருந்தார் என்பது தெரியவருகிறது.

“உத்திரமேரூர் சுந்தரவதனப் பெருமாள்கோயில் பல்லவ அரசர் கட்டியது. இக்கோயிலின் துவாரபால உருவங்கள் முடிதரித்த அரசர் உருவங்கள் போல் உள்ளன. இத்துவார பாலகருக்கு இரண்டு கைகள் உள்ளன. துலாரபாலகரின் கிரீடத்துக்கு மேலே பாம்புப் படம் எடுத்தது போன்ற உருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. இத்துவாரபாலகருக்குச் சூதுராஜன் என்று பெயர் கூறுகிறார்கள். சூது என்பதற்கு பாம்பு, நாகம் என்றும் பொருள் கூறப்படுகிறது. சூதுராஜன் எனக் கூறப்படுகிற இந்த துவாரபாலகரின் உருவம் பல்லவ அரசரின் உருவம் போலும். பல்லவ அரசன் கட்டிய கோயிலில் நாகப்பாம்பு படத்துடன் பல்லவ அரசன் உருவம் துவாரபாலகராக அமைக்கப்பட்டிருப்பது பொருத்தமுடையது”[30]. மேலும்

> “மகேந்திரவர்மன் மகேந்திர மங்கலம் என்னும் ஊரை மாமண்டூர் பற்றில் ஏற்படுத்தினான் என்பதை திருப்பருத்திக் குன்றத்து வர்த்தமானர் கோயில் சாசனத்தினால் அறியலாம்”[31].

குகைக் கோயில்கள் முதல்முதலில் தமிழ் நாட்டில் அமைத்தவன் இவனே. இவன் காலத்தில்தான் மலையைக் குடைந்த கோயில்கள் பல கட்டப்பட்டன.

சித்தன்னவாயில் குகைக் கோயிலில் உள்ள ஓவியத்தில் நடனமாதருக்கு மூக்கணியில்லை. எனவே அக்கால மக்களிடையே மூக்கணி அணியும் பழக்கமில்லை என்பது புலனாகிறது.

“குகை ஓவியங்களில் ஸ்வதிக் சின்னமானது சமணர்களுடையது என்பதால் சமணசமயம் பரவியிருந்தமை புலனாகிறது. திரிசூலம் என்பது சிவன், பௌத்தர், சமணர் மூவருக்கும் உரியதாக இருந்துள்ளது. சித்தன்னவாயில் வரையப்பட்டுள்ள ஓவியமானது சமணர் துறக்கம் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது”[32].

பௌத்தர்கள் புலால் உண்ணுபவர்களாகவும் இருந்தனர் என மத்தவிலாசப் பிரகசனம் கூறுகிறது. சமணமதம், சைவமதம், பௌத்தாரம் ஆகியவை இருந்தமையை இலக்கியங்கள் மூலமாகவும், செப்பேடுகள் மூலமாகவும் கல்வெட்டுக்கள் மூலமாகவும் அறியமுடிகிறது.

> “தமிழ் நாட்டில் சமய வரலாற்றில் சிவனிய நாயன்மார்களும் மாலிய ஆழ்வார்களும் தோன்றி இந்து சமயத்தின் இரு கண்கள் எனப் போற்றப்படும் சிவனியம்மாலியம் ஆகிய இரண்டு உயிர் சமயங்களும் வேத ஆகமக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு பரவத் தொடங்கின”[33]

என்பதிலிருந்து சக்ரவர்த்தி சிம்மவிஷ்ணு வைணவத்தையும், மகேந்திரவர்மன் சைவத்தையும் தழுவியிருந்தபோது அந்தந்த மதங்களுக்கு ஆதரவு அளித்தமை புலனாகிறது.

> "சமணனாக இருந்த மகேந்திரவர்மன் சைவனாக மாறியமைக்கு திருச்சி குகைக்கோயிலில் உள்ள வடமொழி சுலோகமே சான்றாக விளங்குகிறது. குடுமியான் மலைக் கல்வெட்டில் சித்தம் நமசிவாய எனத் தொடங்கியிருப்பதும் குறிப்பிடத்தக்க சான்றாகும்"[34].

திருப்பாதிரிப் புலியூரில் சமணமடம் இருந்தது. இதற்கு ஆதாரம் சர்வநந்தி என்ற திகம்பரசமணர் எழுதிய லோகவிபாகம் என்ற நூல் ஆகும். மகேந்திரன் காலத்தில் சிம்மசூரி, சர்வநந்தி ஆகிய சமணதிகம்பரர் இருந்தனர். இந்த மடமானது மகேந்திரபல்லவனால் அழிக்கப்பட்டது.

மேற்கூறிய சான்றுகளால் அக்காலத்தில் சைவம், வைணவம், பௌத்தம், சமணம், சைவப் பிரிவுகளான பாசுபதம், பைரவம், கபாலிகம், காளமுகம் ஆகிய சமயங்கள் மக்களிடையே பரவியிருந்தன என்பதை அறியமுடிகிறது. மன்னனான மகேந்திரவர்மன் எந்த மதத்தைத் தழுவியிருந்தானோ அப்போது அந்த மதத்திற்கு ஆதரவு அளித்துள்ளான் என்றும் புலனாகிறது.

பெரியபுராணத்தில் காடவன், பல்லவன் என்று குறிப்பிடப்பட்ட அரசன் சமணத்தினின்று சைவ சமயத்திற்கு மாறினான் எனக் கூறுகிறது.

அந்த அரசன் பாடலிபுத்திரத்திலிருந்த சமணப்பள்ளியை இடித்து அந்த கற்களைக் கொண்டு குணதர வீச்சரம் என்னும் சிவன் கோயிலைக் கட்டினான்.

> "வீடறியாச் சமணர் மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த காடவனும் திருவதிகை நகரிண்கட் கணணுதற்குப் பாடலிபுரத்தில் அமண் பள்ளியொரு பாழிகளும் கூட இடித்துக் கொணர்ந்து குணதரவீச்சரம் எடுத்தான்"[35]

என்பதிலிருந்து அறியலாம்.

சமணமும் சைவமும் அக்காலத்தில் போட்டியிட்டுக் கொண்டிருந்தன. "லிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயர் கொண்ட அரசன் இந்த லிங்கத்தினால் புறச்சமயத்திலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டநாள் நிலை நிற்பதாக"[36] எனக் கூறுகிறது.

திருப்பாதிரிப் புலியூரில் இருந்த சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து அக்கற்களைக் கொண்டு திருவதிகையில் ஒரு சிவன் கோயிலைக் கட்டி அதற்கு குணபர ஈச்சரம் என்னும் பெயரிட்டு வழங்கினான் தொண்டைநாடு சைவநிலையை அடைந்தது எனக் கூறப்படுகிறது.

அக்காலத்தில் செய்யப்பட்ட ஒவ்வொரு சிற்பமும் ஆத்மகீர்த்தியையும் உயிர்ப்பலியிடுதலையும் காட்டுகிறது. பக்தர்கள் மனஉறுதியுடன் நேர்த்திக்கடனை நிறைவேற்றினர். காணப்படும் ஒவ்வொரு சிற்பத்திலும் காளிக்குத் தலையை அறுத்துக் காணிக்கையாகத் தருதலைக் குறிக்கிறது. திருச்சி குகைக் கோயிலில் துர்க்கைக்கு ஒருவன் தன் கழுத்தை அறுத்துப் பலியிடுவது போன்ற சிற்பத்தைக் காணலாம்.

> "பைரவிக்கும் காளிக்கும் உயிர்ப்பலி இடல்
> பண்டைய வழக்கமே என்பது வரலாறு கூறும்
> செய்தியாகும். திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்) சிவபெருமானுக்கு
> கொங்குவீரர் தம் தலைகளையும் நாக்குகளையும்
> பலியிட்டமை கல்வெட்டுச் செய்தியாகும்"[37].

**செம்பியன் செல்வி என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்கள்**

விஜயாலய சோழனால் தோற்றுவிக்கப்பட்ட பிற்காலச் சோழப் பேரரசு அதிராசேந்திரனோடு முடிவடைகிறது. முதலாம் ராசராச சோழன் மகள் குந்தவிக்கும் சாளுக்கிய விமலாதித்தனுக்கும் பிறந்த புதல்வன் ராசராச நரேந்திரன். ராசராச நரேந்திரனுக்கும் முதலாம் ராசேந்திரன் மகள் அம்மங்கைக்கும் பிறந்த புதல்வன் ராசேந்திரன் எனப்படும் குலோத்துங்கள் ஆவான். வீர ராசேந்திரனின் மகன்

அதிராசேந்திரன் பட்டமேற்ற சில நாட்களிலேயே உயிர் துறந்தான். சோழநாடு குழப்பத்துக்குள்ளாகியது. உள்நாட்டுக் கலகம், சேரர் பாண்டியர் சோழநாட்டை அபகரிக்க போரிட்டமை ஆகிய நிலையில் அரசனில்லாத சோழநாட்டை உரிமையின் காரணமாகப் பட்டம் சூட்டி அரசாட்சியை ஏற்றான்.

ஆனால் பகைவர்களால் ஏற்பட்ட குழப்பத்தால் அதிராசேந்திரன் கொல்லப்பட்டான் என்றும் அந்த அவப்பெயர் குலோத்துங்கனுக்கு ஏற்பட்டது எனவும் கூறப்படுகின்றது. தாய்ப்பாட்டன் வீட்டிலேயே வளர்ந்த குலோத்துங்கன் அரசனை இழந்த நாட்டை உரிமையின் காரணமாகப் பெற்று அரசாண்டான் என்பதே வரலாறு கூறும் செய்தி. பட்டம் ஏற்றதும் பாண்டியர் ஐவரையும் முறியடித்துத் தனக்குக் கீழ்க் கொண்டு வந்தான். பராந்தக பாண்டின் ஆட்சியேற்றான். மற்ற நால்வரும் எதிரிகளாகவே இருந்தனர். பட்டம் ஏற்றதும் சேரர், பாண்டியரை அடக்கி உள்நாட்டுக் கலகத்தையும் அடக்கினான். தென்கலிங்க வீமனை வென்றான். வடகலிங்க அனந்தவர்மனைத் தன் படைத்தலைவன் கருணாகரனைக் கொண்டு முறியடித்தான். விக்ரம சோழனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினான். மேலைச் சாளுக்கிய மன்னன் ஆறாம் விக்ரமாதித்தனைத் துங்கபத்திரைக்கு அப்பால் துரத்தியது, தாராவர்ஷனை முறியடித்து வயிராகரத்தை எரியூட்டியது, இலங்கை அரசன் விசயபாகுவை அரியணையில் அமர்த்தியது ஆகியவை அவன் இளமையில் செய்த அரசியல் சார்ந்த போர்களாகும்.

வேங்கி நாட்டை இவனது மக்கள் நால்வரும் இராசராச சோழகங்கன், மும்முடிச் சோழன், வீர சோழன், விக்ரம சோழன் என்பவர்கள் மாறி மாறி அரசப் பிரதிநிதியாக இருந்து ஆட்சி செய்தனர். தன் படைத்தலைவன் கலிங்கம் கொண்ட கருணாகரத் தொண்டைமானுக்குக் காஞ்சியை அளித்து அரசாட்சி செய்துவரச் செய்தனன். இளவரசுப்பட்டம் கட்டப்பட்ட விக்ரமசோழனே இவனுக்குப் பிறகு பட்டமேற்றவன். இவன் ஆட்சியில் உறுதுணையாயிருந்த படைத்தலைவர்கள் கருணாகர பல்லவனும், மணவிற் கூத்தன் காளிங்கராயரும் விக்ரம சோழன் ஆட்சியிலும் பொறுப்பேற்றிருந்தனர்.

**அரசியல் பின்னணி**

விசயாலயனால் தோற்றுவிக்கப்பட்ட பிற்காலச் சோழ சாம்ராஜ்யம் வலுவானதாக பலநூற்றாண்டுகள் சிறப்புற்றிருந்தது.

செம்பியன் செல்வி புதினத்தில் சமுதாயப் பின்புலம் பற்றி அறிந்துகொள்ளவும் வாய்ப்புள்ளது.

"சோழநாட்டில் அரசனது பிறந்த நாள் விழா வெள்ளணி விழா எனக் கொண்டாடப்பட்டது. அச்சமயம் அரசர்கள் வெள்ளணியணிந்து மங்கள வண்ணமாக விளங்குவர். அன்றைய தினத்தில் அவர்கள் சிறை செய்தல், செருச்செய்தல், கொலைபுரிதல் முதலிய தீச் செயல்களை விடுத்து சிறை விடுத்தல், தவிர்த்தல், அறச் செயல்கள் செய்தல், இரவலர்க்கீதல் முதலியவற்றை மேற்கொண்டு விழாவைச் சிறப்புற முடிப்பர். இதனைப் பெருமங்கல விழா எனவும் கூறுவர்.

இதே போல ஆண்டு தோறும் முடிசூட்டிய நாளைக் கொண்டாடுவதாக மண்ணுமங்கலம் என்று வழங்கப்பட்டது. மேற்கண்டவாறு தீமைதவிர்த்து நன்மையை இந்நாளிலும் மேற்கொள்வது வழக்கமாக இருந்தது. இவ்விழாவின் போது சிற்றரசர்கள் திரை செலுத்தி மன்னரை வணங்கிச் செல்வர்"[38].

பாணர், பாடினியர் மன்னரைப் புகழ்ந்து பாடி பரிசில் பெற்றுச் செல்வர். விழாக்காலத்தில் அரண்மனை வீதி பச்சைப் பந்தலிட்டு கோலாகலமாக அலங்கரிக்கப்படும். சுவர் கண்ட இடங்களில் எல்லாம் சுதையிட்டுச் சோழ மரபின் வரலாற்றை ஓவியத்தில் விளக்கியிருந்தனர். வீதியின் மூலை முடுக்குகளில் எல்லாம் நீதியின் மங்கல இசைக் கருவிகள் முழங்கிக் கொண்டிருந்தன. புலிக் கொடியாம் மணிக் கொடிகள் மாட மாளிகைகள், கூடகோபுரங்களிலும் கோட்டைக் கொத்தளங்களிலும் பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தன.

சோழர் பெருமையை இன்னிசையில் எழுப்பினர். . . . . . . ஆங்காங்கு ஆடல்கலை பரிமளித்தது. தேவாரத் திருமுறைகள் ஓதப்பட்டன. வேத்தியல், பொதுவியல் கூத்துக்களும், வினோதக் கூத்துக்களும் கழங்காடல், உத்தி, சாழல் கொற்றி, பிச்சி, வாரிச்சி சித்துப்பிழுக்கை ஆகிய நடனங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. சோழநாடு முழுமையும் நில அளவு அளிக்கப்பட்டது. நிலவரியை ஒழுங்குபடுத்தி நடுநிலை தவறாமல் குடிகளிடத்து வசூலிக்க வேண்டுமாயின் இராஜ்யத்தில் உள்ள நாடுகள் எல்லாவற்றையும் அளந்து அரசுக்கு செலுத்த வேண்டிய வரி நிர்ணயிக்கப்பட்டது. சோழநாடு சோழர்களின் ஆட்சியில் மும்முறை அளக்கப்பட்டது. முதல் முறையாக கி.பி.1001-ம் ஆண்டு ராஜராஜன் ஆட்சி காலத்தில் நடைபெற்றது. முதல் குலோத்துங்க சோழனது பதினாறாம் ஆட்சியாண்டாகிய கி.பி.1086-ல் சோழராஜ்யம் முழுமையும் இரண்டாம் முறை அளந்து கணக்கெடுக்கப்பட்டுள்ளது. "நம் உடையார் சுங்கந்தவிர்த்தருளின குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 16-வது திருஉலகளந்த கணக்குப்படி நீக்கல் நீக்கி பனை நின்ற கொல்லையும் உவரும் உப்பு மண்ணும் ஆய் அறுகெழுந்த படுதரையும் என்று அளந்தநிலத்து"[39] . . . . . . என்ற கல்வெட்டுப் பகுதிகளால் அறியலாம். அன்றைய மக்கள் மன்னனைத் தலைவனாகக் கொண்டு நிலத்தின் தரத்தின்படி அரசன் விதித்த வரிகளைக் கட்டி வந்தனர்.

"தஞ்சை ஜில்லா பட்டுக்கோட்டைத் தாலுகாவில் உள்ள கோயிலூர் என்னும் பெயருடன் நிலவும் திருவுசாத்தானத்தில் காணப்படும் கல்வெட்டுக்களில் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் மூன்றாம் முறையாக அளக்கப்பட்டது"[40].

"இருபத்து மூன்றாண்டுகட்கு முன்னம் நம்முடைய சக்கரவர்த்தி சோழநாட்டை அளக்க வேண்டிப் பயணம் செய்திருந்தார். அப்போது உலகளந்த கோலால் சோழ நாட்டை அளந்தார். சோழ மண்டலம், சுபம்கொண்ட சோழமண்டலம், இராசராசப் பாண்டிய மண்டலம், மும்முடிச் சோழ மண்டலம், வேங்கி மண்டலம், மலை மண்டலம், அதிராசராச மண்டலம் போன்ற சிறந்த மண்டலங்களையும் . . . . . . . . . வளநாடுகளையும், கூற்றங்களையும், சதுர்வேதி மங்கலங்களையும், சிற்றூர்களையும்

பார்வையிட்டும் அளந்தும் சுங்கம் தவிர்த்தும் சுங்கம் தவிர்த்த சோழன் என்ற பட்டப் பெயரை அடைந்தார்"[41].

அரசரைக் கண்ட மக்கள் மகிழ்ச்சியுடனே தமது பிரதிநிதிகளின் மூலம் தங்கள் குறைகளை நீக்க வேண்டினர்.

நகரங்களிலும் பேரூர்களிலும் வாணிகத் தொழில் நிகழ்த்தி வாழ்ந்து கொண்டிருந்த வணிகர் பெருமக்கள் கோவில்களுக்கும் வழிபாட்டிற்கும் திருவிளக்குகளுக்கும் நிவந்தங்கள் அளித்த செய்தி கல்வெட்டுகள் மூலம் அறியக் கிடக்கிறது. அரச குலத்தார் மட்டுமன்றி மக்களும் நிவந்தங்கள் அளித்தனர். சமயம் என்று எடுத்துக் கொண்டால் சிவவழிபாடு அதிகம் இருந்தது.

> "சிவனை மறவாத சிந்தையாளன் என முதலாம் குலோத்துங்கன் போற்றப்படுகிறான். சிவ மதத்தை போற்றுவானேயானாலும் மன்னார்குடியில் குலோத்துங்க விண்ணகரம் என்ற விஷ்ணு கோயில் அமைத்த பெருந்தகையாளன்"[42].

அவனது தளபதி நரலோகவீரன் என்ற காளிங்கராயன் தில்லைப்பதிக்கு அநேக தொண்டுகள் ஆற்றியுள்ளான். சிதம்பரத்தில் சிவகாமி அன்னை கோயிலை எடுப்பித்துள்ளான். விக்ரம சோழன் சிதம்பரத்தில் மேற்குக் கோபுரத்தையும் கோவிலைச் சுற்றியுள்ள பிரகாரத்திற்கு விக்ரம சோழன் பெயரை வைத்துள்ளமையும், அங்கு தனிமாளிகை கட்டிய அவன் இறைவனை வணங்கிவந்தான் என்பதும் புதினத்தில் கூறும் செய்திகளாக அமைந்துள்ளன.

ராஜநரேந்திரன் இறந்த பிறகு குலோத்துங்கனுக்கு கிடைக்க வேண்டிய அரசுபட்டம் கிடைக்காமல் போயிற்று. அவனது சிறிய தந்தை விசயாதித்தன் வேங்கி நாட்டைக் கவர்ந்து ஆட்சி செய்தான். அவனது மாமன் வீரராசேந்திரன் ஆட்சியில் அமர்ந்தான். இவன் கங்கை கொண்ட சோழனின் புதல்வன். எனவே இளம்பருவத்தில் மாமனுடன் சேர்ந்தே அவனுக்குப் புகழ் ஈட்டிப் பலவெற்றிகளைப் பெற்றுத்தந்தான் குலோத்துங்கன்.

அதிராசேந்திரன் பட்டமேற்ற சில நாட்களிலேயே நோய்வாய்ப்பட்டு இறக்கவே சோழநாட்டில் ஏற்பட்ட கலகத்தை அடக்கிப் பாண்டியர் சேகரை வென்று குலோத்துங்கன் என வீராபிஷேகம் செய்து கொண்டான். . . . . . . . .

> "தென்திசைத் தேமரு கமலப்பூக்கள் பொதுமையும், பொன்னியாடை நன்னிலப்பாவை, தனிமை தவிர வந்து புனிதத் திருமணி மகுடம் உரிமையிற்சூடித் தன்னடியிரண்டுந் தடமுடியாகத் தொன்னில் வேநதர் சூட முன்னை மறுவானது பெறுகக் கலியாறு ஹப்பச் செங்கோல் திசை தொறுஞ்செல்ல இராசேந்திரன் (குலோத்துங்கன்) வந்தபோது சோழநாடு அரசனின்றித் துன்புற்றிருத்தமை இக்கல்வெட்டுக்களால் பெறப்படுதல் காண்க"[43].

சந்திரகுலத்தில் தந்தைக்கும், சூரிய குலத்தில் தாய்க்கும் பிறந்த குலோத்துங்கனைப் பண்டு வசுதேவன், மகனாகிய கண்ணனே எனப்பிறந்தான் எனவும், தண்டு, வில், வாள், சக்கரம், சங்கு ஆகிய ஐம்படைத்தாலி அணிந்தவன் என கலிங்கத்தப்பரணி கூறுகிறது.

இவனது இளம்பருவத்தில் செய்த போர்களில் சக்கரக் கோட்ட வயிராகப் போர் சிறந்தது. வயிராகத்தில் யானைகளும் வைரச் சுரங்கங்களும் முற்காலத்தில் மிகுதியாக இருந்தன என அயினி அக்பரி கூறுகிறது. தாராவர்ஷனை வென்றது இங்கு குறிக்கப்படும் செய்தியாகும்.

தண்டநாயகர் காக்கும் நவலையிற் கொண்டயிரங் குஞ்சரமல்லவோ என கலிங்கத்துப் பரணியின் வரிகள் நவிலை நாட்டில் அவன்பெற்ற வெற்றியினை எடுத்து இயம்புகிறது.

சுங்கந்தவிர்த்த சோழன் என்ற செய்தியானது கல்வெட்டுகள் மூலம் அறியப்படுகிறது. குலோத்துங்கனது ஆட்சியில் கடல் வாணிகம் சிறப்புப் பெற்று விளங்கியது.

"குலோத்துங்கச் சக்கரவர்த்தி சோழநாட்டின் ஆட்சி ஏற்ற ஏழாம் ஆண்டில் எழுபத்திரண்டு பெயர்கள் கொண்ட தூதுக்குழு ஒன்றை சீனதேசத்துக்கு அனுப்பிவைத்தார். கண்ணாடிப் பொருட்கள், வாசனைத் திரவியங்கள், கற்பூரம், காண்டாமிருகத்தின் கொம்புகள், ஏலரசி போன்றவை கொண்டு செல்லப்பட்டன"[44].

மேலும் குலோத்துங்கன் இசைத் தமிழிலிலும் புலமையுடையவனாக இருந்ததோடு இசை நூலும் எழுதியுள்ளான்.

இவனது தளபதி "முடிகொண்டான் பிறந்த ஊரான கஞ்சாறு தற்போது ஆனந்த தாண்டவபுரம் எனவும் இக்காலத்து வழங்கப்பட்டு வருகின்றது. திருவிந்தனூர் என்னும் கஞ்சாறு மயூரத்துக்கு அண்மையில் காவிரியாற்றின் வடகரையில் உள்ளது. மேலும் அது தற்போது ஒரு புகைவண்டி நிலையமாக விளங்குகிறது"[45].

பகைவர்களை அடக்கி, பாண்டியர் சேரர் சாளுக்கியர், கலிங்கன் போன்றோரை அடக்கி தன் ஆட்சிக்குக் கீழ் கொண்டுவந்தபிறகு மக்களது நன்மைக்காகவே தேவையற்ற போர்களைத் தவிர்த்தான். இவனது பிறந்த நட்சத்திரம் பூசமாகும். அவனது பிறந்த நாளில் கோவில்களில் சிறப்புப் பூசை நடத்தப்பட்டது. இவனது படைத்தலைவன் கருணாகரன் அனந்தவர்மனை அழித்தமையைக் களத்திலிருந்தே கண்ட புலவர் ஜயங்கொண்டார் கலிங்கத்துப்பரணி பாடினார். பொதுவாக குலோத்துங்கனுக்கு மட்டுமே பரணி பாடப்பட்டுள்ளது. ஆயிரம் யானையைக் கொன்றவனுக்கு பாடப்படுவதே பரணியாகும்.

புதினத்தில் பரணி ஆசிரியர் காலதேவர் எனக் குறிக்கப்பட்டுள்ளார். இவர் பிறந்த ஊர் தீபங்குடி. தீபங்குடியார் எனவும் விளிக்கப்படுகிறார். இவரது இயற்பெயர் குறிக்கப்படாமையால் ஜெயம் கொண்டார் என்ற பெயர் வழங்கலாயிற்று.

கருணாகரத் தொண்டைமான், காளிங்கராயன் ஆகிய இருவரும் விக்ரமசோழன் ஆட்சியிலும் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றுப் பணியாற்றியுள்ளனர்.

விக்ரம சோழனும் கருணாகர பல்லவனும் ஒத்த வயதுடையவராய் இருந்திருப்பர். சிவபக்தனான குலோத்துங்கன் திருநீற்றுச்சோழன் என அழைக்கப்பட்டுள்ளான். மன்னார்குடியில் விஷ்ணுவுக்கு ஒரு பெரிய கோயில் ஒன்று குலோத்துங்கனால் எழுப்பப்பட்டது. அது குலோத்துங்க சோழ விண்ணகரம் என அழைக்கப்பட்டது.

> "சைவ சமயத்தின் விளக்காய் ஒளிர்விட்ட குலோத்துங்க சோழர் ஏனைய மதங்களையும் சமமாக பாவித்து நடத்தினார்"[46].

"கருந்திட்டைக்குடி என்னும் பெயரில் இருந்த ஊரானது சோழச் சக்கரவர்த்தி சுங்கம் தவிர்த்த காரணமாக சுங்கம் தவிர்த்த சோழ நல்லூராக மாறியது"[47].

மாமல்லபுரம் பற்றியும், காஞ்சியின் சித்திரமண்டபம் பற்றியும், நரசிம்ம பல்லவரின் படைத்தளபதி பரஞ்சோதியார் சிறுத் தொண்டராக மாறியது பற்றியும், சிம்மவிஷ்ணு அச்சுதகளப்பாளன் மகேந்திரபல்லவன், பாண்டியன் கடுங்கோ ஆகியோரின் காலம் பற்றியும் புதினத்தில் சொல்லப்படுகின்றது.

புதினத்தில் காட்டப்படும் குலோத்துங்கரது தளபதி

> "மணவிற் கூத்தரான காளிங்கராயர் சிறந்த வீரர் மட்டுமல்லர். சிறந்த சிவபக்தன். தில்லையம்பலத்தில் நடமாடும் ஈசன்பால் பேரன்புடையவர். தில்லை பேரம்பலத்துக்கு செப்புத்தகடு வேய்ந்தமை, நூற்றுக்கால் மண்டபம், பெரிய திருச்சுற்று மாளிகை, தேவாரம் ஓதாதொரு மண்டபம் சிவகாம கோட்டம் கட்டுவித்தமை, திருஞான சம்பந்தர் கோயிலுக்கு பொன்வேய்ந்தமை திருநந்தவனம் அமைத்தமை கடலையமர்ந்தார் கோயிலை கற்றளியாக்கியமை தில்லை பேரேரிக்கு மதகு அமைத்தமை"[48]

ஆகிய செயல்களைச் செய்த பண்பாளர் ஆவார். ஒட்டகப்படை கடல் மணற்பரப்பில் பல்லக்குத் தோற்றமுடன் நின்று கொண்டிருந்தது என்ற வரிகளிலிருந்து, அக்காலத்தில் ஒட்டகப்படை இருந்தமை ஆராய வேண்டிய ஒரு செய்தியாகும்.

“வேளப்படை பற்றிய சிறப்பு முருகக்கடவுள் போரிட்டு பதுமசூரனைக் கொன்ற போரூரிலும் .. . . . . என போர்த்தெய்வம் முருகனுக்கு வேளக்காரன் என்ற பெயருண்டு என்பதை அறிந்துதான் குன்றத்திலும் போரூரிலும் வேளப்படையும் அகப்பரிவாரப் படையும் அமைத்தாயோ”[49]

என குலோத்துங்கன் வினவுதல் வேளப்படையைப் பற்றிய சிறப்பினை உணர்த்துகிறது.

பார் சிறுத்ததால் படை பெருத்ததோ என்ற மொழிக்கேற்ப சோழனின் படைகள் புறப்பட்டுச் சென்றமையை உடனிருந்து கண்ட புலவர்,

“கொண்டைமாகனம் உவனம் வாரனம்
கேழில் ஆளிமா மேழி கோழிவில்
கொண்ட ஆயிரம் கொடி நுடங்கவே
குமுறு வெம்புலிக் கொடி குலாவவே”[50]

மீன்கொடியும், பாம்புக்கொடியும், கருடக் கொடியும், யானைக் கொடியும், பன்றிக் கொடியும் கோழிக் கொடியும், விற்கொடியும் கண்டார். ஆயிரக்கணக்கான கொடியின் அசைவு மேற்கண்டபாடலை வடிக்கச்செய்தது.

தம்மை அடுத்திருந்த பொன் மாளிகையைப் பார்த்த குலோத்துங்கன் நூற்று நாற்பத்து மூன்று ஆண்டுகளை முன்னோக்கி அவருடைய எண்ணம் சென்றது. “தந்தை சுந்தர சோழருக்காக ஆதித்த கரிகாலன் கட்டிய பெருமையை நினைத்துக் கொண்டார். ஆகா அந்தக் கரிகாலருக்குத்தான் எத்தனை பெற்றோர் பக்தி சேவூர் களத்தில் வீரபாண்டியனின் தலைகொண்ட கேசரியாயிற்றே”[51] என ஆதித்த கரிகாலனின் பெருமையும் பொன்மாளிகையையும் பற்றிய செய்தி அறியப்படுகிறது. காஞ்சியில் கட்டப்பட்டுள்ள பொன்மாளிகையிலேயே சுந்தர சோழர் துறக்கம் எய்தினார். பொன் மாளிகை துஞ்சிய தேவர் என்றே குறிக்கப்படுகிறார்.

சித்திர மண்டபத்திலே கொலு வீற்றிருந்த குலோத்துங்கச் சோழர் முன்னிலையில் ஆடல், பாடல் நிகழ்வுகள் நடந்து கொண்டிருந்தன.

"ஐவகைப் பண்களாம் பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி,
விளரியைப்பாடிக் கொண்டிருந்தனர்"[52].

இசையில் வல்லவர்கள் தங்கள் கலைவன்மையைக் காட்டினர்.

"இசைவாணா பாட்டை நிறுத்து . . . . . நான் வகுத்த இசை மரபை என்னிடமே வந்து பாடிக் காட்டியதற்காக மகிழ்கிறேன். ஆனால் பாணிதவறியும், கரச்செலவு வீணாகியும் பாடியது பொறுக்க முடியாது"[53] எனக் கூறுவதிலிருந்து குலோத்துங்கன் இசை வல்லுனன் என்பது பெறப்படுகிறது.

"தாளமும் செலவும் பிழையாவகை தான் வருத்தன தன்னெதிர் பாடியே
காளமுங்களிரும் பெறும் பாணர்தம் கல்வியிற் பிழை கண்டனன்
கேட்கவே என"[54]

கலிங்கத்துப்பரணி கூறும் இவ்உண்மை புதினத்திலும் கையாளப்பட்டுள்ளது.

திறை செலுத்தும் மன்னவர்கள், ஒரு புறம் "தென்னவர், வில்லவர் கூபகர், சாபகர், சேதிபர், யாதவர், கன்னடர், பல்லவர், கைதவர், சங்கர், கராளர், கவிந்தர், துமிந்தர், கடம்பர், துளும்பர், வங்கர், இலாடர், மராடர், விராடர், மயிந்தர், சயிந்த, சிங்களர், வங்காளர், சேருணா, சேவனர், செய்யவர், ஐயணர், கொங்கணர், கொங்கர், குலிங்கர், சவுந்தியா, குச்சரர், கச்சியர், வத்தவர், மத்திரர், மாளுவர், மாகதர் மச்சர், கிலேச்சர், குத்தர், குணத்தர், வடக்கர், துருக்கர், குருக்கர், வியத்தர் ஆகியோர்"[55] திறை செலுத்தினர். பரணித்தலைவன் படைகொண்டான் குலோத்துங்க சோழதேவர்

"கருணாகரனை உச்சி மோர்ந்து உணர்ச்சித்துடிப்புடன் தோள்களைத்
தழுவி மார்பிலே அணிந்திருந்த கவசங்களைத் தொட்டு புளாங்கிதம்
அடைந்தார் மகனே இதோ உன்னுடைய பல்லவ மூதாதையர்கள்
பார்புகழும் வெற்றிகளைக் கொண்ட வீரவாள். நரசிம்ம பல்லவேந்திரர்

இவ்வாளைக் கையாண்டதாக சாசனம் கூறுகிறது. அப்பெருவீரர் சிறு வயதில் வாதாபி கொண்டு புலிகேசியைப் புறமுதுகு காட்டியோடச் செய்ததுபோல் நீயும் கலிங்கம் கொண்டு அனந்தவர்மனை புறமுதுகு காட்டச் செய்"[56]

என்ற வரிகளில் பல்லவ வரலாறு காட்டப்படுகின்றது.

"எத்தனையோ இரவும் எத்தனையோ பகலுமாக பாலாறு பொன் முகரி, பழவாறு, கொல்லி, பெண்ணை, வயலாறு, மண்ணாறு, குன்றியாறு, கிருஷ்ணை, கோதாவரி பம்பாநதி, கோதமை முதலிய ஆறுகளையும் கடந்து சேனா சமுத்திரம் கலிங்கத்தை நெருங்கிக் கொண்டிருந்தது"[57].

காஞ்சியிலிருந்து புறப்பட்ட படையானது எந்தவழியாகச் சென்றது என்பதற்கான குறிப்புகள் இதில் அடங்கியுள்ளன. இதற்கான சரித்திரச் சான்றும் சோழர் வரலாற்றில் சதாசிவப் பண்டாரத்தாரால் குறிக்கப்பட்டது.

இதில் குறிப்பிடப்பட்டுள்ள "பாலாறானது தற்போது காஞ்சிமா நகருக்கு தெற்கே ஓடுகின்றது. அக்காலத்தில் அது வடபுறத்தில் ஓடிற்று என கலிங்கத்துப்பரணியால் அறியமுடிகிறது. இது நிலைபெயர்ந்திருக்க வேண்டுமென்று பிரஞ்சு அறிஞர் லெபாறு என்பார் கருதுவது குறிப்பிடத்தக்கது"[58].

"பொன்முகரி என்ற ஆறு திருக்காளத்தியின் பக்கத்தில் ஓடுகின்றது.

குசைத்தலை என்பது செங்கல்பட்டு ஜில்லாவில் ஓடுகின்றது"[59].

"வடபெண்ணையாறு நெல்லூர் ஜில்லாவில் ஓடுகிறது. கோதமை என்பது தற்போது கௌதமி என வழங்குகின்றது"[60].

"தண்டால் தாக்கினர், . . . . . . . . . . . . . தண்டால், சுருள், கட்டாரி, சேர்ந்தாரைக்கடிக்கும் கருவிரலூகமும், கொண்டையைச் சிலிர்த்துக் கொக்கரிக்கும் சேவற்தலை போன்ற ஆண்டலை அடுப்பு, குத்தினால்

நச்சுப்பாய்ச்சும் குந்தகம், சவளம், ஐவித்துலாம், கணையம், களிற்றுப் பொறி, கழுகுப்பொறி, பிண்டிபாலம், மழு, தோரமரக்கதை, நாராசம், கழுமுள், கூன்நாள், கழற்படை, தோட்டிவேல், உச்சிரம், சக்கரம், கள்ளம், ஊசி முண்டி, முசலம் போன்ற தொண்ணூற்று நான்கு போர்க் கருவிகள்"[61]

குறிக்கப்பட்டுள்ளன. போர் முரசத்தின் ஒலி கேட்ட வீரர்கள் வானதிர வெற்றிக்குரலை எழுப்பினர். அதைத் தொடர்ந்து "பம்பை பம்பம் என்று ஒலித்தது. பனிலங்கள் ஜெயஜெயவென முழங்கின. முருடு முர்முர் என மூக்காரமிட்டது. கரடிகை கரடிபோல் கதைத்தது. அந்தரி சுந்தரம் பேசிற்று திட்டையும் தடாரியும் திக்கெட்டும் முழங்கின. எக்காளமும் கொம்பும் எக்காளமிட்டன"[62] என போர் காலத்தில் வாசிக்கப்படும் இசைக்கருவிகள் குறிக்கப்பட்டுள்ளன.

"பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, திமிலை, குடமுழாதக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தாடரி, அந்த்ரி, முழவு, சந்தரி, வலையம், மொந்தை, முரசு, கணவிடு, தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தருணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறை, முதலான தோற்கருவிகளுள் கரடிகையும் படகம் குடமுழா என்பன இசைப்பாட்டிற்கான அகமுழவாகும்; இனிமைதரவல்லன. கரடிகை கரடியின் குரல் போல் ஒலிப்பது என்பது"[63] அறியத்தக்கது.

இன்றைய கோயில் விழாக்களிலும் பறைபோன்ற இசைக்கருவி ஒலிக்கப்படுகிறது. இசைக்கருவிகள் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டமை பற்றி புதினத்தில் காணப்படுகின்றது. வரலாற்றுப் பின்புலன்களை அறிய கலிங்கத்துப்பரணியே தக்க உதவியாக விளங்குகிறது. கலிங்கத்தை அழிக்கச் சென்ற சோழர்படைக்கு கருணாகர பல்லவனே தலைமை ஏற்றுச் சென்றான்.

"தன் ஆரின் மலர்த்திரள் தோள் அபயன்

தான் ஏவிய சேனை தனக்கு அடையக்

கண் ஆகிய சோழன் சக்கரம் ஆம்"[64]

கருணாகரன் வாரணம் மேற்கொளவே என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

புதினத்தில் கலிங்க அரசன் அனந்தவர்மனுக்கு அமைச்சர் எங்கராயர் கூறும் அறிவுரையானது,

"அரசர் சீறுவரேனும் அடியவர் உரை செய்யாது ஒழியார்கள் உறுதியே

ஏனை வேந்தை ஏறிய சயதரன் தானை அல்லது தான் வரவேண்டுமோ?

விட்டதண்டின் மீனவர் ஐவரும் கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலும்

நீ"[65]

. . . . . . . . என்ற வரிகளிலிருந்து அறியமுடிகிறது. வடவரை வென்றது, வயிராகரத்தை எரித்தது சக்கரர் கோட்டம் அழித்தது போன்றவையும் அறிய வாய்ப்புள்ளது. "வண்டலஞ்சேரி கருணாகரத் தொண்டைமானின் மனைவி அழகிய மணவாள மண்டையாழ்வார் வரதராஜப் பெருமாள் கோயில் விளக்கெரிக்க தானம் அளித்துள்ளதைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது"[66].

"விக்ரம சோழன் சிவன் கூடல் கொழுந்தீஸ்வரர் கோயிலில் தன் பிறந்த நாளான ஆனி உத்திரட்டாதியில் உற்சவம் நடத்த ஏற்பாடு செய்தமை திருப்பேரூர், காட்டாங்குளத்தூர், திருநீர்மலை, திரிசூலம், திருமுக்கூடல், தையூர் ஆகிய இடங்களில் காணப்படும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன"[67].

1125-ம் ஆண்டில் வெள்ளமும் வறுமையும் ஏற்பட்டு மக்கள் துன்புற்றதால் வறுமை நீங்க வரதராஜபெருமாள் கோயிலில் சீரங்கசாயி (எ) விக்கிரம சோழ விண்ணகர் பெருமானுக்கு கருவரைகட்டி சிற்பத்தையும் இடம்பெறச் செய்துள்ளான் என்ற செய்தியும் அறியப்படுகிறது. அந்நாளில் வறுமை நீங்க ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்து கொள்ளும் வழக்கம் உள்ளதை அறிய முடிகிறது.

“இப்போது நமக்கு எதிரியாக இருந்துவரும் சாளுக்கிய விக்ரமாதித்தனின் தந்தை ஆகவமல்லன் பலமுறை பலவாறு நம்மிடம் அவமானப்பட்டான். ஆகவே மல்லனை ஐம்மடிவெங் கொண்டதாகக் கூறும் வீரராசேந்திரர் மெய்கீர்த்தியிலிருந்து ஐந்துமுறை தோற்றோடினான் என்பது புலனாகிறது. அந்த ஆகவலமல்லன் தன்னுடைய தண்டநாயகன் சாமுண்டராயனை நம்பால் சேர்ந்த கீழ சாளுக்கிய நாட்டைக் கைப்பற்ற அனுப்பினான். வீரராசேந்திரர் அவனை முறியடித்ததோடல்லாமல் தலையைத் துணித்து அவனுடைய புதல்வியைக் கைப்பற்றிக் கொண்டுவந்து மூக்கறுத்தார்”[68] என தியாகவல்லி தேவியார் கருணாகரனிடம் கூறுவதைக் கருவூர் கல்வெட்டின் மூலம் அறியலாம்.

சாளுக்கியர்களுக்கும் சோழர்களுக்கும் இருந்த பகை காலம் காலமாக இருந்து வந்தது என்பதை இதைக் கோண்டு உணர வாய்ப்புள்ளது. ஆகவமல்லன் வீரராசேந்திரனோடு ஐந்துமுறை போர் புரிந்து தோற்றான். இதில் கூடல் சங்கப் போரே மிகச் சிறந்தது.

“குந்தளரைக் கூடல் சங்கமித்து வென்ற கோனபயன்”[69] என்னும் கலிங்கத்துப்பரணி பாடலாலும்,

> “சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த துங்கமதயானை
> துணித் தோனும்”[70]

என்ற விக்ரம சோழ உலர்வினாலும், “பாடறிய பரணி பகட்டணிவீழ் கூடலார் சங்கமத்துக் கொண்டகோன்”[71] என்ற ராசராசசோழன் உலாவினாலும் அறிந்து கொள்ளலாம்.

“நான்குமுறை வீர சோழனிடம் தோற்ற ஆகவமல்லன் மனம் வருந்தி திரும்பவும் வீரராசேந்திரனை போருக்கு அழைத்தான். வீரராசேந்திரனும் கூடல் சங்கமத்து சென்று கரந்தை என்னும் இடத்தில் காத்துக் கொண்டிருந்தான். ஒருமாத காலமாகியும் ஆகவமல்லன் வராமற் போகவே வீரராசேந்திரன் மிகுந்த கோபமுற்று இரட்டபாடி நாட்டில் அப்பகுதியிலிருந்த தேவநாதன், சித்தி, கேசி என்று சாளுக்கியத்

தலைவர் மூவரும் தோற்றோடித் தனித்தனியாக முதுகு காட்டி ஓடும்படிச் செய்தான்"[72]. பல இடங்களில் எரியூட்டி துங்கபத்திரைக் கரையில் நானிலம் புகழ ஒரு வெற்றித்தூணும் நிறுவினான்.

> "ஆகவமல்லனைப் போல் ஓர் உருவம் அமைத்துக் கழுத்திற் கண்டிகை பூட்டி அவனும் அவன் மக்களும் தனக் கஞ்சி உலகறிய ஐந்துமுறை முதுகுகாட்டி ஓடிய செய்தியை ஒருபலகையில் எழுதுவித்து அதனை அதன் மார்பில் தொங்கவிட்டு மற்றுஞ் சில அவமானங்களும் செய்வித்தான்"[73].

இன்றும் இது போன்ற கொடும்பாவி எரித்தல் நடைபெற்று வருவது சமுதாயத்தில் காணப்படுகிறது.

அவன் கைப்பற்றியிருந்த வேங்கிநாட்டை மீட்காமல் திரும்புவதில்லை வல்லவனாகில் வந்து காக்க எனச் சொல்லி அனுப்பிவிட்டு வேங்கி நாட்டை நோக்கிச் சென்றான்.

"ஆகவமல்லன் குறிப்பிட்ட நாளில் வராமைக்கு காரணம் சுர நோயுற்று மனக்கவலையுடன் துங்கபத்திரை ஆற்றிற்குப் போய் குருவர்த்தி என்னுமிடத்தில் கி.பி.1068-ம் ஆண்டு மார்ச் திங்கள் 30-ம் நாள் நீரில் மூழ்கி உயிர்துறந்தான் என்று மைசூர் நாட்டில் உள்ள கல்வெட்டு அறிவிக்கின்றது. வேங்கி நாட்டை 1067-ல் விக்ரமாதித்தன் கைப்பற்றி இருக்க அதனை மீண்டும் வீரராசேந்திரன் கைப்பற்றினான். தன் வாழ்நாள் முழுமையும் போரிலேயே கழித்த வீரராஜேந்திரன் எப்போதும் தலைவலி கொடுத்துக்கொண்டிருந்த சாளுக்கிய விக்கிரமாதித்தனுடன் மன உறவின் மூலம் நட்புக் கொண்டான். இவனுக்கு ஒரு புதல்வி இருந்தாள் என்றும் அம்மகளை மேலைச் சாளுக்கிய மன்னனாகிய ஆறாம் விக்ரமாதித்தனுக்கு மணம் செய்து கொடுத்தான் எனவும் விக்ரமாங்கதேவ சரிதம் கூறுகின்றது"[74].

எனவே "வீரராசேந்திரன் புதல்வன் அதிராசேந்திரனுக்கு விக்ரமாதித்தன் மைத்துனன் ஆகிறான். அதிராசேந்திரனுக்கு முடிசூட்டுவிழா நிகழ்த்த முயன்றபோது சோழநாட்டில் பகைவர்கள் புரிந்த இடையூறுகளை எல்லாவற்றையும் சாளுக்கிய விக்ரமாதித்தனே தன் ஆற்றலால் நீக்கி இவனுக்குக் கங்கை கொண்ட சோழபுரத்தில் முடிசூட்டிவிட்டுத் தன் நாட்டிற்குச் சென்றான்"[75] என பில்ஹனர் தம் நூலில் கூறியுள்ளார். இக்கருத்துக்கள் மூலம் மேலைச் சாளுக்கியர் தொடர்ந்து சோழர்களுக்கு துன்பம் இழைத்துக்கொண்டே இருந்தனர் என்பது புலப்படுகிறது.

**பொன்வேய்ந்த பெருமாள் என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுப் பின்புலங்கள்:**

மூன்றாம் ராஜராஜசோழன் இவன் காலத்தில் கி.பி.1016-ல் பட்டமேற்ற முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பான் அறிவு ஆற்றல் வீரம் பொருந்தியவன் அவனது முன்னோர் குறுநில மன்னராக வாழ்ந்தமையும் அவனது இளமைப் பருவத்தில் மூன்றாம் குலோத்துங்கன் பாண்டி நாட்டின் மீது படை எடுத்துப் பலபல அழிவுகளைச் செய்தமையும், மறக்காமல் சோழர் குலத்தை அழிக்க சமயம் பார்த்திருந்தான். "கி.பி.1219-ல் சுந்தரபாண்டியன் பெரும்படை திரட்டிவந்து சோழ மண்டலத்தின் மீது படை எடுத்து வந்தான். சோழனை வென்று நாட்டைக் கைப்பற்றியதுடன் பழைய தலைநகரங்களான தஞ்சையும் உறையூரும் கொளுத்தப்பட்டன. மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், நீர் நிலைகளும் அழிக்கப்பட்டன. சோழன் கரிகாலன் கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்ற புலவர்க்கு முற்காலத்தில் பரிசிலாக வழங்கியிருந்த பதினாறுகால் மண்டபம் மட்டுமே இடிக்கப்படாமல் விடப்பட்டது"[76] என கல்வெட்டுச் செய்தி கூறுகிறது. இச்செய்திகளை,

"தஞ்சையுமுறந்தையுஞ் செந்தழல் கொளுத்தி"[77] என்ற சுந்தரபாண்டியன் மெய்கீர்த்தி மூலமாகவும் "வெறியார் தளவத தொடைச் செயமாறன் வெகுண்ட தொன்றும் அறியாத செம்பியன் காவிரி நாட்டிலரமியத்துப் பறியாத தூணில்லை

கண்ணன் செய் பட்டினப்பாலைக்கன்று நெறியால் விடுந்தூண் பதினாறு மேயங்கு நின்றனவே"[78] என திருவெள்ளறைக் கல்வெட்டு கூறுவதுகண்டு அறியலாம்.

"திருவெள்ளறையில் செய்யுள் வடிவிலிலுள்ள கல்வெட்டொன்று முதல் மாறவர்மன் சுநதரபாண்டின் இராசராசனை வென்று கைப்பற்றிய சேரநாட்டைத் திரும்ப அவனுக்கு அளித்தபோது அதில் ஒரு பகுதியை பிரித்து தனக்கு உதவி செய்த மகதையர் கோனாகிய வானாதிரையனுக்கு வழங்கினான்"[79] எனக் கூறுகிறது.

புதுக்கோட்டைப் பகுதியில் காணப்படும் வாணர்களின் கல்வெட்டுகள் இதனை உறுதிப்படுத்துதல் அறியத்தக்கது.

சுந்தரபாண்டியன் தான் கைப்பற்றிய சோழநாட்டை சில திங்களுக்குள் இராசராசனுக்கு அளித்தமைக்குக் காரணம் "போசாள மன்னனாகிய இரண்டாம் வல்லாளதேவனும் அவன் மகன் வீரநரசிம்மனும் இடையே புகுந்து சோழ மன்னனுக்கு பல வகையாலும் உதவி புரிந்தனர்"[80] என்பதால்தான்.

வல்லாள தேவன் சோழன் மேல் அன்பு பூண்டு ஒழுகியமைக்குக் காரணம் அவன் ஒரு சோழகுலப் பெண்ணை மணந்திருந்தமையே ஆகும்.

"தஞ்சை ஜில்லாவில் உள்ள தலைச் செங்காடு திருவேள்விக்குடி, உடையாளூர் கல்வெட்டுகள் கோப்பெருஞ்சிங்கனும், வான கோவரையனும் சோழன் மீது படை எடுத்தமையைக் கூறுகிறது"[81].

இதனை அறிந்த போசாள மன்னன் வீர நரசிம்மன் என்பான் கி.பி.1222-ல் அந்நாட்டிற்கு பெரும்படையுடன் வந்து அவர்களை அடக்கி நம் ராசராசனுக்கு உதவி புரிந்தான் எனத் தெரிகிறது. கோப்பெருஞ்சிங்கனோ தன்னிச்சையாக சோழனுக்கு அடங்காமல் ஆட்சி செய்ததோடு பாண்டியர் பக்கமும் சேர்ந்து கொண்டான்.

திரை செலுத்த மறுத்த ராசராசன் மீது கி.பி.1231-ல் இரண்டாம் முறை பாண்டியன் போர் தொடுத்தான். இப்படை எடுப்பின் காரணமாக சோழன் தோல்வி கண்டதுமட்டுமல்ல; சோழநாடே அளவிலா துன்பத்துக்குள்ளாயிற்று.

“முடிகொண்ட சோழபுரத்தில் எட்டுத்திசைகளிலும் வெற்றித்தூண் நிறுவி அந்நகரத்தில் விசயாபிசேகமும், வீராபிசேகமும் செய்து கொண்டான் பாண்டியன்”[82].

“தோல்வியடைந்து நாடிழந்த ராசராசன் தன் நண்பனாகிய குந்தள நாட்டு அரசனிடம் உதவி பெறும் பொருட்டு செல்கையில் காடவ மன்னன் இவனைப் போரில் வென்று . . . . தன் தலைநகராகிய சேந்தமங்கலத்தில் சிறைவைத்தான். மீண்டும் போசாள நரசிம்மன படைஎடுத்து வந்து அவனை மீட்டு மீண்டும் அரசானாக்கிச் சென்றான். இதனை கோப்பெருஞ்சிங்கனின் வயலூர் கல்வெட்டு கூறுகிறது. சிறைமீட்ட வீர நரசிம்மன் தன்னை சோழமண்டல பிரதிஷ்டாசாரியன் எனக் கூறிக் கொண்டான். அதன்படியே கோப்பெருஞ்சிங்கனை முறியடித்தான். இதனை திருவயிந்திபுரக் கல்வெட்டு கூறுகிறது”[83].

மேலும் “காவிரியாற்றங்கரையிலுள்ள மகேந்திர மங்கலத்தில் வீர நரசிம்மனுக்கும் சுந்தரபாண்டியனுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது என்றும் வெற்றி எய்திய போசாள மன்னனுக்கு பாண்டியன் பணிந்து கப்பஞ்செலுத்தினான் என்றும் கத்திய கர்ணாமிர்தம்”[84] என்றும் நூல் கூறுகிறது.

இராசராசனுக்குப் பிறகு மூன்றாம் இராஜேந்திரசோழன் வீரநரசிம்மன் புதல்வன் வீர சோமேசுவரனை மாமன் என்று தன் கல்வெட்டுக்களில் குறித்திருப்பது ராசராசன் வீர நரசிம்மன் புதல்வியை மணந்திருத்தல் வேண்டும் என்பது தெள்ளிதிற் புலனாகிறது”[85].

இந்த நிகழ்வுகள் கண்ட கோபாலன் சோழநாட்டின் பழைய நிலைமையை நினைத்துக் காண்பதன் மூலம் புதினத்தில் கூறப்பட்டுள்ளது. தெலுங்குச் சோடனாகிய கண்ட கோபாலன் திருக்காளத்தி தேவன் என அழைக்கப்பட்டான். இவன் தெலுங்குச் சோடன், ஆவன் திக்கன், திரிபுவனச் சக்கரவர்த்தி திருக்காளத்தி தேவன், திக்க நிருபன்,விக்ரமசிங்க நகர அதிபதி, காடுவெட்டி ஆகிய பெயர்கள் இவனுக்கு உண்டு.

மூன்றாம் ராஜேந்திரனின் தந்தை மூன்றாம் ராஜராஜனுக்கு பாண்டியர் இழைத்த கொடுமையும் சோழநாடு அல்லல்பட்டதையும் புதினத்தில் காண முடிகிறது. மூன்றாம் குலோத்துங்கன் பாண்டிநாட்டுக்கு இழைத்த கொடுமைக்கு பாண்டியர் சோழருக்கு கொடுமை இழைத்தமையும் புலப்படுகிறது.

புதினத்தின் தலைவனை, ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் தெலுங்கச் சோழனாகிய விசய கண்ட கோபாலனைப் போரில் வென்று அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த காஞ்சிமா நகரைக் கைப்பற்றினான்.

பின்பு காகதீய மன்னன் கணபதியை வென்று நெல்லூரைக் கைப்பற்றினான்.

"கண்டகோபாலனின் தம்பி வந்து வணங்கவே நாட்டை அவனுக்கு கொடுத்து கப்பம் செலுத்தி அரசு செய்துவர பணித்தான்"[86] என சதாசிவப் பண்டாரத்தார் சோழர் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் மூன்றாம் ராஜேந்திரனுடன் போரிட்டான். போசாளன் அவனுக்கு உதவிசெய்தான். போரில் தோல்வி அடைந்தான் சோமேஸ்வரன். இப்போர் நடந்த இடம் கண்ணனூர் ஆகும்.

கண்ணனூர் என்பது இக்காலத்து சமயபுரம் என்னும் பெயருடன் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே 7 மைல் தொலைவில் உள்ளது. அங்கு போசாளேஸ்வரம் என்ற சிவன்கோவில் இடிந்த கோட்டையும் இருத்தலை இன்றும் காணலாம். புதினத்தில் காட்டப்படும் கோப்பெருஞ்சிங்கன் கண்ட கோபாலன் ஆகியோரின் உதவியுடன் மூன்றாம் ராஜேந்திரன் இரண்டாம் மாறவர்ம சுந்தரபாண்டியனை எதிர்த்து முறியடித்தான்.

அரசர்கள் தம் எடைக்கு எடை பொன்னைக் கொடுக்கும் துலாபாரத்தானம் போலவே, "இரனிய கர்ப்பம் என்பது அக்காலத்தே மன்னர்கள் செய்யும் புனிதகாரியமாக இருந்தது. பொன்னால் ஓர் ஆள் புகுந்து நிற்கும் அளவில் 72" 6' உயரம் தாமரை மொட்டு போன்ற வடிவில் கும்பம் அமைத்து விதிப்படி வேள்வி

ஆசிரியனும் வேதியரும் வேள்வி முதலியன செய்யும் வழியே கிரியைகள் நிகழ்த்த தானம் செய்வார். அதனுள் இருந்து வெளியே வந்து தானம் செய்தல் . . . . . .”[87]எனக் குறிக்கப்பட்டுள்ளது.

பொன்னால் செய்யப்பட்ட பசுவின் வயிற்றில் இருந்து வெளியே வந்து வெள்வியாசிரியனுக்கும் வேதியருக்கும் தானம் வழங்குதல் இரண்யகர்ப்பம் புகுதல் என்றே சொல்லப்படும். இந்த நிகழ்வுகள் புதினத்தின் வாயிலாக அறியப்படுகிறது. நிவந்தங்கள் அளித்தல், இறைவனிடம் நேர்ந்து கொள்ளுதல் ஆகிய பழக்கங்கள் மக்களிடையே மட்டுமல்லாமல் மன்னரிடமும் இருந்தன. கண்ட கோபாலன் ஸ்ரீ ரங்கநாதன் கோயிலுக்குப் பொன் வேய்வதாக வேண்டிக் கொண்டமை குறிப்பிடத்தக்கது. போரில் வெற்றிபெற்றுக் கொண்டுவந்த பொன்னையும் பொருளையும் கொண்டு கோயில் கட்டுதல் வழக்கத்தில் இருந்தது.

சடாவர்மன் சுந்தரபாண்டியன் தில்லைக்கு பொன்வேய்ந்தது, பின்பு கண்ட கோபாலனின் வேண்டுதலுக்கு இணங்க ஸ்ரீரங்கத்தையும் பொன் வேய்ந்தான். சமுதாயத்தில் சிவமதமும் வைணவமும் தழைத்திருந்தன. சமுதாயத்தில் பெண்களை கோவிலுக்கு தானமாக்கும் வழக்கமிருந்தது. பத்மினியை கோயில் பெண்ணாக பணியாற்றும்படி பாண்டியன் கட்டளையிட்டது புதினத்தின் வாயிலாகத் தெரிய வருகிறது. மேலும் கோவிலுக்கு தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் பெண்களை தேவரடியவர்கள் என்றும் தளிக்குலத்தார் என்றும் வழங்கிவந்தமை தெரிய வருகிறது.

சமயப் பொறையுடனே பாண்டியனும் சோழனும் இருந்தமை காட்டப்படுகின்றது.

### கொல்லிப்பாவை என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்கள்

கடம்பின் பெருவாயில் தலைவன் நன்னன் என்றும் பெருந்துறையின் தலைவன் பிண்டன் என்றும் கூறப்பட்டுள்ளது. பிண்டனின் காவல்மரமே வாகை என்றும் பரிமளா அவனை வாகை வண்ணா என அழைப்பதிலிருந்து அறியமுடிகிறது. ஆனால் பிண்டனைப்பற்றிய செய்தி எதுவும் இலக்கியத்தில் சான்றாக அமையவில்லை. கடம்பின்

பெருவாயில் தலைவன் நன்னனுடைய காவல்மரம் வாகை என சில ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவனது மாமரம் தோட்டத்திலிருந்தது எனவும் சுட்டிக் காட்டப்படுகிறது.

ஆகவே ஆராய்ச்சியாளர்கள் கருத்தினைக் கொண்டு காணும்போது கடம்பின் பெருவாயிலுள்ள பெருந்துறை அவன்தன் ஆட்சிக்கு உட்பட்டிருந்திருக்கலாம்.

நார்முடிச்சேரல் இரண்டாம் நன்னனை வென்றபோது தான் இழந்த நாட்டோடு கண்ணியையும் முடியையும் திரும்பப் பெற்றான்.

இதனை கல்லாடனார் பாடலின்மூலம் அறியலாம். . . . . . . . .

"குடா அது இரும்பான் வாகைப் பெருந்துறைச் செருவில் பொலம்பூண்
நன்னன் பொருது களத் தொழிய வாம்படு கொற்றத்தந்த வாய்வாள்
களங்காய் கண்ணி நார்முடிச் சேரல் இழந்த நாடு தந்தனை"[88]

தமிழகத்தின் வடவெல்லையில் இருந்த கொண்கானப் பகுதியின் தலைவன் நன்னன் ஆவான். அவன் தமிழக வேளிர்களுள் ஒருவன். அவன் நாடு பாலிநாடு. தற்போது அது மலபார் மாவட்டத்துக்கு வடக்கே வை நாட்டுக்கு வடகிழக்கில் தற்போது குடகு என்று வகுக்கப்பட்டுள்ள மாவட்டமாகும். இப்பகுதிகளில் நன்னன் பெயர் மரபு குடிப் பெயர்களில் இன்றும் நிலவி வருகிறது.

இங்குப் பேசப்பட்ட மொழியானது திருந்தாத் தமிழாகும். சங்கப் புலவர்கள் நன்னனை தமிழிலேயே பாடியிருந்தபோதும் அவன் நாடு திருந்தாத் தமிழ் பேசிய நிலம் என்பதால் மொழி பெயர் தேயம் என அழைக்கப்பட்டது.

நன்னனின் நாடான பாலிநாடு சுரங்கத் தொழில் மிக்கது. பொன்வளமிக்கது. பாலி இந்நாட்டின் பழமை வாய்ந்த அரணமைந்த நகரங்களுள் ஒன்றேயாம். வியலூர், அரயம் என்பன முக்கிய கோட்டை நகரங்கள். நன்னன் ஆண்ட தலைநகரம் கடம்பின் பெருவாயில். நன்னன் கடம்பமரபினன்; பாலி நாடு கடம்பர் தாயகமான கொண்

கானத்தின் ஒரு பகுதி ஆகும். இங்கு பேசப்பட்ட தமிழ் திருந்தாத் தமிழ் என்பதால் மொழி பெயர் தேயம் என வழங்கப்பட்டது.

**வரலாற்றுப் பின்புலம்**

கதைத்தலைவி பரிமளாவும், எதிர்த் தலைமைப் பாத்திரமான நன்னனும் சந்தித்துக் கொள்வது கடம்பன் பெருவாயிலில் இணைத்தலைமைப் பாத்திரமான நார்முடிச் சேரல் நன்னனைப் பழிவாங்கி, அவனோடு போர் தொடுத்து அவன் காவல் மரத்தை அழித்து பாழிக் கோட்டையிலிருக்கும் தன் மணிமுடியையும் பெறுகிறான்.

கி.மு.125,100-ல் இந்நிகழ்வுகள் நடந்துள்ளமை அறிய வாய்ப்புள்ளது. நன்னனது காலம் மேற்கூறிய ஆண்டுகள் பெண் கொலைபுரிந்த நன்னன், பிண்டனைத் தோற்கடித்தது, கோசர் குலத்துக்கு எதிரியானது, எயினன் போரில் மடிந்தது; பசும் பூண் பாண்டியன் சேனாதிபதி அதிகன் போரில் இறந்தது ஆகிய வரலாற்று நிகழ்வுகள் புதினத்தில் காட்டப்படுகின்றன.

கோசர் குலம் என்பது வீரத்தைத் தன் உயிரினும் மேலாக நினைப்பது, அரசனுக்கு நிகரான செல்வந்தர்கள் இக்குடியில் இருந்துள்ளமை புதினத்தின் மூலம் தெரியவருகிறது. தமது தலைவனுக்காகத் தன் குடிப் பெருமைக்காக உயிரைத் துச்சமென நினைக்கும் பெருவீரர்களே கோசர்கள் நன்னன் மரபினர் பலர் இருந்தமை வரலாற்றில் உள்ளது.

“முதலாம் நன்னன் கி.மு.300-260 வரையிலும் கூந்தலம் வனவாசிக் கடம்பன் கி.மு.260-232 வரை, கடம்பன் எனும் திரிலோசனக் கடம்பன் 190-165 வரை இரண்டாம் நன்னன் (கடம்பின் பெருவாயில்) கி.பி.46-80 நார்முடிச் சேரல் காலத்துக் கடம்பன் கி.பி.80-110 வரை செங்குட்டுவன் காலத்துக்கடம்பன் கி.பி.110-135 வரையிலும் என்று வரலாற்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளனர்”[89].

மலைபடுகடாம் என்ற நூலில் பாடப்பட்டுள்ள நன்னன் வேறு பதிற்றுப்பத்தில் குறிக்கப்படும் நன்னன் வேறு. முந்தியவன் சோழநாட்டையடுத்த செங்கண்மா நாட்டு

நன்னன். பிந்தியவன் சேரநாட்டு எல்லையிலிருந்த பாலி நாட்டு நன்னன் ஆவான் என வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

கடம்பின் வாயில் போரில் நன்னனை எதிர்த்தவன் நான்காம் பத்துக்குரிய நார்முடிச் சேரல் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகன். அவன் முடிசூட்டிக் கொண்டபோது முடிசூட்டுதற்குரிய கண்ணியும் முடியும் பகைவராகிய கடம்பரால் கவர்ந்து செல்லப்பட்டன. ஆகவே அவற்றிற்குப் பதிலாகக் களங்காயால் கண்ணியும் நாரால் முடியும் செய்து புனைந்து பட்டம் பெற்றதால் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்ற பெயர் பெற்றான்.

காப்பியாற்றுக் காப்பியனாருக்கு சேரல் நாற்பதினாயிரம் பொற்காசும் நாட்டிற் பாதியும் அளித்தான். அவ்வரசை மன்னனிடமே கொடுத்து அவனுக்கு அமைச்சரானார் புலவர். வரலாற்றில் நடைபெற்ற போரில் நன்னனுக்கு உதவி செய்த தகடூர் நெடுமிடலை நார்முடிச் சேரல் அவனது இறுமாப்பை அடக்கி அவனைத் தனக்குக் கீழ்ப்படிய வைத்தான் என்பதும் புதினத்தின் வாயிலாக அறிய முடிகிறது. மேலும் நார்முடிச்சேரலின் படைத்தலைவன் ஆய் எயினன் என்பதும் நன்னனின் படைத்தலைவன் மிஞலி என்ற வரலாற்று மெய்மையும் புதினத்தின் மூலம் அறியமுடிகிறது. அக்காலத்திய அரசியலை அப்போது நிகழ்த்த நிகழ்வை அரசியல் பின்புலன்களைப் புதினத்தின் மூலம் அறிய முடிகிறது. நார்முடிச்சேரல் இளையோனாய் இருந்தபோது கடம்பின் பெருவாயில் நன்னன் அவனுக்குரிய பூழிநாட்டைக் கவர்ந்து கொண்டான். நார்முடிச்சேரல் படை எடுத்துச் சென்று வாகைப்பறந்தலை ஆகிய இடங்களில் கடும் போர் நிகழ்த்தினான். நன்னனுக்குரிய வாகை மரத்தை வெட்டி வீழ்த்தினான். இச் செய்தியானது பதிற்றுப்பத்து நான்காம் பத்தில் கூறப்படுகிறது.

"பூழி நாட்டை படை எடுத்தழிஇ"[90]

என காப்பியாற்றுக் காப்பியனார் கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

கடம்பன் பெருவாயில் என்ற நன்னனது நாடு வேலிமேடு என்றாகிப் பின்னர் மௌண்ட் ஏலி அல்லது மவுண்ட்டெலி எனப்பட்டது என்பது சிலரது கருத்து. நன்னனது மலையானது எழில் குன்றம் என்று கூறப்பட்டுள்ளது.

> "நன்னன் நாள் எழில் குன்றம் பெறினும் பொருள்வயின் என்பதைக்
> கொண்டு எழில் குன்றமே மௌண்ட்டெலி"[91]

என கிருஷ்ணசாமி அய்யங்கார் கூறுகிறார்.

மேலும் நன்னனது நாடு எழில்குன்றம் என்பதே என பதிற்றுப்பத்து வரிகள் கூறுகின்றன.

"களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் நன்னனை வென்று தனக்குரிய மணிமுடியையும் மீட்கிறான். வெற்றி பெற்ற அவன் தனது ஆசான் புலவர் காப்பியாற்று காப்பியனாரக்கு நாற்பதினாராயிரம் பொற்காசுகளும் நாட்டில் பாதியும் அளிக்கிறான். அவருக்கு அளித்த பாதி நாட்டை அவனிடமே ஒப்படைத்து அவனிடம் அமைச்சரானார் புலவர்"[92].

இந்த நிகழ்வும் புதினத்தில் காட்டப்படுகிறது. போரில் நன்னனுக்குத் துணையாக நெடுமிடல் அஞ்சி, மிஞலி ஆகியோரும், அகுதை, எயினன் ஆகியோர் நார்முடிச் சேரல் பக்கமும் போரிட்டனர்.

கோசர் குடியன் வீரம் அவர்களது இனப்பற்று மனத்திட்பம், நன்றியுணர்வு ஆகியவை புதினத்தில் காட்டப்படுகிறது. பெண்களுக்கு வாட்பயிற்சி, குதிரையேற்றம் போன்றவை அக்காலத்தே படித்துக் கொடுக்கப்பட்டன. சமயத்தைப் பற்றிய பின்புலன்கள் எதுவும் புதினத்தில் குறிப்பிடப்படவில்லை. சமுதாயம் பெண்ணுக்கு முக்கியத்துவம் கொடுத்தாலும் கொடுங்கோல் அரசன் நன்னனால் பெண்மைக்குப் பாதுகாப்பு இல்லாத நிலை புரியவருகிறது.

அன்றைய நாளில் காட்டப்பட்ட கொல்லிப்பாவையானது இன்றளவும் சமுதாயத்தில் ஒரு அச்சத்தை உண்டு பண்ணுவதாக அமைந்துவிட்டது. தவறு

செய்பவர்களையும், தீமை செய்பவர்களையும் கொல்லிப்பாவை அழகே உருவான மோகினியின் வடிவம் கொண்டு அவர்களை அழைத்துச் சென்று கொன்றுவிடும் என இன்றும் மக்களிடம் நம்பிக்கையுள்ளது.

சமுதாயத்தில் உயர்குடிப் பெண்டிர் ஆண்மக்களைப் போல வாட்பயிற்சி, தேர் ஓட்டுவது, குதிரையேற்றம் முதலியவைகளை குருகுலக் கல்வியுடன் பயின்றனர் என்பது காட்டப்படுகின்றது.

**பூங்குழலி என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்கள்**

சோழன் விஜயாலயன் கி.பி.846-881 வரை ஆட்சி நடத்தியவன். பிற்காலச் சோழர்களின் மறுமலர்ச்சிக்கு காரணமானவன் பிற்கால சோழ சாம்ராஜ்யத்தை உருவாக்கியவன். இவனைப் பற்றி பரகேசரி விஜயாலயன் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. முத்தரையர்களிடமிருந்து தஞ்சையைக் கைப்பற்றி சோழ அரசை நிறுவிய பின்பு சோழநாடு முழுமையையும் கைப்பற்றியதுடன் பகைவர்களையும் அடக்கி ஆண்டான். இவன் பூங்குழலி என்ற புதினத்தில் இணைக் கதைத்தலைவன் பாத்திரமாக காட்டப்படுகிறான்.

"விஜயாலயன் ஆட்சி தொடங்கிய எட்டாவது ஆண்டில் (கி.பி.854-ல்) பாண்டியன் பரசக்கர கோலாகலன் என்பவன் பல்லவரை எதிர்த்து கும்பகோணம் என்னும் ஊரில் போரிட்டான். (குடமூக்குப் போர்) அப்போது பல்லவர்க்குத் துணையாக நின்று போரிட்ட சோழன் விஜயாலயன் ஆவான்"[93].

புதினத்திலும் இது குறிக்கப்படுகின்றது. மீண்டும் கி.பி.862-ல் பரசக்கர கோலாகலன் பல்லவரை எதிர்த்தான். இது அரிசிலாற்றங்கரைப்போர். அப்போது பல்லவமன்னன் நிருபதுங்கவர்மனுக்குத் துணைநின்று பாண்டியரை தோற்றோடச் செய்தான்.

"கி.பி.880-ல் திருப்புறம்பயத்தில் வரகுணபாண்டியனுக்கும் பல்லவர்க்கும் நிகழ்ந்த போரில் (திருட்புறம்புயம்போர்) விஜயாலயன் முதுமை அடைந்த நிலையில் தன்

மூத்த மகன் ஆதித்தனின் வீரத்தைக் கொண்டு பல்லவருடன் சேர்ந்து வெற்றி பெற்றான்”[94].

உடம்பில் (96) தொண்ணூற்றாறு விழுப்புண்கள் பெற்ற பெருவீரன் விஜயாலயன். இச்செய்தியானது புதினத்திலும் காட்டப்படுகிறது.

விஜயாலயரின் மகன் ஆதித்தனுக்கு நந்திவர்மனின் மகள் திரிபுவனியை மணமுடித்துக் கொடுத்திருப்பதும் அரசியல் ரீதியான அந்நாளைய நிகழ்வின்படி நடந்த செயலாகும். அரசர்கள் பகை மன்னர்களின் மகள்களை மணப்பதும், வெற்றி பெற காரணமாயிருந்த மன்னர்களுடன் மணவினை வைத்துக் கொள்வதும் வழக்கம் என்பது காட்டப்பட்டுள்ளது. பாண்டியனின் மகளை நந்திவர்மன் மணந்திருப்பதும் இது போன்றதே.

“கி.பி.854-ம் ஆண்டு பாண்டியருக்கும் பல்லவருக்கும் குடமூக்கு என்றவிடத்து போர் நடந்தது என சின்னமனூர் செப்பேடு கூறுகிறது”[95]. புதினத்தில் கதைத்தலைவன் நந்திவர்ம பல்லவனே இப்போரில் ஈடுபட்டது. பாண்டியன் பரசக்கர கோலாகலன் ஆவான். அவன் பல்லவர், சோழர், கங்கர், மகதர் என்ற அனைவரையும் வென்று புறம்காட்டி ஓடச் செய்தான் என்பது வரலாறு. இப்போரில் நந்திவர்ம போத்தரையன் நேரடியாக கலந்து கொள்ளவில்லை. அவனது மகன் நிருபதுங்கவர்மனே போரில் கலந்து கொண்டான். மகனது வெற்றியும் தோல்வியும் தந்தையையே சாரும் என்பதால் நந்திவர்மனுக்கு இது மானப்பிரச்சனை ஆகியது. குருக்கோட்டைப்போர், தெள்ளாற்றுப் போர் ஆகியவற்றில் வெற்றிகண்ட நந்திவர்மனுக்கு குடமூக்குப் போர் இழுக்காக இருந்தது. அதைக்களையவே அரிசிலாற்றங்கரைப் போர் நடந்தது. வெற்றியும் அடைந்தான் நந்திவர்மன். நந்தியின் உயிர் நண்பன் கேசிகன், கொடும்பாளூர் பூதிவிக்ரம கேசரி, செந்தலை, வல்லம், திருக்கோவலூர் மன்னர்கள், சோழன் விஜயாலயன், அவன் மகன் ஆதித்தன் ஆகியோர் கலந்து கொண்ட போரே அரிசிலாற்றங்கரைப் போராகும்.

புதினத்தில் பூங்குழலியை மீட்க இப்போர் நடந்ததாகக் காட்டப்படுகிறது. புதினத்துக்கு மெருகூட்ட, கற்பனையான கருத்துப் போரே வரலாற்று நிகழ்வு ஆகும்.

கதைத்தலைவன் நந்திவர்மன் தமிழ்மீது ஆறாக் காதல், தீராக் காதல் கொண்டு பல்வேறு இடையூறுகளுக்கிடையும் தமிழ் வளர்த்தான். தமிழுக்காக தன் உயிரையும் ஈந்தான் என்பது வரலாற்று மெய்ம்மையாகும். நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும் என்ற வரிகள் உணர்த்துகின்றன. கதைத்தலைவனான “மூன்றாம் நந்திவர்மன் காலம் கி.பி.846-859 பொத்தப்பிகுலத்துச் சோழன் ஸ்ரீகணடன் உதவியுடன் பாண்டியன் ஸ்ரீமாறனிடமிருந்து பல்லவப் பேரரசை மீட்டான்”[96]. திருவல்லம் சிவன் கோயில், முத்தேஸ்வரக் கோயிலை தர்மமகா தேவிஸ்வரம் என தன் மனைவியின் பெயரால் வழங்கினான். பராந்தகபுரம், அரிஞ்சிகை ஈஸ்வரம், சென்னிஉயகால் நடுகல் கல்வெட்டு, திமுவைகாவூர் கல்வெட்டு, உலகலந்த பெருமாள் கோயில் கல்வெட்டு ஆகியவை இம்மன்னன் காலத்து நிகழ்வுகளை அறிய உதவுகின்றன. கடல் வலிமைமிக்க பேரரசன் இவன். இவன் காலத்தே மயிலை, மாமல்லை ஆகிய துறை முகங்கள் மூலம் கடல் வாணிகம் சிறப்புற்றிருந்தது. இவனது முதல் மனைவி இராஷ்டிரக்கூட அமோகவர்ஷ நிர்வதுங்கனின் மகள் சங்கா ஆவாள். இரண்டாம் மனைவி பாண்டியன் மகள் அடிகள் கண்டன் மாறம்பாவை ஆவாள்.

இவனது மகன் நிருபதுங்கனின் காலம் கி.பி.859-885 வரை. தந்தையுடனே இளவரசுப்பட்டம் பெற்று பல போர்களில் ஈடுபட்டவன். பட்டத்தரசி சங்காவின் மகன். அபராஜிதன் என்ற கடைசி பல்லவமன்னன். இவன் சகோதரன் எனக் கூறுகின்றனர். மாறம்பாவையின் மகனாக இருத்தல் வேண்டும். ஆனால் புதினத்தில் திரிபுவனிமட்டுமே மகளாகக் காட்டப்படுவதால் நிருபதுங்கனின் மகனாக இருப்போனோ என்ற வரலாற்று மயக்கமும் உண்டு.

> “சங்காவின் மகனான நிருபதுங்கவர்மன் பாகூர் பட்டயத்தில் கல்லூரி பலவற்றிற்கு தானம் அளித்தமை கூறப்படுகிறது”[97].

இவன் அரிசிலாற்றங்கரைப் போரில் கலந்து கொண்டவன். இவனது சகோதரனாக

கருதப்படும் அபராஜிதனின் காலம் கி.பி.885 லிருந்து 903 வரை காட்டப்படுகிறது. திருப்புறம்பியப் போரில் ஆதித்தனுடன் சேர்ந்து போரிட்டான். அபர்ஜிதன் போரில் கொல்லப்பட்டதால் சோழநாடு திரும்ப சுதந்திரநாடாக மாற வாய்ப்பு ஏற்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த இருபுதினங்களான காஞ்சிக்கதிரவன், பூங்குழலி ஆகியவற்றின் மூலம் வாதாபி சாளுக்கியர், பல்லவர்களின் நிரந்தர எதிரி என்பதை அறிய முடிகிறது. கெண்டூர் சாசனம், வக்கபேர் சாசனம், மங்களீசன் மகாகூடத்தூண் கல்வெட்டு ஆகியவை அன்றைய பல்லவர்களின் நிலையை விளக்குவதாக அமைகிறது.

பல்லவ மன்னர்கள் வடமொழிக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்தனர். இருப்பினும் அந்த காலகட்டத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் இந்து சமயத்தை வளர்ச்சியுறச் செய்ய தமிழுக்கு முக்யத்வம் கொடுத்தனர். இறையன்பு பற்றிய பாடல்கள் எல்லாம் தேவாரம், திவ்யபிரபந்தம் போன்றவை தமிழின் வளர்ச்சியைக் காட்டுவதாகவும் இந்து சமய மறுமலர்ச்சிக்கு காரணமாகவும் அமைந்தன. அன்றைய சமுதாயத்தில் பல்லவமன்னர்கள் ஆட்சி செய்ததால் தமிழானது தவிப்புற்றிருந்தது. அதை மூன்றாம் நந்திவர்ம போத்தரையன் களைந்து தமிழுக்கு முக்யத்வம் அளத்ததோடு அல்லாமல் தன் உயரினும் இனிதாகப் போற்றிய தமிழ் மொழிக்குத் தன் உயிரையே ஈந்தான்.

“மகாராஜா இன்றிரவு நாங்கள் ஆய்ச்சியர் குரவைக் கூத்து ஊஞ்சலாடி நடத்தப் போகிறோம். நீங்கள் வந்து பார்த்து வாழ்த்துச் சொல்லணும்”[98] என்ற ஆய்ச்சியர் வேண்டுகோளை ஏற்று மாமல்லபுரம் சென்ற நந்தி அங்குள்ள மக்களின் வேண்டுதலுக்கு இணங்க ஆய்ச்சியர் குரவை பார்க்கச் செல்கிறான். ஆய்ச்சியர் குரவை என்பது அக்காலத்திய இசையை மக்களின் பண்பாடு பழக்கவழக்கங்களைக் காட்டுவதாக அமைகிறது. குரவைக் கூத்து, காக்கைக்கூத்து முதலான பலவகை நடனங்கள் இசையோடு நடித்துக்காட்டப்படுவது அக்காலத்திய மக்களின் பண்பாட்டை விளக்குகிறது.

இசையை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்களும் கலம்பகத்தின் இலக்கணங்களும் புதினத்தில் காட்டப்பட்டுள்ளன. கட்டளைக் கலித்துறை,

கலிவிருத்தம், ஊசல் என கதம்பமாலையாகக் கலம்பகம் அமையும் என்பதும் விளக்கப்படுகிறது.

"நானோ மாறம்பாவையோ மகான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்த்தினைப் பெற்றுத் தொல்காப்பியம் பயின்றவர்கள்"[99] என நந்திவர்மன் கூறுவதிலிருந்தும்,

"சுந்தரமூர்த்தி சுவாமிகளும் வறிய கவிஞர்களைப் பொன் கொடுக்க இங்கே தமிழ்ப்புரவலர்கள் இல்லை. காஞ்சிக்குச் செல்லுங்கள் அங்கே தமிழ்க்கர்ணன் இருக்கிறான் என்று பல கவிஞர்களை அனுப்பினார்"[100]

என்பதிலிருந்தும் இவரே கழற்சிங்கர் எனத் துணிய இடமுள்ளது.

அறம் வைத்துப் பாடுதல் அக்காலத்திய வழக்கமாக இருந்திருக்கலாமோ என எண்ண இடம் உள்ளது. சமயம் என்றால் சிவமதமே தலையாயதாக இருந்தது. நந்திவர்ம போத்தரையன் கழற்சிங்கன் என்றும் அழைக்கப்பட்டார் கழற்சிங்கர் காடவர் குலத்தில் தோன்றியவர்.

"கடல் சூழ்ந்த உலகலாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன்
கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்"[101]

என சுந்தர் கூறியது பாடல் விளக்குகிறது. திருத்தொண்டர் தொகையில் கழற்சிங்கரது மனைவி சங்கா எனவும் குறிக்கப்பட்டிருப்பதால் மூன்றாம் நந்திவர்மனே கழற்சிங்கன் என எண்ணித் துணியலாம். சாயல் மயிலே போல் வான் . . . . . . .

"மேயதோர் புதுப்பூ அங்கு விழுந்த தொன்றெடுத்து மோந்தான் அவள் மூக்கை அறுத்தவர் செருத்துணை நாயனார். இவள் புறமதத்தவள்"[102]

எனவும் குறிக்கப்பட்டுள்ளது எனப் புதினத்தில் காட்டப்படுகிறது. சமயப் பொறையே நாட்டில் நிலவியது. சிவனை மறவாத சிந்தையாளன் என கலம்பகம் நந்திவர்மனைக் கூறுகிறது. நாயன்மார்களில் கழற்சிங்கன் என்றழைக்கப்பட்ட பல்லவமன்னன் இரண்டாம் நரசிம்மவர்மனான பரமேஸ்வர வர்மன் எனக் கூறப்படுகிறது. இதுபற்றிய

வரலாற்று மயக்கமும் உண்டு. நந்திவர்மனின் தளபதி கோட்புலியாரும் நாயன்மார்களில் ஒருவராவார். ஐயரடிகள் எனக் கூறப்படும் நாயனார் சிம்மவிஷ்ணுவின் தந்தை சிம்மவர்மன் என ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்.

முற்காலப் பல்லவர்கள், இடைக்காலப் பல்லவர்கள், பிற்காலப் பல்லவர்களின் வம்சாவளியானது பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. (பின்னிணைப்பு எண். ப.4a)

கங்கைநாச்சியார் என்ற புதினத்தின் பின்புலன்களை அக்காலத்திய செப்பேடுகளின் மூலமாக அன்றைய பழக்க வழக்கங்கள் சமயம், அரசியல் பற்றிய செய்திகளை அறியமுடிகிறது.

"சேதுபதிகள் வைகையாறு குண்டாறு போன்றவற்றில் புது அணைகளையும் கண்மாய்களையும் ஏற்படுத்தினர். வைகைவளநாடன் என்றே பட்டப் பெயர்கள் கொண்டிருந்தனர் என்பது அவர்கள் காலத்திய செப்பேடுகளின் மூலமாக அறிய முடிகிறது. அக்காலத்தில் அரசர்கள் பட்டம் ஏற்ற நாளில் கோயிலுக்கு தானதர்மங்கள் செய்வது வழக்கத்தில் இருந்தது என்பதனை இரண்டாம் சடைக்கத்தேவர் வெளியிட்ட மருதங்க நல்லூர் செப்பேட்டின் மூலம் அறியலாம். அம்மன் பர்வதவர்த்தினிக்கு சந்தனக்காப்பு, மஞ்சள்காப்பு, திருவிளக்கு வைத்தல் போன்ற பூசைகளைச் செய்தால் அம்மன் கிராமத்தை வளம் பெறச் செய்வாள் என்று கூறப்படுகிறது"[103].

இவ்வாறு பட்டமேற்ற நாளில் கோயில்களுக்குத் தானம் செய்வது வழக்கத்தில் இருந்தது.

**வரலாற்றுப் பின்புலம்**

சேதுநாட்டுடன் ராமப்பய்யன் போரிட முனையும்போது, "வேண்டாமடா ராமா வீரியங்கள் பேசாதே . . . . சேதுக்கரை தனிலே சென்றவர்கள் மீண்டதில்லை"[104] என மறவர் வீரத்தை திருமலையே கூறுவதாக நாட்டுப்பாடல் அமைந்துள்ளது.

திருமலை நாயக்கர் காலத்தில்தான் மதுரைவீரன் வழிபாடு தோன்றியது. பகைவரின் சூழ்ச்சியால் குற்றம் சாட்டப்பட்டு திருமலை நாயக்கர் ஆணைப்படி மாறுகை மாறுகால் வாங்கப்பட்டு இவ்வீரன் மீனாட்சி அம்மன் சன்னதிக்கு எதிரில் உயிர் நீத்ததாகக் கூறப்படுகிறது.

ரங்காச்சாரியார் போன்ற வரலாற்று ஆசிரியர்கள் திருமலை நாயக்கர் நடத்திய போர்களில் தான் முன் நின்று நடத்தாமல் தனது படைத்தளபதிகளையே அனுப்பி வைத்தான் என்ற குற்றச்சாட்டு உள்ளது.

புதினத்தில் காட்டப்படும் சேதுபதியுடன் போரானது வரலாற்று முக்யத்வம் வாய்ந்தது. கூத்தன் சேதுபதியின் மகன் தம்பித்தேவன் திருமலைநாயக்கர் உதவியடன் இராமநாதபுரத்துக்கு மன்னன் ஆனான். தளவாய் சேதுபதி சிறைப்பிடிக்கப்பட்டார். “அவரின் மருமக்களான இரகுநதத் தேவரும் நாராயணத்தேவரும் கலகம் ளைவித்தனர். . . . . . உண்மை நிலையறிந்த திருமலை ராயக்கர் உடனே தளவாயை விடுதலை செய்து இராமநாதபுரத்துக்கு அரசராக்கினார்”[105].

மேலும் தக்காண முகமதியர்களுடன் உறவுகொண்டு இந்துப் பேரரசான விஜயநகரம் அழிந்து போகக் காரணமாக இருந்ததோடு தக்காண முகமதியர்கள் தங்களை வலுப்படுத்திக்கொள்ள வழிவகுத்தார். இவரைக் கீழ்த்தரமான மன்னர் என்றும் தேசத்துரோகி என்றும் வரலாற்று ஆசிரியர் ரங்காச்சாரியார் கூறுகிறார். சேதுநட்டு மன்னர்கள்,

“இராமநாத சுவாமிக்கு பிச்சிப்பூவும் பச்சைப்பாலும் படைத்து அர்த்த சாமபூசை செய்ய தளவாய் சேதுபதி ஆணையிட்டு ஒரு செப்பேடும் கிராமநாத பண்டாரத்திடம் அளித்துள்ளார் என்ற செய்தியும் தெரியவருகிறது. இறைவனுக்கு செய்யும் நேமருஷ்டைகள் நிவந்தங்கள் பற்றி இச்செப்பேடுகள் அறிவிக்கின்றன. ஒவ்வொரு கோயிலிலும் ஷேமம் என்ற இடம் உண்டு. ஷேமம் என்றால் பாதுகாப்பு என்ற பொருள் உண்டு. இந்த இடம் பூமிக்கு கீழே இருக்கும். இங்குதான் பழைய சாசனங்களையும், சாஸ்த்திரங்களையும் திரவியங்களையும் வைத்திருந்தனர்”[106].

திருமலை நாயக்கர் செப்பேடு வன்னிலம்பட்டிபட்டயம் மீனாட்சி அம்மன் சொக்கலிங்க சுவாமிகள் அனுகிரகத்தால் பாண்டி மண்டலத்திற்கு மன்னராக முடிசூடியவராக திருமலையைப்பற்றி இச்செய்தி கூறுகிறது.

> "நன்னுதல் அங்கயற்கண்ணி தனக்கு நலம் பெறவே உன்னதமாருங்
> கொடிக்கம்பம் மாபலி பீடமுடன் சொன்னம் அளித்துப் பொன்
> பூசுவித்தான் சுகபோகன் எங்கள் மன்னன் திருமலை பூபன மதுரை
> வரோதயனே"[107]

என திருப்பணிமாலை கூறுவதிலிருந்து அவரின் தெய்வத் தொண்டுகள் தெரியவருகின்றன.

"அக்காலத்தில் தண்ணீர் பந்தல் வைப்பது பெரும் புண்ணியமாகக் கருதப்பட்டது. குமரக் கோயில் என்ற இடத்தில் கோவலன் கணவாய் அருகில் அமைந்திருந்த விநாயகர் கோயில், சுமைதாங்கிக் கல், கிணறு, கல்லில் கட்டிய நீர்த்தொட்டி ஆகியவற்றிற்க்கு திருமலை மன்னர் மான்யம் வழங்கினார்"[108] என்பதன் மூலம் மக்களுக்குத் தேவையான பணிகளை மன்னர் செய்து வந்துள்ளார் என்பது தெரியவருகிறது.

"1655-ம் ஆண்டு பெத்தப்பிள்ளை என்ற புன்னைத் தேவனுக்கு பட்டம் கட்டி மரியாதை செய்துள்ளார். கம்பளி அதிகாரம், பாதக்குறடு காலாஞ்சி முதலிய சிறப்புகள் செய்தார். கம்பளி போடுகிற போது பாதகாணிக்கையாக 5 பணம், அரண்மனையிலிருந்து பணமுடிப்பு 60 பணம் கிடைக்கவும், பெண் குழந்தை பிறந்தால் திருமலை புண்ணியக்கா என பெயர் வைத்து தங்கப் பதக்கம் வழங்கியதாக தருமத்துப்பட்டி செப்பேடு கூறுகிறது"[109].

சமயம் சார்ந்த பின்புலன்கள் என எடுத்துக்கொண்டால் நாகர் வழிபாடு இருந்தது. திருமலைநாயக்கர் மற்றும் சேதுபதி மன்னர்களும் சமயப்பொறையுடன் நடந்து கொண்டனர். சிவமதம், வைணவம் ஆகியவற்றுள் சிவமதத்திற்கே மன்னர்கள் அதிகம் தொண்டாற்றியுள்ளது தெரியவருகிறது. அரசியல் பின்புலன்கள் எனக்

காண்போமேயானால் திருமலை நாயக்கர் சேதுபதி மன்னர்களுக்கிடையே ஏற்பட்ட போர்கள், மைசூர் மன்னனுடன் செய்த போர்கள் ஆகியவை புதினத்தின் மூலம் அறிய வாய்ப்புள்ளது. தளவாய் ராமப்பய்யனே அரசருக்கு அனைத்துமாக விளங்கியதும் அவனது கொடுமைகளையும் புதினத்தின் மூலம் அறியமுடிகிறது.

கூத்தன் சேதுபதி, சடையக்கத் தேவன், இரகுநாதத் தேவன், நாராயணத்தேவன் ஆகியோரின் செயல்கள் அரசியல் தொடர்பான நிகழ்வுகள் திருமலை நாயக்கர் தொடர்பான அரசியல் நிகழ்வுகளும் புதினத்தின் மூலம் அறிய முடிகிறது.

சமுதாயத்தில் நாகர் வழிபாடு இருந்தமை புலப்படுகிறது. இன்றளவும் நாகபஞ்சமி போன்ற நாகர் வழிபாடுகள் ஆந்திர மக்களாலும், கர்நாடக மக்களாலும் கொண்டாடப்பட்டு வருகின்றன. பொதுவாகத் தமிழ் மக்கள் நாக தெய்வங்களை அரசமரத்துப் பிள்ளையார் கோவிலில் வைத்து இன்றும் வணங்கிவருகின்றனர்.

மேலும் அந்நாளைய சிற்றூர்களின் பெயர்கள் தொல்காப்பியத்தை அடியொற்றியவையாக அமைந்திருந்தன.

> "தெலுங்கர் அல்லது கன்னடர் வாழ்ந்த சிற்றூர்களுக்கு ஊர் என்றும், கள்ளர்கள் வாழ்ந்திருந்த சிறு கிராமங்களுக்கு பட்டி அல்லது குறிச்சி என்றும், கோட்டை மதிலால் சூழப்பட்ட கிராமங்களுக்கு கோட்டை என்றும், நன்செய் நிலங்கள் நிறைந்து பார்ப்பனருக்கு உரியதான சிற்றூர்களுக்கு மங்கலம்"[110]

என்றும் பெயர்கள் வழங்கிவந்தது வரலாற்றுச் செய்தியாகும். திருமலை நாயக்கர் ஆட்சியில் மட்டுமல்ல தற்போதும் இப்பெயர்கள் வழங்கி வருதல் கண்கூடானது.

புதினத்தின் கதைக்கரு சேதுநாட்டுக்கும் திருமலை நாயக்கருக்கும் இடையே ஏற்பட்டபோர். கதைத்தலைவி கங்கை நாச்சிக்காக இப்போர் நடைபெற்றது என்ற கற்பனை வரலாற்றுச் செய்தியைச் சுவையாக்குகிறது. திருமலைநாயக்கர் தளவாய் சேதுபதிக்குப் பின் இரகுநாதத் தேவனைச் சேதுபதியாக நியமித்தார்.

**சேரன் குலக்கொடி என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்களுக்கு** ஆதாரமாக விளங்குபவை பதிற்றுப்பத்து பாடல்கள் செங்குட்டுவன் மீது பரணர் பாடிய ஐந்தாம் பத்தும், இளங்கோவடிகளின் சிலம்பும், அகம், புறம், நற்றிணை, குறுந்தொகை ஆகிய இலக்கியங்களே ஆகும். பெருஞ்சோற்று உதியனின் பேரனும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கும், சோழன் மணக்கிள்ளியின் மகள் மாறாம்பாவைக்கும் பிறந்த நன்மகனாவான். இவனுடைய இளவல் இளங்கோ. இவனது மாற்றாந்தாய் வேண்மாள் பதுமன் தேவியின் மக்கள் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இவனுக்கு மூத்தவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இவனுக்கு இளையவன். புதினத்தின் கருவானது சிலம்பு எப்படித் தோன்றியிருக்கும் என்ற கற்பனையே. கடம்பர் போர், மோகூர்ப் போர், சோழன் நலங்கிள்ளியினுடன் போர் ஆகியவை புதினத்தில் கதையின் போக்கில் இடம்பெறுகிறது.

"கொங்கணர், கலிங்கர், கொடுங்கருநாடர்,
பங்களர், கங்கர், பல்வேல் கட்டியர்,
வட ஆரியரொடு வண்தமிழ் மயக்கத்து உன்
கடமலை வேட்டம் கட்புலம் பிரியாது
கங்கைப் பேரியாற்றுக்கும் கடும் புனல் நீத்தம்
எங்கோ மகளைஆட்டிய அந்நாள்
அரியமன்னர் ஈ ஐஞ்ஞாற்றுவர்க்கு
ஒரு நீ ஆகிய செருவெங் கோலம்
கண் விழித்துக் கண்டது கடுங்கன் கூற்றம்"[111]

என்ற சிலம்பின் வரிகள் பெற்றெடுத்த அன்னை நற்சோணையைக் கங்கை நீராட்டுவிக்கச் சென்ற யாத்திரையே அது. எதிர்த்தவர்களை தனி ஒருவனே வென்றடக்கி யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பினான் என உணர்த்துகின்றன.

நெடுஞ்சேரலாதன் இறப்பிற்குப் பின் ஏழாம்தலைமுறையில் சீரழிந்த சேரநாட்டை திருத்தி அமைத்தான் இவனது தமயன் களங்காய்கண்ணி நார்முடிச்சேரல். அவனுக்குப் பின் பட்டமேற்ற செங்குட்டுவன் சேரநாட்டின் சிறப்பை உயரச் செய்தான்.

இவனது தலைநகரான மாந்தையைப்பற்றி

"கடும்பகட்டு யானை நெடுஞ்தேர்க்குட்டுவன்
வேந்து அடுமயக்கத்து முரசு அதிந்தன்ன
ஓங்கல் புணரி பாய்ந்து ஆடு மகளிர்
கடல் கெழு மாந்தை"[112]

என்ற நற்றிணைப்பாடல் உணர்த்துகிறது. இதனைப்பாடியவர் அம்மூவனார் என்ற புலவராவார்.

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரனின் ஆட்சியில் செங்குட்டுவன் குடநாட்டுப் பகுதியிலிருந்து தன் தமயனுக்குக் கீழ் இருந்து துணைபுரிந்து வந்தான். அவன் இறந்த பிறகே சேரநாடு முழுமைக்கும் அரசனானான். இவனுக்குப்பின் இவனுடைய தம்பி நார்முடிச் சேரலின் உடன்பிறப்பு பதுமன் தேவியின் இளைய மகன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அரசாண்டான். இவனது மகன் குட்டுவன்சேரலைத் தமிழுக்குத் தாரை வார்த்தார். பெரும்புலவர் பரணரிடம் அவனை ஒப்படைத்தான் எனப் புதினத்தில் காட்டியிருப்பது இக்கருத்துக்கு ஏற்புடையதாக அமைந்துள்ளது.

அந்நாளைய சோழ அரசியல் குழப்பம் நிறைந்ததாக விளங்கியது. சோழருக்குள் ஒற்றுமை இன்மை தலைதூக்கியது. உறையூர்ப்பகுதியை நெடுங்கிள்ளியும், பூம்புகார் பகுதியை நலங்கிள்ளியும், கிள்ளிவளவனும் ஆட்சி செய்து வந்தனர். இத்துடன் மேலும் எழுவர் தனிப்பிரிவினராக சோழநாட்டுப் பகுதிகளை ஆண்டு வந்தனர். இவர்கள் பூம்புகார்ச் சோழரைச் சார்ந்து நெடுங்கிள்ளியை அழிக்கத் திட்டமிட்டனர். இதனை சிலம்பின் வரிகள் உணர்த்துகின்றன.

"மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
இளவரசு பொறாஅர், ஏவல் கேளார்
வளநாடு அழிக்கும் மாண்பினர் ஆதலின்

ஒன்பது குடையும் ஒரு பகல் ஒழித்து அவன்

பொன் புனை திகிரி ஒருவழிப்படுத்தோய்”[114]

என்று கூறுவதிலிருந்து தன் தாயின் உடன்பிறப்பை மதித்து மற்றவர்களை அழித்தான் என்ற உண்மை அறியப்படுகிறது.

மேலும் புதினத்தில், “சிம்ம கர்ஜனை புரிந்த செங்குட்டுவர், ராட்சஸக் கோலமுடன் மீண்டும் சிரித்தார். அது காலத்தின் சிரிப்பாக இருந்தது. வரலாற்றின் வஞ்சினச் சிரிப்பாக இருந்தது. வருங்காலத்தின் ஒருபடிப்பிசை சிரிப்பாகவும் இருந்தது. அந்தச் சிரிப்பு பூம்புகார் பட்டித்தை அழித்துத் தூளாக்கும்வரை அடங்கவே இல்லை”[114] என்ற வரிகள் பூம்புகார் அழிந்தது பற்றியும் கிள்ளியும் மற்ற ஒன்பது பேரும் அழிந்தமை குறித்து உணர்த்துவதாக அமைந்துள்ளன.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை எடுக்க வடதிசைக்குப் படை எடுத்துச் செல்வதற்கு நெடுநாள் முன்பாகவே தன் தாய்க்காக கங்கை கரைக்குச் சென்று எதிர்த்தவரை தனியொருவனாக வென்றது வரலாற்று மெய்மையும் கூட. சிலம்பு இளங்கோவால் எழுதப்பட்டுக் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் அமைத்தான் செங்குட்டுவன் என்பது வரலாறு.

சேரன் செங்குட்டுவன் காலமும் இளங்கோவடிகளின் காலமும் வேறுபடுவதால் சிலம்பு ஒரு கற்பனைக் காவியம் என எண்ணப்படுகிறது. ஆவியர் கோன் வையாவிக் கோப்பெரும் பேகன் நட்பினைப் பெற்றவர் பரணர். பேகன் பரத்தையின் பால் நாட்டம் கொண்டு தன் மனைவி கண்ணகியை பிரிந்து வாழ்ந்ததை அறிந்த அவர் அவனை எடுத்துரைத்து கண்ணகியுடன் சேர்ந்து வாழச் செய்தார் இந்த நிகழ்வும் புதினத்தில் காட்டப்படுகிறது.

சேரன் செங்குட்டுவன், பேகன், கண்ணகி, பரணர் ஆகியோர் சமகாலத்தவர்கள். பேகன் கண்ணகி காலத்தில் தெய்வமாக வழிபடப்பட்ட திருமாவுண்ணியின் கதையானது சிலம்பாக உருவெடுத்தது என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். புதினத்திலோ திருமேனி

என்ற பாத்திரம் மாதவியைப் போல படைக்கப்பட்டுள்ளது. இந்த திருமேனி இளங்கோவை காதலித்து அவரை இப்பிறவியில் அடைய முடியாமல் அவருக்காக தவவாழ்க்கை வாழ்ந்து வருகிறாள். பொற்கொடி என்ற கற்பனைப்பாத்திரம் கண்ணகியை ஒத்ததாகப் படைக்கப்பட்டுள்ளது.

சேரன் செங்குட்டுவனது நண்பன் அறுகைக்கும் மோகூர் அரசன் பழையருக்கும் ஏது காரணம் பற்றியோ பகைமை. போரிலே அறுமை புறமுதுகிட தன் நண்பனுக்காக பழிதீர்க்க மோகூர் அரசன் பழையனுடன் போர் செய்து போரில் வென்று, காவல் மரத்தை வெட்டி முரசு செய்து அதனை பழையரின் மனைவியர் தம் மயிரைத் திரித்துப் பெற்ற கயிற்றால் கட்டி யானையைக் கொண்டு இழுத்துவரச் செய்தான் என்பது வரலாறு.

இந்த வரலாற்று மெய்மையானது புதினத்தில் கற்பனை நயத்தோடு கூறப்பட்டுள்ளது. பழையரின் மகனான திருமாறன் அறுகையைப் பகைக்க அவனுக்காக செங்குட்டுவன் மோகூரை அழிக்கிறான். வரலாற்றில் உள்ளதுபோலவே திருமாறனின் ஆசை நாயகிகளின் கூந்தல் மயிரைத் திரித்து யானையைக் கொண்டு இழுத்துவரச் செய்தான் எனக் கூறப்பட்டுள்ளது.

> "இந்தக் கோதைகளின் கூந்தல்களை மழித்து பலர் பழிக்க நடுச் சந்தியில் நிறுத்துங்கள். மழித்தெடுத்த கூந்தல்களை கயிராகத் திரியுங்கள் . . . . . பழையன் திருமாறனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்துங்கள். அந்த வேம்பினைத் துண்டங்களாகத் தறிப்பித்து கூந்தல்களால் திரித்த கயிற்றினைக் கொண்டு நமது வேழங்களைக் கொண்டு இழுத்து வாருங்கள்"[115]

என புதினத்தில் கூறியிருப்பது வரலாற்றுச் செய்தியே ஆகும். ஆனால் காரணம் மட்டும் கற்பனையாகும். அறுகைக்காக போர் புரிந்தது, மோகூரை அழித்தது, பழையனை வென்றது ஆகியவை வரலாற்றுப் பின்புலன்களாக அமைகின்றன. கடம்பரை வென்ற வரலாற்றுச் செய்தியும் புதினத்தில் காட்டப்படுகிறது.

புதினத்திலும் வரலாற்றிலும் புகார்க் கிள்ளியே சதிகாரனாக வருகிறான். கிள்ளிவளவனோடு போர் செய்து நெடுங்கிள்ளிக்கு உதவியதும் வரலாறே. நெடுங்கிள்ளி செங்குட்டுவனின் மாமன். மாறம்பாவையின் சகோதரன். உறையூர்க்கு கீழ்படியாமல் தாமே சோழநாடு முழுமையும் ஆளவேண்டும் என்ற பெருவிருப்பமுடைய கிள்ளி சேரநாடுவரை சென்று சதிசெய்து செங்குட்டுவனைக் கொல்ல முயற்சியும் செய்கிறான். முடிவில் கிள்ளியும் அவனுக்குத் துணைபுரிந்த ஒன்பது சோழ சிற்றரசர்களும் செங்குட்டுவனால் முறியடிக்கப்படுவதே வரலாறு. இந்த மெய்மையும் புதினத்தில் இழையோடி வந்து கதையை நடத்திச் செல்கிறது.

“. . . . வெந்திறல்
ஆராச் செருவின் சோழர் குடிக்கு உரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத்து இறுத்து
நிலைச் செருவின் ஆற்றலை அறுத்து”[116]

என்ற பதிற்றுப்பத்து வரிகளால் இந்த வரலாற்று உண்மையை அறியமுடிகிறது.

“எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகு ஆர் கழனியின் இதனத்து ஆங்கன்
ஏதிலாவின் கவலை கவற்ற
ஒரு முலை அறுத்த திருமாவுண்ணி”[117]

என்று மருத இளநாகனார் பாடிய நற்றிணைப்பாடலே சிலம்பு பிறக்க காரணம் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. மருத இளநாகனார் செங்குட்டுவருக்கு இரண்டு மூன்று தலைமுறைகள் கழித்து வாழ்ந்தவர். இவர் மதுரைக்காஞ்சிபாடிய மாங்குடி மருதனாரின் மகனாவார். திருமாவுண்ணி,

“சேரன் செங்குட்டுவன் காலத்தில் பத்தினித் தெய்வமாக வழிபடப்பட்டாள். பரண்கள் மேல் அமைக்கப்பட்ட மரப்பலகைக் கோயில்களில் வணங்கப்பட்டு வந்தாள்”[118].

இளங்கோவடிகள் காலம் கி.பி.3-ம் நூற்றாண்டு சிலம்பில் திருமாவுண்ணியின் கதையே கூறப்பட்டது எனலாம்.

“திருமாவுண்ணிக்கு பதிலாக கண்ணகி என்ற பெயரை பத்தினிக் கடவுளுக்கு அளித்து பேகன் கண்ணகி கதையை சிலம்பில் கூறினார்”[119] என சிவராசபிள்ளை கருதுகிறார். படைப்பாசிரியரோ புதினத்தில் திருமேனியை மாதவியாகவும் கதைத்தலைவி பொற்கொடியை கண்ணகியாகவும் படைத்து சிலம்பு ஆக்கப்பட்டிருக்கலாம் என்ற புதிய கோணத்தில் இப்புதினத்தைப் படைத்துள்ளார். சமுதாயத்தில் இசை, நாட்டியம் போன்ற கலைகள் போற்றுதற்குரியனவாக அமைந்துள்ளன. நாட்டியக் கலைஞர்களை மதிப்பவரும் அந்த இனத்தைத் தாழ்த்தி நினைப்பவரும் சமுதாயத்தில் இருந்தனர். பரத்தமை ஒழுக்கம் சமுதாயத்தில் பரவலாக இருந்து வந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. பட்டத்தரசியானவள் நாட்டு மக்களுக்கு தாயைப் போன்றவள் என்பதைக் கோசர்பாடிக்குச் செல்லும் பொற்கொடியின் நடவடிக்கைகள் உணர்த்துகின்றன. கற்பு என்று நெறியானது பெண்களுக்கு மட்டுமல்ல; ஆண்களுக்கும் உரியதே எனக் கதைத்தலைவி பொற்கொடி இளங்கோவிடம் கூறுவது சமுதாயத்தில் பின்பற்ற வேண்டிய நெறியாகும். சேரன் செங்குட்டுவன் ஏகபத்தினி விரதனாக இருக்கவே அவனுடைய வளர்ப்பு மகளான பொற்கொடி தனக்கு வாய்க்கும் கணவனும் அதுபோல இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள். கற்பு என்பது ஆண் பெண் இருபாலருக்கும் உரியது என்ற கொள்கையுடைய பொற்கொடியை சிலம்பில் கண்ணகியாக வரித்திருக்கலாம் ஆசிரியர் என்ற புது அணுகுமுறை சிலம்பு ஒரு கற்பனைக் காப்பியம் என்பதை வலியுறுத்தும் கருத்தாக அமைந்துள்ளது.

மேலும் அந்தக் காலக்கட்டத்தில் பொறை மரபினர்கள் இருந்தமை அறியப்படுகிறது.

> “பூதக்காடு என்பது பொறை மரபினர்களின் ஆதிவாசிகள் வசித்து வந்தகாடு. பஞ்சபூதங்கள் ஒன்று சேர்ந்த ஒரு உருவத்தை அவர்கள் வணங்கி வந்ததால் அந்தக் காட்டுக்கு பூதக்காடு என்ற பெயர் ”[120]

இதனைப் போலவே உம்பர்காடு, வேழக்காடு போன்ற நிலப்பகுதிகளும் இருந்தன என்பது அறியப்படுகிறது.

மன்னர்கள் தம்மைப்பாடும் புலவர்களுக்கு அளவிலா செல்வத்தைப் பரிசாக அளித்துள்ளமை போற்றுதற்குரியது. செங்குட்டுவன் பற்றிய பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்து புலவர் பரணரால் பாடப்பட்டது. அது கேட்டு மகிழ்ந்த செங்குட்டுவன் தன் நாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய உம்பர்காட்டின் வருவாயை வழங்கினான். பின்னர் அவர்பால் தன் அருமை மகன் குட்டுவன் சேரலை ஒப்படைத்து அவனை அறிவுத்துறையில் வல்லவனாக்க வேண்டினான்.

சமுதாயத்தில் ஆசிரியருக்குத் தரும் மதிப்பும் உயர்வும் தமிழர் பண்பாடும் அறியமுடிகிறது. முதிய உருவத்தில் கங்கை நீராடச் செல்வது அக்காலம் தொட்டே இருந்தமை புலனாகிறது. இன்றும் (காசி) கங்கைக்குச் செல்லும் மக்கள் இருந்து வருவது கண்கூடான நிகழ்வாகும். சமுதாயத்தில் சகுணம் பார்க்கும் பழக்கமானது இருந்து வந்துள்ளது. "புதினத்தில் சகுனம் காட்டும் உன்னமரம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. வீரர்கள் போருக்குப் புறப்படும் நாளில் உன்னமரத்தை கவனிப்பர். அதன் இலைகள சிலிர்த்து புன்னகை புரிந்தால் வெற்றி நிச்சயம். வாடிவதங்கிக் காணப்பட்டால் வருவது தோல்வி ஆகும்"[121].

**வேங்கைவனம் என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்கள்**

இந்தப் புதினம் கடைச் சங்ககால நிகழ்வுகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. இதற்குரிய ஆதாரங்கள் இலக்கியங்கள் மூலமாகவே கிடைக்கின்றன. கடைச்சங்ககால அரசனாகிய பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும், கதைத்தலைவன் வேங்கை மார்பனும், புலவர் மாங்குடி மருதனார் முதலானோரும் வரலாற்றுப் பாத்திரங்கள். பாண்டியன் உக்கிரப் பெருவழுதி கானப்பேரெயிலை அழித்தமையே இப்புதினத்தின் கரு. கானப்பேரெயில் தற்போது காளையார் கோயில் என அழைக்கப்படுகிறது. ஏரெயில் கோட்டை ஏழு கோட்டை என அழைக்கப்படுகிறது.

கானப்பேரெயில் கோட்டையானது மிக்கபலம் வாய்ந்தது. அதனைப் பாண்டியன் அழிக்க அதனைக் கண்ணுற்ற வேங்கை மார்பன் துன்பப்பட்டதையும் புறநானூறு இலக்கியச் சான்றின்மூலம் அறிய முடிகிறது.

கானப்பேர் எயில் பற்றியும், அதனை வேங்கைமார்பன் ஆண்டது பற்றியும், . . . "காவற்காடு, காவல் சிற்றூர்கள், ஆழ்ந்த அகழி, உயர்ந்த மதில் . . . . கொண்டிருந்த தன் கானப்பேரெயில் கோட்டையை பறி கொடுத்த வேங்கைமார்பன் ஓலமிட்டு வருந்தியது பற்றியும் சங்கப்பாடல்களில் தெளிவாக செய்திகள் உள்ளன"[122]. உக்கிரப் பெருவழுதிக்கு மிகவும் சிறப்புடைய வெற்றியாக இது விளங்கியதால் "இவன் கானப்போர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி"[123] என சிறப்பித்துக் கூறப்பட்டான் என புறம் 21-வது பாடல் மூலம் அறியலாம்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் மகனே இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நன்மாறன். அவனது மகனே கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி. இவர் வீரத்தோடும் புலமையும் பெற்றிருந்தார். மதுரைக் காஞ்சியை இயற்றிய மாங்குடி மருதனார் இவர் காலத்திலும் இருந்துள்ளார். சங்கப் பாடலிலேயே மிக நீளமான பாடல் அடிகளைக் (782) கொண்டது. இளவயதிலேயே போர்களத்தில் வெற்றிபெற்ற நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடி மருதனார் அவரது பேரனான உக்ரப்பெருவழுதி காலத்திலும் வாழ்ந்துள்ளார்.

"தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் காலம் கி.மு.175-150, அவனது மகன் இலந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் காலம் கி.மு.150-125 கானப் பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியின் காலம் கி.மு.125-100 என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்னர்"[124.]. எனவே உக்கிரப் பெருவழுதி காலத்தில் மாங்குடி மருதனார் வயது மிகுந்த காலத்தில் வாழ்ந்திருக்கலாம் என நம்புதற்கு இடம் உள்ளது. மாங்குடி மருதனார் தமிழ்ச் சங்கத்தில் இருந்து தமிழ் ஆய்ந்தமை புதினத்திலும் காட்டப்படுகிறது.

அகநானூறு அரங்கேறிய இக்காலத்தில் மூவேந்தர்களும் ஒற்றுமையுடன் இருந்தனர் என்பது ஔவைப் பிராட்டியாரின் பாடல்மூலம் அறியலாம். எனவே மக்கள் அமைதியுடன் வாழ்ந்தமை புலப்படுகிறது. தமிழனுக்கு வீரமும் காதலும் இரண்டு கண்கள். அகம் அரங்கேறிய அக்காலத்தில் வீரமும் காதலும் போற்றப்பட்டமையை புதினம் விளக்குகிறது.

கோட்டையின் அமைப்பு, சிலைவார்ப்படம் போன்றவை அந்நாளைய மக்களின் அறிவியல் திறமையை விளக்குவதாக அமைந்துள்ளது. அந்நாளில் பயன்படுத்திய ஆயுதங்கள் பற்றிய குறிப்புகளும் புதினத்தில் காட்டப்பட்டுள்ளன. கல்கவணை என்ற ஆயுதம் பற்றியது,

> "நீண்ட வண்டியில் வரிசையாக பெரிய இரும்பு அகப்பைகள் இருக்கும் ஒவ்வொரு அகப்பையிலும் கல் உருண்டைகளை வைத்து ஸ்பிரிங் முறையிலான பகுதியை தட்டிவிட்டால் கீழிருந்து அகப்பைகள் மேலெழுந்து சாய கல்லுருண்டைகள் தொலைதூரம் வரை பாயும். இது இடைக்காலத்து பீரங்கி போன்றது"[125]

"எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நலனே"[126] என்ற ஔவையின் பாடலுக்கு இணங்க சமுதாயத்தில் ஆண்மக்கள் இருந்தனர் என்பதற்கு கதைத்தலைவனின் குணங்களே ஆதாரமாக அமைகின்றன.

பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தனக்குக் கப்பம் கட்டும் சிற்றரசனான வேங்கைமார்பனது கோட்டையைக் கானப்பேரெயிலை தரைமட்டமாக்கினார். அவரது காலத்துக்குப் பிறகு கடைத் தமிழ்ச்சங்கம் இயங்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

உக்கிரப் பெருவழுதிப் பாண்டியர் காலத்துக்குப்பின் கடைச்சங்கம் நடை பெறாமல் அழிவுற்றது என்பது இறையனார் களவியல் உரை மூலம் உணரப்படுகிறது.

சாம்ராட் அசோகன் என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்றுப் பின்னணிகள்

அசோகரது மூதாதையரான தந்தை பிந்துசாரர், சந்திரகுப்தர் ஆகியோரைப் பற்றிய செய்திகள புதினத்தில் காட்டப்பட்டுள்ளன. அக்காலத்தே அரசர்கள் பட்டம் சூட்டிக் கொண்டதும் தேவநாமப்ரியா என்ற பெயரையும் சூட்டிக் கொண்டனர். கடவுளுக்கு மிக நெருக்கமானவன் என்ற பொருளுடையது அந்தப் பெயர். அதோடு மட்டுமல்லாமல் பிரியதசி என்ற பெயரிலும் அசோகர் குறிக்கப்படுகிறார்.

புதினத்தின் கடைசி பகுதியிலேயே கலிங்கப் போர் பற்றி காட்டப்படுகிறது. அசோகர் தாம் முடிசூட்டிக் கொண்ட எட்டாவது ஆண்டிற்குப் பின்தான் கலிங்கப்போரை நிகழ்த்தியுள்ளார்.

அதற்கான காரணம் குற்றவாளியான தம்பி மகேந்திரன் தப்பித்துச் சென்று கலிங்க எல்லையில் நடமாடி வந்ததாக ஒற்றர்கள் கூடி எதிரிகளின் நாட்டுக்குச் சென்ற தம்பியையும் அந்த நாட்டையும் அழித்ததாகப் புதினத்தில் கூறப்படுகிறது. அசோகர் ஆரம்ப காலத்தில் கொடுங்கோலராக இருந்தார் என்பது கட்டுக்கதை என அறிஞர்கள் கருதுகின்றனர். தன் சகோதரர்களுடன் மிகுந்த பாசத்துடனே இருந்தவர் அசோகர்.

பிற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அசோகரின் பல கல்வெட்டுகளில், "அவருடைய சகோதரர்கள் பற்றிய கனிவான குறிப்புகள் கண்டு எடுக்கப்பட்டுள்ளன. எப்படியெல்லாம் அவர்கள் பௌத்த மதத்தின் தூதுவர்களாக பல நாடுகளுக்கும் சென்று செவ்வனே செயல்பட்டார்கள் என்று அசோகரே பெருமிதத்துடன் பல கல்வெட்டுகளில் குறிப்பிடுகிறார்"[127].

கி.மு.257-ல் அசோகர் முழுமையாக புத்தமதத்தில் சேர்ந்து துறவியானார் ஒருவர் துறவியாகவும், மன்னராகவும் ஒரே சமயத்தில் இயங்கினார் . . . . "அசோகரைப் பொறுத்தவரையில் அரியணையில் அரசராகவும் மற்றபோதில் துறவியாகவும் சுலபமாக அவரால் இயங்க முடிந்தது"[128] தோல்வியுள்ள ஒரு கருத்தை அசோகர் இந்திய மக்களின் மனப் பக்குவத்தால் நிஜமாக்கிக் காட்டினார்.

புதினத்தில் தம்பி மகேந்திரன் மீது அவர் கொண்ட பாசம் காட்டப்படுகிறது. தீயவனான மகேந்திரனும் புதினத்தின் முடிவில் பௌத்தனாக மாறுவது காட்டப்படுகிறது.

இது வரலாற்று மெய்மையாகும். அசோகன் செய்த நற்பணிகள் காரணமாக தர்ம அசோகன் அல்லது புனித அசோகன் என்று அழைக்கப்பட்டான். மதத்திற்கு மாறியபின் எப்படிப்பட்ட கொடூர மனம் படைத்தவனும் நல்லவனாகவும் கருணை உள்ளம் உள்ளவனாகவும் மாறிவிடுவான் என்பதை வலிந்து காட்டவே புத்த மதத்தினர் இக்கட்டுக் கதைகளைக் கூறியதாக வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

அசோகரின் கல்வெட்டு இரண்டில் கூறப்பட்டுள்ள செய்தியானது, "தந்தை தாய் இருவரையும் வணங்கி அவர்களின் அறிவுரையை குழந்தைகள் பின்பற்றவேண்டும் என்பதே அரசரின் விருப்பம். உயிரினங்களிடம் அன்பு பாராட்ட வேண்டியது அவசியம். சொல்லாமை குடிமக்களின் முக்கியமான கடமைகளில் ஒன்று. எந்த விலங்கினத்தைக் கொல்வதும் குற்றம் என்று மன்னர் தெரிவிக்க விரும்புகிறார். உண்மை பேசுவதை எல்லோரும் கடைப்பிடித்தல் அவசியம். ஆசிரியர்களிடம் மாணவர்கள் மிகப் பணிவுடன் நடந்து கொள்ள வேண்டும்"[129].

அசோகன் போதித்தவை சகிப்புத்தன்மை, மரியாதை காட்டுதல், கருணை, உண்மையாக இருத்தல் ஆகியவை. ஆடி, கார்த்திகை, பங்குனி மாதங்கள் மற்றும் புத்தகர்கள் உண்ணாவிரதம் இருக்கும் நாட்களிலும் உயிர்வதை செய்வது தடை செய்யப்பட்டது. அசோகன் பிறந்த நட்சத்திரமான திஷ்யாவும் மௌரிய நாட்டின் நட்சத்திரமான புனர்வசுவும் புனிதமாகக் கருதப்பட்டு அந்நாட்களில் உயிர்வதை செய்வது தடை செய்யப்பட்டது.

அசோகரை பௌத்த மதத்துக்கு மாற்றியவர் அவரது குரு உபகுப்தரே ஆவார்.

> "அசோகரை மதமாற்றம் செய்தவர் அவரது குருவான உபகுப்தர். இவர் அசோகர் காலத்தில் உண்மையாக வாழ்ந்த ஒருவர். கண்கானிதலா என்ற மதுராவில் உள்ள புத்த விகாரத்தில் அவரது பெயர் காணப்படுகிறது. . . . . உபகுப்தரின் நினைவுச் சின்னங்கள் சிந்து மாகாணத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன"[130]

இவர் நறுமணப் பொருள் வியாபாரி குப்தரின் மகன். ஆனால் இலங்கை மரபுப்படி மோகாலி என்பதின் மகன் திஸ்ஸா இருப்பதாக கர்னல் வாடன் குறிப்பிடுகிறார்.

அசோகரது மகன்களான குணாளன், ஜலக், திவாரர் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். குணாளன் சிறியதாய் திஷ்யகக்ஷகாவின் சூழ்ச்சியால் கண்கள் பிடுங்கப்பட்டான். திஷ்யரக்ஷகா மிகவும் கொடியவளாக வரலாற்றிலும் புதினத்திலும் காட்டப்படுகிறாள். இவரது கல்வெட்டு ஆணைகளில் திவாரரின் அன்னை காருவகியைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

புதினத்தில் காட்டப்படும் சந்திரமௌலி என்ற பட்டத்தரசியின் மகன் கற்பனைப் பாத்திரமாகவே இருக்க வேண்டும். சந்திரகுப்தரின் பேரன் என்பதால் சந்திரமௌலி என்ற பெயர் சூட்டப்பட்டிருக்கலாம். மற்ற மகன்கள் பற்றியும் தம்பி மகேந்திரர் மகள் சங்கமித்திரா பற்றியும் அவரது மனைவிகள் அசந்தமித்திரா, வேதிசமாதேவி, காருவகி, திஷ்யரக்ஷகா ஆகியோரைப்பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் சந்திரமௌலி என்ற பெயர் இல்லாமையால் அது கற்பனைப் பாத்திரமாக இருக்கலாம் என்று துணியமுடிகிறது.

அசோகருக்கு தசரதன் என்ற பேரன் இருந்ததாகவும் அவனது வழித் தோன்றல்கள் மௌரிய சாம்ராஜ்யத்தை ஆட்சி செய்ததாகவும் கூறப்டுகிறது.

புத்தபிக்குவாக மாறிய மகேந்திரன் “இலங்கைக்கு காற்றில் பறந்து சென்றார் என்று நம்பப்படுகிறது”[131].

புதினத்தில் புஷ்பமாலிகாவின் மூலம் சந்திரமௌலிக்கு போதிக்கப்பட்ட கருத்துக்கள் புத்தபிரான் கூறியவை. தம்மால் எதைக் கடைப்பிடிக்க முடியமோ அதனையே அசோகர் போதனைகளாக கல்வெட்டில் பொறிக்கச் செய்தார். சிவபக்தரான அவர், புத்தமதம் சார்ந்த மனைவியராலும், குரு உபகுப்தராலும் பௌத்த சமயத்துக்கு மாறி தொண்டு செய்ய ஆரம்பித்தார்.

சமுதாயம் என எடுத்துக்கொண்டால் பெண்கள் அணியும் அணிகலன்களில் மூக்கில் அணி அணியும் மரபு அக்காலத்தில் கிடையாது. சங்கு வளையல்கள் அணியும் பழக்கம் இருந்து வந்துள்ளது. அவை முசிறியிலிருந்து பாடலிபுத்திரத்திற்கு அனுப்பப்பட்டது.

மேலும் ஸ்ரீகாலா என்ற குடும்பஸ்தரின் மகனுக்கு புத்தர் இட்ட கட்டளைகளாகக் கொள்ளப்பட்ட உபதேசங்களுக்கும் அசோகனின் நீதி போதனைகளுக்கும் பல ஒற்றுமைகள் உள்ளது வரலாற்றுக் குறிப்புகள் மூலம் தெரியவருகிறது.

பாலிமொழி சமுதாயத்தில் வழக்கில் இருந்தது . . . “பல்லக்கை பதினாறு பெயர்கள் தூக்கிச் சென்று கொண்டிருந்தனர் . . . . . பாலிமொழியைச் சேர்ந்த நாடோடிக் கீதமொன்றை பாரம் மறக்க இசைத்துச் சென்றனர்”[132] என்ற வரிகள் மூலம் அறியலாம். சாணக்கியரின் அர்த்த சாஸ்த்திரமே அரசாங்க சட்டமாக இருந்தது.

> “சிவமதத்தைத் தவிர்த்து வேறு எந்த மதக் கொள்கைகளும் மகதத்தில் பரவக்கூடாது என்று சாணக்கியர் கட்டிவைத்துச் சென்ற கங்கணத்தை காக்கவே செய்துவந்தனர். பெரிய சக்கரவர்த்தி பிந்துசாரரின் ஆக்ஞையாகவும் இருந்தது”[133]

என்பதிலிருந்து மற்ற மதங்களுக்கு அரசரின் ஆதரவில்லை என்பது தெரியவருகிறது.

ராஜகர்ஜனை என்ற புதினத்தில் காணப்படும் வரலாற்று பின்புலன்களுக்கு வரலாற்றுக் குறிப்புகளும், கர்நாடகப் போர்களும், வரலாற்றுச் சின்னங்களும் சான்றாக அமைகின்றன. நமது நாட்டின் முதல் சுதந்திரப் போராட்ட வீரர்களான ஹைதர்அலியும் திப்பு சுல்தானும் தான் புதினத்தின் கதைத்தலைவர்கள். இவர்கள் காலத்தில் இந்து முஸ்லீம் ஒற்றுமை தழைத்திருந்தது. அரசாங்க அதிகாரிகள் இந்துக்களாகவும் இருந்தனர். அமைச்சர் பூரணய்யா நாட்டின் முதுகெலும்பாகத் திகழ்ந்தார்.

ஹைதர் அலி ஆஜ்மீரில் இருந்து வந்த ஆத்ம ஞானி வலிமுகம்மது என்பவரின் வம்சத்தில் தோன்றியவர். இவர் குல்பர்கா நகரில் வந்து குடியேறினார். இவருக்கு அலி

முகம்மது என்ற மகன் அவர் கோலார் பகுதியில் குடியேறினார். அலிமுகம்மதுவிற்கு நான்கு மைந்தர்கள். அவர்களில் கடைசி மகன் பதே முகம்மது. இவர் பல போர்களில் காட்டிய வீரத்திற்கு மெச்சி அவருக்கு மைசூர் பகுதியில் புத்திகோட்டா என்ற ஊர் ஜாசீராகக் கிடைத்தது. அந்த பகுதியின் தளகர்த்தராகவும் பணியாற்றி வந்தார். இவருக்கு இரண்டு மகன்கள் மூத்தவர் சாபாஸ், இளையவர்தாம் ஹைதர்அலி.

“ஹைதர் தன் அண்ணனுடன் 1749-ம் ஆண்டில் தளவாய் நஞ்சராஜ் தேவனஹன்றி முற்றுகையிட்டபோது போர் செய்தார். அந்தப் போரில் ஹைதர் காட்டிய வீரத்தைக் கண்டு வியந்த நஞ்சராஜ் அவரைப் பாராட்டும் வகையில் படைப்பிரிவுக்குத் தலைவராக்கினர்”[134].

“மைசூரை ஒரு பேரரசாக ஆக்கினார். ஹைதரின் ஓயாத உழைப்பும் வீரமும் 1759-ம் ஆண்டு மராட்டியர் படை எடுப்பிலிருந்து மைசூர் அரசைக் காப்பாறினார். அவரது இராணுவ நுட்பத்தையும் உண்மையான தொண்டையும் பாராட்டி அவருக்கு ஃபதே ஹைதர் அலிகான் பகதூர் என்ற பட்டத்தை அளித்தார்”[135].

இவரது முன்னேற்றத்தைப் பொறுக்காத விதவை ராணி லெட்சுமிபாய் குண்டூராவ் என்ற அதிகாரியின் துணை கொண்டு ஹைதரைப் பதவியிலிருந்து விலக்கியது மட்டுமல்லாமல் அவரைக் கொல்லவும் சதி செய்தார். எத்தனையோ அரசியல் மாற்றங்களுக்குப் பிறகு ஹைதரலியே அரசராகும் வாய்ப்புக் கிடைத்தது. ஸ்ரீரங்கப்பட்டிணத்தைத் தலைநகராகக் கொண்டு ஹைதர் ஆட்சி செய்தார். தேவனஹள்ளியில் ஹைதர் அலிக்கும் அவரது மனைவி பகுருன்னிசாவுக்கும் கி.பி.1750-ம் ஆண்டு நவம்பர் இருபதாம் தேதி மகனாகப் பிறந்தார் திப்புசுல்தான்.

> “ஆர்காட்டிலிலுள்ள திப்பு மஸ்தான் அவுலியா என்ற ஞானியின் கல்லறைக்குச் சென்று வழிபட்டபின் பிள்ளைவரம் வேண்டிப் பிறந்த குழந்தையாதலால் அக்குழந்தைக்கு திப்பு சுல்தான்”[136]

என்று பெயரிட்டனர்.

திப்பு தந்தையுடனே போர்களில் எல்லாம் பங்கெடுத்து மாவீரன் என்பதை நிரூபித்துக் காட்டியவர்.

ஹைதர் படிக்காதவராதலால் தன் மகனைப் பல மொழி வல்லுனர் ஆக்கினார் திப்பு. "முகமதியக் கோட்பாடுகளை மவுலி அப்துல்லாவிடமும் தியானம், வழிபாடு, யோகாசனப் பயிற்சி போன்றவற்றை கோவர்த்தன பண்டிதரிடமும் கற்றான். காசிகான் என்பவரிடம் மல்யுத்தம், நீச்சல், குதிரை ஏற்றம், போர்க்கலை ஆகியவற்றையும் முறைப்படி பயின்றான்"[137] என வரலாறு கூறுகிறது.

ஆங்கிலேயருக்கு ஹைதர் திப்பு என்றாலே குலை நடுங்கும். அத்தகைய போர்த்திறம் மிக்கவர்கள் சுதந்திர வேட்கையை முதன் முதலில் மக்கள் மனதில் ஊன்றுவதற்கு முயற்சித்தவரின் ஆங்கிலேயரை விரட்ட வேண்டும் என்ற லட்சியத்தைக் கொண்டவர்கள். கன்னட நாட்டின் சிங்கமான இவர், "தென்னகமெங்கும் மக்கள் நெஞ்சங்களில் நம்பிக்கை ஒளிதந்த தங்கம் வெள்ளையரை எதிர்த்து முதன் முதலில் போர்க்கொடி உயர்த்திய வீரர் ஹைதர் அலிகான் பகதூர்"[138] ஆங்கிலேயருக்கு ஹைதர், திப்பு என்றால் சிம்ம சொப்பனம் புதினத்தில் தனது மகன் திப்புவிற்கு இளவரசு (சுல்தான்) பட்டம் கட்டிய அன்றே பேரம்பாக்கம் போருக்குப் புறப்படுகிறார். இந்த விழா மைசூர் ராணி லெட்சுமிபாய்க்கு வெறுப்பைத் தந்தது. புறப்படும் தருவாயில் ஒரு வெள்ளைக் கும்பினியான் அவரைச் சுட முற்படுகிறான். அதற்குக் காரணம் கூடவே இருந்து குழிபறிக்கும் மீர்சாதிக் என்பான். இறுதிவரை திப்புவிற்கு எமனாக இருந்தவனும் இவனே.

"இன்றைக்கும் மைசூரிலிருக்கும் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் இவனது சமாதி இருக்கிறது. அநதச் சமாதியைக் காண்கிற மக்கள் முகம் சுளித்துச் செல்வது வழக்கம் என்கிறது வரலாறு"[139] .

ஹைதரின் நண்பரும் அதிகாரியுமான, "யாகின்கானுக்கும் ஹைதருடைய தோற்றத்தை அப்படியே உரித்துக் கொடுத்திருக்கிறான்" ஆண்டவன் இவனால்

வரலாற்றில் நன்மையும் நடந்திருக்கிறது. இது வரலாற்று உண்மையும் கூட. புதினத்தில் காட்டப்படும் பேரம்பாக்கம் போர் சரித்திர முக்யத்வம் வாய்ந்தது. வாழ்நாள் முழுமையும் தாய் நாட்டுக்காகவே பாடுபட்டவர்கள. தந்தையும் மகனும் ஆங்கிலேயர விரட்ட முழுமூச்சாக செயல்பட்டு உயிர்த்தியாகம் செயதவர் திப்புசுல்தான். வெள்ளையரை எதிர்த்து முதன் முதலில் போர்க்கொடி உயர்த்திய வீரரான ஹைதரின் போர்க்கள நிகழ்வு,

"பொங்கிய கடலுமோங்கி பூதலம் நடுங்க வந்தச்
செங்கமாக் கணவாய்க்குள்ளே சீறியே பாய்ந்தாலோ!
சிங்கமாம் ஹைதரண்ணல் சினந்தலாலெழுந்த சேனை
அங்குதான் பாய்ந்ததாலோ அந்நிலையெக்கமாதோ"[140]

என்ற நாயக் மிசாரு கனியின் பாடல்வரிகள் போர்க்களக் காட்சியை கண்முன் காட்டுவதாக அமைந்துள்ளது.

பேரம்பாக்கப் போரில் கர்னல் பெய்லியை வெற்றிபெற்று அவனைத் தோற்றோடச் செய்தான் திப்புசுல்தான். அதன்பிறகு ஆற்காட்டு நவாப்புடன் போர், அதன்பிறகு ஹைதரின் வேண்டுகோளுக்கிணங்க "ஆம்பூர், சிதம்பரம், அன்னக்குடி, பரங்கிப்பேட்டை (புத்தந்துறை) சோளிங்கபுரம், திரிசலூர், ஆரணி ஆகிய இடத்தில் உள்ள கும்பினி முகாம்களை விரட்டிப்பிடித்து வளைந்தான்"[141] ஹைதரின் அரசியல் சின்னம் சிங்கமாகும். திப்புவின் அரசியல் சின்னம் புலியாகும்.

கேரளாவில் ஹைதரின் சுதந்திரப் புலிக்கொடியை நாட்ட சர்தார்கான் அனுப்பி வைக்கப்பட்டான். மேஜர் அபிங்கடன் அவனைத் தோற்றோடச் செய்தான். பின்பு மகதூம் அலி அனுப்பிவைக்கப்பட்டு அவனும் தோல்விகண்டான். இப்போர் 07.04.1782-ம் ஆண்டு நடந்தது என வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. "தென்னகத்துப் போர்வாள்"[142] என்று அழைக்கப்பட்ட ஹைதர் இந்த விஷயத்தில் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை.

ஹைதர் இதுபற்றி திப்புவிடம் கூற இழந்த மலபார் பிரதேசத்தை மீட்க திப்புவின் தலைமையில் டைகள புறப்பட்டன. "கர்னல் ஹம்பர் ஸ்டோறும், மேஜர் அபிங்கன்றம் கதிகலங்கினர்"[143] போருக்கென்றும் வெற்றிக்கென்றம் பிறந்த திப்பு போர் நீண்டு கொண்டே போவதை தடுக்க பிரஞ்சுக்காரர்களுக்கு கடிதம் எழுதினான். ஹம்பர்ஸ்டோன் வீழ்ச்சியடையும் தருவாயில் ஹைதருக்கு உடல்நிலை சரியில்லை என்ற செய்திவரவே போர் முகத்திலிருந்து தந்தையிடம் செல்லவேண்டிய நிலை ஏற்பட்டது.

"அடிமைப்படுத்த நினைப்பவனை விட அன்பனாக நண்பனாகப் பழகுகிறவன் மேலானவன்"[144] என்பது திப்புவின் கருத்து. திப்பு தந்தையைக் காணும் முன்னே 07.12.1782 காலையில் ஹைதரின் மறைவு ஏற்பட்டது. அது யாருக்கும் தெரியாமல் மறைக்கப்பட்டது. ஹைதரைப்போல் உருவ ஒற்றுமையுள்ள பாகிஸ்கான் ஹைதரைப் போலவே நடிக்க அவருடைய பூதஉடல் கோலாரில் அடக்கம் செய்யப்பட்டுப் பின்பு ஶ்ரீரங்கப்பட்டணத்தில் அடக்கம் செய்யப்பட்டது.

இந்நிலையில் ஶ்ரீரங்கப்பட்டணத்தின் மீது தாக்குதல் செய்ய கர்னல்வில்க்ஸ் அபாஸ்கானைப் பயன்படுத்துகிறான். அயாஸ்கான் ஹைதரால் மகனைப் போல் வளர்க்கப்பட்டவன். இந்து சமயத்தைச் சார்ந்த அவன் இஸ்லாமியனாக மாறி ஹைதரிடம் விஸ்வாசமாக இருந்தான். பேடனூர் என்ற ஹைதர் நகருக்கு தலைவனாகவும் ஆக்கப்பட்டான். ஆனால் பேராசை மிக்க அவன் ஶ்ரீரங்கப்பட்டிணத்தையே அடையவும் ஆசை கொண்டவன். அவனை நன்கு பயன்படுத்திக் கொண்டான் நரித்தனமான கர்னல் வில்க்ஸ்.

**பேட்டைப்போர்**

பேரம்பாக்கம் போர் 1780 செப்டம்பர் 8 – 9. மக்லியாட் பெருமகன், கர்னல் பிரேயத்வெயிட், ஹார்போக் ஆகிய பிரிட்டிஷ் படைத்தலைவர்கள் காஞ்சிபுரத்தில் படைகளுடன் (முகாமிட்டிருந்தனர்) கூடாரமிட்டிருந்தனர். வடபுறத்தில் காஞ்சிபுரத்தை நோக்கி வந்தான். பேரம்பாக்கத்தில் நடந்த போரில் கர்னல் பெய்லி படுதோல்வி அடைந்தான்.

“இரண்டு ஹைதரைச் சேர்த்தால் ஒரு திப்புசுல்தான்”[145] என திப்புவின் வீரம் பேசப்படுகிறது. பேரம்பாக்கம் போர் II (அ) புள்ளலூர்ப் போர் II (1780 செப்டம்பர் 10)

“ஜெனரல் மன்ரோ மாபெரும் தோல்வி. போகும்போது மன்றோவும் வீரர்களும் பீரங்கிகளை தூக்கிக்கொண்டு ஓட முடியாமல் அவற்றை செங்கல்பட்டு ஏரிக்குள் எறிந்துவிட்டுச் சென்றனர். இப்போரில் ஹைதர் குண்டுகள் பட்டதடங்கள் போர்க் களத்திலுள்ள பனை மரங்களில் இன்றும் உள்ளன என்று கூறப்படுகிறது”[146].

“இதே சமயம் இரண்டரை மாத முற்றுகைக்குப்பின் ஹைதர் ஆர்க்காட்டைக் கைப்பற்றினான். முகமது அலிக்கு பதிலாகத் திப்புவே ஹைதரால் நவாப்பாகப் பட்டம் சூட்டப்பட்டான்” என்ற வரலாற்றுச் செய்தி புதினத்திலும் கூறப்பட்டுள்ளது.

இதுபோல திருச்சி, சிதம்பரத்தில் சர் அயர்குட்டை எதிர்த்தது. 1781 ஜுலை 1-ம் தேதி புத்தந்துரைபோர், புள்ளலூர்ப்போர் III 1781 ஆகஸ்ட்-27, சோளிங்கர்ப் போர் 1781 (செப், 27) (இதில் ஹைதர் தோல்வி) மலபார் போர் அன்னக்குடிப் போர் 1782 பிப்ரவரி 17-18 திப்பு பிரிட்டிஷ் தளபதி பிரரெத்வெயிட் பெரியட்டிணம் போர் 1783.

திப்பு மங்களூர்ப் போரில் இருந்தபோது கர்னல் புல்லார்ட்டன் பாலக்காட்டையும் கோயம்புத்தூரையும் வசப்படுத்தி சீரங்கப்பட்டிணத்தைத் தாக்க முற்பட்டான். மங்களூர் முற்றுகை நீட்டிப்பைப் பயன்படுத்திக்கொண்டு பேடனூர் அரசன் அயாஸ்கான் மைசூர் படைகளை முறியடித்து ஓட்டி நாட்டைக் கைப்பற்றினார். இது புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. பிரெஞ்சுக்காரர்களுடன் திப்பு நட்புடன் இருநதமை நெப்போலியனுக்கு உதவி கேட்டு கடிதம் எழுதியதும் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

“கெல்ரோவிலிருந்த நெப்போலியன் திப்புவுக்கு விரைந்து உதவுவதாக மறுமொழி எழுதியிருந்தான்”[148] ஆனால் அது திப்புவிற்குக் கிடைக்காமல் செய்துவிட்டனர் ஆங்கிலேயர்.

(1799 மார்ச் 27)-ம் தேதி நடந்த மழவள்ளிப் போரில் திப்புவின் படைகள் தோல்வியடைந்தது. சீரங்கப்பட்டிணம் வீழ்ச்சி அடைந்தது. 1799 மே 4 திப்புவின் வீர மரணம்.

புதினத்தில் பேடனூர் தலைவன் அயாஸ்கானை வசப்படுத்தி கர்னல் வில்க்ஸ் கரீமைவிட்டு உள்நாட்டுக் குழப்பம் விளைவிக்கிறான். மங்களூரிலிருந்து திப்பு வருவதற்கு முன் அக்காலத்தே பசவராஜ் அடக்கி ஸ்ரீரங்கப்பட்டிணத்தை மீட்டு வீர சுவர்கம் அடைவதாக புதினத்தில் கூறப்பட்டுள்ளது. அதன்பின் வாழ்நாள் முழுமையும் போர் நாட்டை சீர்திருத்தல் போன்றவற்றிலே திப்புவின் நாட்கள் கழிந்தது. திப்புவின் மனைவியர் ருக்கையாபானு, ரோஷானிபேகம், சுல்தானா பேகம், புராந்தி பேகம் ஆகியோர் புதினத்தில் காட்டப்படுகின்றனர்.

"திப்புவின் ஆட்சிகாலத்தில் பெரும்பகுதி போர்களை நடத்துவதிலும் போரினால் ஏற்பட்ட சேதங்களைச் சீரமைப்பதிலும் அடுத்த போருக்கான ஆயத்தங்கள் செய்வதிலுமே கழிந்தது"[149].

உடனிருந்தே கொல்லும் வியாதியைப் போன்ற ஹைதராபாத் நிஜாமும், மராட்டிய பீஷ்வாக்களும் ஆற்காட்டு நவாபும் ஆங்கிலேயருக்கு வால்பிடிக்கும் குள்ளநரிகளாகி திப்புவின் சுதந்திர வேட்கை மிக்க செயல்களுக்கு பாதகம் விளைவித்தனர்.

ஆனால் தமிழகத்திலோ வேலு நாச்சியார் போன்ற வீரநங்கைகள் ஹைதர் திப்புவின் உதவிக்ரம் பற்றிக்கொண்டு ஆங்கிலேயரை எதிர்க்கத் துணிந்து செயல்பட்டனர் என்பது குறிப்பிடத்தக்க வரலாற்று உண்மையாகும்.

**சமயக்கொள்கை**

திப்புவின் ஆட்சியில் இந்து முஸ்லீம் ஒற்றுமையே குறிப்பிடத்தக்கது. திப்புவின் செயல்பாடுகள் சமயக் காழ்ப்பை அடிப்படையாகக் கொண்டவை அல்ல என்பது வரலாற்று உண்மையாகும். "ஒவ்வொரு மதத்தவரும் தங்கள் மதநெறிகளைப் பின்பற்றி மற்ற மதத்தலைவர்களையும் மதத்தினரையும் மதித்து நடக்க வேண்டும் என்பது திப்புவின் உயிர்ப்பான சமயக் கொள்கை"[150] ஆகும்.

திப்புவின் தலைநகரான சீரங்கப்பட்டிணத்தில் உள்ள ரெங்கநாதர் கோயிலுக்கு அநேக நிவந்தங்கள் அளிக்கப்பட்டிருந்தன.

"நீதியின் கண்களுக்கு இந்துவும் முஸ்லீமும் ஒன்றே"[151]

என்பது திப்புவின் கொள்கை. இது புதினத்தில் சுட்டப்பட்டுள்ளது.

எனது ஒருகண் இஸ்லாமானால், மறுகண் இந்து. இதில் வலது இடது என்கிற பேதமே கிடையாது என்பது மட்டுமல்ல.

"கண்கள் ஒன்றைவிட்டு ஒன்று தூங்கவும் முடியாது, விழிக்கவும் முடியாது, ஏன் அழவும் முடியாது"[152]

என திப்புவின் உயிர் நண்பன் பசவராஜ் கூறுவதாக காட்டப்பட்டுள்ளது. மேலக்கோட்டையில் உள்ள நரசிம்மப் பெருமாள் கோவிலுக்கு அளித்த முரசு குறிப்பிடத்தக்கது. அது தவிர பல மற்றும் நிவந்தங்களும் அளித்துள்ளான். இந்த மேலக்கோட்டையானது இந்து முஸ்லீம் உறவுக்கு ஒற்றுமைக்கு மட்டுமல்ல அரிஜனமக்கள் கோயிலுக்குள் நுழையவும் அனுமதி பெற்ற இடம். ஹரிஜன மக்களை,

"ஆலயத்துக்குள் பிரவேசிக்க வைக்க வேண்டும் என்று இராமானுஜர் உத்தரவிட்டுச் சென்ற முதலிடமும் இதுதான்"[153]

எனப் புதினத்தில் கூறப்பட்டுள்ள செய்தியும் வரலாற்று உண்மையாகும்.

மைசூர் நாட்டிலில் உள்ள சிறந்த சிவத்தலங்களுள் ஒன்றான நஞ்சன் கூட்டு இறைவன் நஞ்சுண்டேசுவரர் கோயிலுக்கு "திப்பு அளித்த 9 1/2 அங்குலம் உயரமுள்ள பச்சை மரகதலிங்கம் பார்வதி சிலைக்கு இடப்புறத்தில் வைத்து வழிபடப்படுகிறது"[154] இதனை பாதுஷா லிங்கம் என்றே கோயிலில் அழைக்கிறார்கள்.

"திப்புவின் மலபார் படையெடுப்பில் குருவாயூர் பிடிபட்டது. சர்ச்சகர்கள் கருவறையில் இருந்த கிருஷ்ணன் சிலையை அப்புறப்படுத்தி ஊருக்கு வெளியே மறைத்துவிட்டனர். செய்தியறிந்த திப்பு அர்ச்சகர்களை அழைத்து தாமே முன்னின்று

மீண்டும் சிலையை கருவறையில் பிரதிஷ்டை செய்தார்"[155] என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மூன்றாம் மைசூர் போரின்போது, "மராட்டியர் பரசுராம் பாவே என்பவர் தலைமையில் படைஎடுத்து வந்து தார்வாவை கைப்பற்றி சிருங்கேரி நகரைத் தாக்கி சுமார் 17 லட்சம் வராகன் கொள்ளையடித்துச்சென்றனர்"[156]. "அதில் மிக முக்கியமானது தங்கத்தால் செய்யப்பட்ட சாரதா தேவி முழுஉருவச்சிலை இந்தக் கொடுமைக்கு மருந்தாக திப்பு மீண்டும் சிருங்கேரி மடம் செயல்பட வேண்டிய உதவிகள் அனைத்தையும் செய்தார்"[157] இந்த வரலாற்றுச் செய்தியின் மூலம் திப்புவின் மத நல்லிணக்கம் பற்றி அறிய முடிகிறது

> "திப்பு பக்தி மிகுந்த முஸ்லீம் போலவே பக்தி மிகுந்த இந்துவாகவும் இருந்தான்"[158]

என முன்னாள் தலைவர் நிஜலிங்கப்பா கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

திப்புசுல்தான் 1790-ம் ஆண்டு தமிழகத்தின் மீது படைஎடுத்து வந்தபோது காஞ்சிபுரத்தில் உள்ள கோயில் ஒன்றை கட்டி முடிப்பதற்கு 10,000 பொன் வழங்கியுள்ளார் என்பதும் மதச்சகிப்புத்தன்மையைக் காட்டுகிறது.

"மதங்கிடையே நல்லுறவு என்பது குரானின் அடிப்படை. குரான் பிற மதத்தவரின் விக்ரகங்களை அவமதிப்பதை தடுக்கிறது. அல்லாவைத்தவிர மற்ற தெய்வங்கள் வழிபடுபவர்களை அவமதியாதீர். அது அறியாமையால் அல்லாவையே அவமதிப்பதாகும் என்கிறது குரான்"[159] அல்லா விரும்பியிருந்தால் உலக மக்கள் யாவரையும் ஒரே மதமாகப் படைத்திருப்பார் அல்லவா? என்ற திப்புவின் பிரகடனம் (1787) புதினம் முழுவதும் உயிர் நண்பன் பசவராஜ், திப்புவின் காதலி ரங்கநாயகி இவர்களைக் கொண்டு பின்னப்பட்டிருப்பது இந்து சமயத்துக்கு அவன் அளித்த மதிப்பினை உணரவைக்கிறது. திப்புவின் தலைநகரான ஸ்ரீரங்கப்பட்டணத்தில் உள்ள ரங்க மஹால் மிக முக்கியமான ஒன்று. புதினத்தில் திப்புவின் மனதில், வாழ்க்கையில்

ரங்கநாயகி என்ற பெண் இடம்பெற்றதுபோல அவளது காதலக்காக ரங்கமஹால் கட்டப்பட்டுள்ளதோ என்ற கருத்து ஆராயத்தக்கது. மேலும் சிருங்கேரி சாராதா மடத்தலைவருடன் திப்புவிற்கு நெருங்கிய உறவு நட்பு இருந்தது. அவருடன் அதிகமாக கடிதத்தொடர்பு இருந்துள்ளதையும் வரலாறு குறிக்கிறது. திப்புவும் அவரின் ஆசிபெற்று செயல்களைச் செய்வதும் வழக்கமாக இருந்தது என்பதும் தெரியவருகிறது.

புதினத்தில் வரதநந்தினி என்ற பெண் டெல்லி சுல்தானின் மகள் மேலக்கோட்டை ரங்கநாயகனை மனதால் மணந்து அவனுடனே ஐக்கியமாகிவிட்டாள் என்ற வரலாற்று உண்மையும் சமய ஒற்றுமையைப் பறைசாற்றுவதாகவே அமைந்துள்ளது.

திப்பு கொண்டுவந்த அத்தனை மாற்றங்களும் மக்களுக்கு புதிதாக இருந்தன. அவர்களைச் சொக்கவைத்து மயக்கின. மக்களுக்கான சாலைகள் அமைக்கப்பட்டது. லால்பாக் தோட்டம் திப்புவின் ஆராய்ச்சிக் கூடமாக மாறியது. உலகில் உள்ள அத்துணை பகுதிகளிலிருந்தும் மரம், செடி, கொடி வகைகள் கொண்டுவரப்பட்டன. திப்புசுல்தான் மூலிகைகளில் யுனானி மருந்துவம் செய்யும் ஞானம் கொண்டவராகத் திகழ்ந்தார்.

அவருடைய ஆட்சியில் எல்லோருக்கும் உணவு, வேலை, இடம், கல்வி எல்லாம் கிடைத்துவந்தன. பட்டு உற்பத்தி தொழிற்சாலைகள் முத்தெடுத்தல், பிராணிகள் வளர்ப்பு ஆகியவை சமுதாயத்தில் வாழும் மக்களுக்கு மிகவும் பயனுடைய தொழில்களாக இருந்தன.

அக்காலத்தில் ஹைதர், திப்பு இருவரின் ஆட்சியிலும் இந்து முஸ்லீம் ஒற்றுமை நல்ல முறையில் இருந்தது. அரசாங்க முக்கிய அதிகாரிகள் இந்துக்களாகவும் இருந்தனர். அமைச்சர் பூரணய்யா நாட்டின் முதுகெலும்பாகத் திகழ்ந்தார்.

இந்துக் கோயில்களுக்கு நிறைய நிவந்தங்கள் அளிக்கப்பட்டன. நஞ்சன் கூடு மரகதலிங்கம், மேலக்கோட்டை முரசம் போன்று நிறைய பூசைக்குரிய பொருள்கள், யானைகள் முதலியவை அன்பளிப்பாக அளிக்கப்பட்டன.

போதை உண்டாக்கும் பொருள்களுக்குக் கச்சாப்பொருள்கள் வாங்கத் தடை விதிக்கப்பட்டது.

> "பூரண மதுவிலக்கு அமுலில் இருந்தது. இந்த நிலை பொது அமைதியையும் நாட்டுமக்களின் வாழ்க்கையில் முன்னேற்றத்தையும் ஏற்படுத்தியது"[160] என்பது குறிப்பிடத்தக்கது.

இன்றும் கூர்க் பகுதியில் உள்ள பெண்கள் கையின் மணிக்கட்டுவரை ஆடை அணிகிறார்கள்.

"எங்கள் திப்பு சுல்தான் இப்படித்தான் ஆடை அணியவேண்டுமென்று சொன்னார் இதுதான் ஒழுக்கம்"[161] என்று கூறுகின்றனர். மேலும் எந்த ஒரு மனிதனும் தனது வீட்டில் பெண்களை அடிமையாக நடத்தக்கூடாது. தாசிகளை வைத்துக் கொள்ளவும் கூடாது என்ற சட்டம் திப்புவால் போடப்பட்டு நிறைவேற்றவும்பட்டது.

புதினத்தின் போக்கில் கிருஷ்ணகிரி பெண்ணின் வழக்கு இதற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. "ஒரு தந்தையைப் போல் திப்பு சாகிபு நாட்டு மக்களின் நலனைப் பேணினார்"[162] என சி.என்.குப்தா கூறியுள்ளார்.

சமுதாயத்தில் கலப்பு மணம் இருந்தது. அதற்குச் சான்றுகளும் புதினத்தில் உள்ளது. இறைவனே துலுக்க நாச்சியாரை ஏற்றுக்கொண்டது மக்களிடையே கலப்பு மணத்தை ஆதரிக்கச் செய்தது. இருப்பினும் இதனை வெறுக்கும் துன்மார்க்கர்களும் சமுதாயத்தில் இருந்தனர்.

அனாதைப் பெண்களையும் குழந்தைகளையும் விற்பது தடை செய்யப்பட்டுள்ளது.

உழவர்களின் கலப்பை போன்ற சாதனங்கள் வாங்கவும் விவசாயத் தேவைகளுக்கும் கடன் எளிதாகத் தரப்படும். பின் அத்தொகை திரும்பச் செலுத்த உறுதி பெற வேண்டும். தொழிற்கூடங்களையும், பிரஞ்சு அரசாவித்துடன் இணைந்து கடிகாரத்

தொழிற்சாலையும், காகித ஆலையும் தோற்றுவிக்கவும் ஆணை வழங்கப்பட்டது. வெற்றி பெற்ற நாட்டில் கொள்ளையடிப்பது ராணுவத்திற்கே இழுக்கு. போர் – போர்க்களத்துடன் நிற்க வேண்டும் அப்பாவி மக்கள் மீது அது பாயக்கூடாது. பெண்களை மதியுங்கள் பிற மதத்தினரை மதியுள்ங்கள் குழந்தைகளையும் பலவீனர்களையும் பாதுகாப்பீர்கள் என்று ராணுவத்திற்கு திப்புவின் உத்தரவு அளிக்கப்பட்டிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. கரும்பு, வெற்றிலை, தென்னை வளர்ப்போர்க்கு வரி விலக்கு கிராமம் ஒன்றுக்கு 200 மரக்கன்றுகள் நட்டு வளர்ப்பது அவசியம். ஏறறுமதி மரங்கள் தேக்கு, சநதனம் போன்றவற்றிற்கு பாதுகாப்பு விவசாயிகளின் சிறு குற்றங்களுக்கு அபராதமாக 2 மாமரங்களையும், 2 பாதாம் மரங்களையும் கிராமத்தில் நட்டு 3 அடி உயரம் வளரும் வரை பாதுகாப்பு.

காவிரியில் திப்புகட்டிய அணையின் அடிக்கல்லில்,

“பல லட்சம் ரூபாய் செலவில் கட்டப்படும் இந்த அணை இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படுகிறது. புதிய நிலங்களைச் சாகுபடிக்குள்ளாக்கி இந்த அணை நீரைக் கொண்டு பயிர்கள், காய்கறி, பழவகைகள் வளர்ப்போர்க்கு அனைத்து சலுகைகளும் வழங்கப்படும். புதிய விளைநிலங்களை உருவாக்குவோர்க்கும் அவரது சந்ததியினருக்கும் அந்நிலம் உரிமையாக்கப்படும் என இறைவனின் இந்த அரசு அறிவிக்கிறது”[163] என்னும் வாசகம் பொறிக்கப்பெற்றுள்ளது.

இன்றைய பெங்களூர் செழிப்புக்கு அன்றே திப்பு சுல்தான் வழிவகுத்தார். திப்பு ஏற்படுத்திய ஸ்ரீரங்கப்பட்டணத்து லால்பாக், பெங்களூர் லால்பாக் ஆகியவை இன்றளவும் திப்புவின் புகழைக் கூறுகின்றன.

திப்புவின் புதிய ஆட்சியில் இத்தென்னகம் ஒரு புதிய சரித்திரத்தையே கண்டது. புரட்சி நிறைந்த மக்கள் தலைவனாகத் திகழ்ந்தான்.

> “நமது ஆட்சியின் கீழ் இருக்கும் இருபத்தேழு ஜில்லாக்களும், ஆயிரத்து இருபத்து நான்கு தாலுகாக்களும்மதக் கோட்பாட்டில் தனிச் சுதந்திரம்

பெறவேண்டும். இநது முஸ்லீம்கள் யுகயுகாந்திரத்துக்கு ஒன்றுபட்டு ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு சகோதர நெஞ்சுடன் தழுவிக்கொண்டு வாழச் சட்டம் வகுப்பேன். வெள்ளைப்பறங்கியன் தனது மதத்துக்காக ஆண்களைப் பிடித்துக் கூடிக் கொடுப்பதை அறவே கண்டிப்பேன், தண்டிப்பேன்"

என்ற திப்புவின் கருத்தாழமிக்க சொற்கள் மதச் சார்பற்ற நாடு உருவாக வழிவகுத்தது.

தாரியா தெளலத் என வழங்கப்படும் கோடை மாளிகையில் காணப்படும் ஓவியங்கள் ஹைதர் திப்புவின் போர்க்களக்காட்சியை விளக்குவதாக அமைந்துள்ளது. அவர் காலத்திய நாணயங்களும் குறிப்பிடத்தக்கவை. திப்புவின் நூலகம் புகழ் வாய்ந்ததாக திகழ்ந்துள்ளது.

குற்றாலக்குறிஞ்சி என்னும் புதினத்தில் காணப்படும் வரலாற்று பின்புலன்களுக்கு சரபோஜி மன்னர் காலத்து இலக்கியங்களும் வரலாற்றுச் சின்னங்களும் கல்வெட்டுகளும் ஆதரமாக விளங்குகின்றன. கதைக்களத்தில் காலமானது கி.பி.பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி (1829) இப்புதினம் முழுவதுமே இசையை அடிப்படையாகக் கொண்டது. இக்காலமானது "தமிழகத்தின் இடுப்பு முறிந்த பகுதியானாலும் சங்கீதத்தின் எடுப்பு நிறைந்து ஏகமுற்று விளங்கியது"[164].

இப்புதினத்தில் வரும் பாத்திரங்கள் பெரும்பான்மையும் வரலாற்றில் வாழ்ந்த பாத்திரங்கள். குறிஞ்சி, ஞானசுந்தரம் போன்ற தலைமைப்பாத்திரங்கள் கற்பனையானவை, சரபோஜி மன்னனும் அவரின் புதல்வன் சிவாஜியும் இசைக்கு அடிமையானவர்கள். அரசியல் பின்புலம் காண்போமேயானால், நாயக்க மன்னன் செங்கமல தாசுக்கு துரோகம் இழைத்த வெங்கோசிபான்ஸ்லே (1676-85) சித்ரபதி சிவாஜியின் தந்தை ஹாஜிக்கு துர்காபாயின் வயிற்றில் பிறந்தவன். அவன் பீஜப்பூர் சுல்தானிடம் பணியாற்றியவன். அவன்தன் சகோதரன் சிவாஜியையும் ஜெய்சிங்கன்

என்பவனையும் எதிர்த்துப் போரிட்டான். தனது சகோதரன் சிவாஜிக்கு மிகப்பெரிய அளவு லஞ்சம் கொடுத்துத் தஞ்சையில் கால் ஊன்றினான். ஆரம்பத்தில் நல்லவனாக இருந்த அவன் பஞ்சகாலத்தில் மக்களின் மீது அதிகவரி செலுத்தி கொடுங்கோல் மன்னன் ஆனான். அவன் இறந்தபிறகு அவனது மகன் 1685-ம் ஆண்டு தஞ்சைக்கு மன்னன் ஆனான். இவன் வம்சத்தில் வந்தனே சரபோஜி மன்னன். வெங்கோஜி காலம் தொட்டு சரபோஜி மன்னனின் ஆட்சிக்காலம் வரையில் மராட்டியரால் தமிழகத்தைப் பொறுத்த வரையில் நன்மை ஏதும் விளையவில்லை. மராட்டியர்கள் வடமொழிசார்புடையவர்கள் எனவே நாயக்கர்களைப் போலத் தமிழுக்கு ஏதும் நற்பணிகள் செய்தாரில்லை.

> “சரபோஜி மன்னன் ஒருவன் மட்டும் அரியணையை அணி செய்யாமல் போயிருப்பின் தமிழகம் மராட்டியரின் படை எடுப்புகளையும், படுகொலைகளையும் கொடி வலிகளையுமே சிந்தித்துக் கொண்டிருக்கும்”[165].

தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்களுள் மங்காப் புகழ்படைத்தவர் மன்னர் சரபோஜி. கி.பி.1798-1832 வரையில் ஆட்சி செய்தார். இன்றும் தஞ்சையில் சிறப்பானதாகக் கருதப்படும் சரஸ்வதி மகால் நூல் நிலையத்தின் முக்கிய சிற்பி ரபோஜி. தன்னுடைய தாய் மொழியாகிய மராட்டியுடன் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெமன், கிரீக்கு, லத்தின் முதலிய அயல்நாட்டு பாஷைகளையும் நன்கு அறிந்தவர். இவரை, “சர்வதேச பாஷா பாரங்கன்”[166] எனச் சொல்கிறார்கள்.

இவர் வடமொழியில், குமார சம்பவடீகா, முத்ராராக்ஷஸச்சாயா, ஸ்மிருதி சங்கிரஹம், ஸ்ம்ருதிசார சமுச்சயம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். மராட்டி மொழியில், உமாமகேஸ்வர சதா, கிராதார் ஜுனிய நிரூபணம், நீலகண்ட குலாலவரசரித்திரம், நீலபில்ல சரித்திரம், சிவராத்திரி கதா, பக்ஷப்ரதோஷ சனிப்பரதோஷக்கதா, கணேசலீலார்ணவ நாடகம், கணேச விஜய நாடகம், கங்காவிஸ்வேஸ்வர பரிணய நாடகம், தேவேந்திர குறவஞ்சி நாடகம், ராதாகிருஷ்ண விலாச நாடகம், மோகினி மகேஸ்வர பரிணய நாடகம், சிவராத்திரி உபாக்யானம், கஜசாஸ்த்திர பாஷா பிரபந்தம், விவதர்நாடக ராக ராகிண் ஆகியவற்றை எழுதியுள்ளார்.

தமது ஆஸ்தான கவிகளைக் கொண்டு பல பாட்டுகளை ஆடல் பாடலுக்குகந்த வகையில் இசைத்துள்ளார். பரதநாட்டியம் இவர் காலத்தில் உன்னத நிலையில் இருந்தது. சரபோஜி மன்னர் பியாண்டு வாசிப்பதில் வல்லவர். ஐரோப்பிய லார்ட் வாலன்சியா தமது (வாயேஜ் அன்ட் டிராவல்ஸ் இன் இந்தியா) இந்தியாவில் கடல்வழிப்பயணம் என்ற புத்தகத்தில்,

> "மன்னர் சரபோஜியிடம் பல இந்திய சங்கீத வாத்யங்களையும், ஆங்கில சங்கீத வாத்தியங்களையும் கண்டேன். அவை முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன"[167]

எனக்கூறி இருப்பதிலிருந்து அவரது இசைத்திறமையை உணரமுடிகிறது.

"தஞ்சாவூர் பியாண்டு எனும் வாத்திய கோஷ்டியை முதன்முதலில் ஏற்படுத்தியவர் சரபோஜியே ஆவார் என்பது குறிப்பிடத்தக்கது"[168].

சரபோஜியின் சமகாலத்தவரான "புதுக்கோட்டை மன்னர் ராஜாரகுநாதத் தொண்டைமான் தனது அமைச்சரை திருநெல்வேலிக்கு அனுப்பி குறிஞ்சியையும் ஞான சுந்தரத்தையும் அழைத்துவரச் சொல்லியதாக புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. ராஜாரகுநாதத் தொண்டைமான் இசையில் அதிகநாட்டம் உள்ளவர். "இவர் காலத்தில் போர் எதுவும் நிகழாமல் அமைதியாக இருந்தது. ஆகவே இசை, நாட்டியம், இலக்கியம் ஆகியன நன்கு வளர்ச்சியுற்றன. பல கவிஞர்களும் இசை மேதைகளும் அரச சபையை அலங்கரித்தனர். வீணை கிருஷ்ண அய்யர், வீணை சுப்புக்குட்டி அய்யர், மாத்ருபூதம் அய்யர், ராமு சாஸ்த்திரி, திருக்கோகர்ணம் சுப்பராம அய்யர் ஆகியோர் இசைமேதைகளுள் சிலர் ஆவர். வயலின் டோலக், சுரபத் ஆகிய இந்துஸ்தானி இசைக்கருவிகளில் தேர்ச்சி பெற்ற பல முஸ்லீம் கலைஞர்களும் இருந்தனர்"[169] என்ற வரலாற்றுச் செய்தி புதினத்தில் குறிஞ்சிக்குக் கனகாபிஷேகம் செய்யும் தொண்டைமானின் இசையார்வத்தையும் நல்ல உள்ளத்தையும் காட்டுவதற்கு அமைகிறது. இந்த மன்னருக்கு 1833-ம் ஆண்டு ஹிஸ் எக்ஸலன்ஸி (His excel-

lency) என்ற விருது ஆங்கிலேய அரசால் வழங்கப்பட்டது என்ற வரலாற்று உண்மையும் புதினத்தில் கூறப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். திருநெல்வேலி பாளையக்காரர் வீணில் புதுக்கோட்டையைப் பகைத்துக் கொள்வது தமக்கு அழிவைத் தரும் என்பதை உணர்ந்து குறிஞ்சியை எதிர்ப்பதைத் தவிர்க்கிறார்.

அக்காலத்தில் தமிழில் பாடுவது அவமானம் எனக் கருதினர். இருப்பினும் அக்காலக் கட்டத்தில் ஆனய்யா சகோதரர்கள், அருணாச்சலக் கவிராயர், கோபால கிருஷ்ணபாரதி போன்றோர் தமிழ் சங்கீதத்துக்கு ஆதரவு அளித்து உச்சநிலைக்கு வரப் பாடுபட்டவர்கள்.

சிவகங்கை இளவரசன் இளைய வல்லபத் தேவன் குறிஞ்சியை அடைய ஞானசுந்தரத்தைக் கொலை செய்தது மட்டுமல்ல; அவளுடைய ராகத்தையும் அடகு கேட்கிறான். அவனுடைய கொடுமை சரபோஜி மன்னரால் அழிக்கப்படுகிறது. ஏதோ ஒரு காரணம் பற்றி இளைய வல்லபத் தேவ உடையான் சரபோஜியால் தண்டிக்கப்படுவது வரலாறு.

புதினத்தில் குறிப்பிடப்படும் ராஜாளி என்ற பறவை பற்றிய வரலாற்றுச் செயதியும் குறிப்பிடத்தகுந்தது.

> “உதயகிரி நவாபிடமிருந்து 1233 ரூபாய்க்கு வேட்டைப் பறவையாகிய ராஜாளியை விலைக்கு வாங்கிவந்தது”[170]

சரபோஜிக்கு புஜங்கராவ் அளித்தார். பாஜநாமா பூஜநாமா என்ற பஷி மற்றும் மிருகங்கள் பற்றிய நூலை நைஜாம்ஷா பாதுஷா உருது மொழியில் எழுதியிருந்தார். அதனை சரபோஜி பதங்கராவ் கோபால்ராவ் என்பவர்களைக் கொண்டு மராட்டி மொழியில் மொழிபெயர்க்கச் செய்தார். அதுமட்டுமல்ல சிறந்த ஓவியர்களைக் கொண்டு பல பறவைகளின் படங்களை அவற்றின் இயற்கையான வண்ணங்களில் எழுதச் செய்தார். அவை இன்றும் சரஸ்வதி மகாலில் காணப்படுகின்றன.

கலெக்டர் சாம்சனை குத்திக் குதறியது பறவை ராஜாளி.

> “பாஜ் எனும் ராஜாளிப்பறவை எடுத்த எடுப்பில் சாம்சன் முகத்தில் பாய்ந்து இரண்டு கண்களை எடுத்து வயிற்றுக்குள் விழுங்கி ஏப்பம் விட்டது”[171].

போதும்பாஜ்வா என்று சரபோஜி அழைத்த பிறகே அவரது தோளில் வந்து உட்கார்ந்தது. புதினத்தில் வரும் இந்த நிகழ்வு சரபோஜி மன்னருக்கு பட்சிகளின் பாஷை தெரியும் என்பதை உணர்த்துகிறது. சரபோஜி மன்னர் குதிரையேற்றத்திலும் குறிபார்த்துச் சுடுவதிலும் வல்லவர் என்பது ஹிபர். லார்ட் வாலன்ஷியா ஆகியோரின் கருத்து. மிருக வைத்திய நூலையும் மராட்டியில் எழுதியுள்ளார். ஆடு, மாடு, குதிரை போன்ற விலங்குகளிடம் அபாரப்பிரியமுள்ளவர். முதன்முதலில் ரேக்ளா வண்டிப் பந்தயத்தை ஏற்படுத்தியவரும் இவரே. இவர் காலத்தில் வாழ்ந்த கேரள மன்னர் சுவாதித்திருநாள் மும்மூர்த்திகள் தியாகராஜ சுவாமிகள், சியாமா சாஸ்த்திரிகள், முத்துசாமி தீஷிதர் மற்றும் அபிராமிபட்டர், பல்லவி கோபாலய்யா, ஆணைய்யா, கோபாலகிருஷ்ணபாரதி ஆகியோர் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் புதினத்தில் கதையின் போக்கில் காட்டப்படுகின்றன. ஒவ்வொரு இயலும் ராகத்தின் பெயரைக் கொண்டு தொடங்குகிறது.

மன்னர் சரபோஜி ஆலயங்களுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளார். “தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயத்துக்கு திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகம் நடத்தியதாக ஆலயத்தில் உள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன”[172]. தஞ்சை காஞ்சி விஸ்வநாதர் ஆலயத்தையும், விடோபாவின் ஆலயத்தையும் கட்டியுள்ளார். எல்லையம்மன் கோயில், பங்காரு காமாட்சி அம்மன் ஆலயத்திற்கும் திருப்பணிகள் நடத்தியுள்ளார். ஆரணி ஜாகீரில் உள்ள தேவிகாபுரத்தில் தேவிப்ருஹதாம்பாளை அங்கு பிரதிஷ்டை செய்துள்ளார்.

ஏழை எளிய மக்களுக்கு எண்ணிறந்த உதவிகளைச் செய்துள்ளார். ஒருத்தி நாட்டில் உள்ள முக்தாம்பாள் புரத்தில் சத்திரம் ஏற்படுத்தி நோயாளிகளுக்கு மருந்தும், கர்ப்பிணிகளுக்குப் பாலும் அளிக்க ஆணை பிறப்பித்துளளார். சரபோஜி மருத்துவக்

கலையில் அதிக நாட்டம் உள்ளவர். அவர் தன்வந்த்ரி மகால் என்ற மருத்துவ நிலையத்தை நிறுவிப் பலவிதமான மருந்துகளைக் கண்டுபிடித்து அதற்கான குறிப்புகளையும் ஓலைச் சுவடியில் எழுதி வைத்துள்ளார் என்பது வரலாறு. மருத்துவ சம்பந்தமான நூல்கள் பல மொழிகளிலும் எழுதப்பட்டன. "அந்த நூல்களில் கூறப்பட்ட மருந்து முறைகள் நன்கு பரிசோதித்துப் பார்த்து அனுபவம் பெற்றவையாதலால் அந்நூல்களுக்கு அனுபோக வைத்திய பாகங்கள்"[173] என்ற பெயரும் உண்டு. இன்றளவும் அந்த மருந்துகள் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

மக்களுக்காகப் பல பாடசாலைகளை நிறுவி நம் நாட்டுக் கல்வியுடன் ஆங்கிலமும் போதிக்கச் செய்தார். "நவ வித்யா கலாசாலை, வேதாந்த சாஸ்த்திர சாலை, நியாய சாஸ்த்திர சாலை ஜோதிஷ சாஸ்த்திரசாலை" போன்ற வெவ்வேறு சாஸ்திரங்களுக்கு தனித்தனி பாடசாலைகள் நிறுவி கல்விக்குத் தொண்டு செய்துள்ளார். மாணவர்களுக்கு இலவசக் கல்வி போதிக்கப்பட்டது வந்தது என்று அவர் காலத்திய மோடி எழுத்தில் எழுதப்பட்ட சபசாசனங்கள்"[174] கூறுகின்றன என்பது அறிய வேண்டிய செய்தியாகும். மேலும் நவவித்யா கலாநிதி வர்ணயசாலை என்ற அச்சகத்தையும் நிறுவியிருந்தார். சமயப்பின்புலம் எனக் காணும்போது இந்து மதம் மற்றும் கிறித்துவம், இஸ்லாம் அனைத்தும் நல்ல முறையிலேயே இருந்தன. சரபோஜி மன்னன் மதப்பொறையுடைய மன்னனே என்பதற்கு அனேக ஆதாரங்கள் காணக்கிடைக்கின்றன.

"இவர் அநேக முகமதிய கிறிஸ்துவக் கோயில்களுக்கு மானியம் அளித்துள்ளார் எனப் பலசாசனங்கள கூறுகின்றன"[175] என சரபேந்திர வைத்தியரத்னாவளி என்ற புத்தகத்தில் காணப்படுகிறது.

சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட குலத்தினர் என்ற சாதி வேறுபாடு மிகுதியாகக் காணப்பட்டது. தேவதாசிமுறை, பொட்டுக்கட்டுதல் ஆகியவையும் பழக்கத்தில் இருந்தது.

> “ஒரு பணத்துக்கு மூன்றுபடி அரிசி கிடைத்தும் மக்கள் சோற்றுக்கு ஆலாய்ப்பறந்து தங்கள் அழகிய பெண்களை விற்று தாசியாக்குகிறார்கள்”[176].

புலயர் குலத்தில் பிறந்த குறிஞ்சி தமிழுக்கு முக்கியத்துவம் கொடுப்பதும், அவள் ஆலயத்துள் பிரவேசிக்கத் தயங்குவதும் இதை எடுத்துக் காட்டுகிறது, வலங்கை, இடங்கைப்பிரிவு சாதிக் கொடுமை வேறு இருந்தது. சங்கீதத்துக்கு சாதியேது, மதமேது என்ற எண்ணமுடைய முற்போக்குச் சிந்தனையாளர்கள் குறிஞ்சியை மட்டுமல்ல; அவளது இசையையும் மதித்தனர்.

இளங்கோவடிகளுக்குப் பிறகு சங்கீதத்தை மேன்மைப்படுத்தியவர்கள் “சங்கீத ரத்னாகரம் எழுதிய சாரங்கதேவர், மேளகர்த்தா கண்ட வேங்கிடமகி. இந்த தமிழர் எழுதிய நூல் சதுர்தண்டி பிரகாசிகா என்னும் சமஸ்கிருத நூல். இது இசை கலைக்கு மட்டுமே”[177].

அந்தச் சமுதாயத்தில் இசைமட்டுமல்ல; நாட்டியக் கலையும் உயர்வான நிலையில் இருந்தது. முத்துசாமி தீட்சதரின் தந்தை ராமசாமி தீட்சதர் மகாவித்வான். இவர் 108 ராக தாளமாலிகா இயற்றிய சங்கீத ராட்சதன். “இவரது மகன் சின்னசாமி தீட்சதர் கண்பார்வை இழந்துவிட்டபோது இறைவனை வேண்டி 48 ராகங்களில் ராகமாலிகை பாட கண்கள் திரும்பவந்தனவாம். இதுவும் ஒரு அதிசயக்கத்தக்க செய்தி”[178]. குற்றாலத்தில் கொள்ளையர் கூட்டம் குறிஞ்சியின் கச்சேரியின் போது கலகம் செய்தது அன்றைய காலக்கட்டத்தை கண்முன் காட்டுகிறது. கோயில் நகைகளை கொள்ளையடித்துச் செல்லும் இக்கூட்டத்தினைப்பற்றி குறிப்பிடும் ஆசிரியர், “ஒரு காலத்தில் தமிழகத்தைக் களப்பிரர்கள் கொடும்பாவித்தனத்துக்கு அதிகப்படியான தட்சிணை வைக்கப்பட்டது”[179] என்று கூறுவது அக்காலக்கட்டத்தில் வரலாற்றை காட்டுகிறது.

மேலும் "தமிழ்ச்சமுதாயம் மராட்டியர் காலத்தில் தரங்கெட்டது போல் வேறு எவர் காலத்திலும் ஏற்படவில்லை"[180] என ஆசிரியர் கூறுவதிலிருந்து அன்றைய நிலையை உணரமுடிகிறது. சிவகங்கை, ராமநாதபுரம் ஆகிய ராஜ்யங்கள் புதுக்கோட்டை மன்னருக்கு அஞ்சியே செயல்பட்டன. அதேபோல் சரபோஜியின் ஆளுமை நிறைந்த ஆட்சியில் பல நன்மைகள் நடந்துள்ளன.

இறைவனின் அற்புதங்கள் பல இவர் காலத்தில் நடந்துள்ளன. சரபோஜி மன்னரிடம் அபிராமிபட்டர் அமாவாசையன்று பௌர்ணமி எனக்கூற மன்னரும் வெகுண்டு அவருக்குத் தண்டனை அளிக்க அன்னை அபிராமியும் அன்று அபிராமிபட்டருக்காகப் பௌர்ணமியைக் காட்டுகிறாள். அதுபோன்ற செயல்களும் புதினத்தில் காட்டப்பட்டுள்ளன. குறிஞ்சி மேகராகக் குறிஞ்சியைப்பாட மழை கொட்டியதாகவும் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. சரபோஜி மன்னனின் மகனான சிவாஜியும் இசையின்பால் பேரார்வம் உள்ளவன். தந்தையைப் போலவே கலை ஆர்வம் உள்ளவன்.

சரபோஜி என்று சொன்னாலே தஞ்சை சரஸ்வதி மகால்தான் நினைவுக்கு வரும். அவர் இயற்றிய நூல்களும், அவர் சேகரித்த எண்ணிறந்த நூல்களும் இந்த நூலகத்தில் உள்ளன. மருத்துவம், இசை, நாட்டியம், மிருகங்கள், பறவைகள் பற்றிய நூல்களும் உள்ளன. இந்த நூலகத்தில் உள்ள நூல்களைப் பற்றிய பட்டியலும் இப்புதினத்தில் இடம்பெற்ற ராகங்களின் பட்டியலும் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. இசையில் ராகங்கள் பற்றியும், தாளங்கள் பற்றியும், இசைக்கருவிகள் பற்றியும், ராகங்களின் குணங்கள் பற்றியும் புதினத்தில் கூறப்பட்டுள்ளது. பிரத்தியங்கராதேவி வழிபாடு சமுதாயத்தில் இருந்தமை காட்டப்பட்டுள்ளது.

இப்புதினம் முழுக்க இசையைப்பற்றியே கூறிச் செல்கிறது. ராகங்களின் குணநலன்கள், அவை பாஷாங்கமா, உபாங்கமா என்பது போன்ற விளக்கங்கள், மேளகர்த்தாவைப் பற்றிய குறிப்புகள் போன்றவை புதினத்தில் இடம்பெற்றுள்ளன. லாவணி என்ற புதிய இசையும் இக்காலத்தில் ஏற்பட்டதாகும். மக்களின் நலன்கருதி

சுகாதார நலனுக்காக அரசர் தமது சொந்த செலவில் தஞ்சை நகரம் முழுமைக்கும் கி.பி.1875-1878-ல் ஜலதாரைகள் கட்டியுள்ளார். அவை இன்றளவும் குறிப்பிடத்தக்க பழுதுகள் யாவுமின்றி உபயோகத்தில் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது.

**ரூப்மதி என்ற புதினத்தில் காணப்படும் பின்புலன்**களை வரலாற்றுக் குறிப்புகள் மூலமும், வரலாற்று நூல்கள் மூலமாகவும் அறியமுடிகிறது. ரூப்மதி என்ற புதினத்தில் கதைத்தலைவன் பாஜ்பகதூர் கதைத்தலைவி ரூப்மதி. அக்பர் காலத்தைய வரலாற்று நிகழ்வு இப்புதினம்.

அக்பர் தன்னுடைய சிறுவயதில் பட்டமேற்றபிறகு தன்னுடைய ஆட்சியை விரிவுபடுத்த மாளவத்தைக் கைப்பற்ற எண்ணினார். தன்னுடைய வளர்ப்புத் தாயான மாஹம் அனேகாவின் புதல்வன் ஆதம்கான் தலைமையில் படை எடுத்துச் செல்ல ஆணை பிறப்பித்தார்.

ஹுமாயூன் இறப்பிற்குப்பிறகு சுதந்திரப்பிரகடனம் செய்துகொண்ட அரசர்களில் உஜ்ஜயினி சாராங்காபுரியும் ஒன்று. மாளவத்தின் அரசன் பாஜ்பகதூருக்கு சாராங்காபுரி அரசர் தனது மகள் ரூப்மதியைத் திருமணம் செய்து கொடுத்திருந்தார்.

ரூப்மதி இசையிலும் அழகிலும் சிறந்தவர். “மாளவாவின் அரசன், பாஜ்பகதூர் ஒரு உல்லாசப் பேர்வழி. சர்வதேச அழகிகள் மாநாடு நடக்கிறதோ என்று எண்ணும் அளவுக்கு அவரது அந்தப்புரம் வடக்கே பிரசித்தி பெற்று இருந்தது. மனிதர் உச்சஸ்தாயில் பிருக்காக்களை உதிரித்து பிரமாதமாகப் பாடுவார் இந்தியில் அருமையான கவிதைகளும் இயற்றுவார்”[181] தனது மனைவி ரூப்மதியை உயிராக நேசித்தவர். “இவர்களுடைய காதல் பல கவிதைகளிலும், பல இந்திய ஓவியங்களின் கருப் பொருளாகவும் போற்றப்பட்டு இருக்கிறது. நிலவொளியில் குன்றுகளில் குதிரையின் மீது அவர்கள் பயணிப்பதையும், நீரோடைகளில் அவர்கள் அமர்ந்திருப்பதையும் நம் ஓவியங்களில் காணமுடிகிறது”[182].

மாளவத்தின் மீது படை எடுக்க ரூப்மதியைக் காண அக்பர் கொண்ட ஆசை எனப் புதினத்தில் காட்டப்படுகிறது. சிறந்த பாடகரும் கவிஞருமான பாஜ்பகதூர் மது, மங்கை, கவிதை ஆகியவற்றில் தமது நேரத்தை செலவிட்டார்.

1561–ம் ஆண்டு மாஹம் அனாகாஸின் மகன் ஆதம்கானையும், பீர் முகமதுவையும் மாளவத்தைக் கைப்பற்றி வர அனுப்பினார். அவர்களால் தோற்கடிக்கப்பட்ட பாஜ்பகதூர் பர்ஹான்பூருக்கு தப்பியோடினார். "ரூப்மதி வெட்டுண்டு உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்தாள். அவளை அடைய ஆதம்கான் முயற்சி செய்வதை அறிந்து காமுகன் கையில் சிக்குவதைவிட மானத்தோடு மடிவதே மேல் என்றெண்ணி நஞ்சுண்டு இறந்தாள்"[183] என வரலாறு கூறுகிறது. ஆனால் புதின ஆசிரியர் காதல் காவியமான அவள் ரூப் குண்டத்தில் விழுந்து உயிரை மாய்த்துக்கொண்டாள் எனக் கூறியிருப்பது அவளின் கற்பைப் பல மடங்கு உயர்த்திக் காட்டுகிறது. போரில் தோற்றால் அந்தப்புரப் பெண்களை ஆதம்கானின் கையில் சிக்காமல் கொன்றுவிடும்படி பாஜ்பகதூர் ஆணையிட்டிருந்தார் குறிப்பாக ரூப்மதி. பாஜ் தோற்றோடிய பின்பு மால்வா வீரர்களால் அந்தப்புரப் பெண்களை கொல்வது கடினமாக இருந்தது. அதற்குள் ஆதம்கானின் படை உள்ளே நுழைந்து சூறையாடத் தொடங்கியது.

ஆதம்கானின் முன்னே குற்றுயிராய் அழைத்துவரப்பட்ட ரூப்மதி ஆதம்கானின் ஆசை நிறைவேறா வண்ணம், "தன் உடையிலோ ஆபரணத்திலோ ஒளித்து வைத்திருந்த கடும் விஷத்தை வரும் வழியிலேயே விழுங்கித் தன் வாழ்வைக் கச்சிதமாக முடித்துக் கொண்டிருந்தாள்"[184].

அக்பர் பட்டமேற்றதும் சுதந்திரப் பிரகடன நாடுகளை அடக்கித் தன் ராஜ்யத்துடன் இணைக்கப் போரிட்ட போர் மாளவப்போர். புதினத்தில் ரூப்மதி–பாஜ் இருவரின் காதல் கவிதைகளைப் பற்றியும் மாண்டுக் கோட்டையின் அதிசயம் பற்றியும் கூறப்படுகிறது. நர்மதை ஆற்று நீரை மலைமேல் இருக்கும் மாண்டுக் கோட்டைக்குக் கொண்டுவந்து ரூப் குண்டம் அமைத்து நர்மதையில் பௌர்ணமிதோறும் மகிழ்ச்சி அடையும் பாஜ்–

ரூப்மதியின் காதல்கவிதைகள் இன்றளவும் பயணிகளின் அதிசயத்தைத் தூண்டும் அளவில் வரலாற்றுச் சின்னமாகத் திகழ்கிறது. நதிநீரை மலைக்கு மேல் கொண்டுவரப் புதினத்தில் காட்டப்படும் பொறியியல் அறிவு வியக்கத்தக்கதாக அமைந்துள்ளது.

இஸ்லாமியர்கள் எத்துணைக் கொடுமைகளைச் செய்தார்கள் என்பதை வரலாறு காட்டுகிறது. அக்பர் போன்ற நல்ல மன்னர் இருந்தும் ஆதம்கான், பீர் முகமது போன்ற தீயவர்களை கொண்ட மொகலாயப்படை பெண்களை நாசப்படுத்தியது வரலாறுகூறும் உண்மையாகும்.

பாஜ்பகதூர் என்னும் இஸ்லாமியரும் ரூப்மதி என்ற ரஜபுத்திரப் பெண்ணும் கலப்பு மணம் செய்து கொண்டது அக்காலச் சமுதாயத்தைக் காட்டுகிறது. அக்பரும் அநேக ரஜபுத்திரப் பெண்களை மணம் செய்து கொண்டுள்ளார். அக்பர் சிறுவயதிலேயே அரியணை ஏறியதால் அநேக அரசியல் பிரச்சனைகளையும் அந்தப்புரப் பெண்களின் அட்டகாசத்தையும் அழிக்க வேண்டியிருந்தது. வளர்ப்புத்தாயான மாஹம் அனாகவின் மகன் ஆதம்கானின் கொடுமையான செயல்களையும், அவளின் கொடூரமான கொலைகளையும் வளர்த்த பாசத்தால் கண்டு கொள்ளாமலிருந்தது. புலிவேட்டை, யானைச் சண்டை போன்றவற்றில் பெரு விருப்பம் உள்ள அக்பர் இசையில் அலாதியான நாட்டமுள்ளவராய் இருந்தமை வரலாறு கூறும் உண்மை.

“தனது அமைச்சரை கொன்ற ஆதம்கானை தனது கைமுட்டியானல் தாக் கீழே தள்ளினார். பிறகு அவனைப் பிணைத்து மேல்மாடிக்கு கொண்டுசென்று அங்கிருந்து கீழே வீசும்படி ஆணையிட்டார்”[185]. முதல்முறை வீசியபோது ஆதம்கான் உயிரோடிருக்கவே மறுமுறையும் அவனை மேலே கொண்டு சென்று வீசவே கழுத்து முறிந்து மூளை சிதறி இறந்தான் என்பது வரலாறு.

மொகலாயப் பேரரசின் சக்ரவர்த்தியாக இருந்தபோதும் இனிமையான இரக்கமான குணமுள்ளவரே அக்பர். பாபரைப் போன்ற வீரமும் ஹுமாயூனைப் போல இரக்க சிந்தையும் உள்ளவர் அக்பர். மாண்டுவின் அரசி ரூப்மதியைச் சந்திக்க எடுத்த முயற்சிகள் தோல்வியே அடைந்தது.

“ரூப்மதி நான் வந்திருப்பது எந்த உள்நோக்கமும் இல்லை உனது பேரழகையும், பேரீச்சம்பழத்தினும் இனிய சங்கீதத்தையும் பார்க்கவும் கேட்கவும் வந்திருக்கிறேன் எனது கனிந்த விருப்பத்தை பூர்த்தி செய்”[186] எனக் கேட்பதாகப் புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

“மேலும் பாதுஷாவை இறைவனாக மதித்தே இங்கு அழைத்து வந்திருக்கிறார். எந்தவித ஆபத்தும் இல்லாமல் உங்களை வழிகூட்டியும் வைப்பார்”[187] என ரூப்மதி கூறியதும், “தனிமையில் ஜனானாவுக்குச் சென்றும் அரசன் பாஜ்பகதூர் நடந்து கொண்ட மனிதத்தன்மை தமக்கு எந்தவித ஆபத்தையும் விளைவிக்கக்கூடாது என்றெண்ணி வழிகூட்டியனுப்பிய பெருந்தன்மை இவற்றை மனதில் கொண்டு யுத்தத்தின் பயங்கரம் எப்படி இருந்தாலும் பாஜ்பகதூரையும் ரூப்மதியையும் ஒரு துளி ரத்தம் சிந்தாமல் ஆக்ராவிற்கு கடத்திவந்துவிடவேண்டும்”[188] என ஆணையிட்ட அக்பரின் பெருந்தன்மை அவரின் இயற்கையான குணத்தை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. புதினத்தில் படைப்பாசிரியர் கூறியுள்ள ரூப்மதியின் முடிவு அவளது காதலையும் கற்பையும் உயர்த்துவதாக அமைந்துள்ளது. மற்ற வரலாற்றுக் குறிப்புகள் கூறும் முடிவு ரஜபுத்திரப் பெண்ணினத்துக்கு இழுக்கு என்று முடித்திருக்கும் பாங்கு புலனாகிறது.

சமுதாயத்தில் இஸ்லாமியரும் இந்துக்களும் கலந்தே உறவாடினர். கலப்பு மணம் இருந்தது; என்றாலும் சில தீயவர்களின் பெண் கொடுமையும் அதிகமாக இருந்தது என்பது தெரியவருகிறது. அக்பர் மாளவத்தின் மீது இருமுறை போர் தொடுத்ததாக வரலாறு கூறுகிறது.

ஆதம்கான் மாளவத்தைச் சின்னாபின்னப்படுத்தியதோடு அல்லாமல் அகப்பட்ட பெண்களையும் கொள்ளையடித்துச் சென்றான். இவ் விஷயம் அறிந்த அக்பர் நேராகப் புறப்பட்டுவரவே அவர் காலில் மண்டியிட்டு பெண்களையும் சைன்யத்திடம் ஒப்படைத்தான். இருப்பினும் இரு பெண்களை ரகசியமாக கொண்டு சென்றான்.

அவர்கள் மூலமாக உண்மை தெரியவரும் என்று எண்ணிய மாஹம் அனாகா அவர்களைக் கொன்றுவிடுகிறாள். இதையெல்லாம் அறிந்தும் அக்பர் வளர்த்த பாசத்தால் அவர்களை மன்னித்தும், ஆதம்கானுக்குத் தண்டனை வழங்கியது பற்றியும் மறைக்காமல் கூறினார் என வரலாறு கூறுகிறது. இந்த வரலாற்றுச் செய்தியானது புதினத்தில் காட்டப்படவில்லையானாலும் அக்பரின் இயல்பான நல்ல குணத்தை புதினத்தின் மூலம் புரிந்துகொள்ளத் துணை செய்கிறது.

கானல்கானம் என்ற புதினத்தில் கதைத் தலைவன் இளவெண் மதிசூடினன் "சிவன் கோயிலின் அர்த்தமண்டபத்தைக் கட்டி வைத்துத் தன்னுடைய தலையைத் தானே வெட்டிப்பலியாக்கிக் கொண்டவன். இவன் ஒரு தாசிமகன். இக்காலத்தில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அரசு செலுத்திக் கொண்டிருந்தான்"[189] என்ற திருக்கோவலூர்க் கல்வெட்டுச் சாசனமே ஆதாரமாக உள்ளது.

தாசி செங்கமலத்துக்கும் சொக்கநாத வேளாளருக்கும் பிறந்த மகனே இளவெண்மதி சூடினன். அவனை வளர்த்த தாய் பெரியநாயகி அம்மாள். சொக்கநாதவேளாரின் மனைவி. நல்ல பண்புடைய தாய். அவளுக்குப் பிறந்த மகன் நல்லபெருமாள் கொடுமதியுள்ளவன்.

புதினம் முழுமையும் தாயன்பும் இசையும்தான் பேசப்படுகின்றது. இளவெண்மதி சூடினனின் காதலி சுரமாலை செந்திரு வேளாரின் மகள். இவளுக்கு குரு வீணை செங்கமலம் இளவெண்மதி சூடினனின் தாய்.

தாசிமகன் என்ற உண்மை தெரியாதபோதும் சொக்கநாத வேளாரின் வளர்ப்பு மகன் என்பதால் கோயல் அவன் புகழை நிலைநாட்டவும் தன் மகளை மணம் செய்து கொடுக்கவும் இளவெண்பழியானைச் செயல்பட வைக்கும்பாங்கு மகள் விரும்பிய வாழ்வை அளிக்க வேண்டும் என்ற தந்தையின் உயர்ந்த உள்ளத்தைப் புலப்படுத்துகிறது.

